# பாண்டிப் பதினான்கு திருத்தலங்கள்

அழகப்பா பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்கான பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**
**வெ.வெங்கட இராமநாதன்**
(பதிவு எண்: 1081/ 2014-15)

**நெறியாளர்**
**முனைவர் மா.சிதம்பரம்**
தமிழ் உயராய்வு மையம்,
அழகப்பா அரசு கலைக் கல்லூரி,
காரைக்குடி – 630 003





## அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசிய தர நிர்ணயக்குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+ (CGPA 3.64) தகுதியும் மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல் தரப் பல்கலைக்கழகம் மற்றும் தன்னாட்சித் தகுதியும் பெற்றது)

**காரைக்குடி – 630 003**

**தமிழ்நாடு - இந்தியா**

**செப்டம்பர் - 2019**

# முன்னுரை

தமிழர்களின் வாழ்வியலில் திருக்கோயில்கள் பின்னிப்பிணைந்தவை ஆகும். திருக்கோயில்களைச் சார்ந்து குடிகளும் குடிகளைச் சார்ந்து திருக்கோயில்களுமாகத் தமிழர்களின் வாழ்வு நடைபோட்டது. முதலில், மக்கள் தெய்வத்தை தவறு இழைத்தால் தண்டிக்கும் சக்தியாகப் பார்த்தனர். பின்னர் அதனையே தங்களின் காக்கும் சக்தியாகத் தொழுதனர். அருவமாக இருக்கும் அத்தெய்வத்தை வழிபட ஏதுவாக அதற்கு ஒரு வடிவங் கொடுக்கத் தலைப்பட்டனர். அவ்வடிவம் முதலில் இயற்கையின் துணையால் அமைந்தது. இயற்கையைக் கடவுளாக வழிபட்டனர். மரங்களைத் தெய்வமாகப் போற்றினர். பின்னர் அம்மரத்தின் கீழ் மண்மேடை அமைத்து வணங்கினர். வெயிலிலும் மழையிலும் அது நனைதல் தாங்காது அதற்குக் கூரை வேய்ந்தனர். அக்கூரை பின்னாளில் ஓட்டுக் கூரையாக மாற்றம் கண்டது. இயற்கையில் பொதிந்திருக்கும் அத்தெய்வத்திற்கு வடிவங்கொடுக்கத் தலைப்படலாயினர். அருவமாக இருந்துவந்த தெய்வம் உருக்கொண்டது. அதன்பின் சுற்றுச் சுவர் எழுந்தது. பின்னர் செங்கற்களால் திருக்கோயில்களைக் கட்டினர். காலம் செல்லச் செல்ல, வளர்ச்சியடைந்து கற்களை அடுக்கியும் குகைகளைக் குடைந்தும் திருக்கோயில்கள் கட்டப்பட்டன.

இந்த வளர்ச்சியினூடே சைவம், வைணவம் என்ற இருபெரும் சமயங்கள் வளரலாயிற்று. கி.பி.250 இல் களப்பிரர் புகுந்தனர். அவர்களின் ஆட்சிக் காலம் கி.பி.580 வரை நீடித்தது. இந்தக் காலகட்டத்தில் திருக்கோயில்கள் சீரழிந்ததன்றிப் பிற சமயங்களான சமணமும் பௌத்தமும் தமிழகத்தில் நுழைந்து கோலோச்சின. இந்நிலையிலிருந்து தமிழகத்தை மீட்டு, சைவ வைணவத்தைப் போற்றிப் பாதுகாக்க, அருளாளர்கள் திருக்கோயில்களுக்குச் சென்று தம் தீந்தமிழ்ப் பாக்களால் பக்தி மணம் பரப்பினர். அத்தகைய இலக்கியங்கள் பக்தி இலக்கியம் எனப் போற்றப்பட்டன.

திருக்கோயில்கள் தமிழர்தம் பண்பாட்டை அறிய உதவுகின்றன. எந்தவொரு வரலாற்றையும் ஆராயுங்கால் அதற்குத் துணையாகவும் ஆதாரமாகவும் அமைவன இலக்கியங்கள், இலக்கிய உரைகள், அகராதிகள், அயல்நாட்டார் குறிப்புகள், கல்வெட்டுகள் ஆகியனவாம். அவற்றுள் இலக்கியமே தமிழர்தம் பண்பாட்டைப் பெரிதும் அறியப் பயன்படுகிறது. எனவேதான் தமிழ்மொழி ஆய்வாயினும் சரி, தமிழக வரலாற்று ஆய்வாயினும் சரி, பெரிதும் சார்ந்திருப்பது இலக்கியங்களையே ஆகும்.

தமிழ் இலக்கியப் பரப்பில் சங்க இலக்கியத்தையடுத்து பெரும் பங்கு வகிப்பன பக்தி இலக்கியங்கள். பக்தி இலக்கியங்களில் தலையாயதாய் விளங்குவன சைவத்தின் பன்னிரு திருமுறைகளும் வைணவத்தின் நாலாயிர திவ்யப் பிரபந்தமும் ஆகும். பன்னிரு திருமுறைகளைச் சார்ந்தே இவ் ஆய்வு அமைகின்றது.

**ஆய்வுத் தலைப்பு:**

பாண்டிய நாட்டில் தேவாரப் பாடல் பெற்றதாய் அமைந்திருக்கும் திருத்தலங்களை ஆய்வு செய்தலால் **'பாண்டிப் பதினான்கு திருத்தலங்கள்'** என்பது ஆய்வுத் தலைப்பாய் அமைகின்றது.

**ஆய்வுக் கருதுகோள்:**

திருக்கோயில்கள் பெரும்பான்மையும் ஆட்சியாளர்களாலே வடிவமைக்கப்பட்டன. தமிழகத்தை ஆண்ட சேரர், சோழர், பாண்டியர், பல்லவர், நாயக்கர் ஆகியோர் கட்டிய திருக்கோயில்களும் அவர்களால் புதுப்பிக்கப்பட்ட திருக்கோயில்களும் இதற்குச் சான்றுகளாகும். இத்தகைய திருக்கோயில்களின் மீது பாடப்பெற்ற பாடல்கள் அக்கால நிலையையும், கலை நுண்மையையும், நகர்ப்புற அமைப்புகளையும், இயற்கைச் செறிவுகளையும் பிற சமயங்களின் தாக்கங்களையும் தெள்ளெனச் சுட்டுகின்றன என்பதை வெளிப்படுத்துவதே இவ்வாய்வின் கருதுகோளாகும்.

**ஆய்வு நோக்கம்:**

பாடல் பெற்ற பாண்டி நாட்டுத் திருத்தலங்களின் வரலாறு, திருக்கோயில் அமைப்பு, தீர்த்தங்கள், தேவாரத்தில் குறிப்பிட்டுள்ள செய்திகள், சிற்பம், ஓவியம், கட்டிடக்கலைச் செய்திகள், வழிபாடுகள், திருவிழாக்கள், தற்காலத்திய மாற்றங்கள் முதலியவற்றை ஆராய்வதே இவ் ஆய்வின் நோக்கம் ஆகும்.

**ஆய்வு முன்னோடிகள்:**

தமிழகத் திருக்கோயில்களின் வரலாறுகள் பற்றி பல ஆய்வுகள் வெளி வந்திருக்கின்றன. ஆய்விற்கு உ.வே.சாமிநாதய்யரால் வெளியிடப் பெற்ற திருத்தலங்கள் வரலாறு பகுதி-1, திருத்தலங்கள் வரலாறு பகுதி-2 ஆகிய நூல்கள் ஆய்வு முன்னோடியாகக் கொள்ளப்படுகின்றன. வித்வான் பாலூர் கண்ணப்ப முதலியாரின் பாண்டி நாட்டுக் கோயில்கள், பேராசிரியர் டாக்டர் ந.சுப்பு ரெட்டியாரின் பாண்டி நாட்டுத் திருப்பதிகள் ஆகிய நூல்களும் முன் ஆய்வுகளாக எடுத்தாளப்பட்டுள்ளன. இந்நூல்களில் திருத்தலங்களின் வரலாறுகளும் சிறப்புகளும்

சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இவைகளை அடுத்து, பாண்டிய நாட்டில் உள்ள தேவாரப் பாடல் பெற்ற திருத்தலங்களை அண்மைக் கால நிலை வரை ஆய்வு செய்த நூல்கள், ஆய்வுகள் வெளிவரவில்லை. எனவே இவ் ஆய்வு தற்காலத்திய மாற்றங்கள் வரை ஆயும் முழுமையான ஆய்வாக அமைகிறது.

**ஆய்வு எல்லை:**

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோரால் பாடப்பெற்ற பாண்டிப் பதினான்கு திருத்தலங்களில் திருஆலவாய், திருப்பரங்குன்றம், திருவிராமேச்சுரம் நீங்கலாக திருவாப்பனூர், திருவேடகம், திருக்கொடுங்குன்றம், திருப்புத்தூர், திருப்புனவாயில், திருவாடானை, திருக்கானப்பேர், திருப்பூவணம், திருச்சுழியல், திருக்குற்றாலம், திருநெல்வேலி ஆகிய பதினொரு திருத்தலங்கள் ஆய்வின் எல்லையாக அமைந்துள்ளன.

பதினொரு திருத்தலங்களை மட்டும் ஆய்வு செய்திருப்பினும் ‘பாண்டிப் பதினான்கு திருத்தலங்கள்’ என்ற ஆய்வுத் தலைப்பு அமைந்ததற்கான காரணங்கள்:

- திருஆலவாய், திருப்பரங்குன்றம், திருவிராமேச்சுரம் ஆகிய மூன்று திருக்கோயில்களின் தரவுகள் தனித்தனியாக முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்வதற்கான செய்திகளை உள்ளடக்கியன ஆகும். எனவே ஆய்வின் பக்க வரையறை கருதி அவை மூன்றும் இவ் ஆய்வு எல்லைக்குள் அமையவில்லை.
- ‘பாண்டிப் பதினான்கு திருத்தலங்கள்’ என்பதே வழக்கு. ‘பாண்டிப் பதினொரு திருத்தலங்கள்’ என்ற ஆய்வுத் தலைப்பு தவறான வழக்கை ஏற்படுத்தும்.

**சான்றாதாரங்கள்:**

பன்னிரு திருமுறைகளில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோரால் பாடப்பெற்ற முதல் ஏழு திருமுறைகள் இவ் ஆய்வின் முதன்மைச் சான்றாதாரங்களாய் அமைகின்றன. திருக்குறள், பத்துப்பாட்டு, எட்டாம் திருமுறை, பத்தாம் திருமுறை, பன்னிரெண்டாம் திருமுறை, பெரும்பற்றப்புலியூர் நம்பி இயற்றிய திருவிளையாடற் புராணம், பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணம், நாலாயிர திவ்வியப் பிரபந்தம், மீனாட்சியம்மை குறம், மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், அபிராமி அந்தாதி, அகராதிகள், இவ் ஆய்விற்குத் தொடர்புடைய திருக்கோயில்களின்

தலபுராணங்கள், வரலாற்று நூல்கள், வெளியீட்டு மலர்கள், நாளிதழ்கள், ஆய்வுக் கட்டுரைகள் ஆகியன துணைமைச் சான்றாதாரங்களாக உள்ளன.

களஆய்வு, நேர்காணல், இணைய தளம் ஆகியவற்றிலிருந்து பெறப்பட்ட தரவுகளும் ஆய்விற்குத் துணைமைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறைகள்:**

திருக்கோயில்களின் வரலாற்றை ஆராயுங்கால் வரலாற்றியல் அணுகுமுறையும், தலபுராணங்களையும் திருக்கோயிலமைப்பையும் விளக்குங்கால் விளக்கவியல் அணுகுமுறையும், பதிகங்களின் இலக்கியத் திறன்களை ஆராயுங்கால் திறனாய்வியல் அணுகுமுறையும், இலக்கியத் தரவுகளை பிற இலக்கியங்களோடு ஒப்பிடும்பொழுது ஒப்பியல் அணுகுமுறையும், ஓவியம், சிற்பம், கட்டிடக்கலைத் திறன்களை ஆராயுங்கால் அழகியல் அணுகுமுறையும், திருக்கோயில்களின் தற்கால நிலையினை விளக்குங்கால் விளக்கவியல் அணுகுமுறையும் இவ் ஆய்விற்குரிய அணுகுமுறைகளாகக் கொள்ளப்படுகிறது.

**ஆய்வுப் பகுப்பு:**

**‘பாண்டிப் பதினான்கு திருத்தலங்கள்’** என்னும் இவ் ஆய்வானது முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களைக் கொண்டமைந்துள்ளது. அவையாவன,

1. **திருத்தலங்களின் வரலாறும் அமைப்பும்**
2. **திருத்தலங்களின் இறைவனும் இயற்கையும்**
3. **சிற்பம், ஓவியம், கட்டிடக்கலைச் செய்திகள்**
4. **பூசைகள், திருவிழாக்கள், தற்காலத்திய மாற்றங்கள்**

என்பனவாம்.

**இயல் விளக்கங்கள்:**

**முன்னுரை**யில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வுக் கருதுகோள், ஆய்வு நோக்கம், ஆய்வு முன்னோடிகள், ஆய்வு எல்லை, சான்றாதாரங்கள், ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வுப் பகுப்பு, இயல் விளக்கங்கள் ஆகியன இடம்பெறுகின்றன.

**‘திருத்தலங்களின் வரலாறும் அமைப்பும்’** என்ற முதலாவது இயலில், இறைவன், இறைவிக்கு தமிழ், வடமொழியில் வழங்கப்படும் பெயர்கள், தலபுராண நூல்கள், திருத்தலத்திற்குரிய தலபுராண நூல்கள், திருத்தலத்தின் முதன்மையான வரலாறுகள், தீர்த்தங்கள், தீர்த்தங்களின் அமைவிடம், தீர்த்தங்களின் பெயர்க்காரணங்கள்,

திருக்கோயில் வடிவம், திருக்கோயில் அமைப்பு, இராசகோபுரத்தின் நிலைகள், இராசகோபுரம் கட்டப்பட்ட ஆண்டு, திருக்கோயிலில் அமைந்துள்ள திருச்சுற்றுகள், மாதாந்திர திருவீதி வலம்வரும் திருச்சுற்றுகள், திருக்கோயிலைச் சுற்றியிருக்கும் வீதிகள், தேரோட்டம், திருவீதி புறப்பாடு நடைபெறும் வீதிகள், தேர்கள், வந்து வணங்கியோர், ஆகமம், தலவிருட்சம், குடமுழுக்கு செய்யப்பெற்ற ஆண்டு, தமிழக அரசு, திருக்கோயில் மூலம் நடைபெறும் அன்னதானத்திட்டம் ஆகியவை விளக்கப்படுகின்றன.

**‘திருத்தலங்களின் இறைவனும் இயற்கையும்’** என்ற இரண்டாவது இயலில் சேக்கிழாரின் பெரிய புராணத்தில் சுட்டப்பெறும் வழியில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோர் திருத்தலங்களை அடைந்தமை, தேவாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ள இறைவன், புராணம், இயற்கை, திருத்தலங்களைப் பற்றிய செய்திகள், மலர்கள், வைப்பாகப் பாடப்பெற்றுள்ள பிற திருத்தலங்கள் ஆகியன ஆராயப்பட்டுள்ளன.

**‘சிற்பம், ஓவியம், கட்டிடக்கலைச் செய்திகள்’** என்ற மூன்றாவது இயலில் திருக்கோயில் தூண்களில் உள்ள சிற்பங்கள், இறைவன் ஆவுடையின் அமைப்பு, பாணத்தின் தோற்றம், இறைவியின் உருவ அமைப்பு, ஓவியங்களில் அறியக்கூடிய செய்திகள், திருக்கோயில் கட்டுமானம் ஆகிய செய்திகள் ஆராய்ந்து விளக்கப்பட்டுள்ளன.

**‘பூசைகள், திருவிழாக்கள், தற்காலத்திய மாற்றங்கள்’** என்ற நான்காவது இயலில் திருக்கோயிலில் நடைபெறும் நாள் வழிபாடுகள், பூசைக் காலங்கள், நிவேதனப் பிரசாதங்கள், மாதந்தோறும் நடைபெறும் திருவிழாக்கள், பெரிய திருவிழாக்கள், பெரிய திருவிழாக்களின் பொழுது இயற்றப்படும் வழிபாட்டு முறைகள், திருவீதி புறப்பாட்டிற்குரிய வாகனங்கள், மாதாந்திர விழாக்கள், வேண்டுதல்கள், தற்காலத்திய மாற்றங்கள் ஆகியன குறித்து விளக்கப்பட்டுள்ளன.

ஆய்வில் கண்ட முடிவுகள் தொகுக்கப் பெற்று **முடிவுரை**யில் இடம்பெற்றுள்ளன.

ஆய்விற்கு துணைசெய்த நூல்கள் அகரவரிசைப்படி **துணைநூற்பட்டியலில்** பட்டியலிடப்பட்டுள்ளன.

பின்னிணைப்பில் தேவாரப் பாடல் பெற்ற திருத்தலங்களின் அட்டவணை, திருக்கோயில்களின் வரைபடங்கள், வரைபடத்தின் எண் குறியீட்டு விளக்கம், திருக்கோயில்களின் படங்கள் ஆகியவை இணைக்கப்பட்டுள்ளன.

## திருத்தலங்களின் வரலாறும் அமைப்பும்

தமிழர்களின் வாழ்வியல் திருக்கோயிலைச் சார்ந்த குடிகளும் குடிகளைச் சார்ந்த திருக்கோயில்களும் என்பதாக அமைகின்றது. எனவே, இறைவனோடும் மக்கள் வாழ்வியலோடும் தொடர்புடைய திருத்தலங்களை அருளாளர்கள் பாடிப் பரவி உள்ளனர். சைவ சமயக் குரவர்களுள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரால் பாடப்பெற்ற பாண்டிய நாட்டுத் திருத்தலங்கள், அவை வகைபடுத்தப்பட்ட முறைமை, திருக்கோயில்களின் மூர்த்தி, தீர்த்தம், திருத்தலம், தலவரலாறுகள் ஆகியனவற்றை ஆய்வு செய்வதாய் இவ் இயல் அமைந்துள்ளது. இதன் வழி தலபுராணங்களின் அமைப்பு முறை, தமிழர்கள் இயற்கையைப் போற்றியுள்ள பான்மை ஆகியன ஆய்ந்து வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

**பாண்டிப் பதினான்கு திருத்தலங்களின் வரையறை:**

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோரின் தேவாரப் பாடல் பெற்ற திருத்தலங்களை ஒன்பது நாடுகளுக்குள் அடக்கி வகைப்படுத்துவது 'திருப்பதிக்கோவை' என்னும் பதிகமாகும். சோழ நாட்டைக் காவிரியை மையமாக வைத்துக் காவிரி வடகரையில் அறுபத்து மூன்று திருத்தலங்கள், காவிரி தென்கரையில் நூற்றி இருபத்தியேழு திருத்தலங்கள், ஈழ நாட்டில் இரண்டு திருத்தலங்கள், பாண்டி நாட்டில் பதினான்கு திருத்தலங்கள், மலை நாட்டில் ஒரு திருத்தலம், கொங்கு நாட்டில் ஏழு திருத்தலங்கள், நடுநாட்டில் இருபத்தியிரண்டு திருத்தலங்கள், தொண்டை நாட்டில் முப்பத்தியிரண்டு திருத்தலங்கள், துளுவ நாட்டில் ஒரு திருத்தலம், வடநாட்டில் ஐந்து திருத்தலங்கள், ஆக இருநூற்று எழுபத்தி நான்கு தேவாரம் பாடல் பெற்ற திருத்தலங்கள் இருக்கின்றன என்பது திருப்பதிக்கோவையின் மூலம் அறியப்படுகின்றது. இந்த ஒன்பது நாடுகள் எதை அடிப்படையாகக் கொண்டு பிரிக்கப்பட்டன என்பதற்கான சான்றுகள் கிடைத்தில.

**"ஈண்டுபுகழ்ச் சோணாட்டி லொருநூற்றுத்**
**தொண்ணூ றீழத் திரண்டு**
**பாண்டியீ ரேழ்மலைநாட் டொன்று**
**கொங்கேழ் மகதமிரு பத்திரண்டு**
**பூண்டதொண்டை நன்னாட்டெண் ணான்குதுளு**

**வொன்றுவட புலத்தைந் தாக**

**வாண்டசிவ தலமிருநூற் றெழுபத்து**

**நான்குதொகை யாகு மன்றே."** [1]

என்ற தனிப்பாடல் திருப்பதிக்கோவை கூறிய ஒன்பது நாடுகளையும் அதில் உள்ள தேவாரம் பெற்ற திருத்தலங்களின் எண்ணிக்கையையும் கூறுகிறது. இத்தனிப்பாடலின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. ஆயினும் சிவக்ஷேத்திர விளக்கம், சிவக்ஷேத்திர யாத்திரை விளக்கம்[2] என்ற நூல்களில் இப்பாடல் குறிப்பிடப்பட்டுள்ளது. இப்பாடல் திருப்பதிக்கோவையை அடிப்படையாக வைத்து எழுதப்பட்டதாகும்.

திருப்பதிக்கோவையை இயற்றிய ஆசிரியர் யார் என்பதில் பல கருத்து வேறுபாடுகள் உள்ளன. தருமை ஆதீனம் வெளியிட்டுள்ள 'மெய்கண்ட சாத்திரம்' என்ற நூலில் திருப்பதிக்கோவையை இயற்றியது உமாபதி சிவாச்சாரியார் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.[3]

'திருப்பதிக்கோவையைச்' செய்தவர் உமாபதி சிவாச்சாரியார் என்று கோடல் தவறாகாது என்பது மா.இராசமாணிக்கனார் கூற்று.[4]

தமிழ் இணையக் கல்விக்கழகத்தின் இணைய நூலகத்தில் திருப்பதிக்கோவை இயற்றியது உமாபதி சிவாச்சாரியார் என்ற குறிப்புக் காணப்படுகின்றது.[5] திருப்பதிக்கோவை உமாபதி சிவாச்சாரியார் பாடியிருக்கலாம் என்று கருதுவது பொருந்தாது என்பார் மு.அருணாசலம்.[6]

இக்கருத்து வேறுபாட்டின் காரணமாகவே சிவக்ஷேத்திர யாத்திரை விளக்கம்[7], சிவக்ஷேத்திர யாத்திரானுகூலம்[8] ஆகிய நூல்கள் திருப்பதிக்கோவையை ஆசிரியர் பெயர் குறிப்பிடாமலேயே பதிப்பித்துள்ளன.

எனினும் தருமை ஆதீனம் வெளியிட்டுள்ள மெய்கண்ட சாத்திரம் நூலின் அடிப்படையிலும், மா.இராசமாணிக்கனாரின் கூற்றின் அடிப்படையிலும் திருப்பதிக்கோவை உமாபதி சிவாச்சாரியாரால் இயற்றப்பட்டது என்பதாக இவ் ஆய்வேட்டில் எடுத்தாளப்படுகிறது.

உமாபதி சிவாச்சாரியாரின் திருப்பதிக்கோவையில் இடம்பெற்றுள்ள,

**"ஆலவா யாப்பனூர் பரங்குன்றே டகத்தோ**

**டருங்கொடுங்குன் றந்திருப்புத் தூர்புனவா யிலினோ**

**டேலுமிரா மேச்சுரமா டானைகா னப்பே**

**ரெழிற்றிருப்பூ வணஞ்சுழிய லின்புறுகுற் றாலம்**

**பாலலோ சனன்றிருநெல் வேலியொடு பாண்டிப்**

**பதினான்கு ..........................................................”** [9]

என்ற பாடலில் ஆலவாய், ஆப்பனூர், பரங்குன்றம், ஏடகம், கொடுங்குன்றம், புத்தூர், புனவாயில், இராமேச்சுரம், ஆடானை, கானப்பேர், பூவணம், சுழியல், குற்றாலம், நெல்வேலி என்ற வரிசையில் பாண்டிய நாட்டில் உள்ள பதினான்கு திருத்தலங்கள் வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. இப்பாடலில் “பாண்டிப் பதினான்கு” என்று இருப்பதால் இத்திருத்தலங்களை “பாண்டிப் பதினான்கு திருத்தலங்கள்” என்று குறிப்பிடுவது வழக்காயிற்று. அதுவே இவ் ஆய்வின் தலைப்பாகவும் அமைந்துள்ளது.

த.சுப்பிரமணிய பிள்ளை எழுதிய ‘சிவஸ்தல மஞ்சரி’ என்ற நூலில் இருநூற்றி எழுபத்தி நான்கு திருத்தலங்களும் அதில் வரும் பாண்டிப் பதினான்கு திருத்தலங்களும் திருப்பதிக்கோவையின் வரிசைப்படி நிரலிடப்பட்டுள்ளது.[10] ஆனால் திருத்தலங்களை விரித்து எழுதும் பொழுது அகரவரிசை கையாளப்பட்டுள்ளது. அகரவரிசையில் எழுதப்பட்டுள்ள திருத்தலங்கள் திருப்பதிக்கோவையில் கூறப்பட்டுள்ள தலங்கள் ஆதலால் இந்நூல் இதன் அடிப்படையிலேயே எழுதப்பட்டுள்ளது.

மு.சாம்பசிவ நாயனார் இயற்றிய ‘சிவக்ஷேத்திர யாத்திரானுகூலம்’ திருப்பதிக்கோவையின் இருநூற்று எழுபத்து நான்கு திருத்தலங்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டாலும் பயணம் செய்பவர் எளிதாக சென்றடையும் பொருட்டு தொடர்வண்டி நிலையங்களை மையமாகக் கொண்டு இயற்றப்பட்டுள்ளது.[11]

எஸ்.மாணிக்கம் பிள்ளை இயற்றிய ‘சிவக்ஷேத்திர யாத்திரை விளக்கம்’ என்ற நூல் சென்னையிலிருந்து புறப்பட்டு ஒவ்வொரு தொடர்வண்டி நிலையத்திலும் இறங்கி திருத்தலங்களைச் சென்றடைந்து கடைசியில் சென்னைக்குத் திரும்பும்படி எழுதப்பட்டுள்ளது.[12] இந்நூலில் திருப்பதிக்கோவையில் வரும் திருத்தலங்களின் வரிசை பின்பற்றப்படவில்லை. எனினும் அதில் குறிப்பிடப்பட்டுள்ள திருத்தலங்களையே குறிக்கின்றது.

தி.சு.வேலுசாமிப் பிள்ளை இயற்றிய ‘தேவாரச் சிவதல வெண்பா’ என்ற நூலில் இருநூற்றி எழுபத்தி நான்கு திருத்தலங்களும் திருப்பதிக்கோவையின் வரிசையிலேயே அமைந்துள்ளன.

பாண்டிப் பதினான்கு திருத்தலங்களை மட்டும் கூறுகின்ற பாலூர் கண்ணப்ப முதலியார் இயற்றிய ‘பாண்டி நாட்டுக் கோயில்கள்’ எனும் நூலிலும் பாண்டி நாட்டில் அமைந்துள்ள பதினான்குத் திருத்தலங்கள் திருப்பதிக்கோவையின் வரிசைப்படியே அமைக்கப்பட்டுள்ளன.

ஒன்பது நாடுகளில் உள்ள தேவாரம் பாடல் பெற்ற திருத்தலங்களின் எண்ணிக்கையை மட்டும் முன்னர் குறிப்பிடப்பட்ட தனிப்பாடல் கூறுவதைப் போல, பாண்டிப் பதினான்கு திருத்தலங்களுக்கும்,

**“கூடல் புனவாயில் குற்றாலம் ஆப்பனூர்**
**ஏடகநெல் வேலி யிராமேசம் - ஆடானை**
**தென்பரங்குன் றஞ்சுழியல் தென்திருப்புத் தூர்கானை**
**வன்கொடுங்குன் றம்பூ வணம்”** [13]

என்ற வெண்பா காணப்படுகிறது. இத்தனிப்பாடல் திருப்பதிக்கோவையை ஆதாரமாய்க் கொண்டு அதில் குறிப்பிடப்படும் பதினான்கு திருத்தலங்களை கூறியிருந்தாலும், அதே வரிசையைப் பின்பற்றாமல் வெண்பா இலக்கணத்திற்காக திருத்தலங்களின் வரிசை மாற்றப்பட்டுள்ளது.

பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த குமரகுருபரர் மீனாட்சியம்மை குறத்தில்,

**“கூடல்புன வாயில்கொடுங் குன்றுபரங் குன்று**
**குற்றாலம் ஆப்பனூர் பூவணநெல் வேலி**
**ஏடகமா டானைதிருக் கானப்பேர் சுழியல்**
**இராமேசந் திருப்பத்தூ ரிவைமுதலாந் தலங்கள்**
**நாடியெங்க ளங்கயற்கண் ணாண்டதமிழ்ப் பாண்டி**
**நன்னாடும் பிறநாடும் என்னாடதாகக்**
**காடுமலையுந் திரிந்து குறிசொல்லிக் காலங்**
**கழித்தேனென் குறவனுக்குங் கஞ்சிவாரம்மே”** [14]

எனத் திருப்பதிக்கோவை கூறும் பாண்டிப் பதினான்கு திருத்தலங்களைக் குறிப்பிட்டாலும் இலக்கணவிதிக்காக திருத்தலங்கள் மாற்றி அமைக்கப்பட்டுள்ளன.

மேலே குறிப்பிடப்பட்ட தனி வெண்பாவையும் மீனாட்சியம்மை குறத்தின் பாடலையும் கொண்டு பதினான்கு தலங்களை வரிசைப்படுத்துதல் முறையன்று. எனவே எல்லாவற்றுக்கும் ஆதாரமாய் இருக்கும் உமாபதி சிவாச்சாரியாரின் திருப்பதிக்கோவையைச் சான்றாக வைத்து அதில் குறிப்பிட்டுள்ளபடி, திருஆலவாய், திருவாப்பனூர், திருப்பரங்குன்றம், திருவேடகம், திருக்கொடுங்குன்றம், திருப்புத்தூர், திருப்புனவாயில், திருவிராமேச்சுரம், திருவாடானை, திருக்கானப்பேர், திருப்பூவணம், திருச்சுழியல், திருக்குற்றாலம், திருநெல்வேலி என்ற வரிசை முறைமை இவ் ஆய்வேட்டில் பயன்படுத்தப்படுகின்றது.

உமாபதி சிவாச்சாரியார் இயற்றியுள்ள திருப்பதிக்கோவையைத் தவிர வேறு சில திருப்பதிக்கோவைகளும் கிடைக்கப்பெறுகின்றன. மாறனகப்பொருள் என்ற இலக்கண நூல் கி.பி. 1548ஆம் ஆண்டில் திருக்குருகைப் பெருமாள் கவிராயர் என்பவரால் இயற்றப்பட்டது.[15] மாறனகப்பொருளுக்கு மேற்கோளாக இதன் ஆசிரியர் இயற்றியது 'திருப்பதிக்கோவை' ஆகும்.[16] வைணவத் திருத்தலங்கள் தொண்ணூற்று மூன்றை இந்நூல் பாடுவதால் 'திருப்பதிக்கோவை' என்ற பெயர் பெற்றது. வைணவத் திருத்தலங்களான நூற்றியெட்டு திவ்விய தேசங்களை 40 கண்ணிகளில் கூறும் திருப்பதிக்கோவையை திருவரங்கத்தமுதனார் பாடியுள்ளார்.[17] வங்கிபுரத் தாய்ச்சி என்பவரும் திருப்பதிக்கோவை என்ற நூலை இயற்றியுள்ளார்.[18] மேலே கூறப்பட்டுள்ள திருப்பதிக்கோவை நூல்கள் வைணவத் திருத்தலங்களைச் சார்ந்ததால் இவ் ஆய்விற்கு எடுத்தாளப்படவில்லை.

இவ் ஆய்வு சைவத் திருக்கோயில்களைப் பற்றி அமைவதால் முதன்மைக் கடவுள்களாக சிவனும் உமையாளும் இருக்கின்றனர். இவர்கள் இவ் ஆய்வேட்டில் முறையே 'இறைவன்', 'இறைவி' என்று குறிக்கப்படுகின்றனர். ஒரே திருக்கோயிலில் இறைவனுக்கும் இறைவிக்கும் தனித்தனி சந்நிதிகள் அமைந்திருந்தால் 'இறைவன் சந்நிதி' என்றும் 'இறைவி சந்நிதி' என்றும் குறிப்பிடப்படுகிறது. இறைவன் சந்நிதி, இறைவி சந்நிதி, மண்டபங்கள், பரிவார சந்நிதிகள், திருச்சுற்றுகள் உள்ளிட்ட அனைத்தையும் உள்ளடக்கியது 'திருக்கோயில்' என்று குறிப்பிடப்படுகிறது. இறைவன்,

இறைவிக்கு தனித்தனி திருக்கோயில்கள் அமைந்திருந்தால் இறைவன் சந்நிதி, திருச்சுற்றுகள், மண்டபங்கள் உள்ளிட்டவைகள் ஒன்றாக ‘இறைவன் திருக்கோயில்’ என்றும் அதே போல் இறைவியினுடையது ‘இறைவி திருக்கோயில்’ என்றும் குறிக்கப்படுகிறது. திருக்கோயில்கள் அமைந்த ஊர் ‘திருத்தலம்’ என்ற சொல்லால் குறிக்கப்படுகின்றது.

சைவத் திருக்கோயில்களில் இராசகோபுரத்தின் வழியே சென்று வெளியிலிருந்து திருச்சுற்றுகளை வரிசையாக கடிகாரசுழற்சி முறையில் சுற்றி வந்து கடைசியில் கருவறை வந்து வணங்குவது மரபு. முதலில் இறைவியையும் பின்னர் இறைவனையும் வணங்குதல் முறையாதலால் அதன்படி திருக்கோயிலமைப்பு விளக்கப்பட்டுள்ளது. திருக்கோயிலில் வழங்கப்படும் பெயர்கள் அந்த முறையிலேயே குறிக்கப்பெற்றுள்ளன. வடமொழி பெயர்களாகயிருப்பினும் அவை அவ்வாறே கையாளப்பட்டுள்ளன.

**திருவாப்பனூர்:**

பாண்டிப் பதினான்கு திருத்தலங்களில் முதலாவதாய் அமைந்திருக்கும் திருஆலவாய் திருத்தலம் இவ் ஆய்வு எல்லைக்குள் அமையாததால் திருவாப்பனூர் திருத்தலத்திலிருந்து ஈண்டு விளக்கப்பட்டுள்ளது.

திருவாப்பனூர் பாண்டிப் பதினான்கு திருத்தலங்களில் இரண்டாவதாகும். இது மதுரை மாவட்டத்தில் அமைந்துள்ளது.

**மூர்த்தி:**

இறைவனுக்கு ஆப்புடையார், ஆப்பனூரார், ஆப்புடையீசர், இடபபுரேசர், அன்னவிநோதன் ஆகிய பெயர்கள் உள்ளன. இதில் ஆப்புடையார் என்ற பெயரே மிகுதியும் வழக்கில் உள்ளது. சிவாச்சாரியார்கள் அருச்சனையின் பொழுதும் பிற வழிபாடுகளின் பொழுதும் கீழகேசுவரர் என்ற வடமொழிப் பெயரைப் பயன்படுத்துகின்றனர். இறைவிக்கு குரவங்கமழ் குழலம்மை, அம்பிகையம்மை ஆகிய பெயர்களும் சுகந்த குந்தளாம்பிகை என்ற வடமொழிப் பெயரும் வழங்கப்படுகின்றன.

**திருத்தலம்:**

இறைவன் பெயரிலிருந்தே திருவாப்பனூர் என்று திருத்தலத்திற்கும் பெயர் ஏற்பட்டுள்ளது. தற்பொழுது ‘திருவாப்புடையார் திருக்கோயில்’ என்றும் ‘ஆப்புடையார்

திருக்கோயில்' என்றும் மக்களால் இத்திருத்தலம் அழைக்கப்படுகின்றது. இது வைகை ஆற்றின் வடகரையில் அமைந்துள்ளது.

இத்திருத்தலத்திற்கு திருப்பூவணம் கந்தசாமிப்புலவர் என்பவர் எழுதி 1887ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட 'திருவாப்பனூர்ப்புராணம்' என்ற பழமையான தலபுராணம் ஒன்று உள்ளது. இதில் பாடல் பகுதி மட்டும் தொகுத்து வெளியிடப்பட்டுள்ளது. இம்மூலநூலிற்கு பொழிப்புரை புலவர் நீ.சீ.சுந்தரராமன் என்பவரால் எழுதப்பெற்று 'திருவாப்பனூர்த் தலபுராணம்' என்ற பெயரில் 2005ஆம் ஆண்டு அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில் வெளியீடாக வந்துள்ளது. இவ்விரண்டு நூல்களும் கிடைக்கப்பெற்றுள்ளன.

இத்திருத்தலத்திற்கு நான்கு புராணங்கள் முதன்மையாகக் கூறப்படுகின்றன. இறைவனின் பெயரான 'ஆப்புடையார்' என்று வழங்கப்படுதற்கு ஒரு புராணம் அமைந்துள்ளது. சோழாந்தகன் என்ற பாண்டிய மன்னன் மதுரையை ஆண்டு வந்தான். ஒரு முறை அவனும் அவன் பரிவாரங்களும் வேட்டைக்குச் செல்லும் பொழுது ஒரு மானைக் கண்டனர். மன்னன் அந்த மானை வேட்டையாட துரத்திச் சென்றான். ஆனால் அந்த மான் பிடிபடவில்லை. துரத்திச் சென்ற களைப்பால் மயங்கி விழுந்தான் மன்னன். அமைச்சரும் சேனைகளும் மன்னன் மயக்கத்தை நீக்க உணவு தயார் செய்து தந்தனர். ஆனால் மன்னனோ 'சுயம்பு லிங்கத்தை தரிசனம் செய்யாது உண்ண மாட்டேன்' என்று உறுதியாய்க் கூற அமைச்சரும் பிறரும் ஒரு மரத்தை வெட்டி ஆப்பாக பூமியில் நட்டு, அலங்காரங்கள் செய்து சுயம்பு லிங்கம் போலாக்கி மன்னனிடம் காட்டினர். பசிமயக்கத்தில் மன்னனும் ஆப்பை சுயம்பு லிங்கம் என்று நம்பி உணவை ஏற்றுக் கொண்டான். பின்னர் களைப்பு நீங்கியதும் உண்மையை உணர்ந்து தன் விரதம் பொய்த்து விட்டது என்று கலக்கங் கொண்டு வாளால் தன்னை அறுத்து உயிர்விடத் துணிந்தான். உடனே இறைவன் அசிரீரி வடிவாய்த் தோன்றி, தான் அந்த ஆப்பிலேயே நிலைபெற்று 'ஆப்புடையார்' என்ற பெயரோடு அருள்புரிவேன் என்று கூறினார்.[19] தற்பொழுது 'ஆப்புடையார்' குடிகொண்டிருக்கும் 'திருவாப்பனூரில்' இந்நிகழ்வு நடந்ததாகக் கூறப்படவில்லை. இப்புராணம் எங்கு நடந்தது என்பதைத் தல புராணங்கள் உணர்த்தவில்லை. ஆனால் தற்காலத்திய இராமநாதபுர மாவட்டத்தில் இச்சம்பவம் நடந்துள்ளதாகக் கூறப்படுகின்றது.[20]

அங்கிருந்து இத்திருத்தலத்திற்கு இறைவன் வந்ததற்கு மற்றொரு புராணம் வழங்கப்படுகின்றது. ஆப்புடையாருக்கு பூசை செய்யும் அந்தணர் ஒருவர் ஏரிப் பள்ளத்தின் நீரை வைத்து நெல் விதைத்து அதன் மூலம் நிவேதனம் செய்து வந்தார். தீய சிந்தனையுடைய அந்தணர்கள் சிலர் ஏரி நீர் அனைவருக்கும் பொதுவானது என்று கூறித் தங்களின் பருத்தி வயலுக்கு நீரைத் திருப்பிப் பாய்ச்சினார்கள். இதைக் கண்ட அந்தணர் இறைவனின் அமுதுக்கு என்ன செய்வேன் என்று கலங்கினார். தீய சிந்தனை உடையவர்கள் அந்தணர்களாய் இருந்தால் யாரிடம் சென்று முறையிடுவது என்று வருந்தி இறைவனிடமே முறையிடுகின்றார். இறைவனும் தீயவழி சென்ற அந்தணர்கள் வாழும் இவ்வூரில் இருக்க விருப்பமில்லை என்று கூறி, தான் வேறிடம் செல்வதாகவும் மனைவி மக்களுடன் தன்னைத் தொடர்ந்து வருமாறும் பணிக்கிறார். திருமாலும் பிரம்மனும் அடையமுடியாத இறைவனைத் தான் எங்ஙனம் அடைய இயலும் என்று அந்தணர் வினவ, தான் ஏறிச் சென்ற இடபத்தின் காலடியையும் நறுமணம் மிக்க கொன்றை மலர்களின் வழித்தடத்தையும் பின்பற்றி வருமாறு, இறைவன் கூறுகிறார். இவ்வாறு இறைவனான 'ஆப்புடையார்' வந்து எழுந்தருளியுள்ள இடமே திருவாப்பனூர் ஆகும். அந்தணரின் சாபத்தால் அந்தவூர் கல் மாரியால் அழிந்து போனது. இடபத்தின் காலடியையும் கொன்றை மலர்களையும் தொடர்ந்து வந்த அந்தணரும் அவர் குடும்பம் திருவாப்பனூரில் இறைவனைக் கண்டு அருள் பெற்று சிவபூசை செய்துவரலாயினர்.[21]

இடபத்தின் காலடியைப் பின்பற்றி வந்ததால் இடபபுரி என்று திருத்தலத்திற்கும், இடப தீர்த்தம் என்று தீர்த்தத்திற்கும், இடபபுரேசர் என்று இறைவனுக்கும் பெயர்கள் வந்தன. இச்சம்பவம் நடந்தது சோழாந்தகன் மகன் சுகுணன் காலத்திலாகும்.

மூன்றாவது புராணம் இறைவனுக்கு அன்னவிநோதன் என்ற பெயர் ஏற்பட்டதைக் கூறுகின்றது. அந்தணர், இறைவன் அமுதுக்கு என்ன செய்வேன் என்று வருந்தும் வேளையில், இறைவன் வைகையாற்று மணலை உலையில் போட்டு உள்ளன்புடன் அமுது செய்தால் மணலை அன்னமாக்குவேன் என்று அருளினார். இவ்வாறு ஆற்று மணலை அன்னமாக்கி அமுது செய்வித்தார். எப்படி அந்தணருக்கு அன்னம் கிடைக்கின்றது என்று அவரின் மனைவி கேட்கிறாள். இறைவன் இந்த ரகசியத்தை யாருக்கும் கூறக்கூடாது. அப்படிக் கூறினால் மணல் அன்னமாகாது என்று எச்சரித்திருந்தார். ஆனால் மனைவியின் இடர் தாங்காமல் அந்தணர் உண்மையைக் கூறிவிட மறுநாள் இறைவன் கூறியது போல் மணல் உலையிட அன்னமாகவில்லை.

துன்பமடைந்த அந்தணர் இறைவனிடம் முறையிட்டார். இறைவன் அந்தணரிடம் பாண்டிய மன்னன் சுகுணன் கனவில் உன் நிலை உணர்த்தியுள்ளோம். ‘அவனிடம் செல்’ என்று அருளினார். இதன்படி சுகுனனும் அந்தணருக்கு வேண்டிய பொன்னும் மணிகளும் தந்து நாள் வழிபாட்டிற்கான அன்னத்திற்கும் பாதிப்பு வராமல் பொருட்களைத் தந்தான். அன்னத்தைக் கொண்டு இந்த திருவிளையாடலை இறைவன் திருவாப்பனூர் திருத்தலத்தில் செய்ததினால் ‘அன்னவிநோதன்’ என்ற பெயரைப் பெற்றார்.[22]

நான்காவது வரலாறு குபேரனுக்கு செல்வத்தை அளித்ததைக் கூறுகின்றது. குபேரனின் இயற்பெயர் வைசுரவனன் என்பதாகும். அவனுக்குச் செல்வத்தின் அதிபதியாக வேண்டும் என்ற விருப்பம் எழுந்தது. பொதிய மலையில் வாழ்ந்த அகத்தியரிடம் சென்று விண்ணப்பித்தான். அகத்தியர் அவனை திருவாப்பனூர் சென்று இடப தீர்த்தத்தில் நீராடி இறைவனை வணங்குமாறு பணித்தார். வைசுரவனனும் அவ்வாறு செய்ய இறைவன் தோன்றி அவனுக்குச் செல்வத்தின் அதிபதி பதவியைத் தந்து சங்க நிதி, பதும நிதி ஆகியனவற்றை அளித்து அருளினார்.[23] தலபுராணத்தில் குபேரனின் பெயர் ‘விச்சிரவசு’ என்று குறிப்பிடப்பட்டுள்ளது.[24]

இத்திருக்கோயிலுக்கு ஐந்து திருச்சுற்றுகள் இருந்துள்ளன. இறைவன் இறைவி கோட்டத்தைச் சுற்றியுள்ள பகுதி முதல் திருச்சுற்றாகக் கருதப்படுகின்றது. எனவே இத்திருக்கோயிலுக்கு இரண்டு முதல் திருச்சுற்றுகள் உள்ளன.

இறைவன் சந்நிதியைச் சுற்றியிருக்கும் முதல் திருச்சுற்று இறைவன் சந்நிதி முதல் திருச்சுற்று என்றும் இறைவி சந்நிதியைச் சுற்றியிருப்பது இறைவி சந்நிதி முதல் திருச்சுற்று என்றும் வழங்கப்படுகின்றன. கருவறை, திருச்சுற்றை உள்ளடக்கியது இரண்டாம் திருச்சுற்றாகும். இரண்டாம் திருச்சுற்றின் நான்கு பகுதிகள் கிழக்குச்சுற்று, தெற்குச்சுற்று, மேற்குச்சுற்று, வடக்குச்சுற்று என்று வழங்கப்படுகிறது.

இரண்டாம் திருச்சுற்று ‘உள் வீதி’ என்று அழைக்கப்பட்டுள்ளது. இதையடுத்துள்ள மூன்றாம் திருச்சுற்று ‘ஆடி வீதி’ என்ற பெயரை முன்னர் பெற்றிருந்ததை அறிய முடிகின்றது. இவை முறையே கீழ ஆடி வீதி, தெற்கு ஆடி வீதி, மேற்கு ஆடி வீதி, வடக்கு ஆடி வீதி என்று அழைக்கப்பட்டுள்ளன.[25] தற்காலத்தில் நந்தவனம் இத்திருச்சுற்றில் இருப்பதால் ‘நந்தவன திருச்சுற்று’ என்று

வழங்கப்படுகிறது. நான்காம் திருச்சுற்று ‘மாட வீதி’ என்று அழைக்கப் பெற்றுள்ளது. ஆடி வீதியைப் போல் மாட வீதியும் முறையே கீழ மாட வீதி, தெற்கு மாட வீதி, மேற்கு மாட வீதி, வடக்கு மாட வீதி என்ற பெயர்களைக் கொண்டிருந்துள்ளன.[26] திருவீதி புறப்பாடு நான்காம் திருச்சுற்றில் நடைபெறுகின்றது. இதை அடுத்துள்ளது ஐந்தாம் திருச்சுற்று ஆகும்.

இத்திருக்கோயிலுக்கு தேர் கிடையாது. ரத வீதிகளும் வகுக்கப்படவில்லை. இத்திருக்கோயிலில் குபேரன் வந்து வழிபாடு செய்துள்ளதை தலபுராணத்தின் மூலம் அறியமுடிகின்றது. இத்திருத்தலத்திற்கு வேறு பெயர்களாக இடபபுரி, அன்னவிநோதபுரம் ஆகியன உள்ளன. இதன் தலவிருட்சம் கொன்றை ஆகும். குடமுழுக்கு 1976, 1997, 2013 ஆகிய ஆண்டுகளில் நடைபெற்றுள்ளது. தமிழக அரசின் அன்னதானத்திட்டம் 2014ஆம் ஆண்டு தொடங்கப்பெற்று தினமும் 100 பக்தர்களுக்கு அன்னதானம் செய்யப்பட்டு வருகின்றது.

**தீர்த்தம்:**

இத்திருக்கோயிலுக்கு இரண்டு தீர்த்தங்கள் உள்ளன. அவை முறையே வைகையாறும் திருக்கோயிலில் இருக்கும் இடப தீர்த்தமும் ஆகும்.

**திருக்கோயிலமைப்பு:**

கிழக்கு நோக்கி அமைந்திருக்கும் இத்திருக்கோயிலில் நுழைந்தவுடன் அமைந்திருப்பது மூன்றாம் திருச்சுற்றாகும். மூன்றாம் திருச்சுற்றின் தென்கிழக்கில் இடப தீர்த்தம் உள்ளது. தெற்குப்பகுதியில் நந்தவனம் அமைந்துள்ளது. வாயிலின் வலப்புறம் அன்னதானக்கூடம் அமைக்கப்பட்டுள்ளது. இத்திருக்கோயிலுக்கு இராசகோபுரம் இல்லை. இரண்டாம் திருச்சுற்றின் வாயிலில் சாலக்கோபுரம் என்ற அமைப்பு உள்ளது. இரண்டாம் திருச்சுற்றின் உள்ளே முதலில் இருப்பது மகா மண்டபமாகும். இதில் கிழக்கிலிருந்து மேற்காக கொடிமரம், பலிபீடம், நந்தி ஆகியன அமைந்துள்ளன.

இரண்டாம் திருச்சுற்று கிழக்குச்சுற்றின் இடப்புறம் அலுவலகம் முதலில் அமைந்துள்ளது. அலுவலகத்தையடுத்து இருப்பது மடப்பள்ளி ஆகும். மடப்பள்ளியடுத்து அறை உள்ளது. மேற்குச்சுற்றில் முதலில் வருவது அறை. இதையடுத்து சுந்தரவிநாயகர் சந்நிதி அமையப்பெற்றுள்ளது. சுந்தரவிநாயகருக்கு முன்னே வாகனமாக மூஞ்சூரும், பலிபீடமும் அமைந்துள்ளன. இதையடுத்து இருப்பது

காசிவிசுவநாதர் சந்நிதியாகும். இச்சந்நிதியில் காசிவிசுவநாதருக்கு வலதுபுறம் விசாலாட்சியும் இடதுபுறம் நாகர் சிலையும் முன்புறம் நந்தி, பலிபீடம் ஆகியன அமைந்துள்ளன. இச்சந்நிதியையடுத்து பஞ்சபூதங்களான பிருதிவிலிங்கம், அப்புலிங்கம், தேயுலிங்கம், வாயுலிங்கம், ஆகாயலிங்கம் ஆகியன அமைக்கப்பட்டுள்ளன. இதில் பிருதிவிலிங்கம் மட்டும் முன்புறம் நந்தியுடன் அமைக்கப்பட்டுள்ளது. பஞ்சபூதலிங்கங்களையடுத்து சுர தேவர், சண்டிகேசுவரர் சிலைகள் உள்ளன. இதனையடுத்து அமைந்திருப்பது வள்ளி, தெய்வானை, சண்முகர் சந்நிதியாகும். இதில் சண்முகர் இடப்பக்கம் நோக்கிய மயிலுடன் ஆறுமுகங் கொண்டு காட்சியளிக்கிறார்.

இரண்டாம் திருச்சுற்றின் வடக்குப்பகுதியில் இறைவி சந்நிதி உள்ளது. இதன் எதிரே மகா மண்டபத்தில் கிழக்கிலிருந்து மேற்காக கொடிமரம், பலிபீடம், நந்தி ஆகியன அமைந்துள்ளன.

மகா மண்டபத்தையடுத்துள்ள வாயிலின் இடப்புறம் விநாயகர் சிலை உள்ளது. இடப்பக்கம் நோக்கிய மயிலுடன் வள்ளி தெய்வானை இல்லாமல் சுப்பிரமணியர் சிலை வாயிலின் வலப்புறம் உள்ளது. வாயிலைக் கடந்தால் முன் மண்டபமாகும். முன் மண்டபத்தின் இடப்புறம் உள்ள வாயிலின் வழியே இரண்டாம் திருச்சுற்றை அடையலாம். இவ்வாயிலின் எதிர்புறம் முன் மண்டபத்தின் வலப்பக்கம் பள்ளியறை அமைந்துள்ளது. முன் மண்டபத்தை அடுத்து இறைவி சந்நிதி முதல் திருச்சுற்று கருவறையையும் அர்த்த மண்டபத்தையும் சுற்றி உள்ளது. இத்திருச்சுற்றில் இறைவி சந்நிதி கோட்டத்தைச் சுற்றியுள்ள இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞானா சக்தியின் சிலைகளையும், சண்டிகேசுவரி சந்நிதியையும் காணலாம்.

அர்த்த மண்டப வாயிலின் இடதுபுறம் துவார பாலகி, விநாயகர் சிலைகளும், வலதுபுறம், வலப்பக்கம் நோக்கிய மயிலுடன் வள்ளி தெய்வானை இன்றி சுப்பிரமணியர், துவார பாலகி சிலைகளும் உள்ளன. அர்த்த மண்டபத்தைக் கடந்து கருவறையில் இறைவி இருக்கிறாள்.

இறைவி சந்நிதிக்கும் இறைவன் சந்நிதிக்கும் இடையில் வேப்பமரம், அரசமரம், நாகர்களுடன் அரசமர விநாயகர் அமர்ந்துள்ளார். இறைவி சந்நிதிக்கு எதிரே நவக்கிரக சந்நிதியும் முன் மண்டபத்துடன் கூடிய நடராசர் சந்நிதியும் உள்ளன.

தெற்கு நோக்கியிருக்கும் நடராசர் சந்நிதியின் உள்ளே பதஞ்சலி, நந்திதேவர், நடராசர், சிவகாமி, வ்யாக்ரபாதர் ஆகிய சிலைகள் உள்ளன.

இரண்டாம் திருச்சுற்றின் கிழக்குச்சுற்றின் வடக்குப் பகுதியில் அறை, பொருட்கள் வைப்பு அறை, இறைவி நந்தியுடன் கைலாசநாதர் சந்நிதி, பைரவர் சந்நிதி, அறை, மயில் வாகனத்தை எதிரில் கொண்டு தெண்டபாணி சந்நிதி ஆகியன அமைந்துள்ளன.

இறைவன் சந்நிதி வாயிலின் இடப்புறம் வரம்தரும் விநாயகர் சந்நிதியும் வலப்புறம் வள்ளி தெய்வானை முருகன் சந்நிதியும் உள்ளன. வாயிலைக் கடந்ததும் வருவது மண்டபம் ஆகும். இம்மண்டபத்தின் இடப்பக்கம் லிங்கம், சுந்தரர், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், மாணிக்கவாசகர், பிள்ளையார் சிலைகள் உயரமான பீடத்தின் மேல் உள்ளன.

இம்மண்டபத்தின் வலதுபுறம் நடராசர் சந்நிதி உள்ளது. இச்சந்நிதியில் நடராசர், சிவகாமியின் சிலைகள் உள்ளன. நடராசர் சந்நிதியின் எதிரே இரண்டாம் திருச்சுற்றை அடையும் வாயில் உள்ளது.

இறைவன் சந்நிதி கோட்டத்தின் தெற்கில் தெட்சிணாமூர்த்தி சந்நிதி, மண்டபம், கோட்டத்தின் மேற்கே உள்ள லிங்கோத்பவர், பிட்சாடனர், மண்டபம், கோட்டத்தின் வடக்கே உள்ள துர்க்கை, சண்டிகேசுவரர் சந்நிதி ஆகியன அமைந்துள்ளன.

இறைவன் சந்நிதியின் அர்த்த மண்டபத்தை அடையும் வாயிலின் எதிரே நந்தி, வலப்புறம் துவார பாலகர், விநாயகர், இடப்புறம் சுப்பிரமணியர், துவார பாலகர் ஆகிய சிலைகள் உள்ளன.

இவ்வாயிலைக் கடந்தால் அர்த்த மண்டபமாகும். இதையடுத்துள்ள கருவறையில் இறைவன் இருக்கிறார்.

**திருவேடகம்:**

இவ் ஆய்வு எல்லைக்குள் பாண்டிப் பதினான்கு திருத்தலங்களில் மூன்றாவதாக விளங்கும் திருப்பரங்குன்றம் அமையாததால் ஈண்டு விளக்கப்படவில்லை.

மதுரை மாவட்டத்தில் அமைந்துள்ள திருவேடகம், பாண்டிப் பதினான்கு திருத்தலங்களில் நான்காவதாகும்.

**மூர்த்தி:**

இறைவனுக்கு ஏடகநாதர் என்றும் இறைவிக்கு ஏலவார் குழலியம்மை என்றும் பெயர்கள் வழங்கப்படுகின்றன.

ஏடு என்ற தமிழ்ச்சொல்லுக்கு ஈடாக இறைவனுக்கு வடமொழியில் பத்ரிகா பரமேசுவரர் என்ற பெயர் உள்ளது. இறைவிக்கு வடமொழியில் சுகந்த குந்தளாம்பிகை என்ற பெயர் வழங்கப்படுகின்றது.

**திருத்தலம்:**

வைகையாற்றின் வடகரையில் அமைந்துள்ள திருவேடகம், திரு+ஏடு+அகம் எனப் பிரியும். திருஆலவாய் திருத்தலத்தில் திருஞானசம்பந்தர் சமணர்களுடன் செய்த புனல் வாதத்தின் பொழுது ஏடு வைகையாற்றை எதிர்த்து ஓடி, பின்னர் தங்கிய இடம் ஆகும். திருஞானசம்பந்தர் காலத்திலிருந்து இவ் ஆய்வு காலம் வரையிலும் ‘திருவேடகம்’ என்றே இத்திருத்தலம் வழங்கப்படுகின்றது.

இத்திருத்தலத்திற்குரிய தலபுராணங்கள் கிடைக்கவில்லை.

காசி என்றழைக்கப்படும் வாரணாசித் திருக்கோயிலின் பின்புறம் தென்வடலாக கங்கை ஓடுவதைப் போன்று இத்திருக்கோயிலின் பின்னர் வைகை தென்வடலாக ஒடுவதால் காசிக்கு நிகராகக் கருதுகின்றனர்.

திருக்கோயிலுக்கு எதிரே பாதி கட்டப்பட்ட நிலையில் ‘மொட்டைக் கோபுரம்’ உள்ளது. திருக்கோயிலுக்குப் பின்னால் ஒரு மண்டபமும் கட்டப்பட்டுள்ளது. இம்மண்டபம் ‘மொட்டை மண்டபம்’ என்று அழைக்கப்படுகின்றது. இராசகோபுரத்தைத் தாண்டி உள்ள பகுதிகளில் மண்டபம் அமைப்பதற்கான திருப்பணிகள் செய்யப்பெற்று முழுமையடையாமல் உள்ளன.

இத்திருக்கோயிலுக்கு மூன்று திருச்சுற்றுகள் உள்ளன. இறைவன் சந்நிதியைச் சுற்றியிருப்பது இறைவன் சந்நிதி உள்திருச்சுற்று என்றும் இறைவி சந்நிதியைச் சுற்றியிருப்பது இறைவி சந்நிதி உள்திருச்சுற்று என்றும் வழங்கப்படுகின்றன. இரண்டையும் உள்ளடக்கிய திருச்சுற்று ‘ஆடி வீதி’ ஆகும்.

திருக்கோயிலுக்கு எதிரே இருப்பது கீழ ரத வீதியாகும். திருக்கோயிலுக்குப் பின்னால் வைகையாற்றுக்கு இடையில் இருப்பது மேல ரத வீதி ஆகும். திருக்கோயிலுக்கு தெற்கே முதலில் அமைந்திருப்பது தெற்கு மாட வீதி. இதையடுத்து

தெற்கு ரத வீதியாகும். வடக்கில் முதலில் இருப்பது வடக்கு மாட வீதி. இது அக்ரகாரத் தெரு என்றும் அழைக்கப்படுகின்றது. இதையடுத்து வடக்கு ரத வீதியாகும். திருவிழாக்களின் பொழுது திருவீதி புறப்பாடு கீழ ரத வீதி, தெற்கு மாட வீதி, மேல ரத வீதி, வடக்கு மாட வீதி வழியாக நடைபெறுகின்றது. அட்டமி வலம்வருதலின் பொழுது மட்டுமே நான்கு ரத வீதிகளின் வழியே திருவீதி புறப்பாடு நிகழ்கின்றது. இத்திருக்கோயிலுக்கு நூற்றியிருபது வருடங்களுக்கு முன்னர் தேர் இருந்த பொழுது ரத வீதிகள் வகுக்கப்பட்டுள்ளன.[27]

இத்திருத்தலம் வில்வாரண்யம் என்ற பெயரையும் கொண்டுள்ளது. ஆதிசேடன், பிரம்மன் ஆகியோர் பூசித்துள்ளனர். காமிகா ஆகமத்தில் அமைந்த இத்திருக்கோயிலின் தல விருட்சம் வில்வம் ஆகும். 1930, 1970, 2001, 2017ஆம் ஆண்டுகளில் குடமுழுக்கு செய்யப்பட்டுள்ளது. 2015ஆம் ஆண்டு முதல் செயல்பட்டு வரும் தமிழக அரசின் அன்னதானத்திட்டத்தில் நாள்தோறும் 50 நபர்களுக்கு அன்னதானம் வழங்கப்படுகின்றது.

**தீர்த்தம்:**

வைகை ஆறு, திருக்கோயிலுக்கு சற்று எதிரே கிழக்கில் உள்ள பிரம்ம தீர்த்தம் ஆகிய இரண்டு தீர்த்தங்கள் உள்ளன.

**திருக்கோயிலமைப்பு:**

திருஞானசம்பந்தர் சந்நிதி வைகையாற்றுக்கும் மேல ரத வீதிக்கும் இடையில் உள்ளது. கிழக்கு நோக்கி அமைந்த இத்திருக்கோயிலின் இறைவன், இறைவி சந்நிதிகளுக்கு தனித்தனியே ஐந்து நிலைகள் கொண்ட இராசகோபுரம் உள்ளது. இடதுபுறம் இறைவி சந்நிதியும் வலதுபுறம் இறைவன் சந்நிதியும் அமையப்பெற்றுள்ளன. இறைவன் சந்நிதியின் இராசகோபுரத்தின் வழியே உள்ளே நுழைந்தால் கம்பத்தடி மண்டபமாகும். இதன் நடுவே கிழக்கிலிருந்து மேற்காக கொடிமரம், பலிபீடம், நந்தி அமைந்துள்ளன. இது 'நந்தி மண்டபம்' என்றும் அழைக்கப்படுகின்றது. கம்பத்தடி மண்டபம் அமைந்திருக்கும் திருச்சுற்று ஆடி வீதி ஆகும். கம்பத்தடி மண்டபத்திற்கு இடதுபுறம் திருப்பணிக்காக அமைக்கப்பெற்ற கல் மேடைகள் உள்ளன. ஆடி வீதியில் மடப்பள்ளி, அன்னதானக் கூடம் உள்ளன. ஆடி வீதியைச் சுற்றி நந்தவனம் அமைக்கப்பட்டுள்ளது.

கம்பத்தடி மண்டபத்தை அடுத்து வெளி மண்டபத்துடன் அமைந்துள்ள இறைவன், இறைவி சந்நிதிகளின் வாயிலின் மேலே மூன்று நிலை கோபுரம் உள்ளது. இறைவன் சந்நிதி வெளி மண்டபத்தின் இடதுபுறம் விமானத்துடன் குடவரை விநாயகர் சந்நிதியும் வலதுபுறம் பாலசுப்பிரமணியர் சந்நிதியும் அமைக்கப்பெற்றுள்ளன. வாயிலைக் கடந்தால் மகா மண்டபமாகும். மகா மண்டபத்தின் இடதுபுறம் சாயை, சூரியன், சமிக்ஞை சிலைகள், அறை ஆகியன உள்ளன. மகா மண்டபத்தின் தெற்குப் பகுதியில் இறைவி சந்நிதிக்குச் செல்ல வாயில் உள்ளது. இவ்வாயிலைக் கடந்தால் இறைவி சந்நிதியின் மகா மண்டபம் ஆகும். இதன் நடுவே கிழக்கிலிருந்து மேற்காக பலிபீடம், நந்தி அமைந்துள்ளன.

மகா மண்டபத்தின் வலதுபுறம் பள்ளியறை உள்ளது. மகா மண்டபத்தைக் கடந்து இறைவியின் கோட்டத்தைச் சுற்றியுள்ளது இறைவி சந்நிதி உள்திருச்சுற்றாகும். இதை கடிகாரசுழற்சி முறையில் சுற்றி வந்தால் கோட்டத்தின் தெற்கில் இருக்கும் இச்சா சக்தி, தென்மேற்கு மூலையில் விநாயகர், கோட்டத்தின் மேற்கில் இருக்கும் கிரியா சக்தி, வடமேற்கு மூலையில் சுப்பிரமணியர், கோட்டத்தின் வடக்கில் ஞானா சக்தி, சண்டிகேசுவரி சந்நிதி ஆகியனவற்றைக் காணலாம்.

மகா மண்டபத்தை அடுத்திருக்கும் நுழைவாயிலின் இடதுபுறம் துவார பாலகர், விநாயகர் சிலைகளும் வலதுபுறம் துவார பாலகர், தெண்டாயுதபாணி சிலைகளும் உள்ளன. இதனைக் கடந்தால் அர்த்த மண்டபமாகும். அர்த்த மண்டபத்தை அடுத்துள்ள கருவறையில் இறைவி இருக்கிறாள்.

இறைவி, இறைவன் சந்நிதிகளின் இடையே இருக்கும் வாயிலின் வழி இறைவன் சந்நிதி மகா மண்டபத்தையும் இதனையடுத்து கோட்டத்தைச் சுற்றியிருக்கும் இறைவன் சந்நிதி உள்திருச்சுற்றையும் அடையலாம். இத்திருச்சுற்றின் தெற்குப் பகுதியின் இடதுபுறம் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், சரசுவதி, காசி லிங்கம் ஆகியன உள்ளன. இதனையடுத்து அறுபத்துமூன்று நாயன்மார்கள், மாணிக்கவாசகர், சேக்கிழார், விநாயகர் ஆகியன அமைக்கப்பெற்றுள்ளன. கோட்டத்தின் தெற்கில் பால கணபதி, தெட்சிணாமூர்த்தி சிலைகள் உள்ளன.

இறைவன் சந்நிதி உள்திருச்சுற்றின் தென்மேற்கில் உற்சவமூர்த்திகள் சந்நிதி அமைந்துள்ளது. இதையடுத்து மெய்கண்ட தேவர், அருணந்தி சிவாச்சாரியர்,

மறைஞான சம்பந்தர், உமாபதி சிவாச்சாரியார் ஆகிய சிலைகள் உள்ளன. இதனையடுத்து இத்திருக்கோயில் பகுதியில் வாழ்ந்த சித்தரின் சிலை நிறுவப்பட்டுள்ளது. சித்தர் சிலையை அடுத்து பஞ்ச லிங்கங்கள் உள்ளன. இவைகளுக்கருகே ஏலவார் குழலியம்மையின் சிலை உள்ளது. வடமேற்கில் வள்ளி தெய்வானை சண்முகர் சந்நிதி உள்ளது.

கோட்டத்தின் மேற்கில் லிங்கோத்பவரும் வடக்கில் துர்க்கையின் சிலைகளும் உள்ளன. இறைவன் சந்நிதி உள்திருச்சுற்றின் வடக்குப் பகுதியின் இடதுபுறம் சப்த மாதர், இரட்டை விநாயகர், சுப்பிரமணியர், நாகர்களுடன் விநாயகர் ஆகிய சிலைகள் அமைக்கப்பட்டுள்ளன. கோட்டத்தின் வடக்கே சண்டிகேசுவரர் சந்நிதி உள்ளது. இறைவன், இறைவி சந்நிதிகளின் இடையில் இருக்கும் வாயிலுக்கு எதிர்புறம் மகா மண்டபத்தின் வலதுபுறம் நடராசர் சந்நிதி அமைந்துள்ளது. இதில் நடராசர் தெற்கு நோக்கியும் சிவகாமி மேற்கு நோக்கியும் உள்ளனர். நடராசர் சந்நதியை அடுத்து நவக்கிரக சந்நிதி சுற்றி வருவதற்கேற்ப அமைந்துள்ளது. இச்சந்நிதியை அடுத்து அறை உள்ளது. அறைக்கு அருகில் காலபைரவர், வல்லபை கணபதி, பூரணாம்பாள், அய்யனார், புசுகலாம்பாள், சாசுதா, சாசுதாவின் வாகனமான யானை, கிருத்திகை, சந்திரன், ரோகிணி ஆகிய சிலைகள் அமைந்துள்ளன.

மகா மண்டபத்தை அடுத்துள்ள வாயிலின் இடதுபுறம் துவார பாலகர், விநாயகர் ஆகியனவும் வலதுபுறம் துவார பாலகர், சுப்பிரமணியர் ஆகியனவும் அமைந்துள்ளன. வாயிலை அடுத்து வருவது அர்த்த மண்டபம் ஆகும். மனோன்மணித் தாயார் செப்புத் திருமேனி அமைந்துள்ள கருவறையில் இறைவன் இருக்கிறார்.

**திருக்கொடுங்குன்றம்:**

திருக்கொடுங்குன்றம் பாண்டிப் பதினான்கு திருத்தலங்களில் ஐந்தாவது திருத்தலம் ஆகும். இது சிவகங்கை மாவட்டத்தில் அமைந்துள்ளது.

**மூர்த்தி:**

‘கைலாயம்’ என்றழைக்கப்படும் மலை உச்சியில் உள்ள இறைவன் மங்கைபாகர் என்றும் இறைவி தேனம்மை என்றும் தமிழ்ப் பெயர்களைக் கொண்டுள்ளனர்.

‘மத்திமம்’ என்றழைக்கப்படும் பூலோகத்தில் உள்ள இறைவனுக்கு விசுவநாதர் என்றும், இறைவிக்கு விசாலாட்சி என்றும் பெயர்கள் வழங்கப்படுகின்றன.

‘பாதாளம்’ என்று கூறப்படும் மலை அடிவாரத்தில் உள்ள இறைவன் திருக்கொடுங்குன்றநாதர் என்ற தமிழ்ப் பெயரானும், கடோக்ரீசுவரர் என்ற வடமொழிப் பெயரானும் அழைக்கப்படுகிறார்.

இறைவி குயிலமுதநாயகி என்ற தமிழ்ப் பெயரையும் அமிர்தேசுவரி என்ற வடமொழிப் பெயரையும் கொண்டுள்ளாள்.

**திருத்தலம்:**

தேவாரத்தில் திருக்கொடுங்குன்றம் என்று குறிப்பிடப்பட்டுள்ள இத்திருத்தலம், சங்க காலத்தில் கடையேழு வள்ளல்களுள் ஒருவரான ‘பாரி’ ஆண்ட பறம்பு மலைப் பகுதியாகும்.

‘கொடு’ என்பதற்கு வளைதல் என்று பொருள் தரும் அகராதி.[28] வளைவான முகட்டினைக் கொண்ட மலைக் குன்றுகள் நிரம்பியதால் இதை திருக்கொடுங்குன்றம் என்று வழங்கியுள்ளனர் என்பதாகக் கருதப்படுகிறது.

வள்ளல் பாரியின் அருளாண்மையை அறியாத பகைவர்களின் கொடுமைக் களமாக இருந்ததால் இப்பெயர் பெற்றிருக்கலாம் என்பது தவத்திரு தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாச்சாரிய சுவாமிகளின் கருத்து.[29]

ஆய்வுக்காலத்தில் இத்திருத்தலம் ‘பிரான்மலை’ என்று அழைக்கப்படுகிறது.

‘பறம்புமலை’ என்று பேசப்பெற்று, ‘பிறாமலை’ ஆகி, பின் ‘பிராய்மலை’ என்று அழைக்கப்பட்டு ‘பிரான்மலை’ ஆனதாகக் குறிப்பிடுவார் குன்றக்குடி பெரியபெருமாள்.[30]

‘எம்பிரான்’ என்ற சொல் இறைவனான சிவபெருமானைக் குறிக்கும். சிவபெருமான் உறையும் மலை என்பதால் ‘எம்பிரான் மலை’ என்று அழைக்கப்பட்டு பின்னர் மருவி ‘பிரான்மலை’ என்று மாறியுள்ளது.

திருக்கொடுங்குன்றத்தின் பழமையான தல புராணங்கள் கிடைக்கப்பெறவில்லை. எனினும், 2000ஆம் ஆண்டு முதற்பதிப்பு கண்டு, 2016ஆம் ஆண்டு நான்காவது பதிப்பாக வெளிவந்த குன்றக்குடி பெரியபெருமாள் என்பாரின் ‘குன்றக்குடி ஆதின ஐந்து கோயில்கள்’ என்ற நூல் திருக்கொடுங்குன்றத்தைப் பற்றி அறிய துணை புரிகின்றது.

பறம்பு மலையை ஆண்ட வள்ளல் பாரி, முல்லைக் கொடிக்குத் தன் தேரை அளித்து நடந்து சென்றதை அப்பகுதி மக்கள் இன்று வரை பெருமையாக நினைவுகூர்கின்றனர்.

பூலோகத்தில் 1992ஆம் ஆண்டு கட்டப்பெற்ற ஐந்து நிலைகள் கொண்ட இராசகோபுரம் உள்ளது.

பாதாளத்தில் இத்திருக்கோயிலுக்கு இரண்டு திருச்சுற்றுகள் உள்ளன. இறைவன் சந்நிதியின் கருவறை, அர்த்த மண்டபம், மகா மண்டபத்தைச் சுற்றியிருப்பது இறைவன் சந்நிதி திருச்சுற்று ஆகும். இறைவி சந்நிதியின் கருவறை அர்த்த மண்டபம், மகா மண்டபம், முன் மண்டபத்தைச் சுற்றியிருப்பது இறைவி சந்நிதி திருச்சுற்று ஆகும். பிரதோசத்தின் பொழுது இறைவன் சந்நிதி திருச்சுற்றில் சுற்றி வருதல் நடைபெறுகிறது.

பாதாளத்தில் உள்ள திருக்கோயிலின் மேற்குப் பகுதியில் உள்ள வீதிகள் ரத வீதிகள் ஆகும். திருக்கோயிலைச் சுற்றி ரத வீதிகள் வகுக்கப்படவில்லை. தேரோட்டத்தைத் தவிர அனைத்து திருவீதி புறப்பாடுகளும் கிழக்கு ரத வீதியின் நடுவில் இருக்கும் அக்ரகாரத் தெரு வழியாக வந்து மேற்கு ரத வீதியை அடைந்து பின்னர் வடக்கு ரத வீதி, கிழக்கு ரத வீதி, தெற்கு ரத வீதி வழியாக மேற்கு ரத வீதியை அடைந்து அக்ரகாரத் தெரு வழியாக திருக்கோயிலை அடைகின்றன.

இறைவன், இறைவி, விநாயகர், வள்ளி தெய்வானை சுப்பிரமணியருக்கு என நான்கு தேர்கள் உள்ளன. காரண ஆகமத்தில் அமைந்துள்ளது இத்திருக்கோயில்.

திருக்கோயிலின் தல விருட்சத்திற்குப் பெயர் இல்லை. எனவே இதை ‘பெயரில்லா மரம்’ என்று அழைக்கின்றனர்.

இத்திருக்கோயிலின் மற்றொரு சிறப்பு ‘உறங்காப் புளி’ மரம் ஆகும். தேனாடித் தீர்த்தத்தின் அருகே உள்ள இம்மரத்தின் இலைகள் எப்பொழுதும் சுருங்குவது இல்லை. இம்மரம் பூக்கும், காய்க்கும். ஆனால் பழுக்காது. எனவே ‘உறங்காப் புளி’ என்று அழைக்கின்றனர்.

1957, 1992, 2005ஆம் ஆண்டுகளில் குடமுழுக்குச் செய்யப்பட்டுள்ளது.

**தீர்த்தம்:**

இறைவன் சந்நிதிக்கு எதிரே உள்ளது ‘மதுபுசுகரணி’ தீர்த்தம் ஆகும். ‘தேனாடித் தீர்த்தம்’ என்று அழைக்கப்படும் இதில் தீர்த்தவாரி நடைபெறுகிறது.

**திருக்கோயிலமைப்பு:**

திருக்கொடுங்குன்றத் திருக்கோயிலின் நுழைவாயிலாக அமைந்திருப்பது ‘பாதாளம்’ ஆகும். இதன் வாயிலில் உள்ள ‘துரை ராசா மண்டபத்தில்’ அலுவலகம் இயங்கி வருகிறது. துரை ராசா மண்டபத்தை அடுத்துள்ள வாயிலைக் கடந்தால் வலதுபுறம் தேனாடித் தீர்த்தம் இறைவன் சந்நிதிக்குக் கிழக்கில் அமைந்துள்ளது.

உயரமான படிகளை ஏறிக் கடந்தால் இருப்பது பதினாறுகால் மண்டபம் ஆகும். இம்மண்டபம் பாதாளத்தையும் பூலோகத்தையும் இணைக்கின்றது. இம்மண்டபத்தில் இடதுபுறம் உள்ள படிகளின் வழியே கீழிறங்கினால் இறைவன் சந்நிதி திருச்சுற்றின் கிழக்குப்பகுதியை அடையலாம். இறைவன் சந்நிதி கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. இதன் நடுவே கொடிமரம், பலிபீடம், நந்தி ஆகியன அமைந்துள்ளன. இறைவன் சந்நிதி திருச்சுற்றின் தெற்குப் பகுதியில் உள்ள திருச்சுற்று மண்டபத்தில் அறுபத்துமூன்று நாயன்மார்கள், மெய்கண்ட தேவர், அருணந்தி சிவாச்சாரியார், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவாச்சாரியார், சப்த மாதர் ஆகியோரின் திருவுருவங்கள் உள்ளன.

கோட்டத்தின் தெற்கில் தெட்சிணாமூர்த்தியும் மேற்கில் லிங்கோத்பவரும் அமையப்பெற்றுள்ளனர். மேற்கு திருச்சுற்று மண்டபத்தில் மகா கணபதி, உற்சவர் சந்நிதி, காசி விசுவநாதர் விசாலாட்சி சந்நிதி, திருநாள் மண்டபத்தைக் காணலாம். இம் மகா கணபதி இத்திருக்கோயிலின் வரம்தரும் விநாயகராக அமைந்துள்ளார்.

இறைவன் சந்நிதி திருச்சுற்றின் மேற்குப் பகுதியினின்று இறைவி சந்நிதி திருச்சுற்றை அடையலாம்.

இறைவி சந்நிதி திருச்சுற்றில் சண்டிகேசுவரி சந்நிதி உள்ளது. இதையடுத்து வள்ளி தெய்வானை சுப்பிரமணியர் சந்நிதியின் கொடிமரம், பலிபீடம், யானை வாகனம் ஆகியனவற்றைக் காணமுடிகின்றது.

சிறிது வடமேற்கு நோக்கி இருக்கும் இச்சந்நிதி மகா மண்டபம், அர்த்த மண்டபம், கருவறை அமைப்புடன் விளங்குகின்றது. கருவறையில் நின்ற கோலத்தில் வள்ளி தெய்வானை சுப்பிரமணியர் உள்ளனர். இறைவி சந்நிதி திருச்சுற்றின்

தென்கிழக்கில் மடப்பள்ளியும் வியஞ்சன அறையும் இருக்கின்றன. கிழக்கு நோக்கியுள்ள இறைவி சந்நிதிக்கு எதிரே கொடிமரம், பலிபீடம், நந்தி ஆகியன உள்ளன. முன் மண்டபத்தைக் கடந்து உள்ளே சென்றால் மகா மண்டபத்தின் வலதுபுறம் பள்ளியறை உள்ளது. மகா மண்டபத்தின் நடுவே நந்தி, பலிபீடம் உள்ளன. இதையடுத்தது அர்த்த மண்டபம் ஆகும். கருவறையில் இறைவி இருக்கிறாள்.

பள்ளியறையின் எதிரே உள்ள வாயிலின் வழியே இறைவி சந்நிதி திருச்சுற்றைக் கடந்து இறைவன் சந்நிதி திருச்சுற்றின் வடக்குப் பகுதியை அடையலாம். இறைவன் சந்நிதி கோட்டத்தின் வடக்கில் துர்க்கை உள்ளாள். சண்டிகேசுவரர் சந்நிதி, நடராசர் மண்டபம், யாக சாலை, பைரவர் சந்நிதி, நவக்கிரக சந்நிதி ஆகியனவற்றைக் கடந்து இறைவன் சந்நிதி மகா மண்டபம் நுழையும் வாயிலை அடையலாம். இதன் இடதுபுறம் விநாயகரும் வலதுபுறம் சண்முகரும் உள்ளனர்.

மகா மண்டபத்தின் இடதுபுறம் சூரியன், சுர தேவர் ஆகியனவும் நடுவில் பலிபீடம், நந்தி ஆகியனவும் அமைந்துள்ளன.

மகா மண்டபத்தைக் கடந்தால் அமைவது அர்த்த மண்டபம் ஆகும். இதையடுத்த கருவறையில் மனோன்மணித் தாயார் உள்ளாள். கருவறையில் இறைவன் இருக்கிறான்.

பதினாறுகால் மண்டபத்தின் வழியே படிகளைக் கடந்து பூலோகத்தை அடையலாம். தென்மேற்கு திசை நோக்கி உள்ள வாயிலின் மேலே ஐந்து நிலைகள் கொண்ட இராசகோபுரம் விளங்குகின்றது. இவ்வாயிலைக் கடந்தால் பதினெட்டாம்படி விநாயகர் உள்ளார். இங்கிருந்து மேல்நோக்கிச் சென்றால் பூலோகத்தில் உள்ள சந்நிதிகளை அடையலாம்.

முதலில் அமைவது தெட்சிணாமூர்த்தி சந்நிதியாகும். இதன் அருகில் உள்ளது ‘வடுக பைரவர்’ சந்நிதியாகும். வடுக பைரவர் சந்நிதியைச் சுற்றி வந்தால் விசுவநாதர் சந்நிதியின் கோட்டத்தில் உள்ள தெட்சிணாமூர்த்தி, சண்டிகேசுவரர் சந்நிதி, விசுவநாதர் சந்நிதியைச் சேர்ந்த பலிபீடம், நந்தி ஆகியனவற்றைக் காணலாம். வடுக பைரவர் சந்நிதியின் முன் மண்டபத்தை அடுத்துள்ள வாயிலின் இருபுறமும் துவார பாலகர்கள் நிறுவப்பெற்றுள்ளனர். மகா மண்டபத்தின் வலதுபுறம் சூரியன் உள்ளார்.

இடதுபுறம் முதலில் முன் மண்டபத்துடன் விசாலாட்சி சந்நிதியும், அர்த்த மண்டபம், கருவறை அமைப்புடன் விசுவநாதர் சந்நிதியும் உள்ளன.

மகா மண்டபத்தை அடுத்து அர்த்த மண்டபமும் கருவறையும் அமைந்துள்ளன. கருவறையில் வடுக பைரவர் இருக்கிறார். விசாலாட்சி, விசுவநாதர் சந்நிதி கிழக்கு நோக்கியும் பைரவர் சந்நிதி தென்மேற்கு நோக்கியும் அமைந்துள்ளன.

பூலோகத்திலிருந்து படிகளின் வழியே மேலே சென்றால் கைலாயம் ஆகும். கைலாயத்தில் முதலில் அமைந்திருப்பது லெட்சுமி மண்டபம் ஆகும். இதன் இடதுபுறம் லெட்சுமி, விநாயகர் ஆகியோர் உள்ளனர். லெட்சுமி மண்டபத்தினின்று ஆறுகால் மண்டபத்தை அடையலாம். ஆறுகால் மண்டபம் 'ஏகாந்த மண்டபம்' என்றும் அழைக்கப்பெறுகிறது. ஆறுகால் மண்டபத்தின் வழியே சுந்தர பாண்டியன் மண்டபம் என்று அழைக்கப்பெறும் 'ததாசுது மண்டபம்' உள்ளது. இதில் ஏகாந்த மண்டபத்தை நோக்கியவாறு நடராசர் சந்நிதி உள்ளது. ததாசுது மண்டபத்தை அடுத்து 'தேவசபா மண்டபம்' உள்ளது. இதையடுத்து முக மண்டபம், அர்த்த மண்டபம், கருவறை அமைப்பு காணப்படுகிறது. கருவறையில் தென்கிழக்கு நோக்கி மங்கைபாகர் - தேனம்மை இருக்கிறார்கள். நடுவிலிருக்கும் சிவலிங்கம் 'உடையவர்' என்று அழைக்கப்படுகிறது.

**திருப்புத்தூர்:**

சிவகங்கை மாவட்டத்தில் அமைந்துள்ள திருப்புத்தூர் பாண்டிப் பதினான்கு திருத்தலங்களில் ஆறாவதாகும்.

**மூர்த்தி:**

இறைவனுக்கு திருத்தளிநாதர், கற்றளிநாதர் என்ற பெயர்கள் தமிழிலும் சீதளிநாதர், சீதளீசுவரர் என்ற பெயர்கள் வடமொழியிலும் வழங்கப்படுகின்றன. இறைவிக்கு சிவகாமசுந்தரி என்ற பெயர் வழக்கில் உள்ளது.

**திருத்தலம்:**

திருப்புத்தூர் என்பது மருவி 'திருப்பத்தூர்' என்று அழைக்கப்படுகிறது. 'திருப்புத்தூர்' திருத்தலத்தின் பெயர். 'திருத்தளி' என்பது திருக்கோயிலின் பெயர். இது 'திருத்தளிநாதர் திருக்கோயில்' என்றும் அழைக்கப்படுகிறது. இத்திருக்கோயிலில்

‘யோக பைரவர்’ சிறப்பாக உள்ளதால் மக்கள் இத்திருக்கோயிலை ‘பைரவர் திருக்கோயில்’ என்று வழக்கில் அழைக்கின்றனர்.

திருப்புத்தூர் திருத்தலத்திற்கு பழமையான தலபுராணமாக விளங்குவது மறைஞானசம்பந்தர் இயற்றிய ‘திருத்தளிப் புராணம்’ ஆகும். இந்நூலைப் பற்றிய வேறு செய்திகள் கிடைக்கப்பெறவில்லை. இராம.சொக்கலிங்கச் செட்டியார் என்பார் இயற்றிய ‘திருப்புத்தூர்ப் புராணம்’ உள்ளது. இந்நூல் 1336 விருத்தங்களில் காப்பு, நூற்பயன் வாழ்த்து, கடவுள் வாழ்த்து, பாயிரம், திருநாட்டுச் சிறப்பு, திருநகரச் சிறப்பு ஆகியனவற்றுடன் பத்து சருக்கங்களைக் கொண்டு இயற்றப்பட்டுள்ளது.

குன்றக்குடி பெரியபெருமாள் என்பாரின் ‘குன்றக்குடி ஆதீன ஐந்து கோயில்கள்’ நூலில் திருப்புத்தூர் திருத்தலத்தைப் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. இந்நூல் 2000ஆம் ஆண்டில் முதற் பதிப்பு கண்டுள்ளது.

‘திருப்புத்தூர் அருள்மிகு ஸ்ரீ திருத்தளிநாதர் ஆலயத் திருத்தல வரலாறு’ என்ற நூல் கா.மாரிமுத்து என்பவரால் எழுதப்பெற்று 2014ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டுள்ளது.

18ஆம் நூற்றாண்டில் தோன்றிய ‘சிவகங்கைச் சரித்திரக் கும்மியும், அம்மானையும்’ என்ற நூலில் திருப்புத்தூரில் இருந்த கோட்டையைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது.

1958ஆம் ஆண்டு அச்சிட்டு வெளியிடப்பெற்ற இராம.சொக்கலிங்கச் செட்டியார் இயற்றிய ‘திருப்புத்தூர்ப் புராணம்’, 2016ஆம் ஆண்டு நான்காம் பதிப்பாக வெளிவந்த குன்றக்குடி பெரியபெருமாள் எழுதிய ‘குன்றக்குடி ஆதீன ஐந்து கோயில்கள்’, கா.மாரிமுத்து எழுதிய ‘திருப்புத்தூர் அருள்மிகு ஸ்ரீ திருத்தளிநாதர் ஆலயத் திருத்தல வரலாறு’ ஆகிய நூல்களுடன், சிறப்பிதழ்கள், குடமுழுக்கு மலர்கள் ஆகியன கிடைக்கப்பெற்றுள்ளன.

இத்திருத்தலத்திற்கு ஆறு வரலாறுகள் முதன்மையாகக் கூறப்படுகின்றன. ‘ரிக்சன்’ என்ற பெயர் கொண்ட வேடன் முன்னர் கொன்றை வனமாய் இருந்த திருப்புத்தூர் திருத்தலத்தின் காடுகளில் வேட்டையாடி பிழைத்து வந்தான். நாரத முனிவர் அவனை ‘மரா’ ‘மரா’ என்ற சொல்லை தொடர்ந்து சொல்ல வைத்து ‘ராம’

நாமத்தை உச்சரிக்கச் செய்தார். வேடனாய் இருந்த ரிக்சன் வால்மீகி முனிவராய் மாறி, கொன்றை மரத்தின் கீழே தவம் செய்யத் தொடங்கினார். பல காலம் தொடர்ந்து தவம் இயற்றியதினால் அவரை மூடும் அளவிற்கு புற்று உருவானது. புற்று ஏற்பட்டதினால் இத்திருத்தலம் 'புற்றூர்' என்று அழைக்கப்பெற்று பின்னர் 'திருப்புத்தூர்' என்றானது.[31] திருப்புத்தூர் என்ற பெயர் ஏற்படக் காரணமாய் இருந்த இவ்வரலாறு தலபுராணத்தில் குறிப்பிடப்படவில்லை.

எறும்புப் புற்றுகள் நிறைந்திருந்த ஊர் ஆதலால் 'திருப்புற்றூர்' என்ற பெயர் ஏற்பட்டதாக் குறிப்பிடுகிறார் குன்றக்குடி பெரியபெருமாள்.[32]

இராவண வதம் முடிந்து, ராமர் அயோத்தியின் அரசராக முடிசூடினார். சீதை பின்னர் விதி வசத்தால் ராமரைப் பிரிந்தாள். கருவுற்றிருந்த சீதை திருப்புத்தூரில் இருந்த வால்மீகி முனிவரிடம் அடைக்கலம் புகுந்தாள். இத்திருத்தலத்தில் சீதைக்கு குழந்தை பிறந்தது. 'லவன்' என்று அக்குழந்தைக்கு பெயரிட்டு வால்மீகியின் ஆசிரமத்தில் சீதை வளர்த்து வந்தாள். இவ்வாறிருக்க ஒரு நாள் சீதை தண்ணீர் எடுத்து வரச் செல்லும் பொழுது தொட்டிலிலிருந்த லவனை வால்மீகி முனிவரின் பாதுகாப்பில் விட்டுச் சென்றாள். வால்மீகி முனிவர் அடிக்கடி நிட்டையில் ஆழ்ந்துவிடும் தன்மை உடையவர். இதனால் சிறிது தொலைவு சென்ற சீதை ஆசிரமத்தை அடைந்தாள். சீதை பயந்த வண்ணமே வால்மீகி நிட்டையில் ஆழ்ந்திருந்தார். இதைக் கண்ட சீதை தொட்டிலிலிருந்த லவனை தூக்கிச் சென்றாள். சிறிது நேரம் கழித்து நிட்டையிலிருந்து எழுந்த வால்மீகி முனிவர் லவனைக் காணாது தவித்தார். சீதையிடம் என்ன பதில் உரைப்பது என்பதை எண்ணி வருந்திய வால்மீகி முனிவர், ஒரு தருப்பைப் புல்லை தொட்டிலில் இட்டு தன் சக்தியால் லவனைப் போன்ற ஒரு குழந்தையைத் தோற்றுவிக்கிறார். தண்ணீர் எடுத்துக் கொண்டு லவனுடன் திரும்பிய சீதை, லவனைப் போல் ஒரு பிள்ளை இருப்பதைக் கண்டு வியக்கிறாள். தருப்பையிலிருந்து தோன்றியதால் அக்குழந்தைக்கு 'குசன்' என்ற பெயர் இட்டு இருவரையும் வளர்க்கிறாள்.[33] இவ்வரலாறும் தலபுராணத்தில் காணப்படவில்லை.

திருப்புத்தூர் திருக்கோயிலின் தீர்த்தங்களுள் ஒன்றான சீதளி தீர்த்தம் தொடர்பான வரலாறு மக்களிடம் வழங்கி வருகிறது. சீதை தினமும் இக்குளத்திலிருந்து தண்ணீர் எடுத்து வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தாள். ஒரு

முறை தண்ணீர் எடுக்கச் செல்லும் பொழுது குளம் கலங்கிக் காணப்படுகிறது. உடனே சீதை அக்குளத்தை நோக்கி ''தெளி'' என்று ஆணையிடுகிறாள். சீதை கூறித் தெளிந்ததால் குளம் 'சீதெளி' என்றும் 'சீதளி' என்ற பெயரைப் பெற்று விளங்குவதாகக் கூறப்படுகிறது.

திரிபுரங்களை அழித்த பின், வெற்றிக்களிப்பில் இறைவன் பல தாண்டவங்கள் ஆடினான். அதை இறைவியும் லெட்சுமியும் திரும்பக் காண வேண்டினார்கள். அவர்களின் விருப்பத்தைக் கேட்ட இறைவன், இறைவியையும் லெட்சுமியையும் கொன்றைவனமாகிய திருப்புத்தூர் சென்று தவம் புரிந்து வருமாறும், உரிய காலத்தில் இங்கு தாண்டவம் நிகழ்த்துவதாகவும் கூறினார். இறைவனின் ஆணைக்கிணங்க இருவரும் திருப்புத்தூரில் தவம் இயற்றினர். அவர்கள் தவத்தை மெச்சி இறைவன் தாண்டவம் நிகழ்த்தினான். இறைவியின் பெயர்களுள் ஒன்று கௌரி. இறைவி, லெட்சுமியின் பொருட்டு ஆடிய தாண்டவமாதலால் திருப்புத்தூரில் இறைவன் நிகழ்த்தியது முறையே 'கௌரி தாண்டவம்', 'லெட்சுமி தாண்டவம்' என்று அழைக்கப்படுகிறது.[34]

இந்திரனின் மகன் செயந்தன் ஆவான். இவன் 'சத்தியகிரி' என்னும் மலைக்கு தன் நண்பனைக் காணச் சென்றான். அப்பொழுது அங்கிருந்த குகையிலிருந்து வீணையின் ஒலியை ஒத்த கானம் கேட்கிறது. அதைக் கேட்டு மெய்மறந்த செயந்தன் அக்குகையை நோக்கி செல்ல முற்படுகிறான். அந்த நாதம் கௌன முனிவரின் மனைவியினுடையது என்று நண்பன் தடுத்துக் கூறியும் கேளாது அக்குகையின் உள்ளே செல்கிறான். அனுமதி இன்றி வந்த செயந்தனைக் கண்ட கௌன முனிவர் சினங்கொண்டு அவனை பூதமாக மாறுமாறு சபிக்கின்றார். மனம் திருந்திய செயந்தன் தனக்கு சாப விமோசனம் வேண்ட, கொன்றை வனத்தில் இருக்கும் யோக பைரவரை வணங்கி வழிபட சாபம் நீங்கும் என்று அருள்கின்றார். செயந்தன் இங்கு வந்து சாப விமோசனம் அடைந்தான்.[35]

மேற்கூறிய இரண்டு வரலாறுகளைப் பற்றிய குறிப்பு தலபுராணத்தில் காணக் கிடைக்கிறது.

திருநாவுக்கரசர், திருப்புத்தூர் தேவாரத்தில் தருமியைப் பற்றிக் குறிப்பிடுவதனால் தருமி இத்திருத்தலத்தைச் சார்ந்தவன் எனக் கூறப்படுகிறது.[36]

இத்திருக்கோயிலின் இறைவன் சந்நிதிக்கு எதிரே ஐந்து நிலை இராசகோபுரமும் இறைவி சந்நிதிக்கு எதிரே மூன்று நிலை இராசகோபுரமும் உள்ளன. 1992ஆம் ஆண்டு மொட்டை கோபுரமாக இருந்த இறைவன் சந்நிதி இராசகோபுரம் புதிதாகவும் இறைவி சந்நிதி இராசகோபுரத்தில் திருப்பணியும் செய்யப்பட்டுள்ளன.

மூன்று திருச்சுற்றுகளை உள்ளடக்கித் திருக்கோயில் கட்டப்பட்டுள்ளது. இறைவன் சந்நிதியின் மகா மண்டபம், அர்த்த மண்டபம், கோட்டத்தைச் சுற்றியிருப்பது முதலாம் திருச்சுற்று ஆகும். இதையடுத்து வெளியே அமைந்திருப்பது இரண்டாம் திருச்சுற்று, மூன்றாம் திருச்சுற்று. இதனை முறையே சுவாமி சந்நிதி திருச்சுற்று, பைரவர் திருச்சுற்று, அம்மை திருச்சுற்று என்று சிவாச்சாரியார்கள் வழக்கில் அழைப்பதை அறிய முடிகின்றது. மாதாந்திர விழாக்களின் பொழுது திருக்கோயில் வலம் வருதல் முதலாம் திருச்சுற்றில் ஒரு முறையும் இரண்டாம் திருச்சுற்றில் இரண்டு முறையும் நடைபெறுகிறது.

இறைவி சந்நிதியில் அர்த்த மண்டபம், கோட்டத்தைச் சுற்றியுள்ள திருச்சுற்று ‘உள் திருச்சுற்று’ என்று ஆய்வேட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.

திருக்கோயிலுக்கு வெளியே கிழக்கில் இருப்பது சந்நிதித் தெரு என்றும் புதுக்கோட்டை சாலை என்றும் அழைக்கப்படுகிறது. திருக்கோயிலுக்கு தெற்கேயிருப்பது வடக்கு ரத வீதியாகும். திருக்கோயில், சீதளி தீர்த்தத்திற்கு மேற்கேயிருப்பது பெரிய கடை வீதி, அக்கினி பசார் என்று அழைக்கப்படுகிறது. சீதளி தீர்த்தத்திற்கு வடக்கேயிருப்பது சீதளி வடகரை ஆகும். ஆய்வுக் காலத்தில் திருக்கோயிலைச் சுற்றி ரத வீதிகள் வகுக்கப்படவில்லை. திருக்கோயிலின் தென்புறம் ரத வீதிகள் வகுக்கப்பட்டுள்ளன.

இறைவன், இறைவி, விநாயகருக்கு என மூன்று தேர்கள் உள்ளன. காமிக ஆகமத்தில் அமைந்தது இத்திருக்கோயில். தலவிருட்சம் சரக்கொன்றை. 1901, 1992, 2011ஆம் ஆண்டுகளில் குடமுழுக்கு நடைபெற்றுள்ளது. 2015ஆம் ஆண்டில் இருந்து தமிழக அரசின் அன்னதானத்திட்டம் மூலம் தினமும் 50 நபர்களுக்கு அன்னதானம் வழங்கப்படுகிறது.

திருப்புத்தூர் திருக்கோயிலைச் சார்ந்த ஆதி திருத்தளிநாதர் திருக்கோயில் சீதளி தீர்த்தத்தின் மேற்கில் அமைந்துள்ளது. இத்திருக்கோயிலில் ஒரு கால பூசை நடைபெறுகிறது.

**தீர்த்தம்:**

திருப்புத்தூர் திருக்கோயிலுக்கு சீதளி தீர்த்தம், சிவகங்கை ஆகிய இரண்டு தீர்த்தங்கள் கூறப்படுகின்றன. திருக்கோயிலின் வடக்கேயும் இறைவன் சந்நிதிக்கு வடகிழக்கிலும் அமைந்துள்ளது சீதளி தீர்த்தம். 'திருத்தளி' என்றழைக்கப்படும் இத்திருக்கோயிலின் தீர்த்தம் என்பதால் இப்பெயர் கொண்டுள்ளது. இப்பெயர் மருவி சீதேவி, சீதெளி ஆகிய பெயர்களாலும் அழைக்கப்படுகிறது.

இறைவன் சந்நிதிக்கு எதிரே கிழக்கில் அமைந்துள்ளது சிவகங்கை. சிவகங்கை என்பது 'சேங்கை' என்று மருவி அழைக்கப்படுகிறது. சிவகங்கை திருக்கோயிலின் தீர்த்தம் என்பதை அறிந்தவர்கள் சிலரே.

**திருக்கோயிலமைப்பு:**

திருக்கோயிலின் நம்பியாண்டார் நம்பி வாயிலை அடுத்து இறைவனுக்கு ஐந்து நிலைகள் கொண்ட இராசகோபுரம் உள்ளது. இறைவி சந்நிதிக்கு எதிரே மூன்று நிலைகள் கொண்ட இராசகோபுரம் அமைந்துள்ளது. இறைவன் சந்நிதி இராசகோபுர வாயிலின் இடதுபுறம் வழிவிடும் விநாயகர் சந்நிதி விமானத்துடன் உள்ளது. வலதுபுறம் சுப்பிரமணியர் சந்நிதியில், இடதுபுறம் நோக்கிய மயிலின் மேல் வள்ளி, வலதுபுறம் நோக்கிய மயிலின் மேல் தெய்வானை, இடதுபுறம் நோக்கிய மயிலின் மேல் சுப்பிரமணியர் வீற்றிருக்கின்றனர். இச்சந்நிதி விமானத்துடன் விளங்குகின்றது.

இறைவன் சந்நிதி இராசகோபுர வாயிலைக் கடந்தால் அமைந்திருப்பது மூன்றாம் திருச்சுற்றின் கிழக்குப் பகுதியாகும். இதன் இடதுபுறம் பொருட்கள் வைப்பு அறை, யானைக் கொட்டகை ஆகியனவற்றைக் காணலாம். வலதுபுறம் அலுவலகம், திருநாள் மண்டபம் உள்ளன. மூன்றாம் திருச்சுற்றின் மேற்குப்பகுதியில் பைரவர் மேரு பீடம் உள்ளது. வடக்குப் பகுதியில் சப்பரக் கொட்டகையும் கிழக்கு நோக்கி இறைவி சந்நிதியும் அமைந்துள்ளன. இறைவி சந்நிதி மகா மண்டபத்தின் வலதுபுறம் பள்ளியறையும் நடுவில் கீழ் மேலாக பலிபீடம், நந்தி ஆகியனவும் உள்ளன.

உள் திருச்சுற்றின் வடக்குப் பகுதியில் சண்டிகேசுவரி சந்நிதி விமானத்துடன் விளங்குகின்றது. மகா மண்டபத்தை அடுத்துள்ள வாயிலின் இடதுபுறம் வரம்தரும் விநாயகர், துவார பாலகியும் வலதுபுறம் துவார பாலகியும் நிறுவப்பட்டுள்ளன. இவ்வாயிலை அடுத்துள்ளவை அர்த்த மண்டபம், கருவறை ஆகும். கருவறையில் இறைவி இருக்கிறாள்.

இரண்டாம் திருச்சுற்றின் கிழக்குப் பகுதியாக உள்ளது 'நந்தி மண்டபம்' ஆகும். இதன் நடுவே கீழ்மேலாக கொடிமரம், பலிபீடம், நந்தி உள்ளன. நந்தி மண்டபத்தின் இடதுபுறம் வாகன வைப்பு அறை, பொருட்கள் வைப்பு அறை ஆகியனவும் வலதுபுறம் நவக்கிரக சந்நிதி, அனுமன் சந்நிதி ஆகியனவும் அமையப்பெற்றுள்ளன.

இரண்டாம் திருச்சுற்றின் தென்கிழக்கு மூலையில் மடப்பள்ளி அமைந்துள்ளது. இத்திருச்சுற்றின் தெற்குப் பகுதியில் வடக்கு நோக்கி வள்ளி தெய்வானை சுப்பிரமணியர் சந்நிதி, கிணறு உள்ளன. வள்ளி தெய்வானை சுப்பிரமணியர் சந்நிதிக்கு எதிரே வாகனமான மயில் காணப்படுகிறது.

இரண்டாம் திருச்சுற்றின் தென்மேற்கு மூலையில் விமானம், முன் மண்டபத்துடன் வன்னிமரத்தடி விநாயகர் சந்நிதி உள்ளது. வடக்குப் பகுதியில் மேற்கு நோக்கி யோக பைரவர் சந்நிதி அமைந்துள்ளது. யோக பைரவர் சந்நிதி மாமண்டபத்தில் யாக சாலை, பலி பீடம் உள்ளன. மாமண்டபத்தை அடுத்து முன்மண்டபம் அமைந்துள்ளது. இதையடுத்த வாயிலின் இடதுபுறம் செயந்தன் சிலை அமைக்கப்பெற்றுள்ளது. அர்த்த மண்டபத்தின் வலதுபுறம் வரம்தரும் விநாயகர் உள்ளார். கருவறையில் யோக பைரவர் இருக்கிறார்.

யோக பைரவர் சந்நிதியை அடுத்து கிழக்கு நோக்கி திருநாகேசுவரர் சந்நிதி உள்ளது. திருநாகேசுவரர் சந்நிதி அர்த்த மண்டபம், கருவறை அமைப்புடன் விளங்குகின்றது. திருநாகேசுவரர் சந்நிதிக்கு எதிர்புறம் தெற்கு நோக்கி வியஞ்சன அறையும் மரத்தெப்பம் வைக்கும் அறையும் உள்ளன. நந்தி மண்டபத்தை அடுத்துள்ள வாயிலைக் கடந்தால் அமைவது முதலாம் திருச்சுற்று ஆகும். திருச்சுற்று மண்டபத்தின் கிழக்குப் பகுதியில் இடதுபுறம் பைரவர், சூரியனின் திருவுருவங்களும் வலதுபுறம் சந்திரனின் திருவுருவமும் நிறுவப்பெற்றுள்ளன. திருச்சுற்று மண்டபத்தின் தெற்குப்பகுதியில் சரசுவதி, லெட்சுமியின் திருவுருவங்கள் அமைந்துள்ளன. இப்பகுதி 'லெட்சுமி மண்டபம்' ஆகும். 'லெட்சுமி தாண்டவம்' வரலாற்றை குறிப்பதற்காக ஆடல்வல்லான் சந்நிதியின் நேர் எதிரே லெட்சுமியின் திருவுருவம் அமையப்பெற்றுள்ளது. இதையடுத்து, அறுபத்துமூன்று நாயன்மார்கள், நட்சத்திர அதிபதிகள், வீரபத்திரர், சப்த மாதர், மகா கணபதி, சேசுடா தேவி ஆகிய திருவுருவங்கள் உள்ளன.

முதலாம் திருச்சுற்றின் தெற்குப் பகுதியில் தெற்கு வாயில் மண்டபம், தீர்த்தக் கிணறு உள்ளன. கோட்டத்தின் தெற்கில் முன் மண்டபத்துடன் தெட்சிணாமூர்த்தி சந்நிதி அமைந்துள்ளது. திருச்சுற்று மண்டபத்தின் மேற்குப் பகுதியில் விநாயகர், உற்சவர் சந்நிதி, நந்தி, இறைவியுடன் வருண லிங்கம், மூஞ்சூருடன் விநாயகர், நந்தி, பலிபீடத்துடன் காசி விசுவநாதர், விசாலாட்சி ஆகியன அமையப் பெற்றுள்ளன.

முதலாம் திருச்சுற்றின் மேற்குப் பகுதியில் தல விருட்சமான சரக்கொன்றை உள்ளது. இதன் அடியில் நாகர், விநாயகருடன் வால்மீகி முனிவரின் திருவுருவம் நிறுவப்பெற்றுள்ளது. இதையடுத்து அகத்திய லிங்கம் சந்நிதி உள்ளது. கோட்டத்தின் வடக்கில் சண்டிகேசுவரர் சந்நிதி, விட்ணு துர்க்கை சந்நிதி ஆகியன விளங்குகின்றன.

திருச்சுற்று மண்டபத்தின் வடக்குப் பகுதியில் யோக நாராயணர் சந்நிதியும் தெற்கு நோக்கி ஆடல்வல்லான் சந்நிதியும் அமையப்பெற்றுள்ளன. யோக நாராயணர் சந்நிதியில் நான்கு திருவுருவங்கள் நிறுவப்பெற்றுள்ளன. அவை யோக நாராயணர், தாயார், பிரம்ம ரிசி என்றழைக்கப்படும் முனிவர், சக்கரத்தாழ்வார் ஆகியனவாம்.

ஆடல்வல்லான் சந்நிதியின் முன்மண்டபம் ‘சபை’ ஆகும். சபையை அடுத்து ஆடல்வல்லான், சிவகாமி, நந்திதேவர் ஆகியோரின் சுதை சிற்பங்களும் மாணிக்கவாசகரின் திருவுருவமும் இருக்கின்றன.

முதலாம் திருச்சுற்றின் கிழக்குப் பகுதியை அடுத்துள்ள வாயிலின் இடதுபுறம் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோரின் திருவுருவங்கள் வடக்கு நோக்கியும், வரம்தரும் விநாயகர், பொல்லாப் பிள்ளையாரின் திருவுருவங்கள் கிழக்கு நோக்கியும் உள்ளன. வாயிலின் வலதுபுறம் வள்ளி, தெய்வானை, சண்முகர் திருவுருவங்கள் அமைந்துள்ளன. வாயிலின் இருபுறமும் சுதையாலான துவார பாலகர் சிலைகள் விளங்குகின்றன. வாயிலை அடுத்த மகா மண்டபத்தின் இடதுபுறம் தெற்கு வாயிலும் நடுவே தரும நந்தியின் செப்புத் திருமேனியும் உள்ளன. மகா மண்டபத்தின் வலதுபுறம் தெற்கு வாயிலின் நேரே நடராசர், சிவகாமி விக்ரகங்கள் உள்ளன. மகா மண்டபத்தை அடுத்துள்ள பகுதியில் இருபுறமும் துவார பாலகர் சுதை சிற்பங்கள் அமைக்கப்பெற்றுள்ளன. இவ்வாயிலைக் கடந்தால் அர்த்த மண்டபம் ஆகும். இதையடுத்த கருவறையின் வடகிழக்கில் மனோன்மணித் தாயாரின் செப்புத் திருமேனி உள்ளது. கருவறையில் இறைவன் இருக்கிறார்.

**திருப்புனவாயில்:**

திருப்புனவாயில் பாண்டிப் பதினான்கு திருத்தலங்களில் ஏழாவதாக அமைந்துள்ளது. இத்திருத்தலம் புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ளது.

**மூர்த்தி:**

இறைவன் பெயர் தமிழில் பழம்பதிநாதர் என்றும் வடமொழியில் விருத்தபுரீசுவரர் என்றும் வழங்கப்படுகின்றது.

இறைவிக்கு பெரியநாயகி என்று தமிழிலும் பிரகந்நாயகி என்று வடமொழியிலும் பெயர்கள் உள்ளன. இதைத்தவிர கருணைநாயகி என்ற பெயரும் இறைவிக்கு உள்ளது.

**திருத்தலம்:**

'புனல்' என்பது 'நீர்', 'ஆறு' ஆகியனவற்றைக் குறிக்கும். ஆறு கடலில் கலக்கும் இடத்தின் வாயருகேயிருப்பதால் திருப்புனவாயில் என்ற பெயர் பெற்றுள்ளது. தற்பொழுது இது மருவி 'திருப்புனவாசல்' என்று அழைக்கப்படுகின்றது.

இத்திருத்தலம் நான்கு யுகங்கள் பழமை வாய்ந்ததாக போற்றப்படுகின்றது. யுகங்கள் தோறும் ஒரு பெயரைக் கொண்டுள்ளது. கிருதயுகத்தில் இத்திருத்தலம் இந்திரபுரம் எனவும், திரேதாயுகத்தில் பிரம்மபுரம் எனவும், துவாபரயுகத்தில் விருத்தகாசி எனவும் கலியுகத்தில் விருத்தபுரி எனவும் பெயர்களைக் கொண்டுள்ளது.

காசி என்று தற்பொழுது வழங்கப்பெறும் வாரணாசி தோன்றுவதற்கு முன்னர் தோன்றிய திருத்தலமாகப் போற்றப்படுகிறது. முற்காலத்தில் இப்பகுதியைச் சேர்ந்த மக்கள் இத்திருத்தலத்திலேயே நீத்தார் கடன்களைச் செய்து வந்தார்கள். காசி நகரம் தோன்றிய பிறகே மக்கள் அங்கு செல்லத்தலைப்பட்டார்கள். பின்னர் அதுவே வழக்கமாகிப் போனதாக இத்திருத்தலத்தின் பெருமைகள் பேசப்படுகின்றன. இதனால் இது 'விருத்தகாசி' என்ற பெயரைப் பெற்றுள்ளது.[37] இத்திருக்கோயில் பூசை செய்யும் சிவாச்சாரியார்கள் தங்கள் குடும்ப வழக்கிலும் பேச்சு வழக்கிலும் 'விருத்தகாசி' என்றே குறிப்பிடுகின்றனர்.

இத்திருத்தலத்திற்கு வியாசரால் எழுதப்பெற்ற 'வ்ருத்தபுரி மாஹாத்ம்யம்' என்ற வடமொழியில் அமைந்த தலபுராணமும், தமிழில் திருவாரூர் தியாகராஜ கவிராயரால் எழுதப்பட்டுள்ள தலபுராணமும் ஆக இரண்டு தலபுராணங்கள் உள்ளன. வடமொழியில்

உள்ள தலபுராணம் வேதாரண்யேஸ்வர சிவாச்சாரியார் என்பவரால் தமிழாக்கம் செய்யப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது. இத்தமிழாக்கத்தை அடிப்படையாகக் கொண்டு 2015 அன்று நடந்த இத்திருக்கோயிலின் குடமுழுக்கையொட்டி இந்து பாலாஜி என்பவர் தொகுத்து வெளியிட்ட 'ஸ்ரீ ப்ருஹந்நாயகி ஸமேத ஸ்ரீ வ்ருத்தபுரீச்வரர் திருக்கோவில் தலவரலாறு' என்ற நூல் உள்ளது. இந்நான்கு நூல்களில் முதல் மூன்று நூல்கள் தற்பொழுது கிடைக்கப்பெறவில்லை. ஆனால் இத்திருக்கோயிலில் பூசை செய்யும் சிவாச்சாரியார்கள் வடமொழி நூலின் சுலோகங்களையும் புராணச் செய்திகளையும் அறிந்துள்ளனர்.

'வியாக்ரன்' என்ற அசுரன் உணவை காட்டில் தேடியலைந்து கொண்டிருந்தான். அப்பொழுது அங்கு 'கார்கவ முனிவர்' என்பவர் தவமியற்றிக் கொண்டிருந்தார். தவம் செய்து கொண்டிருப்பதால் அவரை அப்படியே உண்ண முடியாது என்று கருதி புலி வேடம்பூண்டு இரையாக்க வந்தான். தன் ஞான திருட்டியால் இதை உணர்ந்த கார்கவ முனிவர் சினங்கொண்டு அவனுக்கு புலி வேடமே நிலைக்கட்டும் என்று சாபமிட்டார். தனக்கு சாப விமோசனத்தை அருளி, புலி உருவத்தை நீங்கச் செய்ய வேண்டும் என்று கேட்க, 'வச்ரவனம்' என்று அழைக்கப்படும் திருப்புனவாயிலுக்கு செல்லுமாறும் அங்கு அவனுக்கு சாப விமோசனம் கிடைக்கும் என்றும் அருளினார்.

கார்கவ முனிவர் கூறியதை ஏற்று திருப்புனவாயிலுக்கு வந்த அசுரனும் சாப விமோசனத்திற்காகக் காத்திருந்தான். ஒரு நாள் சுற்றி வரும்பொழுது தியானத்தில் இருக்கும் இறைவியை யார் என அறியாது அவள் மேல் பாய்ந்தான். கண் விழித்த இறைவி சினங்கொண்டு உக்கிரமான காளி உருவம் எடுத்தாள். காளியின் கண் பார்வை பட்டதும் அசுரன் தன் சாபத்திலிருந்து விமோசனம் அடைந்து உண்மை உருவை அடைந்தான். இறைவியும் அசுரனை தனக்கு நந்தி வாகனமாக இருக்குமாறு அருள் புரிந்தாள். இதன் காரணமாக இறைவி சந்நிதியின் நந்தி 'வியாக்ர நந்தி' என்று அழைக்கப்படுகின்றது.

காளியின் உருவத்துடன் இறைவி இறைவனை அடைந்த பொழுது, 'நீ இந்த உக்கிரமான உருவத்தை வெளியே இருத்திவிட்டு அமைதியின் வடிவாக என்னிடம் வா' என்று கூறினார். இதனால் இறைவியின் அமைதியான வடிவத்தை சந்நிதியின் கருவறையில் பெரியநாயகியாகவும் உக்கிரமான வடிவத்தை வெளியே கோபுர மாட

வாயிலில் ‘குடவரைக் காளி’ சந்நிதியிலும் காணலாம்.[38] இத்திருக்கோயிலில் ஐந்து நிலைகள் கொண்ட இராசகோபுரம் இறைவன் சந்நிதிக்கு எதிரேயும் மொட்டைக் கோபுரம் இறைவி சந்நிதிக்கும் உள்ளன. மொட்டைக் கோபுரத்தின் மாட வாயிலில் குடவரைக் காளி அமைந்திருக்கிறாள். குடவரைக் காளிக்கு வடிவம் கிடையாது. திரிசூல வடிவமே குடவரைக் காளிக்கு உள்ளது. உக்கிரம் அதிகமாக இருப்பதால் மக்கள் நேரிடையாக குடவரைக் காளியை காணாமல் எதிரேயிருக்கும் கண்ணாடியின் வழியாகவே வணங்குகின்றனர்.

குடவரைக் காளியின் மொட்டைக் கோபுரக் கதவுகள் எப்பொழுதும் சாற்றியே வைக்கப்பட்டுள்ளன. ஒருமுறை திறந்தபொழுது எதிரேயுள்ள பகுதிகள் அனைத்தும் எரிந்ததால் இக்கதவுகளைத் திறப்பது இல்லை.[39]

இங்கே வாழும் மக்கள் இறைவன் இறைவியை விட குடவரைக் காளிக்கு அதிகம் பயப்படுகின்றனர். ஏதேனும் மன வேற்றுமைகள் இருந்தால் குடவரைக் காளியின் முன் சத்தியம் செய்கின்றனர். இங்கே பொய் சத்தியம் செய்தால் குடவரைக் காளி தண்டிப்பாள் என்ற பயம் நிலவுகின்றது. ஆகையால் இச்சந்நிதியில் மக்கள் பொய் கூறுவதோ பொய் சத்தியமோ செய்வதில்லை.

திருத்தலத்தில் இறைவன் இறைவியின் பெயரைப் பிள்ளைகளுக்கு சூட்டுவது வழக்கம். ஆனால் இங்கே குடவரைக் காளியின் பெயரையே அதிகம் சூட்டுகின்றனர். எனவே இங்கு காளியப்பன், காளியம்மை, காளி, காளியாத்தாள், காளீசுவரன் போன்ற பெயர்களை மக்கள் கொண்டிருப்பதைக் காணலாம்.[40]

இத்திருக்கோயிலை வழிபட்டால் பாண்டிப் பதினான்கு திருத்தலங்களையும் வழிபட்ட புண்ணியம் கிடைக்கும் என்பது ஐதீகமாக உள்ளது. சுந்தரபாண்டியன் என்ற பாண்டிய மன்னன் இத்திருக்கோயிலில் பாண்டிப் பதினான்கு திருத்தலங்களின் பதிமூன்று லிங்கங்களைப் பிரதிட்டை செய்து வழிபட்டு தன் இறுதிக் காலத்தை இங்கே கழித்தான்.[41]

காஞ்சி சங்கர மடத்தின் பீடாதிபதி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசாரிய சுவாமிகள் இத்திருத்தலத்திற்கு வந்த பொழுது திருக்கோயில் அருகே வந்ததும் நடப்பதை நிறுத்திவிட்டு மேனாவில் ஏறிக்கொண்டார். திருக்கோயில் நிர்வாகத்தினர் ஏன் என வினவ இங்கு மண்ணில் எண்ணற்ற லிங்கங்கள் புதைந்துள்ளன என்று கூறியுள்ளார். இவர் ‘ஸ்ரீ சக்கரம்’ ஒன்றை வழிபாடு செய்து தந்துள்ளார். இதையே

குடவரைக் காளியின் பின்னே பிரதிட்டை செய்துள்ளனர்.[42] குடவரைக் காளியையும் பின்னால் இருக்கும் ஸ்ரீ சக்கரத்தையும் புகைப்படம் எடுக்க அனுமதியில்லை.

பின்னர் 1960ஆம் ஆண்டில் மண்ணில் புதைந்துள்ள லிங்கங்களை தோண்டியெடுக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. ஆனால் அவை வெற்றி பெறவில்லை.[43] தற்பொழுது இரண்டு லிங்கத்தின் பாணங்களும், இரண்டு முழுலிங்கங்களும் ஓர் இறைவியின் சிலையும் சந்நிதியில் வைத்துப் பூசிக்கப் பெறுகின்றன.

இதன் பின்னால் சந்நிதி அமைக்க சில கட்டுமானங்கள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. ஆனால் அவை முழுமைபெறாமல் இடையில் நின்றுவிட்டது.

இத்திருக்கோயில் ஒரே திருச்சுற்றாக வெளித்திருச்சுற்றை மட்டும் கொண்டு இறைவன் இறைவிக்கு தனிச் சந்நிதிகளோடு விளங்குகின்றது. முன்னர் நான்கு திருச்சுற்றுகள் இருந்துள்ளன. திருக்கோயிலுக்கு வெளியேயிருக்கும் வீதிகள் முறையே கீழ வீதி, தெற்கு வீதி, மேற்கு வீதி, வடக்கு வீதி என்று வழங்கப்படுகின்றன. இவ்வீதிகளை அடுத்துள்ளது ரத வீதியாகும். இவை முறையே கீழ ரத வீதி, தெற்கு ரத வீதி, மேல ரத வீதி, வடக்கு ரத வீதி என்று அழைக்கப்படுகின்றன. தேரோட்டம் இந்த நான்கு ரத வீதிகளில் நடைபெறுகின்றது. இறைவனுக்கும் இறைவிக்கும் தனித்தனியாக இரண்டு தேர்கள் உள்ளன.

இத்திருக்கோயிலில் இந்திரன், பிரம்மன், சூரியன், எமன், ஐராவதம், வசிட்டர் ஆகியோர் வழிபட்டுள்ளனர். இத்திருத்தலத்திற்கு வேறு பெயர்களாக சதானந்தபுரம், இந்திரபுரம், வனமுகம், கைவல்யபுரம், புன்னாகவனம், மகிழவனம் ஆகியன வழங்கப்படுகின்றன.

இத்திருத்தலம் யுகத்திற்கு நான்கு பெயர்களைக் கொண்டதுபோல் நான்கு தலவிருட்சங்களைக் கொண்டுள்ளது. கிருத யுகத்தில் சதுரக்கள்ளியும், திரேதாயுகத்தில் குருந்த மரமும், துவாபர யுகத்தில் மகிழ மரமும் கலியுகத்தில் புன்னை மரமும் தல விருட்சங்களாக உள்ளன.

இத்திருக்கோயிலுக்கு 1903, 1998, 2015ஆம் ஆண்டுகளில் குடமுழுக்கு நடைபெற்றுள்ளன.

**தீர்த்தம்:**

திருக்கோயிலுக்குப் பத்து தீர்த்தங்கள் கூறப்படுகின்றன. திருக்கோயிலுக்கு எதிர்திசையில் ஒரு கிலோ மீட்டர் தூரத்தில் இந்திர தீர்த்தம் அமைந்துள்ளது. இராசகோபுரத்திற்கு வெளியே தென்பால் கீழ வீதியைத் தாண்டி இருப்பது பிரம்ம தீர்த்தமாகும். பிரம்ம தீர்த்தத்திற்கு கிழக்கேயுள்ளது சந்திர தீர்த்தமாகும். தெற்கு வீதியும் மேற்கு வீதியும் சந்திக்குமிடத்தில் சக்கர தீர்த்தம் உள்ளது. சக்கர தீர்த்தத்தை 'வெள்ள மடம்' என்று அழைக்கின்றனர். இறைவி சந்நிதிக்கு கிழக்கில் சூரிய தீர்த்தமும், சூரிய தீர்த்தத்திற்கு மேற்கில் லெட்சுமி தீர்த்தமும் அமைந்துள்ளன.

திருக்கோயிலுக்கு அருகே தெற்கே ஓடும் பாம்பாறு ஒரு தீர்த்தமாகும். இதற்கு நாகநதி, அரவநதி, சர்ப்ப ஆறு என்ற பெயர்கள் உள்ளன. வருண தீர்த்தம் திருப்புனவாயிலுக்கு அருகேயிருக்கும் 'தீர்த்தாண்டதானம்' என்ற ஊரின் அருகாமையிலுள்ள கடலாகும்.

திருப்புனவாயிலுக்கு அருகே கல்யாணபுரம் என்ற ஊருக்குச் சற்று தொலைவில் உள்ளது கல்யாண தீர்த்தமாகும். கீழ வீதியும் தெற்கு வீதியும் கூடுமிடத்தின் அருகேயிருப்பது சிவகங்கை தீர்த்தமாகும்.

**திருக்கோயிலமைப்பு:**

கிழக்கு நோக்கியிருக்கும் ஐந்து நிலைகள் கொண்ட இராசகோபுரத்தின் வாயிலில் இடப்பக்கம் வல்லபைவிநாயகர் சந்நிதியும் வலப்புறம் தெண்டாயுதபாணி சந்நிதியும் உள்ளன. இராசகோபுரத்தின் உள்ளே நுழைந்ததும் வெளித்திருச்சுற்றின் முதலில் கொடிமரமும், உயரமான வட்ட வடிவ பீடத்தின் மேல் பலிபீடமும் இதனையடுத்து விமானத்துடன் உள்ள சிறிய மண்டபத்தில் நந்தியும் உள்ளன.

இராசகோபுர மாட வாயிலின் இடப்புறம் சந்திரனும் தலவிருட்சமான புன்னை மரமும் உள்ளன. திருக்கோயிலின் தென்கிழக்கு மூலையில் மடப்பள்ளியும் அறையும் அமைந்திருக்கின்றன. மடப்பள்ளிக்கு எதிரில் பஞ்சவிநாயகர் சந்நிதியும், சதுர்முகலிங்கம் சந்நிதியும் உள்ளன. சதுர்முகலிங்கத்திற்கு தெற்கே கபில முனிவரின் ஒன்பது புதல்வர்களின் சிலைகளும் இதன் இரு மருங்கிலும் ஆதிசைவ சிவனடியார்களின் இரண்டு சிலைகளும் உள்ளன. நந்தியை வாகனமாகக் கொண்டிருக்கும் சதுர்முகலிங்கம் சந்நிதிக்கு மட்டும் விமானம் உள்ளது. பஞ்சவிநாயகர் சந்நிதிக்குப் பின்னால் மகிழ மரம் உள்ளது. இதன் பின்னால் உள்ள

சந்நிதியில் விநாயகர், அறுபத்துமூன்று நாயன்மார்கள், இடபத்தின் மேல் இறைவன் இறைவி, மெய்கண்ட தேவர், அருணந்தி சிவாச்சாரியார், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவாச்சாரியார் ஆகிய சிலைகள் உள்ளன.

இறைவன் சந்நிதியின் கோட்டத்தின் முதலில் நர்த்தன விநாயகரும் சிறிய முன் மண்டபத்துடன் தெட்சிணாமூர்த்தி சந்நிதியும் உள்ளன. வெளித்திருச்சுற்றில் இறைவன் சந்நிதிக்கு தென்மேற்கில் முன் மண்டபத்துடன் ஆகண்டல விநாயகர் சந்நிதி இரண்டு பகுதிகளாக அமைந்துள்ளது. முதற்பகுதியில் காசி விசுவநாதர், விசாலாட்சி ஆகிய சிலைகள் உள்ளன. இரண்டாம் பகுதியான உள்ளே ஆகண்டல விநாயகர், இருபுறமும் நாகர் சிலைகள், முன்னே மூஞ்சூர் சிலையும் உள்ளன.

கோட்டத்தின் மேற்குப் பகுதியில் மகாவிட்ணு, அனுமன் சிலைகள் உள்ளன. இதன் எதிரே உள்ள மதிற்சுவரின் வாயில் அருகே அகத்தியர் சந்நிதி உள்ளது. இறைவன் சந்நிதிக்கு வடமேற்கில் வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் சந்நிதி உள்ளது. கோட்டத்தின் வடக்கில் பிரம்மாவின் சிலை உள்ளது. வெளித்திருச்சுற்றின் வடக்குப் பகுதியில் நந்தவனம், இரண்டு லிங்கத்தின் பாணங்களும் இரண்டு முழுலிங்கங்களும் ஓர் இறைவியின் சிலையும் உள்ள சந்நிதி, நவக்கிரக சந்நிதி, பொருட்கள் வைப்பறை ஆகியன உள்ளன.

திருக்கோயிலின் வடமேற்கு மூலையில் இறைவி சந்நிதி அமைந்துள்ளது. சந்நிதியின் முன்னே பலிபீடமும் விமானத்துடன் கூடிய சிறிய மண்டபத்தில் நந்தியும் அமையப்பெற்றுள்ளன. இதைத் தாண்டி இறைவி சந்நிதியின் மகா மண்டபம் உள்ளது. இதனையடுத்துள்ள வாயிலில் விநாயகர், சுப்பிரமணியர் சிலைகள் உள்ளன. வாயிலைக் கடந்தால் முன் மண்டபமாகும். முன் மண்டபத்தின் வலப்புறம் பள்ளியறை உள்ளது. முன் மண்டபத்தையடுத்து அர்த்த மண்டபம் உள்ளது. அர்த்த மண்டபத்திற்கு அடுத்துள்ள கருவறையில் இறைவி இருக்கிறாள். இறைவி சந்நிதிக்கு வெளியே அர்த்த மண்டபத்தின் வடக்கு கோட்டத்தினருகே சண்டிகேசுவரி சந்நிதி உள்ளது.

இறைவி சந்நிதிக்கு எதிரே மொட்டை இராசகோபுரம் உள்ளது. இதன் மாட வாயிலில் குடவரைக் காளியின் சந்நிதி உள்ளது. கிழக்கு மதிற்சுவர் அருகே பைரவர் சந்நிதியும் அடுத்ததாக சூரியன் சந்நிதியும் அமைந்துள்ளன. பைரவர் சந்நிதி விமானம் இல்லாமல் இரண்டு பகுதிகளாக மேற்கு நோக்கி அமைந்துள்ளது. முதற் பகுதியில்

பின்னமான பைரவர் சிலை வைக்கப்பட்டுள்ளது. இரண்டாவதாக விளங்கும் உட்பகுதியில் தற்பொழுது வழிபாட்டிலிருக்கும் பைரவர் சிலை உள்ளது.

இறைவன் சந்நிதியில் நுழைந்தவுடன் அமைந்திருப்பது வசந்த மண்டபமாகும். இது 'திருநாள் மண்டபம்' என்றும் அழைக்கப்படுகின்றது. வசந்த மண்டபத்தை அடுத்துள்ள வாயிலின் இருபுறமும் துவார பாலகர் சிலைகள் உள்ளன.

வாயிலைக் கடந்தால் வருவது நந்தி மண்டபமாகும். இதன் நடுவே கிழக்கிலிருந்து மேற்காக முதலில் பலிபீடமும், அடுத்து ஒரே பீடத்தில் பலிபீடமும் நந்தியும் உள்ளன. இம்மண்டபம் நந்தி இருப்பதால் நந்தி மண்டபம் என்று வழங்கப் பெறுகின்றது. இடப்பக்கம் உள்ள வாயிலின் அருகே முறையே திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், சேக்கிழாரின் சிலைகள் உள்ளன. நந்தி மண்டபத்தின் தென்மேற்கு மூலையில் சிறிய மண்டபத்தில் சோமாசுகந்தர் செப்புத் திருமேனியும், விநாயகர் சிலையும் உள்ளன. இதனை அடுத்துள்ள வாயிலின் இருபுறமும் துவார பாலகர் சிலைகள் உள்ளன. வலப்பக்கம் உள்ள வாயிலின் வழியாக சண்டிகேசுவரர் சந்நிதியை அடையலாம். விமானத்துடன் இரண்டு பகுதிகளாக சண்டிகேசுவரர் சந்நிதி அமைந்துள்ளது. பைரவர் சந்நிதியைப் போல பின்னமான சண்டிகேசுவரர் சிலையொன்று முதற்பகுதியிலும் வழிபாட்டில் இருக்கும் சண்டிகேசுவரர் சிலை இரண்டாம் பகுதியான உள்பகுதியிலும் அமைந்துள்ளன.

நந்தி மண்டபத்தில் நடராசருக்கு என்று தனி சந்நிதியாக இல்லாமல் இடப்புறம் உள்ள மேடையில் எழுந்தருளச் செய்துள்ளனர். இதை நடராசர் சந்நிதி என்று குறிப்பிடுகின்றனர். நந்தி மண்டபத்தையடுத்து வேத மண்டபம் உள்ளது. நான்மறைகள் என்று வழங்கப்படும் நான்கு வேதங்கள் இம்மண்டபத்திலிருந்தே சொல்லப்படும். வேத மண்டபத்தையடுத்து அர்த்த மண்டபம் உள்ளது. மனோன்மணித் தாயாரின் செப்புத் திருமேனி இம்மண்டபத்தில் உள்ளது. இதனையடுத்துள்ள கருவறையில் இறைவன் இருக்கிறார்.

**திருவாடானை:**

திருவிராமேச்சுரம் திருத்தலம் இவ் ஆய்வு எல்லைக்குள் இல்லாததால் ஈண்டு விளக்கப்படவில்லை.

திருவாடானை திருத்தலம் இராமநாதபுரம் மாவட்டத்தில் அமைந்துள்ளது. இத்திருத்தலம் பாண்டிப் பதினான்கில் ஒன்பதாவது ஆகும்.

**மூர்த்தி:**

இறைவனை ஆடானைநாதர் என்றும் இறைவியை அன்பாயி என்றும் அழைக்கின்றார்கள். இறைவன் ஆதிரெத்தினேசுவரர் என்றும் இறைவி சிநேகவல்லி என்றும் வடமொழி பெயரால் வழங்கப்படுகிறார்கள்.

அருச்சனை வழக்கிலும் இந்த வடமொழிப் பெயர்களே பயன்படுத்தப்படுகின்றன.

**திருத்தலம்:**

தேவாரத்தில் ஆடானை என்று குறிப்பிடப்பட்டுள்ள இத்திருத்தலம் ஆய்வு காலம் வரையிலும் 'திரு' என்ற அடைமொழியோடு 'திருவாடானை' என்றே மக்கள் வழக்கிலும் பெயர் மாற்றம் பெறாமல் அழைக்கப்படுகின்றது.

திருவாடானை திருத்தலத்தின் பழமையான தலபுராணங்கள் கிடைக்கப் பெறவில்லை. திருவாரூர் சுவாமிநாத தேசிகர் என்பார் இயற்றிய 'திருவாடானை புராணம்' எனும் பழமையான தலபுராணம் இருந்ததாக திருக்கோயில் சிவாச்சாரியார் கணபதி.சௌந்தரதியாகராஜ குருக்கள், 21.01.2018 அன்று மேற்கொண்ட நேர்காணலில் பதிவு செய்துள்ளார். இவர் பாட்டியின் காலங்களில் தலபுராணப் பாடல்களை கும்மிப் பாடல்களாகப் பாடியுள்ளதை அறிய முடிகின்றது.[44] தற்பொழுது இறைவியின் மீது பாடப்பட்ட,

**"மருக்கமழுங் குழலாளைக் கலைசேர் சோதி**
**மதியனைய முகத்தாளை வல்லா மென்றே**
**யிருக்குமிரு தனத்தாளை யிலையுண் டென்னு**
**மிடையாளை யடியவர்க ளெவரு ஞானப்**
**பெருக்கமுற நின்றாளை யுலகை யெல்லாம்**
**பெற்றுவளர்த் திறைவனிடம் பிரியா தோங்கு**
**மருட்கடலை யாடானைப் பதியன் பாயி**
**யம்மைமலர்த் தாளிணையை யகத்துள் வைப்பாம்"** [45]

என்ற பாடல் மட்டும் சிவாச்சாரியார்களாலும் மக்களாலும் பாடப்படுகின்றது. புலவர் மூ.அர்ச்சுனன் என்பவரால் இயற்றப்பட்டு 2013ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட 'ஆடானை அகவல்' என்ற நூல் மட்டும் கிடைத்துள்ளது. திருவாடானை தல வரலாறுகளை சிவாச்சாரியார்களின் வழி மட்டுமே அறிய முடிகின்றன.

இத்திருத்தலத்திற்கு இரண்டு வரலாறுகள் முதன்மையாகக் கூறப்படுகின்றன. சூரியனுக்கு ஒரு முறை அகங்காரம் வந்து விடுகின்றது. தன்னால் தான் இந்த பூமி ஒளியும் செழிப்பும் பெறுவதாக அகந்தை கொண்டான். சூரியனின் அகந்தையை அழிக்க இறைவன் அவனின் ஒளியைக் குறைத்து விடுகின்றார். இதனால் அகந்தை ஒழிந்த சூரியன் முனிவர்களை அடைந்து தனக்கு விமோசனம் தருமாறு வேண்டினான். முனிவர்கள் இத்திருத்தலத்தை அடைந்து இறைவனுக்கு பூசை செய்யுமாறு கூறினர். சூரியன் இத்திருத்தலம் வந்து தீர்த்தம் உண்டாக்கி ரத்தினங்களால் இறைவனை பூசை செய்தமையால் இறைவனுக்கு ஆதிரெத்தினேசுவரர் என்ற பெயர் ஏற்பட்டுள்ளது.[46]

மழைக்கடவுள் வருணனின் மகன் வாருணி ஆவான். வாருணி ஒருமுறை கைலாயத்தில் இறைவனை வணங்கிவிட்டு தன் படைகளுடன் பூலோகம் வருகிறான். திருவாடானை திருத்தலத்தின் அருகே பாய்ந்த மணிமுத்தா நதிக்கரையில் துருவாச முனிவர் ஆசிரமம் அமைத்திருந்தார். வாருணியும் அவனின் படைகளும் பசியின் மிகுதியால் துருவாசரின் தோட்டத்தில் இருந்த காய், கனிகளை உணவாக்க தோட்டத்தை அழித்தனர். இதைக்கண்ட துருவாசர் கோபங் கொண்டு பசியினால் தன் நிலை மறந்து இதைச் செய்ததால் வாருணி பசிக்கு தகுந்த உணவு அருந்த முடியாதபடி, ஆட்டின் தலையும் யானையின் வயிறும் கொள்ள சாபம் இட்டார். வாருணி யானை வயிற்றை நிரப்ப ஆட்டின் தலை மூலம் போதுமான உணவை உண்ண முடியாமல் துன்பப்பட்டான். தன் சாபத்திற்கு துருவாச முனிவரிடம் விமோசனம் கேட்டான். துருவாசர் மனமிறங்கி சூரியன் பூசை செய்த இத்திருத்தலத்தின் பெருமைகளைச் சொல்லி இறைவனை வழிபடுமாறு கூறி உதவினார். வாருணியும் இங்கு வந்து தீர்த்தம் அமைத்து இறைவனை வழிபட்டு சாபம் நீங்கப் பெற்றான். பின்னாளில் வாருணி தவங்கள் பல செய்து ‘பிருகு முனிவர்’ என்ற பெயர் பெற்று ‘சப்த ரிசிகள்’ என்று அழைக்கப்படும் ஏழு முனிவர்களின் கூட்டத்தில் ஒருவரானார். நவக்கிரகங்களில் ஒருவரான சுக்கிரன் பிருகு முனிவரின் புதல்வராவார். சில கர்ண பரம்பரைக் கதைகளில் லெட்சுமியும் பிருகு முனிவரின் புதல்வியாகப் பேசப்படுகிறாள்.[47] இவ்விரண்டு புராணங்களும் இறைவனின் பெயருக்கான காரணத்தையும் ‘திருவாடானை’ என்ற பெயரின் காரணத்தையும் முறையே விளக்குகின்றன.

ராமர் இலங்கையின் மேல் போருக்குச் செல்வதற்கு முன் திருவாடானை திருத்தலத்தில் அகத்தியர், மார்க்கண்டேயர் ஆகியோரை வழிபட்டுள்ளார். அகத்தியர்

ராமருக்கு ‘சிவ கீதை’ உபதேசித்த திருத்தலமாக திருவாடானை போற்றப்படுகின்றது. இதை அடிப்படையாகக் கொண்டே கிருட்டிணர் பகவத் கீதையை உபதேசித்ததாகக் கூறப்படுகிறது.[48]

இத்திருக்கோயிலுக்கு ஐந்து திருச்சுற்றுகள் வகுக்கப்பட்டுள்ளன. இறைவன் சந்நிதி கோட்டம், அர்த்த மண்டபத்தைச் சுற்றியுள்ள திருச்சுற்று, இறைவன் சந்நிதி மகா மண்டபத்தை கோட்டம், அர்த்த மண்டபத்துடன் இணைக்கும் திருச்சுற்று என இரண்டு திருச்சுற்றுகள் இறைவன் சந்நிதியில் இருக்கின்றன. இருப்பினும் இவையிரண்டும் இணைத்து திருச்சுற்று என்றே வழங்கப்படுகிறது. இறைவன் சந்நிதி, இறைவி சந்நிதிகளோடு மணி மண்டபத்தை இணைக்கும் திருச்சுற்று பிரதோச வீதி என்று அழைக்கப்படுகிறது. பிரதோசத்தினன்று சுற்றுதல் இத்திருச்சுற்றில் நடக்கின்றது. திருக்கோயிலுக்கு வெளியே மதிற்சுவரை ஒட்டி அமைந்துள்ள திருச்சுற்று ‘சுக்ரவார வீதி’ என்றும் ‘மாட வீதி’ என்றும் வழங்கப்படுகின்றது. வெள்ளிக்கிழமை அன்று இறைவி திருவீதி புறப்பாடு கண்டருள அமைக்கப்பட்டதால் இத்திருச்சுற்று ‘சுக்ரவார வீதி’ என்று வழங்கப்படுகின்றது. சுக்ரவார வீதி ஆய்வுக் காலத்தில் கீழத் தெரு, தெற்குத் தெரு, மேலத் தெரு, வடக்குத் தெரு என்று வழங்கப்படுகிறது. சுக்ரவார வீதியை அடுத்து அமைந்திருப்பது ரத வீதி ஆகும். இது முறையே கிழக்கு ரத வீதி, தெற்கு ரத வீதி, மேற்கு ரத வீதி, வடக்கு ரத வீதி என்று வழங்கப்படுகின்றது. இது ஆய்வுக் காலத்தில் கீழ வீதி, தெற்கு வீதி, மேல வீதி, வடக்கு வீதி என்று அழைக்கப்படுகின்றது.

திருவிழாக்களின் பொழுது திருவீதி புறப்பாடு ரத வீதியில் நடைபெறுகின்றது. திருக்கோயிலுக்கு எதிரே கைலாச விநாயகர் சந்நிதி அமைந்துள்ளது. இச்சந்நிதியையொட்டி அமைந்திருக்கும் மண்டபம் ‘தபசு மண்டபம்’ என்றும் ‘நித்திய சந்தியாவந்தன மண்டபம்’ என்றும் வழங்கப்படுகிறது.

திருக்கோயிலுக்கு முன்னர் ஐந்து தேர்கள் பஞ்சமூர்த்திகளுக்கென்று இருந்துள்ளது. அதில் மூன்றை, சுற்றியிருக்கும் கிராமக் கோயில்களுக்கு அளித்ததை அறிய முடிகின்றது.[49] ஆய்வுக் காலத்தில் இறைவன், இறைவிக்கு தேர்கள் உள்ளன. தேரோட்டத்தில் இப்பகுதியில் உள்ள ஐம்பதுக்கும் மேற்பட்ட கிராம மக்கள் கலந்து கொள்கின்றனர். இத்தொகை ‘ஐந்து மாகாணம்’ என்று திருக்கோயில் வழக்குகளில்

பயன்படுத்தப்படுகின்றது. இறைவன், இறைவி தேர்களை இப்பகுதி மக்கள் ‘வைரத் தேர்’ என்று அழைக்கும் வழக்கத்தை கள ஆய்வின் பொழுது அறிய முடிகின்றது.

இத்திருக்கோயிலில் சூரியன், வாருணியைத் தவிர வருணன், குபேரன், வசிட்டர், துருவாசர்,அகத்தியர், லோபாமுத்திரை, மிருகண்டு முனிவர், மார்க்கண்டேயர், காமதேனு, மனு, அரிச்சந்திரன், அருச்சுனன், ராமர் ஆகியோர் வந்து வணங்கியுள்ளனர்.

காரண ஆகமத்தில் உள்ள நாள் வழிபாட்டு விதியின் படி இத்திருக்கோயிலில் பூசைகள் நடைபெறுகின்றன. கிருத யுகத்தில் பாரிசாதம், திரேதா யுகத்தில் குருக்கத்தி, துவாபர யுகத்தில் கடம்பம் ஆகியன தலவிருட்சங்களாக இருந்துள்ளன. கலி யுகத்தில் இத்திருத்தலம் வில்வ மரங்களால் சூழப்பட்டிருந்தது. அப்பொழுது இறைவன் மேல் பசுக்கள் தானாக பால் சொரிந்த பொழுது இத்திருத்தலம் மக்களால் அறியப்பட்டுள்ளது.[50] ஆகையால் கலி யுகத்திற்கு வில்வம் தல விருட்சமாகப் போற்றப்படுகின்றது.

1900, 1953, 1998, 2015ஆம் ஆண்டுகளில் குடமுழுக்கு செய்யப்பட்டுள்ளது. தினமும் 50 நபர்களுக்கு அன்னதானம் செய்யப்படுகிறது.

**தீர்த்தம்:**

திருவாடானை திருக்கோயிலுக்கு ஏழு தீர்த்தங்கள் உள்ளன. திருக்கோயில் உள்ளே வடகிழக்கு மூலையில் சூரிய தீர்த்தம் அமைந்துள்ளது. சூரியன் இத்தீர்த்தத்தை உண்டாக்கி பின்னர் இறைவனை வழிபட்டு சாபவிமோசனம் அடைந்ததால் ‘சூரிய தீர்த்தம்’ என்ற பெயர் பெற்றுள்ளது.

திருக்கோயிலுக்கு கிழக்கே கைலாச விநாயகர் சந்நிதி அருகே அமைந்திருப்பது ‘வருண தீர்த்தம்’ ஆகும். மழைக்கடவுளான வருணன் ஏற்படுத்திய இந்த தீர்த்தத்தில் வைகாசி விசாகப் பெருவிழா, ஆடிப்பூரப் பெருவிழா, மாதந்தோறும் அமாவாசையில் ‘தீர்த்தவாரி’ நடைபெறுகின்றது. திருக்கோயிலில் பூசை செய்யும் சிவாச்சாரியார்களும் அந்தணர்களும் இத்தீர்த்தத்தினைக் கொண்டு கைலாச விநாயகர் சந்நிதியை ஒட்டியிருக்கும் நித்திய சந்தியாவந்தன மண்டபத்தில் ‘சந்தியாவந்தனம்’ செய்துள்ளதை அறிய முடிகின்றது.[51]

திருக்கோயிலுக்கு வடமேற்கில் காமதேனு தீர்த்தம் அமைந்துள்ளது. காமதேனு இத்தீர்த்தத்தை உண்டாக்கி இறைவனை வணங்கி வழிபாடு செய்துள்ளமையால் இப்பெயர் பெற்றுள்ளது.

மார்க்கண்டேயரின் தந்தை ‘மிருகண்டு முனிவர்’. மிருகண்டு முனிவரும் மார்க்கண்டேயரும் பர்ணசாலை அமைத்து தங்கியிருந்து தவங்கள் பல செய்ததால் அப்பகுதி ‘மிருகண்டுபுரம்’ என்றும் ‘மார்கண்டேயபுரம்’ என்றும் வழங்கப்பட்டுள்ளது. பின்னர் மருவி ஆய்வுக் காலத்தில் ‘மணிகண்டி’ என்ற கிராமமாக இருக்கிறது. தொண்டி, திருவெற்றியூர் செல்லும் சாலையிலிருந்து விலகி இந்தக் கிராமத்தை அடையலாம். இங்கு மிருகண்டு முனிவரும் மார்க்கண்டேயரும் ஏற்படுத்திய தீர்த்தம் ‘மார்கண்டேய தீர்த்தம்’ என்ற பெயரில் வழங்கப்படுகின்றது. இத்தீர்த்தத்தின் அருகில் இருவராலும் பூசை செய்யப்பட்ட ஒரு லிங்கம், இரண்டு விநாயகர்கள், அங்காளபரமேசுவரி ஆகியன உள்ளன. ஆய்வுக் காலத்தில் மார்கண்டேய தீர்த்தம் மிகச் சிறப்பான முறையில் பராமரிக்கப்பட்டு அப்பகுதி மக்களின் ‘குடி தண்ணீர் ஊருணி’ ஆகவும் விளங்குகின்றது. இது திருக்கோயிலுக்கு தென்கிழக்கில் உள்ளது.

வருணனின் மகன் வாருணியால் உண்டாக்கப்பட்ட தீர்த்தம் ‘வாருணி தீர்த்தம்’. இது ‘பிருகு தீர்த்தம்’ என்றும் வழங்கப்படுகின்றது. இத்தீர்த்தம் திருக்கோயிலுக்கு வடமேற்கில் அமைந்துள்ளது.

கிருத யுகம், திரேதா யுகம், துவாபர யுகம் ஆகிய மூன்று யுகங்களிலும் வற்றாத நதியாக ஓடிய ‘மணிமுத்தா நதி’, ‘மணிமுத்தாறு’ என மாறி ஆய்வுக் காலத்தில் வறண்டு புதர்கள் மண்டிக் கிடக்கின்றது. மணிமுத்தா நதிக்கரையில் துருவாச முனிவர் உள்ளிட்ட பல முனிவர்கள் தங்கியிருந்து தவங்கள் செய்துள்ளதாக அதன் வரலாறு பேசப்படுகிறது.[52] மணிமுத்தா நதியின் மேல் கரையில் காமதேனு தீர்த்தமும் கீழ்க்கரையில் வாருணி தீர்த்தமும் அமைந்துள்ளது.

அகத்தியர், அவர் மனைவி லோபாமுத்திரையுடன் வந்து தீர்த்தமும் பர்ணசாலையும் அமைத்து இறைவனை வழிபட்டுள்ளனர். திருக்கோயிலுக்கு தென்கிழக்கில் அகத்திய தீர்த்தம் அமைந்துள்ளது.

**திருக்கோயிலமைப்பு:**

5 ஏக்கர் பரப்பளவு உடையது இத்திருக்கோயில். இறைவன் சந்நிதிக்கு எதிரில் உள்ள 130 அடி உயரம் கொண்ட ஒன்பது நிலை இராசகோபுரத்தைக் கடந்ததும் அமைந்திருப்பது மணி மண்டபமாகும். மணி மண்டபம், நூற்றியெட்டு தூண்கள் கொண்டிருப்பதால் ‘நூற்றுக்கால் மண்டபம்’ என்றும் ‘நர்த்தன மண்டபம்’ என்றும் அழைக்கப்படுகிறது. மணி மண்டபத்தின் இடதுபுறம் உவர்நீர் சுத்திகரிப்பு நிலையம், மடப்பள்ளி ஆகியன உள்ளன. வலப்புறம் உள்துறை அலுவலகம் இயங்கி வருகின்றது. திருக்கோயிலின் வடகிழக்கு மூலையில் சூரிய தீர்த்தம் உள்ளது. மணி மண்டபத்தின் வலதுபுறம் வாகனங்கள் வைக்கப்பட்டுள்ளன. மணி மண்டபத்தைச் சுற்றியுள்ள திருச்சுற்று பிரதோச வீதியாகும். இத்திருச்சுற்றை கடிகார சுழற்சி முறையில் சுற்றி வந்தால் தெற்குப் பகுதியில் உள்ள சபாபதி மண்டபம், தலவிருட்சம், இறைவி சந்நிதி ஆகியனவற்றை அடையலாம். சபாபதி மண்டபத்தில் திருக்கோயில் யானை கட்டிவைக்கப்படுவதால் இது ‘யானை கட்டி’ மண்டபம் என்றும் அழைக்கப்படுகிறது.

இறைவி சந்நிதியின் உள்ளே முதலில் அமைந்திருப்பது துவச மண்டபம். இறைவன் சந்நிதி, இறைவி சந்நிதியின் இடையில் அமைந்துள்ள வாகன பொருட்கள் பாதுகாப்பு அறையை, இறைவி சந்நிதி துவச மண்டபத்தின் இடப்புறமாகவும் சென்று அடையலாம். துவச மண்டபத்தின் வலதுபுறம் நவக்கிரக சந்நிதி, கொலுப்படிகள் அமைந்துள்ளன. துவச மண்டபத்தின் நடுவே கிழக்கிலிருந்து மேற்காக கொடிமரம், பலிபீடம், நந்தி ஆகியன உள்ளன. இதனை அடுத்துள்ள வாயிலின் இருபுறம் துவார பாலகி சிலைகளும் வலதுபுறம் விநாயகர், வள்ளி தெய்வானை முருகன் சிலைகளும் உள்ளன.

இவ்வாயிலைக் கடந்தால் அமைந்திருப்பது பள்ளியறை மண்டபம். இது ‘நவராத்திரி மண்டபம்’ என்றும் அழைக்கப்படுகிறது. இதன் வலதுபுறம் பள்ளியறை அமைந்துள்ளது. இதனை அடுத்து இறைவி சந்நிதியின் கோட்டத்தை கடிகார சுழற்சி முறையில் சுற்றினால் கோட்டத்தின் தென்புறம் இச்சா சக்தி, மேல்புறம் கிரியா சக்தி, வடபுறம் ஞானா சக்தி, சண்டிகேசுவரி சந்நிதி ஆகியன அமைந்துள்ளன. பள்ளியறை மண்டபத்தின் இருபுறமும் உள்ள படிகளின் மூலம் ‘ஸ்நபன’ மண்டபத்தை

அடையலாம். இதன் இடதுபுறம் இரட்டை விநாயகர் அமைந்துள்ளனர். ஸ்நபன மண்டபத்தின் அடுத்துள்ள வாயிலைக் கடந்தால் அர்த்த மண்டபமாகும். இதை அடுத்துள்ள கருவறையில் இறைவி இருக்கிறாள். இறைவி சந்நிதியிலிருந்து பிரதோச வீதியின் மூலம் மணி மண்டபத்தின் வழியே இறைவன் சந்நிதியை அடையலாம். மணி மண்டபத்தை அடுத்துள்ள வாயிலின் இடதுபுறம் உள்ள பகுதி அலங்கார மண்டபம் ஆகும். வாயிலின் வலதுபுறம் யாக சாலை அமைந்துள்ளது. இடதுபுறம் சொர்ண விநாயகர் சிலையும் வலதுபுறம் பால தெண்டாயுதபாணி சிலையும் உள்ள இவ்வாயிலைக் கடந்தால் மகா மண்டபமாகும். மகா மண்டபத்தின் நடுவே கிழக்கிலிருந்து மேற்காக கொடிமரம், பலிபீடம், நந்தி, பலிபீடம் ஆகியன அமைந்துள்ளன. கொடிமரம் அமைந்திருப்பதால் துவச மண்டபம் என்றும் நந்தி இருப்பதால் நந்தி மண்டபம் என்றும் அழைக்கப்படுகிறது. மகா மண்டபத்தின் கிழக்குத் திருச்சுற்று மண்டபத்தில் அகத்திய விநாயகர், தேசசுசண்டர், உசா தேவி, சூரியன், பிரத்யுசா தேவி, வருண விநாயகர், மார்க்கண்டேய விநாயகர், நந்தி வாகனம், பலிபீடத்துடன் தனீசுவரர், தனீசுவரி, நாகர் ஆகியன அமைந்துள்ளன. மகா மண்டபத்துடன் கருவறை, அர்த்த மண்டபத்தை இரண்டு திருச்சுற்றுகள் இணைத்திருக்கின்றன. இவை இரண்டும் திருச்சுற்று என்றே அழைக்கப்படுகின்றன.

தெற்குத் திருச்சுற்று மண்டபத்தில், மகா மண்டபத்திலிருந்து சபாபதி மண்டபத்தை அடையும் வாயிலை அடுத்து விநாயகர், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோரை அடுத்து அறுபத்துமூன்று நாயன்மார்களின் சிற்பங்கள் அமைக்கப்பெற்றுள்ளன. இதனையடுத்து மேற்கு நோக்கி வீரபத்திரர், சப்த மாதர், கிழக்கு நோக்கி விநாயகர் ஆகியன அமைக்கப்பட்டுள்ளன.

கோட்டத்தின் தென்புறம் நர்த்தன கணபதி, முன் மண்டபத்துடன் தெட்சிணாமூர்த்தி சந்நிதி அமைந்துள்ளன. மேற்குத் திருச்சுற்று மண்டபத்தில் முதலில் கன்னிமூல விநாயகர் சந்நிதி உள்ளது. இதில் கன்னிமூல விநாயகருக்கு மூஞ்சூர் வாகனமும் பலிபீடமும் உள்ளன. இதையடுத்து சோமாசுகந்தர் சந்நிதி உள்ளது. இச்சந்நிதியை அடுத்துள்ள பகுதியில் சித்தி விநாயகர், நந்தி வாகனத்துடன் அருச்சுன லிங்கம், கௌரி, வருண லிங்கம், கோமதீசுவரர், சோதிர்லிங்கம், விசுவநாதர், விசாலாட்சி, சீதேவி, வரதராசர், பூதேவி, நந்தியுடன் பிருகு லிங்கம் ஆகியன அமைந்துள்ளன.

கோட்டத்தின் மேற்கில் லிங்கோத்பவர் சிலை அமைக்கப் பெற்றுள்ளது. மேற்குத் திருச்சுற்று மண்டபம் வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் சந்நிதி, கசலட்சுமி சந்நிதியுடன் நிறைவடைகின்றது. வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் சந்நிதியில் வலப்புறம் நோக்கிய மயிலுடன் நின்ற கோலத்தில் வள்ளி, தெய்வானையுடன் சுப்பிரமணியர் அமைக்கப்பெற்றுள்ளார்.

கோட்டத்தின் வடக்கில் பிரம்மா, துர்க்கையின் சிலைகள் அமைக்கப்பெற்றுள்ளன. திருச்சுற்றின் வடக்குப்பகுதியில் வில்வமூலர் சந்நிதி, சண்டிகேசுவரர் சந்நிதி உள்ளன. மகா மண்டபத்தில் அமைந்துள்ள நடராசர் சந்நிதியில் நடராசர், சிவகாமியின் செப்புத் திருமேனிகள் உள்ளன. நடராசர் சந்நிதியின் எதிரே உள்ள வாயிலின் மூலம் சபாபதி மண்டபத்தை அடையலாம். நடராசர் சந்நிதியை அடுத்து கிழக்குத் திருச்சுற்று மண்டபத்தில் அறை, பைரவர் சந்நிதி, கார்த்திகை, சந்திரன், ரோகிணி, சனீசுவரர் ஆகியன அமைந்துள்ளன.

மகா மண்டபத்தின் அடுத்து இருபக்கமும் உள்ள படிகளின் நடுவே நந்தி அமைக்கப்பெற்றுள்ளது. இதன் மூலம் ஸ்நபன மண்டபத்தை அடையலாம். ஸ்நபன மண்டபத்தின் இடதுபுறம் விநாயகர் அமைந்துள்ளார். இருபுறமும் துவார பாலகர் கொண்ட வாயிலைக் கடந்தால் அமைந்திருப்பது அர்த்த மண்டபம். அர்த்த மண்டபத்தில் மனோன்மணித் தாயார் செப்புத் திருமேனி அமைந்திருக்க, இதையடுத்த கருவறையில் இறைவன் இருக்கிறார்.

**திருக்கானப்பேர்:**

திருக்கானப்பேர் திருத்தலம் பாண்டிப் பதினான்கில் பத்தாவது திருத்தலம் ஆகும். இது சிவகங்கை மாவட்டத்தில் உள்ளது.

**மூர்த்தி:**

பாண்டிப் பதினான்கு திருத்தலங்களில் ஒரே திருக்கோயிலுக்குள் மூன்று இறைவன் - இறைவி சந்நிதிகள் முதன்மையாக அமைந்த ஒரே திருக்கோயில் திருக்கானப்பேர் ஆகும்.

சோமேசுவரர் – சௌந்தரநாயகி, சொர்ண காளீசுவரர் – சொர்ணவல்லி, சுந்தரேசுவரர் – மீனாட்சி ஆகியன இத்திருக்கோயிலில் உறைந்திருக்கும் இறைவன் - இறைவியின் பெயர்களாகும்.

தேவர்களுள் ஒருவரான சந்திரனால் பிரதிட்டை செய்யப்பட்ட சோமேசுவரர், சுயம்புவாகத் தோன்றிய சொர்ண காளீசுவரர், மனிதனால் பிரதிட்டை செய்யப்பட்ட சுந்தரேசுவரர் என மூன்று இறைவன் சந்நிதிகளும் அவர்களுக்குரிய மூன்று இறைவி சந்நிதிகளோடு அமைந்திருக்கின்றனர்.

**திருத்தலம்:**

சங்க காலத்தில் ‘திருக்கானப்பேர் எயில்’ என்ற பெயரானும் தேவாரத்தில் ‘திருக்கானப்பேர்’ என்றும் அழைக்கப்பட்ட இத்திருத்தலம் ஆய்வுக் காலத்தில் ‘காளையார்கோயில்’ என்று மக்களால் அழைக்கப்படுகிறது.

சுப்பிரமணிய ஐயர் என்பார் இயற்றிய ‘காளையார்கோயிற் புராணம்’ என்ற நூல் திருக்கானப்பேர் திருத்தலத்தின் வரலாற்றை அறிய உதவுகின்றது. இந்நூல் முப்பத்தியிரண்டு படலங்களில் பாயிரம் உட்பட 1208 செய்யுட்களால் இயற்றப்பட்டுள்ளது. இந்நூலின் வசனம், ‘காளையார்கோவிற் புராண வசனம்’ என்னும் நூலாக, பெயர் அறியப்படாத ஆசிரியரால் எழுதப்பெற்று வெளியிடப்பட்டுள்ளது.

1899ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பட்ட காளையார்கோயிற் புராணம், 1897ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பட்ட காளையார்கோவிற் புராண வசனம் ஆகிய இரண்டு நூல்களும் கிடைக்கப் பெற்றுள்ளன.

திருக்கானப்பேர் திருத்தலத்திற்கு மூன்று வரலாறுகள் முதன்மையாகக் கூறப்படுகின்றன.

முதல் வரலாறு இத்திருக்கோயிலின் தீர்த்தங்களுள் ஒன்றாகிய ‘யானை மடு’ தோன்றியதைக் கூறுகிறது. இந்திரன் தன் யானையாகிய ஐராவதத்தின் மேலேறி கைலாயத்திற்கு வந்தான். அங்கு இறைவன் அளித்த மாலையைத் தன் யானையின் மீது சாற்றினான். மாலையின் அருமை தெரியாத ஐராவதம் அதைக் காலால் மிதித்தது. இதைக் கண்டு கோபம் கொண்ட துருவாச முனிவர் ஐராவதத்தை காட்டு யானையாக மாறி பூமியில் வாழும்படி சாபம் கொடுக்கிறார். வருத்தம் கொண்ட ஐராவதம் தனக்குச் சாபவிமோசனம் வேண்ட, திருக்கானப்பேர் சென்று மனிதர்களின் கண்களுக்குத் தென்படாமல் மறைந்து வாழ்ந்து இறைவனுக்குப் பூசை செய்யுமாறு கூறுகிறார்.

இவ்வாறு பூசை செய்யும் வேளையில் அந்த காட்டு யானையை மனிதன் ஒருவன் காண நேரிடுகின்றது. இதைக் கண்ட காட்டு யானை தன் தலையால் தரையை முட்டி உள்ளே ஒளிந்து கொள்கிறது. காட்டு யானை தரையில் முட்டியதால் அங்கு தண்ணீர் சுரந்து தீர்த்தமாக உருவாகிறது. காட்டு யானை முட்டி தோன்றியதால் அத்தீர்த்தம் ‘யானை மடு’ என்ற பெயரைப் பெற்றது.[53]

தலபுராணத்தில் உள்ள இவ்வரலாற்றில் சிறு வேறுபாடுகள் உள்ளன. இந்திரன் தனது குருவான வியாழனைக் காண ஐராவதத்தின் மீது ஏறி கைலாயம் சென்றான். இறைவனையும் வியாழனையும் கண்டு வணங்கி தனது குருவை அழைத்துக் கொண்டு திரும்புகையில், கர்வம் கொண்டிருந்த ஐராவதம் நந்தியின் வாலை தன் துதிக்கையால் இழுத்தது. கோபம் கொண்ட நந்தி ஐராவதத்தை காட்டு யானையாகப் போகுமாறு சபித்தார். இதைக் கேட்ட ஐராவதம் இறைவனிடம் சாப விமோசனம் கேட்க, இறைவன் திருக்கானப்பேரில் உறையும் தன்னை பூசித்து வருமாறு அருளினான். காட்டு யானையாய் மாறிய ஐராவதம் இவ்வாறு பூசை செய்து வருகையில் இறைவன் தன் திருவிளையாடலால் தண்ணீர் இல்லாதாகும்படி செய்தார். மனம் வருந்திய காட்டு யானை தரையில் தன் தலையைக் கொண்டு முட்டி தண்ணீர் உண்டாக்கி இறைவனுக்குப் பூசை செய்து சாப விமோசனம் அடைந்தது.[54]

வீரசேன பாண்டியன் என்ற மன்னனுக்கு குழந்தைப் பேறு வாய்க்காமல் இருந்தது. அப்பொழுது அம்மன்னன் தன் மனைவி சோபனாங்கி என்பாளுடன் ‘காலக்கியர்’ என்னும் முனிவரைச் சந்தித்து, தனக்கு குழந்தைப்பேறு இல்லாததையும், மகவு இல்லாததால் சாத்திரப்படி சுவர்க்கம் கிட்டாதென்னும் குறையையும் கூறினர். முனிவர் தங்கத்தால் ஆன குழந்தையை செய்து வைத்துக் கொண்டால் சுவர்க்கம் கிட்டும் என்று ஆசி வழங்கினார். முனிவர் கூறியதற்கேற்ப மன்னனும் அவன் மனைவியும் ஒரு பொன் பிள்ளையைச் செய்து வைத்துக் கொண்டனர். பின்பு ஒரு நாள் வணிகன் ஒருவன் வீரசேன பாண்டியனிடம் வந்து, திருக்கானப்பேரில் தான் கொண்டு வந்த மீன்கள் எல்லாம் உருத்திர கனங்களாகவும் கற்கள் அனைத்தும் தங்கக் கட்டிகளாகவும் மாறிய அதிசயத்தைக் கூறினான். இதைக் கேட்ட வீரசேன பாண்டியனும் சோபனாங்கியும் தங்கள் பொன் பிள்ளையைக் கொண்டு வந்து ருத்திர தீர்த்தத்தில் நீராடி எழுந்ததும் பொன் பிள்ளை உயிர் பெற்றது.[55] இவ்வரலாற்றை ஒட்டி

இப்பகுதியில் ‘பொய்ப்பிள்ளை மெய்ப்பிள்ளை ஆனது’ என்ற சொல்லடை நிலவி வருகிறது.[56]

வரகுண பாண்டியன் என்ற மன்னன் திருக்கானப்பேரில் உச்சிக்கால பூசைக்கு இறைவனை வணங்கிய பின்னர் அர்த்தசாம பூசைக்கு திருஆலவாய் அடைந்து இறைவனை வணங்கும் வழக்கம் கொண்டிருந்தான். இவ்வாறு இருக்கையில் ஒரு நாள் பெரும் மழையும் வெள்ளமும் வரகுணனை திருஆலவாய் செல்ல விடாமல் தடுத்தன. மனம் வருந்தி திருஆலவாய் இறைவனிடம் முறையிட, அவர் இறைவியுடன் திருக்கானப்பேரில் வரகுண பாண்டியனுக்குக் காட்சி கொடுத்தார். இதன் பொருட்டு இத்திருக்கோயிலில் சுந்தரேசுவரர் – மீனாட்சி சந்நிதியையும் நூற்றுக்கால் மண்டபத்தையும் கட்டியதை அறிய முடிகின்றது.[57]

திருவிளையாடற் புராணம்[58], திருக்கோவையார்[59], கோயில் திருப்பண்ணியார் விருத்தம்[60] ஆகியனவற்றில் பாடப் பெற்ற கி.பி. 792 - 835ஆம் ஆண்டு வரை பாண்டிய நாட்டை ஆண்ட வரகுண மகாராசன் என்றழைக்கப்பட்ட வரகுண பாண்டியன் மேற்கூறிய வரலாற்றில் உள்ளவனாவான்.

இத்திருக்கோயிலின் சோமேசுவரர், சொர்ண காளீசுவரர் இராசகோபுரத்தைக் காக்கவே மருது சகோதரர்கள் வெள்ளையர்களிடம் சரண் அடைந்தனர். பின்னர் இருவரும் திருப்புத்தூரில் தூக்கில் இடப்பட்டனர்.

திருக்கானப்பேர் திருத்தலத்திற்கு முறையான திருச்சுற்றாக ‘ஆடி வீதி’ மட்டுமே அமைந்துள்ளது. மற்றைய சந்நிதிகளைச் சுற்றியுள்ள திருச்சுற்றுகள் திருச்சுற்று என்றே அழைக்கப்படுகின்றன. சோமேசுவரர் சந்நிதியில் அர்த்த மண்டபம், கருவறையைச் சுற்றியுள்ளது சோமேசுவரர் திருச்சுற்று, சொர்ண காளீசுவரர் சந்நிதியில் மகா மண்டபம், அர்த்த மண்டபம், கருவறையைச் சுற்றியிருப்பது சொர்ண காளீசுவரர் திருச்சுற்று, சுந்தரேசுவரர் – மீனாட்சி சந்நிதியில் அமைந்திருப்பது சுந்தரேசுவரர் – மீனாட்சி திருச்சுற்று, சொர்ணவல்லி சந்நிதியில் அர்த்த மண்டபம், கருவறையைச் சுற்றியிருப்பது செர்ணவல்லி திருச்சுற்று என இவ் ஆய்வேட்டில் குறிப்பிடப்பட்டுள்ளன. பிரதோசத்தின் பொழுது சுற்றுதல் ஆடி வீதியில் நடைபெறுகின்றது.

இத்திருக்கோயிலுக்கு மூன்று தேர்கள் இருந்துள்ளன.[61] ஆய்வுக் காலத்தில் இறைவன், இறைவிக்கு எனத் தனியாக இரண்டு தேர்கள் உள்ளன.

இத்திருக்கோயிலின் கிழக்கு திசையில் தென்வடலாக அமைந்திருக்கும் வீதி, சொர்ண காளீசுவரர் இராசகோபுரம், சோமேசுவரர் இராசகோபுரம் ஆகிய இரண்டுக்கு எதிரே கீழ்மேலாக அமைந்திருக்கும் வீதிகள் என மூன்றும் சந்நிதித் தெரு என்றே அழைக்கப்படுகின்றன. யானை மடுவிற்கு கிழக்கே ஏ.எல்.ஏ.ஆர். வீதி, தெற்கே செல்லப்ப சுவாமிகள் தெரு என்ற பெயர்களால் அழைக்கப்படுகின்றன. யானை மடு, திருக்கோயிலுக்கு மேற்கே உள்ளது பெருமாள் கோயில் தெரு ஆகும். திருக்கோயிலுக்கு வடக்கே உள்ளது மதுரை – தொண்டி சாலை. இவ்வீதிகள் இரண்டு வகையாக பிரிக்கப்படுகின்றன. மூன்று சந்நிதி தெருக்களும் 'சிறிய வீதி' என்று அழைக்கப்படுகின்றன. தென்வடலாக அமைந்துள்ள சந்நிதித் தெரு, ஏ.எல்.ஏ.ஆர். வீதி, செல்லப்ப சுவாமிகள் தெரு, பெருமாள் கோயில் தெரு, மதுரை – தொண்டி சாலை ஆகியன 'பெரிய வீதி' என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. திருவிழாக் காலங்களில் முதல் நான்கு நாட்கள் சிறிய வீதியிலும், பின்னர் அனைத்து நாட்களிலும் பெரிய வீதியில் திருவீதி புறப்பாடு நடைபெறும். இவ்வீதிகளுக்கு ரத வீதி என்ற பெயர் வழங்கப்படவில்லை.

இந்திரன், சந்திரன், அகத்தியர் ஆகியோரால் வழிபடப்பட்ட இத்திருக்கோயிலின் தலவிருட்சம் மந்தாரை எனப்படும் கொக்கு மந்தாரை ஆகும். இத்திருக்கோயிலில் காரண ஆகமம் கடைபிடிக்கப்படுகிறது. 1959, 1982, 1998, 2015ஆம் ஆண்டுகளில் குடமுழுக்கு நடைபெற்றுள்ளது. 2014ஆம் ஆண்டு முதல் தினமும் 50 நபர்களுக்கு அன்னதானம் வழங்கப்படுகிறது.

**தீர்த்தம்:**

திருக்கானப்பேர் திருக்கோயிலுக்கு ஏழு தீர்த்தங்கள் குறிப்பிடப்பட்டுகின்றன. இவைகளுள் சிவகங்கை தீர்த்தம் ஆடி வீதியின் மேற்குப் பகுதியில் உள்ளது.

யானை மடு என்று அழைக்கப்படும் 'கசபுட்கரணி தீர்த்தம்' திருக்கோயிலுக்கு வெளியே தெற்குப் பகுதியில் அமைந்துள்ளது. இதன் பரப்பளவு தோராயமாக 10 ஏக்கர் ஆகும். மருது சகோதரர்களால் திருப்பணி செய்யப்பட்ட இத்திருக்குளத்தின் நடுவே மைய மண்டபமும் அமைந்துள்ளது. இத்திருக்கோயில் தலவரலாற்றுடன் தொடர்புடைய இதில் திருவிழாக்களின் பொழுது தெப்பம், தீர்த்தவாரி நடைபெறுகின்றன.

சரசுவதி தீர்த்தம் நவக்கிரக சந்நிதிக்கு பின்புறம் அமைந்துள்ளது. பொய்கை என்ற பெயரில் அழைக்கப்படும் தீர்த்தம் சொர்ண காளீசுவரர் சந்நிதிக்கு வடகிழக்கு மூலையில் அமைந்துள்ளது.

**திருக்கோயிலமைப்பு:**

திருக்கானப்பேர் திருக்கோயிலுக்கு சொர்ண காளீசுவரர் இராசகோபுரம், சோமேசுவரர் இராசகோபுரம் என இரண்டு இராசகோபுரங்கள் இருப்பினும் பெரிய இராசகோபுரமான சோமேசுவரர் இராசகோபுரமே நுழைவு வாயிலாக அமைந்துள்ளது.

ஒன்பது நிலைகள் கொண்ட சோமேசுவரர் இராசகோபுரத்தைக் கடந்ததும் இடதுபுறம் சப்பர வைப்பு அறை, அன்னதானக் கூடம் ஆகியனவும் வலதுபுறம் திருமண அரங்கம், யானை கட்டி மண்டபம், தீர்த்தங்களுள் ஒன்றாகிய பொய்கை ஆகியன அமைந்துள்ளன. இதையடுத்து வரும் வாயிலைக் கடந்தால் இடதுபுறம் முத்து வடுகநாத பெரிய உடையாத் தேவரின் சிலை அமைந்துள்ளது. வலதுபுறம், மேற்கு நோக்கி பள்ளியறையும் தெற்கு நோக்கி சௌந்தரநாயகி சந்நிதியும் அமைந்துள்ளன. இச்சந்நிதியின் அர்த்த மண்டபம் செல்லும் வாயிலின் இருபுறமும் துவார பாலகி சிலைகள் உள்ளன. கோட்டத்தைச் சுற்றி இச்சா சக்தி, ஞானா சக்தி, கிரியா சக்தியின் திருவுருவங்கள் உள்ளன. அர்த்த மண்டபத்தை அடுத்த கருவறையில் இறைவி சௌந்தரநாயகி இருக்கிறாள். முத்து வடுகநாத பெரிய உடையாத் தேவரின் சிலையைக் கடந்தால் அமைந்திருப்பது ஆடி வீதியின் கிழக்குப் பகுதியாகும். திருக்கோயிலின் தென்கிழக்கு மூலையில் கிணறு, மடப்பள்ளி ஆகியன உள்ளன. திருக்கோயிலின் தென்மேற்கு மூலையில் நிருதி விநாயகர் சந்நிதி உள்ளது. இச்சந்நிதி பலிபீடம், வாகனமான மூஞ்சூர் ஆகியவற்றுடன் விமானம், சுற்று மண்டபத்தையும் கொண்டுள்ளது. ஆடி வீதியின் மேற்குப் பகுதியில் சிவகங்கை தீர்த்தம் உள்ளது. வடமேற்கு மூலையில் வள்ளி, தெய்வானை, சண்முகர் சந்நிதி முன் மண்டபத்துடன் விமானமும் கொண்டு அமைக்கப்பெற்றுள்ளது.

சொர்ணவல்லி சந்நிதியின் முன் மண்டபத்தில் கிழக்கிலிருந்து மேற்காக முறையே கொடிமரம், பலிபீடம், நந்தி, பலிபீடம் ஆகியன அமையப்பெற்றுள்ளன. இதனையடுத்துள்ள வாயிலைக் கடந்து அமைந்திருப்பது மகா மண்டபம் ஆகும். மகா மண்டபத்தின் வலதுபுறம் பள்ளியறை உள்ளது. சொர்ணவல்லி திருச்சுற்றில் கோட்டத்தின் தெற்கே உள்ள இச்சா சக்தி, மேற்கே உள்ள ஞானா சக்தி, வடக்கே

உள்ள கிரியா சக்தி ஆகியனவற்றைக் காணலாம். இத்திருச்சுற்றின் வடக்குப் பகுதியில் சண்டிகேசுவரி சந்நிதி உள்ளது. மகா மண்டபத்தை அடுத்துள்ள வாயிலின் இடதுபுறம் விநாயகர், துவார பாலகியும் வலதுபுறம் துவார பாலகி, தெண்டாயுதபாணியும் அமைந்துள்ளனர். இவ்வாயிலைக் கடந்தால் இருப்பது அர்த்த மண்டபம் ஆகும். இதை அடுத்த கருவறையில் இறைவி சொர்ணவல்லி இருக்கிறாள். சொர்ணவல்லி சந்நிதிக்கு கிழக்கே, தெற்கு நோக்கி நூற்றுக்கால் மண்டபமும் தெற்கே, சுந்தரேசுவரர் – மீனாட்சி சந்நிதியும் அமைந்துள்ளன.

சுந்தரேசுவரர் – மீனாட்சி சந்நிதி செல்லும் பாதையில் வலதுபுறம் விமானத்துடன் நவக்கிரக சந்நிதி, சரசுவதி தீர்த்தம் ஆகியன உள்ளன. இதையடுத்த முன் மண்டபத்தில் கீழ் மேலாக முறையே பலிபீடம், நந்தி, பலிபீடம் ஆகியன அமையப்பெற்றுள்ளன. முன் மண்டபத்தையடுத்து சுந்தரேசுவரருக்கும் மீனாட்சிக்கும் பொதுவான மகா மண்டபமும் நடுவே நந்தியும் உள்ளன. மகா மண்டபத்தின் வலதுபுறம் கலச பீடம், பைரவர், நடராசர் சந்நிதி, பள்ளியறை, மீனாட்சி சந்நிதி ஆகியன அமைந்துள்ளன. மீனாட்சி சந்நிதி அர்த்த மண்டபம், கருவறையுடன் விளங்குகின்றது. சுந்தரேசுவரர் – மீனாட்சி திருச்சுற்றில் கோட்டத்தின் தெட்சிணாமூர்த்தி, நாகருடன் வல்லபை விநாயகர், அலங்கார மண்டபம், கோட்டத்தின் லிங்கோத்பவர், கோட்டத்தின் பிரம்மா, சண்டிகேசுவரர் சந்நிதி ஆகியனவற்றைக் காணலாம். அர்த்த மண்டபம் தாண்டி கருவறையில் இறைவனான சுந்தரேசுவரர் இருக்கிறார்.

ஆடி வீதியின் கிழக்குப் பகுதியில் சொர்ண காளீசுவரர் சந்நிதிக்கு எதிரே யாக சாலை அமைந்துள்ளது. இதனருகே உள்ள நடைபாதையில் கிழவன் சேதுபதி, பெரிய மருது, சின்ன மருது ஆகியோரின் சிலைகள் அமைந்துள்ளன. கீழ்மேலாக அமைந்திருக்கும் கொடிமரம், பலிபீடம், நந்தி ஆகியனவற்றைக் கடந்து சென்றால் சொர்ண காளீசுவரர் திருச்சுற்று உள்ளது. சொர்ண காளீசுவரர் திருச்சுற்று திருச்சுற்று மண்டபத்தின் கிழக்குப் பகுதியில் அதிகார நந்தியின் திருவுருவம் உள்ளது. திருச்சுற்று மண்டபத்தின் தெற்குப் பகுதியில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் அமைந்துள்ளனர். இவர்களை அடுத்து அறுபத்துமூன்று நாயன்மார்கள், அகோர வீரபத்திரர், சப்த மாதர் உள்ளனர். திருச்சுற்று மண்டபத்தின் தென்மேற்கு மூலையில் நாகருடன் விநாயகர் உள்ளார். இதையடுத்து உற்சவர்

எழுந்தருளல் மண்டபம், பஞ்சலிங்கம், அட்டலெட்சுமி, வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் சந்நிதி, நந்தியுடன் வருண லிங்கம் ஆகியன அமைந்துள்ளன. திருச்சுற்று மண்டபத்தின் வடக்குப்பகுதியில் நடராசர் சந்நிதி, பைரவர் சந்நிதி ஆகியன உள்ளன.

சொர்ண காளீசுவரர் திருச்சுற்று கிழக்குப் பகுதியின் நடுவே பலிபீடம், நந்தி, பலிபீடம் உள்ளன. இடதுபுறம் வல்லபை கணபதியைக் கொண்ட வாயிலைக் கடந்தால் மகா மண்டபம் ஆகும். இவ்வாயிலின் இடதுபுறம் சூரியன், வலதுபுறம் சந்திரன் ஆகியோர் உள்ளனர். மகா மண்டபத்தின் நடுவே கீழ்மேலாக பலிபீடம், நந்தி, பீடம் ஆகியன உள்ளன.

சொர்ண காளீசுவரர் திருச்சுற்றை கடிகார சுழற்சி முறையில் சுற்றி வந்தால் கோட்டத்தின் தெற்கில் இருக்கும் நர்த்தன கணபதி, தெட்சிணாமூர்த்தி, நாகர்களுடன் விநாயகர், பிரம்மா, லிங்கோத்பவர், நந்தியுடன் காசி விசுவநாதர், கோட்டத்தின் மேற்கில் லிங்கோத்பவர், இடப்பக்கம் நோக்கிய மயிலுடன் சுப்பிரமணியர், கோட்டத்தின் வடக்கில் பிரம்மா, துர்க்கை, சண்டிகேசுவரர் சந்நிதி ஆகியனவற்றைக் காணலாம். மகா மண்டபத்தை அடுத்துள்ள வாயிலின் இருபுறம் துவார பாலகர்களின் செப்புத் திருமேனி நிறுவப்பெற்றுள்ளன. இவ்வாயிலின் இடப்புறம் வரம்தரும் விநாயகர் உள்ளார். அர்த்த மண்டபத்தின் வடகிழக்கு மூலையில் மனோன்மணித் தாயார் செப்புத் திருமேனி அமைந்துள்ளது. அர்த்த மண்டபத்தை அடுத்த கருவறையில் இறைவனான சொர்ண காளீசுவரர் இருக்கிறார்.

ஆடி வீதியின் கிழக்குப் பகுதியில் சோமேசுவரர் சந்நிதி எதிரே கீழ் மேலாக கொடிமரம், பலிபீடம், நந்தி ஆகியன அமைந்துள்ளன. உயரமான படிகளின் மீது ஏறினால் இடதுபுறம் சகசுரலிங்கம் சந்நிதியைக் காணலாம். விமானம் கொண்ட இச்சந்நிதி வாயிலில் விநாயகர், நாகர் அமைந்துள்ளது. இதையடுத்த வாயிலைக் கடந்தால் அமைந்திருப்பது மகா மண்டபம் ஆகும். மகா மண்டபத்தின் இடதுபுறம் வாயிலின் அருகே சூரியன் உள்ளார். மகா மண்டபத்தின் வலதுபுறம் வாயிலின் அருகே சந்திரன், சனீசுவரர் திருவுருவங்கள் உள்ளன. இதை அடுத்து பைரவர் சந்நிதி, நடராசர் சந்நிதி அமைந்துள்ளன. சோமேசுவரர் திருச்சுற்றின் மூலம் கோட்டத்தின் தெற்கில் உள்ள தெட்சிணாமூர்த்தி, அனுமன் சந்நிதி, கோட்டத்தின் மேற்கில் உள்ள லிங்கோத்பவர் ஆகியனவற்றைக் காணலாம்.

மேற்குத் திருச்சுற்று மண்டபத்தில் உற்சவர் எழுந்தருளல் சந்நிதி, மூஞ்சூருடன் விநாயகர், சீதேவி, சுகந்தவனப்பெருமாள், பூதேவி, காசி விசுவநாதர், விசாலாட்சி, அகோர வீரபத்திரர், சப்த மாதர், கசலெட்சுமி, சனீசுவரர், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் சந்நிதி ஆகியன உள்ளன.

மகா மண்டபத்தின் நடுவே அமைந்திருக்கும் பலிபீடம், நந்தியைக் கடந்து சென்றால் வரும் வாயிலின் இடதுபுறம் வரம்தரும் விநாயகர், விநாயகர் திருமேனிகள் உள்ளன. இவ்வாயிலை அடுத்துவரும் அர்த்த மண்டபத்தின் வடகிழக்கில் மனோன்மணித் தாயாரின் செப்புத் திருமேனி உள்ளது. இதையடுத்த கருவறையில் இறைவனான சோமேசுவரர் இருக்கிறார்.

**திருப்பூவணம்:**

திருப்பூவணம் சிவகங்கை மாவட்டத்தில் அமைந்துள்ளது. பாண்டிப் பதினான்கு திருத்தலங்களில் திருப்பூவணம் பதினொறாவது திருத்தலம் ஆகும்.

**மூர்த்தி:**

இறைவனுக்கு பூவணன் என்பது தமிழ்ப் பெயர். பாரிசாத மரத்தினின்று தோன்றியதாக இறைவன் குறிப்பிடப்படுகிறார். ‘பூ’வினின்று தோன்றியதால் பூவணன் என்ற பெயர் ஏற்பட்டுள்ளது. புட்பவணேசுவரர், பாசுகரபுரீசர், ரகசிய சிதம்பரேசர், பிதுர் மோட்சபுரீசுவரர், பிரம்மபுரீசுவரர் ஆகிய வடமொழிப் பெயர்களும் வழங்கப்படுகின்றன.

இத்திருத்தலத்தில் நீத்தார் கடன்களை நிறைவேற்றும் பொழுது பிதுர் மோட்சபுரீசுவரர் என்ற பெயரைப் பயன்படுத்துகின்றனர்.[62]

இறைவிக்கு மின்னனையாள், மின்னாள் ஆகிய தமிழ்ப் பெயர்களும் சௌந்தரநாயகி, தடிதம்பை ஆகிய வடமொழிப் பெயர்களும் உள்ளன.

சோமாசுகந்த உற்சவர் ‘அழகிய பிரான்’ என்ற பெயரான் அழைக்கப்படுகிறார்.

**திருத்தலம்:**

திருப்பூவணம் என்ற பெயர் மருவி ‘திருப்புவனம்’ என்று மக்கள் இத்திருத்தலத்தை வழங்கி வருகின்றனர்.

திருப்பூவணத்திற்கு பழமையான தலபுராணமாக அமைவது கந்தசாமிப்புலவர் என்பார் இயற்றிய ‘திருப்பூவணப் புராணம்’ ஆகும். இந்நூல் வடமொழி நூலிலிருந்து தமிழில் எழுதப்பெற்றுள்ளது. கடவுள் வாழ்த்து, அவையடக்கம், பாயிரம்

உள்ளிட்டவற்றுடன் இருபத்திஆறு சருக்கங்களில் 1437 செய்யுட்களாக இந்நூல் பாடப்பட்டுள்ளது.

திருப்பூவணப் புராணத்தை இயற்றிய கந்தசாமிப்புலவர் 469 கண்ணிகளில் பாடியுள்ள சிற்றிலக்கிய நூல் ‘திருப்பூவணநாதருலா’ ஆகும். இந்நூலில் திருப்பூவணத்தின் வரலாறுகளுடன் பிற திருத்தலங்களைப் பற்றிய செய்திகளும் காணப்படுகின்றன.

பிரம்ம கைவர்த்த புராணத்தின் எழுபதாவது அத்தியாயத்தில் திருப்பூவணத்தைப் பற்றிய குறிப்பு உள்ளதை அறிய முடிகின்றது.[63]

புஷ்பவனநாதர் வண்ணம், திருப்பூவண ஸ்தல வகுப்பு, தீர்த்த வகுப்பு, மூர்த்தி வகுப்பு ஆகிய நூல்களும் கந்தசாமிப்புலவரால் எழுதப் பெற்றிருக்கலாம் என்பார் உ.வே.சாமிநாதய்யர்.[64]

கந்தசாமிப்புலவர் 1620ஆம் ஆண்டில் திருப்பூவணப் புராணத்தை இயற்றியுள்ளார் என்பது இப்புராணத்தில் ஆய்வு மேற்கொண்டு முனைவர் பட்டம் பெற்ற கி.காளைராசன் என்பாரிடமிருந்து அறிய முடிகின்றது.[65]

கி.காளைராசன் எழுதிய ‘திருப்பூவணப் புராணம்’, ‘திருப்பூவணக் காசி’ ஆகிய நூல்களில் திருப்பூவணத்தின் தலவரலாறுகள் குறிப்பிடப்பெற்றுள்ளன.

1896ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பட்ட ‘திருப்பூவணப் புராணம்’, 1904ஆம் ஆண்டு உ.வே.சாமிநாதய்யரால் அரும்பதவுரையுடன் பதிப்பிக்கப்பட்ட ‘திருப்பூவணநாதருலா’ ஆகிய இரண்டு கந்தசாமிப்புலவரின் நூல்களும் கி.காளைராசன் எழுதி 2008ஆம் ஆண்டு வெளிவந்த ‘திருப்பூவணப் புராணம்’, 2017ஆம் ஆண்டு வெளிவந்த ‘திருப்பூவணக் காசி’, பல்லவராயன் ராஜாமணி குமரேசன் எழுதி 2011ஆம் ஆண்டு நான்காம் பதிப்பாக வெளிவந்த ‘சிவகங்கை சமஸ்தானம் தேவஸ்தானம் திருக்கோயில்கள் ஸ்தல வரலாறு’ ஆகிய நூல்கள் கிடைத்துள்ளன.

திருப்பூவணத்திற்கு மூன்று வரலாறுகள் முதன்மையாக வழங்கி வருகின்றன.

நவக்கிரகங்களுக்குத் தலைவனாய் சூரியன் விளங்கி வந்த காலத்தில் ஒரு புரட்சி ஏற்பட்டு வேறு கிரகம் தலைவனாய் வரும் சூழல் ஏற்பட்டது. தானே என்றும் தலைவனாய் இருக்க வேண்டி சூரியன் திருப்பூவணம் அடைந்து தீர்த்தத்தை

உண்டாக்கி இறைவனை வழிபட்டு நவக்கிரகங்களின் நிரந்தரத் தலைவன் ஆனான் என்பது வரலாறு.[66]

சூரியன் உண்டாக்கிய தீர்த்தம் ‘சூரிய தீர்த்தம்’, ‘பாசுகர தீர்த்தம்’ ஆகிய பெயர்களால் அழைக்கப்படுகிறது. இறைவன் விமானம் ‘பாசுகர விமானம்’ என்ற பெயர் பெற்றுள்ளது. இவ்வரலாறு திருப்பூவணப் புராணத்தில் இடம் பெற்றுள்ளது. நடுவில் கலசம் இருக்கும் பகுதி ‘சூரிய ரதம்’ என்று அழைக்கப்படுகிறது.[67]

ஒருவன் தன் தந்தையின் அத்தியைக் காசியில் கரைக்க வேண்டி நண்பனுடன் புறப்பட்டான். அவர்கள் அத்தியை ஒரு மூட்டையிலும் பயணத்திற்குத் தேவையான உணவை மற்றொரு மூட்டையிலும் சுமந்து வந்தனர். வரும் வழியில் திருப்பூவணத்தில் நீராடி இறைவனை வணங்கச் சென்றான். அவ்வேளையில் நண்பன் உணவு மூட்டையைத் திறக்க எண்ணி அத்தி இருந்த மூட்டையை அவிழ்க்க, அதில் மலர்கள் உள்ளதைக் கண்டு திரும்ப மூடி வைத்தான். பின்னர் இருவரும் பலநாட்கள் நடந்து காசியை அடைந்தனர். அங்கு அத்தியைக் கரைக்க எண்ணி மூட்டையை அவிழ்க்க அதில் அத்தியைக் கண்ட நண்பன் தான் திருப்பூவணத்தில் கண்டவற்றை உரைத்தான். அப்பொழுது அசரீரியாக இறைவன், அத்தியை திருப்பூவணத்தில் கரைக்கும் படியும், காசியில் கரைத்தால் கிடைக்கும் புண்ணியத்தை விட ‘வீசம் பங்கு’ அதிகம் கிடைக்கும் என்று அருளினார். இதைக் கேட்ட இருவரும் மீண்டும் திருப்பூவணம் அடைந்து அத்தியைக் கரைத்து இறைவனின் அருள் பெற்றனர். இதனால் இத்திருத்தலத்தில் நீத்தார் கடன்களை இயற்றினால் ‘காசிக்கும் வீசம் அதிகம்’ என்ற சொல்லடை வழங்கி வருகிறது.[68]

தலபுராணத்தில் இவ்வரலாறு சிறிய மாற்றங்களுடன் பாடப் பெற்றுள்ளது. திருநெல்வேலித் தலபுராணத்தில் குறிப்பிடப்பெறும் வேதசர்மாவின் மகன் ‘தருமஞ்ஞன்’ என்பானைத் தலபுராணம் குறிப்பிடுகிறது.

வேதசர்மா இறந்ததும் தருமஞ்ஞன் தந்தையின் அத்தியை கங்கையில் கரைக்க வேண்டி திருஆலவாய் உள்ளிட்ட பல திருத்தலங்களை வணங்கி பயணம் செய்து கொண்டிருந்தான். திருப்பூவணம் அடைந்த பொழுது பெருமழை பெய்தது. அத்திக் கலயத்தை மணிகர்ணிகை தீர்த்தத்தின் படித்துறையில் வைக்கும் பொழுது கால் இடறி கலயம் உடைகின்றது. கலயத்தின் உள்ளே பார்த்த தருமஞ்ஞன், அத்தி

தாமரையாகவும் நீலோற்பவ மலராகவும் இருந்ததைக் கண்டு மகிழ்கின்றான். அப்பொழுது இறைவன் தோன்றி வேதசர்மாவிற்கு நற்கதியையும் தருமஞ்ஞுனுக்கு அருளும் வழங்கினான்.[69]

ஆய்வுக் காலத்திலும், அதிகமான மக்கள் வைகையாற்றின் கரையில் நீத்தார் கடன்கள் புரிகின்றனர்.

பொன்னனையாள் என்ற தேவரடியாள் திருப்பூவணத்தில் வாழ்ந்து வந்தாள். காலை எழுந்து சிவ பூசை செய்து பின்னர் திருக்கோயிலில் நிருத்தம் புரிவாள். மீண்டும் வந்து சிவனடியார்களை இறைவனாகவே கருதிப் பூசை செய்து அவர்களுக்கு அன்னமிட்டு, எஞ்சியதை உண்டு வாழ்ந்தாள். இவ்வாறு வாழ்ந்து வந்த பொன்னனையாள் இறைவனுக்கு பொன்னாற் சிலை வடிக்க வேண்டும் என்ற அவாக் கொண்டாள். இருப்பினும் கிடைத்த பொருட்கள் யாவும் அடியவர்களுக்கு அமுது படைக்கவே சரியாக அமைந்ததால் வருத்த முற்றிருந்தாள்.

இறைவன் சித்தர் வேடத்தில் பொன்னனையாள் இல்லம் வந்தார். பொன்னனையாளின் தேக மெலிவைக் கண்டு காரணம் யாது எனச் சித்தர் கேட்க, தான் கொண்டுள்ள அவாவினைக் கூறினாள். சித்தர் பொன்னனையாள் இல்லத்திலிருக்கும் பித்தளை, ஈயப் பாத்திரங்கள் அனைத்தையும் கொண்டுவரச் சொன்னார். அவைகள் மீது திருநீற்றைத் தெளித்து இரவில் இவைகளை தீயிற் இட்டால் பொன்னாய் மாறும் என்று கூறினார். இதைக் கேட்ட பொன்னனையாள் ‘‘இரவு இங்கிருந்து நீரே இதைச் செய்தருள்க’’ என்று கூறவே, ‘‘யாம் திருஆலவாய்ச் சித்தர்’’ என்று கூறி மறைந்தார்.

சித்தராய் வந்தவர் திருஆலவாய் இறைவனே என்று உணர்ந்த பொன்னனையாள் அன்று இரவு அனைத்தையும் தீயினிற் இட்டு பொன்னாக்கி, இறைவன் சிலையை வடித்தாள். சிலையின் அழகில் மயங்கி ‘‘அச்சோ! அழகிய பிரானே!’’ என்று கண்ணத்தில் கிள்ளி முத்தமிட்டாள். பின்னர் அச்சிலையைக் கொண்டு தேரோட்டம் நடத்தியும் அன்னதானம் செய்தும் வாழ்ந்தாள்.[70]

பொன்னனையாள் கிள்ளியதன் அடையாளமாக ஆய்வுக் காலத்திலும் உற்சவரான அழகிய பிரானின் முகத்தில் நகக்குறி உள்ளது. இச்சிலா வடிவம்

இறைவனால் உருவாக்கப்பட்டதால் சோமாசுகந்தர் உற்சவரில் முருகன் அமர்ந்த நிலையில் உள்ளார்.[71]

தற்காலத்து உலோகவியல் (Metallurgy) என்று அழைக்கப்படும் பிரிவு பல வளர்ச்சி நிலைகளை அடைந்துள்ளது. இப்பிரிவு, மண்ணில் இருந்து உலோகங்களைப் பிரிப்பது (Extraction of Ores), பல உலோகங்களைக் கலந்து புது உலோகக் கலவையை (Alloys) உருவாக்குவது என விரிவடைந்துள்ளது. ஆயினும் பித்தளை (Brass), செம்பு (Copper) உள்ளிட்ட உலோகங்களைக் கொண்டு அவைகளைத் தங்கமாக (Gold) மாற்றும் முயற்சி ஆய்வுக் காலம் வரையிலும் முழு வெற்றியடையவில்லை. இங்கு சித்தராக வந்த இறைவன் திருநீற்றைத் தெளித்து பித்தளை, ஈயம் உள்ளிட்ட உலோகங்களைத் தங்கமாக மாற்றியதாகக் கூறப்படுவது, தமிழன் முன்பு இக்கலையில் பெற்றிருந்த அறிவைப் புலப்படுத்துகின்றது. பின்னாளில் வந்த சித்தர்களும் இரசவாதம், தசபாசாணம், நவபாசாணம் உள்ளிட்ட சித்து வேலைகள் புரிந்துள்ளதை சித்தர்களின் வரலாறு குறிப்பிடுகின்றது. எனவே காலப்போக்கில் மக்களின் வாழ்வு நலம் கருதி இக்கலையை சித்தர்களும் அதனை அறிந்தவர்களும் விட்டுச் செல்லாமையை உணர முடிகின்றது.

பொன்னனையாள் செய்து வந்த அன்னதானம் பல காலம் தொடர்ந்து திருமலை நாயக்கர் காலத்திலும் நடந்துள்ளது. திருஆலவாய் இறைவன் திருப்பூவணம் வந்து நிகழ்த்திய திருவிளையாடலைக் குறிக்கும் வண்ணம் பங்குனி உத்திரத்தன்று திருஆலவாய் இறைவனை திருப்பூவணம் கொண்டு வந்து பின்னர் அர்த்தசாம பூசைக்கு திருஆலவாய் கொண்டு சென்றுள்ளனர்.

ஒரு முறை அர்த்தசாமத்திற்கு இறைவனை திருஆலவாய் கொண்டு செல்லும் பொழுது வைகையில் வெள்ளம் வந்தது. இருப்பினும் பல உயிர்ச்சேதங்களைத் தந்து இறைவனை வைகை ஆற்றைக் கடந்து திருஆலவாய் கொண்டு சேர்த்தனர்.

இரவு சாமத்தில் உயிர் நீத்தவர்களின் குடும்பங்களுக்கு நிலங்கள் தரப்பட்டுள்ளன. இந்நிலங்கள், சாமத்தில் உயிர் துறந்தவர்களுக்கு வழங்கப்பட்டவை என்ற பொருளில் ‘சாம நத்தம்’ என்ற ஊராக வழங்கப்பட்டு வருகிறது. அது முதல் திருவிழாக்களில் இறைவனைத் தூக்கும் உரிமையான ‘சீர் பாதம்’, சாமநத்தம் ஊரைச் சார்ந்த மக்களுக்கு அளிக்கப்பட்டதை அறிய முடிகின்றது.[72]

வைகை ஆற்றைக் கடக்கும் சிரமங்களைக் கருதி, திருஆலவாய் இறைவனை பங்குனி உத்திரத்தன்று திருவாப்பனூரில் எழுந்தருளச் செய்துள்ளனர்.

திருப்பூவணத் திருத்தலத்தின் முதன்மையான வரலாறுகளுள் ஒன்றாக விளங்கும் 'இரசவாதஞ்செய்த படலம்' தலபுராணத்துட் குறிப்பிடப்படவில்லை.

இறைவன் சந்நிதிக்கு எதிரே ஐந்து நிலைகள் கொண்ட இராசகோபுரமும் இறைவி சந்நிதிக்கு எதிரே மூன்று நிலைகள் கொண்ட இராசகோபுரமும் அமைந்துள்ளன.

திருப்பூவணத் திருக்கோயிலுக்கு ஐந்து திருச்சுற்றுகள் வகுக்கப்பட்டுள்ளன. இறைவனின் கருவறை, அர்த்த மண்டபத்தைச் சுற்றியிருப்பது முதல் திருச்சுற்று ஆகும். இறைவனின் கருவறை, அர்த்த மண்டபம், மகா மண்டபத்தைச் சுற்றியிருப்பது இரண்டாம் திருச்சுற்று ஆகும். இவை முறையே 'அந்தர் பிரகாரம்' என்றும் 'பகிர் பிரகாரம்' என்றும் சிவாச்சாரியார்களால் அழைக்கப்படுகின்றன. மாதாந்திர பிரதோசத்தின் பொழுது சுற்றுதல் இரண்டாம் திருச்சுற்றில் நடைபெறுகிறது. இறைவன், இறைவி சந்நிதியைச் சுற்றியிருப்பது மூன்றாம் திருச்சுற்று ஆகும். இது 'ஆடி வீதி' என்றும் 'வெளித்திருச்சுற்று' என்றும் வழங்கப்படுகிறது. திருக்கோயிலுக்கு வெளியே மதிற்சுவரை ஒட்டி அமைந்திருப்பது 'ஆவணி வீதி' ஆகும். இதையடுத்து அமைந்துள்ள திருச்சுற்று 'ரத வீதி' என்றும் 'பெரிய வீதி' என்றும் அழைக்கப்படுகிறது. தேரோட்டம் ரத வீதியில் நடைபெறுகிறது. ஆவணி வீதியையும் அது உள்ளடக்கிய பகுதிகளை 'சிறிய கோட்டை' என்றும் ரத வீதியையும் அது உள்ளடக்கிய பகுதிகளை 'பெரிய கோட்டை' என்று அழைக்கும் வழக்கத்தை அறிய முடிகின்றது.

இத்திருக்கோயிலைச் சுற்றி வட்ட வடிவிலான கோட்டையும் அகழியும் முன்பு இருந்தமையால் இப்பகுதி 'கோட்டை' என்று மக்கள் வழக்கில் அழைக்கப்படுகிறது. கோட்டையைச் சுற்றியுள்ள வீதிகளே ரத வீதிகளாகும். வட்ட வடிவத்தில் கோட்டைகள் இருந்தமையால் ரத வீதிகளும் வட்ட வடிவிலேயே அமைந்துள்ளன. திருப்பூவணத் திருக்கோயில் வடகிழக்கு திசையை நோக்கியது. எனவே திருப்பூவணத் திருக்கோயிலைக் கொண்டும் ரத வீதிகளைக் கொண்டும் திசையை அறிவது குழப்பம் தரும். இத்திருத்தலத்திற்கு அருகில் உள்ள பரமனூரில் பழமையான கணக்குகள்

பயன்படுத்தப்பட்டுள்ளன. எனவே இதை மையமாகக் கொண்டு, ‘பரமனூர் கணக்கு வழக்கும் திருப்பூவணம் கிழக்கு மேற்கும் சொல்ல முடியாது’ என்ற சொல்லடை மக்களிடம் வழக்கில் இருப்பதை அறிய முடிகின்றது. இறைவன் சந்நிதிக்கு எதிரேயிருக்கும் வீதி சந்நிதித் தெரு ஆகும்.

1902ஆம் ஆண்டு இறைவன், இறைவிக்கு செய்யப்பட்ட இரண்டு தேர்கள் உள்ளன. காரண ஆகமத்தில் அமைந்த இத்திருக்கோயிலின் தலவிருட்சம் பாரிசாதம், வில்வம், பலா ஆகியனவாம். 1900, 1932, 1961, 2002 ஆகிய ஆண்டுகளில் குடமுழுக்கு நடைபெற்றுள்ளது. 2015ஆம் ஆண்டு தொடங்கப்பட்ட அன்னதானத்திட்டத்தின் மூலம் தினமும் 50 நபர்களுக்கு அன்னதானம் வழங்கப்படுகிறது.

திருப்பூவணத் திருக்கோயிலுக்கு அருகேயிருக்கும் முருகன் திருக்கோயில் இதற்கு உட்பட்டதாகும்.

**தீர்த்தம்:**

திருப்பூவணத் திருக்கோயிலுக்கு பத்து தீர்த்தங்கள் முதன்மையாக அமைந்துள்ளன.

மணிகர்ணிகை அல்லது மணிகுண்டம் என்றழைக்கப்படும் தீர்த்தம் திருக்கோயிலுக்கு வெளியே கிழக்குப் பகுதியில் உள்ளது. அமிர்தத்தின் துளி இதில் விழுந்ததால் ‘மணிகர்ணிகை’ என்ற பெயர் பெற்றதாகக் கூறப்படுகிறது. திருக்கோயிலுக்கு வெளியே இருக்கும் இத்தீர்த்தம், ‘தீர்த்தப் பிரதிட்டை’ செய்யப்பெற்று அன்னதானக் கூடத்தின் அருகே விளங்குகின்றது. தீர்த்தவாரி முதலியன அனைத்தும் தீர்த்தப் பிரதிட்டை செய்த மணிகர்ணிகை தீர்த்தத்திலேயே நிகழ்த்தப்படுகின்றன.

ஆடி வீதியில் இரட்டை விநாயகருக்கு அருகில் அமைந்துள்ளது ‘சூரிய தீர்த்தம்’ ஆகும். ‘பாசுகரன்’ என்றழைக்கப்படும் சூரியன் உண்டாக்கியதால் இது ‘பாசுகர தீர்த்தம்’ என்றும் வழங்கப்படுகிறது.

‘சந்திர தீர்த்தம்’ இறைவி சந்நிதி திருநாள் மண்டபத்தில் கொடிமரத்தின் அருகே உள்ளது.

ஆடி வீதியில் இறைவன் சந்நிதிக்கு பின்புறம் ‘அக்னி தீர்த்தம்’ உள்ளது.

திருக்கோயிலுக்கு எதிரே உள்ள வைகை ஆறு ‘பாபநாச தீர்த்தம்’ ஆகும். இப்பகுதியில் ஓடும் வைகை ‘வேகவதி’ என்று அழைக்கப்படுகிறது.

திருக்கோயிலுக்குப் பின்புறம், நரிக்குடி செல்லும் சாலையில் ‘விட்ணு தீர்த்தம்’ அமைந்துள்ளது. இதன் கரையில் திருமால் சிவலிங்கப் பிரதிட்டை செய்து வழிபட்டதாகக் கூறப்படுகிறது.

வைகை ஆற்றின் பாலத்திற்கு அருகில் ‘லெட்சுமி தீர்த்தம்’ உள்ளது. இறைவனின் அபிசேகத் தீர்த்தம் இதில் சென்று சேருமாறு அமைப்பு இருந்துள்ளதை அறிய முடிகின்றது.[73]

வசிட்ட முனிவரால் உண்டாக்கப்பட்ட தீர்த்தமான ‘வசிட்ட தீர்த்தம்’, வைகை ஆற்றின் கரையில் உள்ள ஆடித்தபசு மண்டபத்தின் அருகில் உள்ளது.

‘மார்க்கண்டேய தீர்த்தம்’ இத்திருத்தலத்தில் உள்ள முத்து மாரியம்மன் திருக்கோயிலுக்கு சற்று கிழக்கே உள்ளது. மார்க்கண்டேய முனிவரால் தோற்றுவிக்கப்பட்டதாக இதன் வரலாறு அமைந்துள்ளது.

‘இந்திர தீர்த்தம்’ எங்கு அமைந்துள்ளது என்பதை அறியச் சான்றுகள் கிடைத்திலது.

‘திருப்பூவணநாதருலா’ என்ற நூலின் முகவுரையில் உ.வே.சாமிநாதய்யர் வைகையும் பாபநாசமும் தனித்தனி தீர்த்தங்களாக குறிப்பிட்டுள்ளார். மேலும் இந்த பத்து தீர்த்தங்களைத் தவிர ‘நள தீர்த்தம்’, ‘தேவி குண்டம்’ ஆகிய தீர்த்தங்களையும் முகவுரையினின்று அறியமுடிகின்றது. தேவி குண்டம் என்பது மணிகர்ணிகை தீர்த்தத்தின் மற்றொரு பெயர் என்பார் கி.காளைராசன்.[74]

**திருக்கோயிலமைப்பு:**

திருப்பூவணத் திருக்கோயிலில் முதலில் இறைவனை வழிபட்டு பின்னர் இறைவியை வழிபடும் மரபு கடைபிடிக்கப்படுவதால் கடிகாரசுழற்சி முறையில் சுற்றி, இறைவன் சந்நிதியும் அதன் வழியே இறைவி சந்நிதியும் விளக்கப்பட்டுள்ளது. இத்திருக்கோயில் வடகிழக்கு திசையை நோக்கி அமைந்துள்ளது.

இறைவன் சந்நிதிக்கு ஐந்து நிலைகளும் இறைவி சந்நிதிக்கு மூன்று நிலைகளும் கொண்ட இராசகோபுரம் விளங்குகின்றன. இறைவன் சந்நிதி இராசகோபுரத்தைக் கடந்தால் அமைந்திருப்பது நந்தி மண்டபம் ஆகும். நந்தி

மண்டபத்தின் நடுவே கொடிமரம், பலிபீடம், சாய்ந்த நிலையில் நந்தியும் காணப்படுகின்றன. நந்தி மண்டபத்தின் வலதுபுறம் பொன்னனையாளின் சிற்பத் தூண் நிறுவப்பெற்றுள்ளது.

நந்தி மண்டபத்துடன் இணைவது மூன்றாம் திருச்சுற்றான ஆடி வீதி ஆகும். ஆடி வீதியில் நந்தவனம், கோசாலை, அன்னதானக் கூடம், மணிகர்ணிகை தீர்த்தம், அக்னி தீர்த்தம், இரட்டை விநாயகர், சூரிய தீர்த்தம் ஆகியன காணப்படுகின்றன. ஆடி வீதியில் இறைவி சந்நிதியின் இடதுபுறம் உள்ள வாயில் கிழக்கு நோக்கியிருப்பினும் 'தெற்கு வாயில்' என்றே அழைக்கப்படுகிறது. நந்தி மண்டபத்தை அடுத்துள்ள வாயிலின் இடதுபுறம் இரட்டை விநாயகர், துவார பாலகர் ஆகியோரும் வலதுபுறம் துவார பாலகர், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் ஆகியோரும் அமைந்துள்ளனர். நந்தி மண்டபத்தை அடுத்திருப்பது உற்சவ மண்டபம் ஆகும். இதன் வலதுபுறம் யாக விநாயகர், சனீசுவரர், நவக்கிரக சந்நிதி, நடராசர் சந்நிதி ஆகியன அமைந்துள்ளன. இச்சந்நிதியே முன்னர் நடராசர் சந்நிதியாக விளங்கியுள்ளது. உற்சவ மண்டபத்துடன் இணைவது இரண்டாம் திருச்சுற்று ஆகும். இரண்டாம் திருச்சுற்றில் திருமண மண்டபம், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் சந்நிதி உள்ளன. உற்சவ மண்டபத்தை தாண்டியதும் அமைவது ஆறுகால் மண்டபம் ஆகும்.

ஆறுகால் மண்டபத்தைக் கடந்தால் இறைவன் சந்நிதியின் மகா மண்டபத்தைக் காணலாம். வடகிழக்கு திசை நோக்கிய திருச்சுற்று மண்டபத்தின் இடதுபுறம் உசாதேவி, சிவ சூரியன், பிருத்தியுசா தேவி, பால கணபதி, வேடுவ லிங்கம், காசி லிங்கம் ஆகியன உள்ளன. கிழக்கு திசையில் சயனப் பெருமாள், ராக்சத கண்ணு ஆகிய திருவுருவங்களை அடுத்து இறைவி சந்நிதி, இரண்டாம் திருச்சுற்றை அடையும் வாயில் உள்ளது.

திருச்சுற்று மண்டபத்தின் வடகிழக்கில் வலதுபுறம் ரோகிணி, சந்திரன், கார்த்திகை, பழனியாண்டவர், பைரவர் ஆகியோரின் திருவுருவங்கள் உள்ளன. இவைகளை அடுத்து இறைவி சந்நிதி செல்லும் வாயிலை நோக்கிய வண்ணம் நடராசர் சந்நிதி உள்ளது.

நடராசர் சந்நிதி வாயிலில் பதஞ்சலி முனிவர், வியாக்ர பாதர் சிலைகள் காணப்படுகின்றன. இச்சந்நிதி உள்ளே மாணிக்கவாசகர், காரைக்காலம்மையார்,

‘பிர்மதாண்ட ஈசுவரர்’ என்றழைக்கப்படும் நடராசர், சிவகாமி ஆகிய திருவுருவங்கள் காணப்படுகின்றன.

மகா மண்டபத்தின் நடுவே பலிபீடமும் நந்தியும் உள்ளன. கருவறை, அர்த்த மண்டபத்தைச் சுற்றி மகா மண்டபத்துடன் இணைவது முதல் திருச்சுற்று ஆகும்.

திருச்சுற்று மண்டபத்தின் கிழக்குப் பகுதியில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், விநாயகர், நந்தி, விசாலாட்சி, காசி விசுவநாதர், அறுபத்துமூன்று நாயன்மார்கள், சேக்கிழார், வித்யா ஈசுவரர், சப்த மாதர், சரசுவதி ஆகியன அமைந்துள்ளன. தென்மேற்கு திசையில் உள்ள திருச்சுற்று மண்டபத்தில் மகா கணபதி சந்நிதி, சுர தேவர், உற்சவர் சந்நிதி, வள்ளி தெய்வானை கார்த்திகேயன் சந்நிதி, மகாலெட்சுமி சந்நிதி ஆகியன உள்ளன.

கோட்டத்தைச் சுற்றி முன் மண்டபத்துடன் தெட்சிணாமூர்த்தி, லிங்கோத்பவர், துர்க்கை ஆகியோர் அமையப் பெற்றுள்ளனர். முதல் திருச்சுற்றில் சண்டிகேசுவரர் சந்நிதியைக் காண முடிகின்றது. மகா மண்டபத்தை அடுத்துள்ள வாயிலின் இடதுபுறம் வரம்தரும் விநாயகர், துவார பாலகர், வலதுபுறம் துவார பாலகர், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் ஆகியோர் உள்ளனர். இதை அடுத்த அர்த்த மண்டபத்தின் இடதுபுறம் காசி விநாயகர் உள்ளார். கருவறையில் மனோன்மணித் தாயாருடன் இறைவன் இருக்கிறான்.

நடராசர் சந்நிதிக்கு எதிரே உள்ள வாயிலின் வழியே இறைவி சந்நிதியை அடைந்தால் இருப்பது திருநாள் மண்டபம் ஆகும். இதன் வடகிழக்கில் மடப்பள்ளி அமைந்துள்ளது. நடுவே கொடிமரம், பலிபீடம், நந்தியுடன் அமைந்திருக்கும் திருநாள் மண்டபம் சந்திர தீர்த்தத்தையும் கொண்டு விளங்குகின்றது. திருநாள் மண்டபத்தை அடுத்துள்ள வாயிலின் இருபுறம் விளங்கும் துவார பாலகர்களுக்கு நந்தி, பிருங்கி என்ற பெயர்கள் வழங்கப்படுகின்றன.

இதை அடுத்துள்ள மகா மண்டபத்தின் வலதுபுறம் பள்ளியறையும் நடுவே நந்தி, பலிபீடம் ஆகியனவும் அமைந்துள்ளன. இறைவி சந்நிதி கருவறை, அர்த்த மண்டபத்தைச் சுற்றி மகா மண்டபத்துடன் இணையும் திருச்சுற்று முறையான திருச்சுற்றாக வகுக்கப்படவில்லை. இதன் வழியே கோட்டத்தில் உள்ள இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞானா சக்தி ஆகியனவற்றையும் திருச்சுற்றில் உள்ள விநாயகர்,

வள்ளி, தெய்வானை, முருகன், சண்டிகேசுவரி சந்நிதி ஆகியனவற்றையும் அடையலாம்.

மகா மண்டபத்தை அடுத்துள்ள வாயிலின் இடதுபுறம் வரம்தரும் விநாயகர் உள்ளார். இவ்வாயிலின் துவார பாலகிகள் யோகினி, போகினி என்ற பெயர்களைக் கொண்டுள்ளனர். அர்த்த மண்டபத்தின் இடதுபுறம் விநாயகர் உள்ளார். கருவறையில் இறைவி இருக்கிறாள்.

**திருச்சுழியல்:**

திருச்சுழியல் திருத்தலம் பாண்டிப் பதினான்கு திருத்தலங்களில் பன்னிரெண்டாவதாக அமைந்திருக்கின்றது. விருதுநகர் மாவட்டத்தில் இத்திருத்தலம் உள்ளது.

**மூர்த்தி:**

இறைவனுக்கு தங்கத்திருமேனிநாதர் என்பது தமிழில் வழங்கும் பெயராகும். இப்பெயர் மருவி திருமேனிநாதர் என்று வழங்கப்படுகின்றது. இதைத்தவிர பூமிநாதர், தனுநாதர், மணக்கோலநாதர், கலியாணசுந்தரர் ஆகிய பெயர்களும் வழங்கப்படுகின்றன.

இறைவிக்குத் தமிழில் துணைமாலையம்மன் என்றும் வடமொழியில் சகாயவல்லி என்றும் பெயர்கள் உள்ளன.

**திருத்தலம்:**

திருச்சுழியல் திருத்தலத்திற்கு ‘திருச்சுழி’ என்ற பெயர் மக்கள் வழக்கில் உள்ளது.

இத்திருத்தலத்திற்கு இரண்டு தலபுராணங்கள் முதன்மையாக உள்ளன. திருச்சுழியல் ஆராவமுதாசாரியர் என்பவர் இயற்றி 1902ஆம் ஆண்டு பதிப்பித்து வெளிவந்த ‘திருச்சுழியற் புராணம்’ என்ற நூலும் பெயர் அறியப்படாத ஆசிரியரால் எழுதப்பெற்று பண்டிதர் பி.ஆர்.கிருஷ்ணமாசாரியர் என்பவர் எழுதிய உரையுடன் 1912ஆம் ஆண்டு வெளிவந்த ‘திருச்சுழியல் வெண்பா அந்தாதி’ என்ற நூலும் திருச்சுழியல் தலபுராணத்தைப் பாடும் நூல்களில் பழமையானவையாகும்.

திருச்சுழியற் புராணம் பதினைந்து சருக்கங்களுடன் 744 விருத்தப்பாக்களை கொண்டு பாடப்பட்டுள்ளது. இந்நூலில் திருத்தல வரலாறு, பெயர்களின் காரணங்கள், தீர்த்தங்கள் தோன்றிய வரலாறு, வணங்கி பேறு பெற்றவர்கள் ஆகியனவற்றை அறிய

முடிகின்றது. கடைசி சருக்கமாக விளங்கும் ‘காளையார்காட்சிச் சருக்கம்’ அம்பலவாண நாவலரால் பாடப்பெற்று இந்நூலில் சேர்க்கப்பெற்றுள்ளது. இச்சருக்கத்தில் இறைவன் சுந்தரருக்கு காளையார் வடிவத்தில் காட்சி கொடுத்தமை இடம் பெற்றுள்ளது. இந்நூலில் பாடப்பட்டுள்ள புராணச் செய்திகளில் பூமாதேவி வழிபட்டது, பாண்டிய மன்னனின் பிரமகத்தி தோசம் நீங்கப்பெற்றது, திருச்சுழி என்ற பெயர் தோன்றியது, கௌதமர் முனிவரும் அகலிகையும் இறைவன், இறைவி திருமணக்கோலக் காட்சி கண்டமை ஆகியன நான்கும் முதன்மையாக அமைந்துள்ளன.

இரணியக்கண்ணன் என்ற அசுரன் அனைவரையும் துன்புறுத்தி வந்தான். இறைவனின் அருளைப் பெற்றிருந்ததால் தேவர்களும் முனிவர்களும் அவனை அழித்திட முடியாமல் துன்பமடைந்திருந்தனர். இதனால் இரணியக்கண்ணன் தலைக்கணம் ஏற வைகுண்டம் சென்று பாற்கடலில் துயிலும் திருமாலின் மனைவியான பூமாதேவியை கவரச் சென்றான். பாற்கடலை அடைந்த இரணியக்கண்ணனை திருமால் வதம் செய்தார். இருப்பினும் பூமாதேவி இரணியக்கண்ணனின் பார்வை தன் மேல் பட்ட பாவத்தைப் போக்க கயிலை மலைக்குச் சென்று இறைவனிடம் விண்ணப்பித்தாள். இறைவன் திருச்சுழியலில் புன்னை மரத்தின் நிழலில் வீற்றிருக்கும் என்னைப் பூசித்து வா என்று அருளினார். பூமாதேவியும் திருச்சுழியல் வந்து தீர்த்தத்தை உண்டாக்கி இறைவனைப் பூசித்துப் பாவம் நீங்கப் பெற்றாள். பூமாதேவி பூசித்ததால் இறைவனுக்கு பூமிநாதர் என்ற பெயர் ஏற்பட்டது. தீர்த்தமும் பூமி தீர்த்தம் என்று வழங்கப்படலாயிற்று.[75]

பராக்கிரம வழுதி என்ற பாண்டிய மன்னன் செங்கோல் வழுவாமல் ஆண்ட பொழுது சாரன் என்ற அந்தணன் வாழ்ந்து வந்தான். நான்மறைகளை முறைப்படி ஓதியுணர்ந்தவன். ஆனால் விதிவசத்தால் கணிகையர் வசம் செல்லத் தொடங்கினான். தன் நியமங்களை மறந்தான். மரபுகளைத் துறந்தான். இதனால் மனவருத்தமுற்ற அவன் தாய் தந்தையரும் இறந்தனர். கணிகையர்களுக்குப் பொருள் தரத் தன் நிலத்தை விற்றான். தன் மனைவியையும் விற்றான். பின்னும் பொருளுக்காகக் களவும் செய்யத் துணிந்தான். இவ்வாறு களவாடச் செல்லும் பொழுது மாறு வேடத்திலிருந்த மன்னன் இவனைக் கண்டு துரத்திபிடிக்க முற்பட்டு பின்னர் முடியாமற் தன் வாளால் வீசி அவனைக் கொன்றான்.

அந்தணனைக் கொன்றதால் பிரமகத்தி தோசம் அரசனைப் பிடித்துக் கொண்டது. தோசம் நீங்க மன்னன் பல்வேறு திருக்கோயில்களுக்குச் சென்றும் தீர்த்தங்களில் நீராடியும் செய்த முயற்சிகள் பலனளிக்கவில்லை. கடைசியாக திருச்சுழியல் வந்து புன்னை மரத்தின் கீழ் இருந்த பூமிநாதரைக் கண்டு வணங்கினான். உடனே அங்கு சூல தீர்த்தம் தோன்றியது. சூல தீர்த்தத்தினால் எனக்கு அபிசேகம் செய்தால் வேண்டிய எல்லாம் கிடைக்கும் என்று அசரீரி கேட்டது. மன்னனும் அவ்வாறே செய்து தன் தோசம் நீங்கப்பெற்றான்.[76]

சந்திரசேனன் என்ற மன்னன் பாண்டிய நாட்டை ஆண்டு வந்தான். பெரிய சிவபக்தனாக விளங்கிய இவன் சிவனடியார்களை இறைவனாகவே கண்ட பெருந்தகையாளன். இவன் காலத்தில் பிரளய வெள்ளம் ஏற்பட்டது. இறைவனிடம் சந்திரசேனன் முறையிட, இறைவன் தன் திரிசூலத்தால் நிலத்தில் கீறி அதில் பிரளய வெள்ளத்தை அடக்கினார். கடல் வெள்ளத்தை அடக்கிய இடத்தில் தோன்றிய தீர்த்தம் ‘கௌவைக் கடல்’ என்றும் ‘கவ்வைக் கடல்’ என்றும் அழைக்கப்படுகின்றது. பிரளய வெள்ளத்தை தன் சூலத்தால் சுழித்து சுருங்கச் செய்ததால் திருச்சுழியல் என்ற பெயரை இத்திருத்தலம் பெற்றது.[77]

பிரளயத்தை சுழித்ததால் பிரளய விடங்கர் என்று இறைவன் திருநாமங் கொண்டார். இறைவன் சந்நிதிக்கு இடப்புறம் பிரளய விடங்கர் சந்நிதி கொண்டுள்ளார்.

கௌதம முனிவர் மனைவி அகலிகையை ‘கல்லாகிப் போ’ என்று சாபமிட்டார். சாப விமோசனம் தயரதன் புதல்வன் ராமனால் நடந்தது. சாப விமோசனம் அடைந்த அகலிகையும் கௌதம முனிவரும் திருச்சுழியல் வந்து இறைவன், இறைவியின் திருமணக் கோலங் கண்டனர். இதனால் இறைவனுக்கு கலியாணசுந்தரர் என்ற பெயர் ஏற்பட்டதை அறிய முடிகின்றது.[78] திருக்கோயிலுக்கு எதிரேயிருக்கும் அரசமரத்தில் கௌதம முனிவரும் அகலிகையும் ஒடுக்கமானதாக நம்பப்படுகின்றது.[79]

திருச்சுழியல் வெண்பா அந்தாதி தலபுராணத்தின் அமைப்பில் இல்லாமல் இறைவனைப் பற்றிய நூறு வெண்பாவில் இயற்றப்பட்ட அந்தாதி அமைப்பில் உள்ளது. எனினும் மேலே குறிப்பிடப்பட்ட நான்கு புராணச் செய்திகளும் நூலில் ஆங்காங்கே இறைவனைக் குறிக்குங்கால் எடுத்தாளப்பட்டுள்ளன.

இத்திருக்கோயிலுக்கு மூன்று திருச்சுற்றுகள் உள்ளன. இறைவன் சந்நிதியைச் சுற்றியிருப்பது இறைவன் சந்நிதி திருச்சுற்று என்று வழங்கப்படுகின்றது. இறைவன்

சந்நிதியைச் சுற்றி இறைவி சந்நிதி திருச்சுற்று அமைந்துள்ளது. இறைவன் சந்நிதி, இறைவி சந்நிதி ஆகியனவற்றை உள்ளடக்கி இருப்பது வெளித்திருச்சுற்று ஆகும். இதை ஆடிவீதி என்று அழைக்கின்றனர்.[80]

திருக்கோயிலைச் சுற்றியிருப்பது ரத வீதியாகும். பெரிய வீதி என்று அழைக்கப்படும் இது கீழ ரத வீதி, தெற்கு ரத வீதி, மேல ரத வீதி, வடக்கு ரத வீதி என்று வழங்கப்படுகின்றது. திருவீதி புறப்பாடு, தேரோட்டம் ஆகியன இந்நான்கு வீதிகளிலேயே நடைபெறுகின்றது. வடக்கு ரத வீதிக்கும் திருக்கோயிலுக்கும் இடையேயிருப்பது கார்த்திகை வீதியாகும். கார்த்திகை வீதி, கீழ ரத வீதி, தெற்கு ரத வீதி, மேல ரத வீதி ஆகிய நான்கும் ஒன்றாக சிறிய வீதி என்று வழங்கப்படுகின்றது. முன்னர் கார்த்திகை தீபத்திருநாளன்று வள்ளி, தெய்வானை, முருகர் திருவீதி புறப்பாடு சிறிய வீதியிலேயே நடைபெற்றுள்ளது.[81] பகவான் ரமண மகரிஷி அவதரித்த இல்லம் கார்த்திகை வீதியில் உள்ளது. பகவான் ரமண மகரிஷி திருவண்ணாமலையில் அன்னைக்கு தன் உள்ளங்கையில் இத்திருக்கோயிலின் ஆடித்தபசு திருவிழாவை காட்டியருளினார்.

இத்திருக்கோயிலுக்கு முன்னூறு வருடங்களுக்கு முன்னர் பஞ்சமூர்த்திகளுக்கென்று ஐந்து தனித்தேர்கள் இருந்துள்ளன.[82] திரிசூலபுரம், முக்திபுரம், விடங்கபுரம் என்று அழைக்கப்படும் இத்திருத்தலத்தில் அருச்சுனன், சித்ராங்கதை, பிரம்மா, கௌதம முனிவர், அகலிகை, கண்வ முனிவர் ஆகியோர் வழிபட்டுள்ளதாகக் கூறப்படுகின்றது.

காரண ஆகமத்தில் அமைந்த இத்திருக்கோயிலின் தலவிருட்சம் புன்னை ஆகும்.

2006, 2014 ஆகிய ஆண்டுகளில் குடமுழுக்கு நடைபெற்றுள்ளது. தினமும் 50 நபர்களுக்கு அன்னதானம் நடைபெற்று வருகின்றது.

**தீர்த்தம்:**

இத்திருக்கோயிலுக்கு எட்டு தீர்த்தங்கள் கூறப்படுகின்றன.[83] திருக்கோயிலுக்கு நேர் எதிரேயிருக்கும் தீர்த்தம் கௌவைக் கடலாகும். இதனுள் சூல தீர்த்தம் உள்ளது. சூல தீர்த்தம் சிவகங்கை என்றும் அழைக்கப்படுகின்றது. இறைவி சந்நிதிக்கு எதிரில் கிழக்கு மதிற்சுவரையொட்டி கோடி தீர்த்தம் உள்ளது. அருச்சுனன் சித்ராங்கதையை மணந்த பின் இங்கு வந்து வழிபட்டு இத்தீர்த்தத்தை உருவாக்கியுள்ளான். பிரளய

விடங்கர் சந்நிதியின் எதிரே பிரம்ம தீர்த்தம் உள்ளது. திருக்கோயிலுக்கு எதிரே கீழ ரத வீதியைத் தாண்டி பூமி தீர்த்தம் உள்ளது. திருக்கோயிலுக்கு பின்புறம் கௌதம தீர்த்தம் உள்ளது. இதை 'ஞான வாவி' என்றும் 'ஐந்து மூலைக் கிணறு' என்றும் அழைக்கின்றனர். மீதமுள்ள இரண்டு தீர்த்தம் எதுவென்பதை அறிந்திலர்.

ஆனால் திருச்சுழியற் புராணம் அட்ட தீர்த்தச் சருக்கத்தில் மேல் குறிப்பிடப்பட்ட தீர்த்தங்களுள் சூல தீர்த்தம், கோடி தீர்த்தம், பிரம்ம தீர்த்தம், பூமி தீர்த்தம், கௌதம தீர்த்தம் ஆகிய ஐந்தினோடு திரிநயன தீர்த்தம், காலவ தீர்த்தம், கண்ணுவ தீர்த்தம் ஆகியன குறிப்பிடப்பட்டுள்ளன. இவை மூன்றும் எங்குள்ளது என்பதும் அறியப்படவில்லை. திருக்கோயிலுக்கு எதிரே ஓடும் ஆறும் தீர்த்தமாக குறிப்பிடப்பட்டுள்ளது.[84] இத்தீர்த்தம் 'பாவகிரி' என்று வழங்கப்படுகின்றது.

**திருக்கோயிலமைப்பு:**

திருச்சுழியல் திருக்கோயில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. திருக்கோயில் நுழைவாயிலில் இராசகோபுரம் அமைக்கப்படவில்லை. இறைவன் சந்நிதிக்கு எதிர்புறம் மண்டபம் அமைந்துள்ளது. இது வெளிமண்டபம் என்று வழங்கப்படுகின்றது. இறைவி சந்நிதியின் நுழைவாயிலில் சிறிய மூன்று நிலை கோபுரம் உள்ளது. இறைவன் இறைவி நுழைவாயில்கள் ஒரே நேர்க்கோட்டில் அமையாது இறைவன் சந்நிதி நுழைவாயில் மதிற்சுவரிலிருந்து சற்று உள்ளடங்கி உள்ளது. இறைவன் சந்நிதி நுழைவாயில் அருகேயிருக்கும் இடதுபக்கத் தூணில் விநாயகர் புடைப்புச் சிற்பம் வடக்கு நோக்கி வடிக்கப்பட்டுள்ளது.

வாயிலின் வழி நுழைந்ததும் இருப்பது வெளித்திருச்சுற்றாகும். இதில் இறைவன் சந்நிதி எதிரே கிழக்கிலிருந்து மேற்காக பலிபீடம், கொடிமரம், நந்தி ஆகியன அமைந்துள்ளன.

திருக்கோயிலின் தென்கிழக்கு மூலையில் மடப்பள்ளி, அறை ஆகியன தெற்கு மதிற்சுவரையொட்டி அமைக்கப்பெற்றுள்ளன. இதனையொட்டி உள்ள வழியின் மூலம் வெளித்திருச்சுற்றை சுற்றி வரலாம். திருக்கோயிலின் தென்மேற்கு மூலையில் விமானம், முன் மண்டபத்துடன் அண்ட பகிரண்ட விநாயகர் சந்நிதி உள்ளது. இச்சந்நிதி மதிற்சுவரை ஒட்டி அமைக்கப்பெற்றுள்ளது. இதையடுத்து வில்வ மரத்தின் கீழ் நாகர் சிலைகள் உள்ளன. திருக்கோயிலின் வடமேற்கு மூலையில் சுற்றி வந்து வணங்கும் வண்ணம் விமானம், முன் மண்டபத்துடன் வள்ளி, தேவசேனை, சுப்பிரமணியர் சந்நிதி

உள்ளது. இதன் எதிரே கிழக்கு நோக்கி பிரளய விடங்கர் சந்நிதி அமையப்பெற்றுள்ளது. இச்சந்நிதி வாயிலின் இடதுபுறம் நந்தி, விநாயகர் சிலைகளும் வலதுபுறம் பாலசுப்பிரமணியர் சிலையும் உள்ளன. இதன் எதிரே மண்டபத்தின் கீழ் பலிபீடம், நந்தி, பலிபீடம் ஆகியன அமைந்துள்ளன. திருக்கோயிலின் வடகிழக்கு மூலையில் தெண்டாயுதபாணி சுவாமி சந்நிதி மேற்கு நோக்கி அமைந்துள்ளது. இதன் எதிரில் வாகனமாக மயில், பலிபீடம், கொடிமரம் ஆகியன கிழக்குமேற்காக அமைந்துள்ளன. இச்சந்நிதியிலிருந்து இறைவி சந்நிதிக்குச் செல்லும் வெளித்திருச்சுற்றின் கிழக்கு நடைபாதையின் வலப்புறம் நவக்கிரக சந்நிதி உள்ளது.

இறைவி சந்நிதியின் முதல் நுழைவாயிலின் இருபுறமும் விநாயகர், சுப்பிரமணியர் புடைப்புச் சிற்பங்களாக சுவரில் வடிக்கப்பட்டுள்ளனர். வலதுபக்க மூலையில் அனுமன் சிலை உள்ளது.

இந்நுழைவாயிலைக் கடந்தால் வருவது தாசி மண்டபம் ஆகும். தேவதாசிகள் தங்கள் நடனத்தினால் கிடைத்த பொருளைக் கொண்டு இம்மண்டபத்தைக் கட்டியுள்ளனர். இதன் நடுவே பலிபீடம், கொடிமரம், நந்தி ஆகியன கிழக்கிலிருந்து மேற்காக உள்ளன. இதையடுத்து இரண்டுபுறம் படிகள் கொண்ட ஸ்நபன மண்டபம் உள்ளது. இம்மண்டபத்தில் ஸ்நபன பூசை செய்யப்பெறும். ஸ்நபன மண்டபத்தை அடுத்திருப்பது மகா மண்டபமாகும். இதன் நடுவே பலிபீடம், நந்தி, பலிபீடம் ஆகியன அமைந்துள்ளன. இறைவி சந்நிதி திருச்சுற்றைச் சுற்றி வரும்பொழுது விநாயகர், கோட்டத்தின் தெற்கில் உள்ள இச்சா சக்தி, விநாயகர் சந்நிதி, கோட்டத்தின் மேற்கில் உள்ள கிரியா சக்தி, வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் சந்நிதி, கோட்டத்தின் வடக்கே உள்ள ஞானா சக்தி, சண்டிகேசுவரி சந்நிதி, பள்ளியறை ஆகியனவற்றைக் காணலாம்.

இருபுறமும் துவார பாலகி சிற்பங்களை உடைய வாயிலைக் கடந்தால் அமைந்திருப்பது ‘ஆச்சார்ய மண்டபம்’ ஆகும். சிவாச்சாரியார்கள் இம்மண்டபத்திலிருந்து வேதங்களை ஓதுவதால் இப்பெயர் பெற்றுள்ளது. இம்மண்டபத்தின் மேற்கூரையில் ‘ஸ்ரீ சக்கரம்’ பொறிக்கப்பட்டுள்ளது. இம்மண்டபத்தை அடுத்துள்ள கருவறையில் இறைவி இருக்கிறாள்.

வெளித்திருச்சுற்றின் கிழக்குப் பகுதியைக் கடந்ததும் வரும் இறைவன் சந்நிதி நுழைவாயிலின் மேலே ஐந்து நிலைகள் கொண்ட இராசகோபுரம் அமைக்கப்

பெற்றுள்ளது. நுழைவாயிலின் இடப்பக்கம் விமானம் உடைய சந்நிதியில் நாகர்கள், பெரிய அளவிலான விநாயகர், சிறிய அளவிலான விநாயகர் முன்னே மூஞ்சூர் ஆகியன உள்ளன. இது விநாயகர் சந்நிதி என்று அழைக்கப்படுகின்றது. இதற்கு இடதுபுறம் அலங்கார மண்டபம் உள்ளது. வலப்பக்கம் விமானத்துடன் கூடிய சுப்பிரமணியர் சந்நிதியில் வள்ளி, தெய்வானை, வலப்பக்கம் நோக்கிய மயிலுடன் சுப்பிரமணியர் ஆகிய சிற்பங்கள் உள்ளன. இதற்கு அருகில் அறை, சேமிப்பு அறை ஆகியன உள்ளன. இதன் மாடவாயிலின் இடதுபுறம் அதிகார நந்தி, கங்கையம்மன் சிலைகள் உள்ளன. நுழைவாயிலைக் கடந்தால் வருவது இறைவன் சந்நிதி திருச்சுற்றாகும். திருச்சுற்று மண்டபத்தின் கிழக்குப்பகுதியின் இடதுபுறம் விநாயகர், நாகர், திரிசூலம் ஆகிய சிலைகள் உள்ளன. இதனையடுத்து சூரியநாராயணசுவாமி தன் இருபுறமும் மனைவிகளோடு உள்ளார். இவரின் இடப்பக்கம் பிர்த்தியுசாதேவியும் வலப்பக்கம் உசாதேவியும் உள்ளனர். இவைகளையடுத்து விநாயகர் சிலை உள்ளது.

இறைவன் சந்நிதி திருச்சுற்றின் தென்கிழக்கில் கிணறு உள்ளது. திருச்சுற்று மண்டபத்தின் தெற்குப் பகுதியில் முதலில் விநாயகர், திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் சிலைகள் உள்ளன. இதனைத் தொடர்ந்து அறுபத்துமூன்று நாயன்மார்கள் தொடர்ச்சியாக அமையாமல் தில்லைவாழ் அந்தணர் முதல் திருநீலநக்க நாயனார் வரையும் நமிநந்தியடிகள் முதல் இசைஞானியர் வரையிலும் என்று இரண்டு பகுப்பாக உள்ளன. இதற்கு நடுவே அகலிகை, கௌதமர் சிலைகள் உள்ளன.

அறுபத்துமூன்று நாயன்மார்களின் சிலைகளை அடுத்து சேக்கிழார், மெய்கண்ட தேவர், அருணந்தி சிவாச்சாரியார், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவாச்சாரியார் ஆகிய சிலைகளும் சப்த மாதர் சிலைகளும் கடைசியாக சம்பூர்ண விநாயகர் சிலையும் உள்ளன. நடைபாதையின் வலப்புறம் கோட்டத்தின் தெற்கில் தெட்சிணாமூர்த்தி சந்நிதி முன்மண்டபத்துடன் உள்ளது. திருச்சுற்று மண்டபத்தின் மேற்குப் பகுதியில் முதலில் கன்னிமூல கணபதியின் சிலை உள்ளது. இதையடுத்து சிறிய முன் மண்டபத்துடன் அலங்கார மண்டபம் அமைந்துள்ளது. இதன் அருகே விக்னேசுவரர் என்ற ஒரே பெயர் தாங்கிய இரண்டு விநாயகர் சிலைகள் உள்ளன. இதனையடுத்து எதிரில் நந்தியுடன் விசாலாட்சி, காசி விசுவநாதர் சிலைகளும் வல்லபை விநாயகர் சிலையும் உள்ளன. இதற்கருகில் லெட்சுமி, சுழிகைக்

கோவிந்தர், பூமாதேவி சிலைகள் உள்ளன. இவைகளையடுத்து வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் சந்நிதி உள்ளது.

லிங்கோத்பவர் சிலை கோட்டத்தின் மேற்கில் உள்ளது. கோட்டத்தின் வடக்கே துர்க்கையும் சண்டிகேசுவரர் சந்நிதியும் உள்ளன. திருச்சுற்று மண்டபத்தின் வடகிழக்கில் அறை, அலங்கார மண்டபம், யாக சாலை, பைரவர் சிலை ஆகியன உள்ளன. இதனை அடுத்து ரோகிணி அம்மன், சந்திரன், கீர்த்திகையம்மன் சிலைகளும் தனியாக சனீசுவரர் சிலையும் அமைந்துள்ளன.

இறைவனை நோக்கிச் செல்ல முதலில் வருவது ஸ்நபன மண்டபம் ஆகும். இதை அடைய இருபுறமும் படிகள் உள்ளன. இம்மண்டபத்தை அடுத்து அமைந்திருப்பது மகா மண்டபம் ஆகும். இதன் இடப்புறம் வாயில் உள்ளது. வாயிலின் எதிரே வலப்புறம் நடராசர் சிவகாமி சந்நிதி உள்ளது. இச்சந்நிதியில் பதஞ்சலி, வியாக்ர பாதர், நடராசர், சிவகாமியின் சிலைகள் உள்ளன. இச்சந்நிதி எதிரே உள்ள வாயிலின் வழியாக திருச்சுற்று மண்டபத்தின் தெற்கில் உள்ள கௌதமர் அகலிகையைக் காணலாம். நடராசர் இம்மண்டபத்தில் இருப்பதால் இதை சபா மண்டபம் என்றும் அழைக்கின்றனர். இம்மண்டபத்தையடுத்துள்ள வாயில் எதிர்புறம் நந்தி, பலிபீடம் உள்ளன. வாயிலின் இடப்பக்கம் வரம்தரும் விநாயகர், பலிபீடம், துவார பாலகர் சிலைகளும் வலப்பக்கம் சுப்பிரமணியர், பலிபீடம், துவார பாலகர் ஆகிய சிலைகள் அமையப்பெற்றுள்ளன.

மகா மண்டபத்தையடுத்து அர்த்த மண்டபம், ஆச்சார்ய மண்டபம் ஆகியன உள்ளன. ஆச்சார்ய மண்டபத்தின் வலதுபுறம் மனோன்மணித் தாயாரின் செப்புத் திருமேனி உள்ளது. கருவறையில் இறைவன் இருக்கிறார்.

**திருக்குற்றாலம்:**

தென்காசி மாவட்டத்தில் அமைந்துள்ள திருக்குற்றாலம் பாண்டிப் பதினான்கில் பதின்மூன்றாவது திருத்தலம் ஆகும்.

**மூர்த்தி:**

இறைவனுக்குத் திருக்குற்றாலநாதர், திரிகூடநாதர் என்ற பெயர்களும் இறைவிக்குக் குழல்வாய்மொழி என்ற பெயரும் வழங்கப்படுகிறது. வடமொழியில் இறைவனுக்குத் திரிகூடமலையில் வாழ்பவன் என்ற பொருள்பட திரிகூடாசலபதி, திரிகூடாசலேசுவரர், இறைவிக்கு வேணுவாக்வாதினி, வேணுமொழிக்கௌரி என்றும்

பெயர்கள் வழங்கப்படுகின்றன. வேய்ங்குழலின் ஒலி போன்று இனிமை பொருந்திய சொல்லை உடையவள் என்பது இறைவி பெயருக்கான காரணம் ஆகும்.

**திருத்தலம்:**

தேவாரத்தில் 'குற்றாலம்' என குறிப்பிடப்பட்டுள்ள இத்திருத்தலம், 'திரு' என்ற அடைமொழியோடு திருக்குற்றாலம் என்று அழைக்கப்படுகிறது. தேவாரப் பெயரான குற்றாலம் என்பதே மக்கள் வழக்கிலும் வழங்கப்படுகிறது. இது திருநெல்வேலி மாவட்டத்தில், தென்காசி என்ற ஊருக்கு தென்மேற்கில் உள்ளது. இறைவன் இருக்கும் வரையாத்தி என்ற மரத்திற்கு குற்றாலம், கோவிதாரம், சமருகம் என்று மூன்று பெயர்கள் உண்டு. இம்மூன்றில் குற்றாலம் என்ற பெயரே இத்திருத்தலத்திற்கு வழங்கப்படுகின்றது.[85] திருக்குற்றாலம் கடல் மட்டத்தினின்று 550 அடி உயரம் கொண்டது. திருக்குற்றாலத்தில் உள்ள மலையை திரிகூடமலை என்று அழைக்கின்றனர். இம்மலை உச்சியில் மூன்று சிகரங்கள் இருப்பதால் இப்பெயரைப் பெற்றுள்ளது. மேற்குத் தொடர்ச்சி மலையின் ஒரு பகுதியாக விளங்குகிறது திரிகூடமலை. 'செண்பகக்காடு' என்பது இம்மலையில் உள்ள காடுகளின் பெயராகும்.

திருக்குற்றாலத்தின் வரலாற்றை விளக்கும் தலபுராணங்களில் முதன்மையாக அமைந்திருப்பன 'திருக்குற்றாலத் தலபுராணம்', 'திருக்குற்றாலக் குறவஞ்சி' ஆகும். இதன் ஆசிரியர் திருக்குற்றாலத்திற்கு அருகிலிருக்கும் மேலகரம் என்னும் ஊரைச் சார்ந்த திரிகூடராசப்பக் கவிராயர் ஆவார். இவரின் காலம் சற்றேற்குறைய 200 வருடங்களுக்கு மேல் இருக்கலாம் என்பதை கள ஆய்வில் அறிய முடிகின்றது.[86] திருக்குற்றாலத் தலபுராணம், இரண்டு காப்புத் திருவிருத்த செய்யுட்களுடன் மொத்தம் 2072 செய்யுட்களால் 32 சருக்கங்களாக அமைக்கப்பெற்றது.

திருக்குற்றாலக் குறவஞ்சி இத்திருத்தலத்தின் புராணங்களை முழுமையாக கூறாதிருப்பினும், இயற்கை வளங்கள் இதில் அதிகம் பாடப்பெற்றுள்ளன. தமிழில் உள்ள குறவஞ்சி இலக்கியங்களுள் குறிப்பிடத்தகுந்த இடத்தைக் கொண்டிருப்பது திருக்குற்றாலக் குறவஞ்சியாகும்.

திரிகூடராசப்பக் கவிராயர் திருக்குற்றாலத் தலபுராணம், திருக்குற்றாலக் குறவஞ்சி ஆகியவற்றோடு திருக்குற்றால யமகவந்தாதி, திருக்குற்றால உலா, திருக்குற்றால சிலேடை வெண்பா, திருக்குற்றால மாலை, திருக்குற்றால ஊடல், திருக்குற்றாலக் கோவை, திருக்குற்றாலப் பரம்பொருள் மாலை, குழல்வாய்மொழி

கலிப்பா, கோமள மாலை, குழல்வாய்மொழி வெண்பாவந்தாதி, குழல்வாய்மொழி பிள்ளைத்தமிழ், நன்னகர் வெண்பா ஆகிய பதினான்கு நூல்களை இயற்றியுள்ளார்.

மதுரகவி சுப்பிரமணிய முனிவர் இயற்றிய சித்திரசபைத் திருவிருத்தம், பிச்சப்பிள்ளை இயற்றிய குற்றால அந்தாதி, அருணாசல சுவாமிகள் இயற்றிய குற்றாலக் கோவை ஆகிய நூல்கள் திருக்குற்றாலத்தின் புராணங்களைத் தெரிவிக்கும் இலக்கியங்களாக அறியப்படுகின்றன.

1943ஆம் ஆண்டில் முதற் பதிப்பு கண்டு 1986ஆம் ஆண்டில் ஒன்பதாவது பதிப்பாக வெளிவந்த ஏ.சி.ஷண்முகநயினார் என்பார் எழுதிய ‘திருக்குற்றாலத் தலவரலாறு’ என்ற நூல் திருக்குற்றாலத்தின் வரலாறுகளை அறிய வழி செய்கின்றது. திருக்கோயிலின் வாயிலாக 2014ஆம் ஆண்டு ‘அருள்மிகு திருக்குற்றாலநாதசாமி திருக்கோயில், குற்றாலம் - தலவரலாறு’ என்ற நூல் மு.கருப்பசாமி என்பவரால் எழுதப்பெற்று வெளியிடப்பட்டுள்ளது.

மு.ரா.அருணாசலக்கவிராயர் செய்த அரும்பதவுரையுடன் 1970-71 இல் வெளிவந்த திரிகூடராசப்பக் கவிராயரின் திருக்குற்றாலத் தலபுராணம், 1889ஆம் ஆண்டு கருப்பணபிள்ளையால் பதிப்பிக்கப்பட்ட திருக்குற்றாலக் குறவஞ்சி, ஏ.சி.ஷண்முகநயினார் எழுதிய திருக்குற்றாலத் தலவரலாறு (1958ஆம் ஆண்டு, 1986ஆம் ஆண்டு பதிப்பு), மு.கருப்பசாமி எழுதிய அருள்மிகு திருக்குற்றாலநாதசாமி திருக்கோயில், குற்றாலம் - தலவரலாறு ஆகிய நூல்கள் கிடைக்கப்பெற்றுள்ளன.

இத்திருத்தலத்திற்கு மூன்று தலவரலாறுகள் கூறப்படுகின்றன. திருமால் திருக்கோயிலாக இருந்த இதை, அகத்தியர் இறைவன் திருக்கோயிலாக மாற்றிய வரலாறு முதன்மையானதாக அமைகின்றது. இறைவன், இறைவியின் திருமணத்தைக் காண அனைவரும் வட திசை சென்றதால் தென் திசை உயர வட திசை தாழ்ந்தது. இவை இரண்டையும் சமன் செய்ய, இறைவன் அகத்தியரை தென் திசைக்கு அனுப்பினான். இறைவன், இறைவியின் திருமணக் காட்சியை தன்னால் காண இயலாதே என்று வருந்திய அகத்தியரிடம் இறைவன், திரிகூட மலையின் சிறப்பைக் கூறி அங்கு திருமால் வடிவில் இருக்கும் தன்னைச் சிவனாக மாற்றிப் பூசை செய்து வந்தால் திருமணக் காட்சி கிட்டும் என்று அருளினான். இறைவனின் ஆணைக்கிணங்க திருக்குற்றாலத் திருக்கோயிலுக்கு வந்த சிவனடியாரான அகத்தியரைத் துவார

பாலகர்கள் உள்ளே அனுமதிக்கவில்லை. மன வேதனை கொண்ட அகத்தியர் திருக்குற்றாலத்திற்கு அருகே உள்ள இலஞ்சி என்ற ஊரில் இருக்கும் முருகனை வணங்க, ''வைணவ கோலத்தில் சென்று திருமாலை அடைந்து சிவனாக மாற்றுக'' என்று கூறி சிவ ஆகமங்களையும் உரைத்தார். மறுநாள் அகத்தியர் வைணவ வேடங்கொண்டு திருமாலை அடைந்து கருவறையை திருக்கடைக்காப்பு செய்தார். பின்பு திருமால் தலையில் தன் கையை வைத்து அழுத்தி ''குறுக!குறுக!'' எனக் கூறி இறைவனாக மாற்றினார்.[87]

இவ்வரலாற்றைத் தவிர வேறு இரண்டு வரலாறுகளும் திருக்குற்றாலத்திற்குக் கூறப்படுகிறது.

மகாபாரதப் போரில் பாசுபதம் வேண்டி தவம் இருந்த அருச்சுனன், தன் வீபூதி சம்புடத்தைத் தொலைத்தான். அதை இங்கு வந்து கண்டெடுத்தான் என்ற புராணம் வழங்கப்படுகிறது.[88]

வாசுகியின் தவத்தால் மகிழ்ந்த இறைவன் இங்கு தாண்டவம் ஆடினான் என்ற புராணச் செய்தியும் கள ஆய்வின் வழி அறியலாகின்றது.[89]

திருக்குற்றாலத் திருக்கோயிலுக்கு மூன்று திருச்சுற்றுகள் உள்ளன. இறைவன் சந்நிதி, இறைவி சந்நிதியைச் சுற்றியிருப்பது திருச்சுற்று ஆக கொள்ளப்படுகிறது. இவை முறையே இறைவன் சந்நிதி திருச்சுற்று, இறைவி சந்நிதி திருச்சுற்று என்று இவ் ஆய்வேட்டில் குறிப்பிடப்பட்டுள்ளன. திருக்கோயிலின் உள்ளே மதிற்சுவரை ஒட்டி அமைந்திருக்கும் திருச்சுற்று 'சங்க வீதி' என்று வழங்கப்படுகிறது. சங்க வீதியை வெளித்திருச்சுற்று என்றும் அழைக்கின்றனர். பிரதோசத்தின் பொழுது சுற்றுதல் சங்க வீதியில் நடைபெறுகின்றது. திருக்கோயிலுக்கு வெளியே மதிற்சுவரை ஒட்டி அமைந்திருப்பது மாட வீதியாகும்.

இறைவனுக்குச் சொல்லப்படும் பஞ்ச சபைகளில் சித்திர சபை, இங்கு தனித் திருக்கோயில் போன்று அமைந்துள்ளது. இங்கு இறைவன் ஆடியது 'திரிபுர தாண்டவம்' ஆகும்.[90] சித்திர சபைக்கு எதிரே நீராழி மண்டபத்துடன் திருக்குளம் அமைந்துள்ளது. சித்திர சபை, திருக்குளத்தைச் சுற்றியுள்ள வீதிகளே ரத வீதிகளாகும். இவை முறையே கீழ ரத வீதி, தெற்கு ரத வீதி, மேற்கு ரத வீதி,

வடக்கு ரத வீதி என்று வழங்கப்படுகிறது. திருவிழாக் காலங்களில் திருவீதி புறப்பாடு ரத வீதிகளிலேயே நிகழும்.

இத்திருக்கோயிலுக்கு விநாயகர், முருகன், நடராசர், இறைவன், இறைவிக்கு என ஐந்து தேர்கள் உள்ளன.

மகுடாகமத்தின் படி இத்திருக்கோயிலில் பூசைகளும் திருவிழாக்களும் நடைபெறுகின்றன. குறும்பலா தலவிருட்சம் ஆகும்.

1963, 1996, 2010 ஆகிய வருடங்களில் திருக்குற்றாலநாதர் திருக்கோயிலுக்கும் 2013ஆம் ஆண்டில் சித்திர சபைக்கும் குடமுழுக்கு நடைபெற்றுள்ளது.

2002ஆம் ஆண்டில் இருந்து தமிழக அரசின் அன்னதானத்திட்டம் செயல்படுத்தப்பட்டு வருகிறது. இதன் மூலம் தினமும் 50 நபர்களுக்கு அன்னதானம் வழங்கப்படுகின்றது.

**தீர்த்தம்:**

திருக்குற்றாலத் திருக்கோயிலுக்கு மூன்று தீர்த்தங்கள் உள்ளன. சிவமதுகங்கை என்னும் தேனருவி, வடவருவி, சித்ராநதி என்னும் சிற்றாறு ஆகியனவாம். இவை மூன்றும் திரிகூடமலையிலிருந்தே பிறக்கின்றன. மலையின் மேலே முதன் முதலில் 100 அடி உயரத்தில் விழுவது சிவமதுகங்கை எனப்படும் தேனருவியாகும். தேன் போன்று இனிமையாய் இருத்தலாலும் அப்பகுதியில் தேன் கூடுகள் அதிகம் காணப்படுவதாலும் இப்பெயர் பெற்றுள்ளது.

தேனருவிக்குக் கீழே 30 அடி உயரத்தில் விழுவது செண்பகஅருவி ஆகும். செண்பகஅருவிக்குக் கீழே 288 அடி உயரத்தில் விழுவது வடவருவி ஆகும். இவ்வடவருவி ஒரே வீழ்ச்சியாய் விழாமல் இடையில் ஒரு துறையில் விழுந்து பொங்கிப் பரந்து விரிகின்றது. எனவே இத்துறை பொங்குமாக்கடல் என்று வழங்கப்படுகிறது. இது விழுமிடத்தில் மாமரங்கள் அதிகம் இருப்பதால், மாவடித்துறை என்ற பெயரும் இதற்கு உண்டு.

வடவருவியிலிருந்து ஓடும் ஆறு சித்ராநதி, சிற்றாறு ஆகிய பெயர்களால் அழைக்கப்படுகிறது. இம்மூன்றைத் தவிர திருக்கோயிலுக்கு வெளியே மேற்குப்பகுதியில் மதிற்சுவரை ஒட்டி இருக்கும் ‘குமந்தா ஊற்று’ என்பதும் தீர்த்தமாக அமைந்திருப்பதை நேர்காணல் மூலம் அறிய முடிகின்றது.[91] எக்காலத்திலும் குமந்தா ஊற்று வற்றுவதில்லை. தேனருவித் தீர்த்தம் அபிசேகத்திற்கும் குமந்தா ஊற்றின்

தீர்த்தம் நிவேதனப் பிரசாதம் செய்வதற்கும் பயன்பட்டுள்ளது. குமந்தா ஊற்றைப் பற்றிய செய்தி வேறு எங்கும் காணப்படவில்லை.

**திருக்கோயிலமைப்பு:**

பாண்டிப் பதினான்கு திருத்தலங்களுள் சங்கு வடிவில் அமையப்பெற்ற ஒரே திருக்கோயில் திருக்குற்றாலம் ஆகும். இது கிழக்கு நோக்கி அமைந்துள்ளது.

திருக்கோயிலின் கிழக்கு வாயிலின் மேலே மட்டும் சிறிய அளவிலான கோபுரம் கட்டப்பட்டுள்ளது. கோபுரத்தைக் கடந்து சென்றால் இருப்பது திரிகூட மண்டபம் ஆகும். இம்மண்டப நடைபாதையின் இடப்பக்கம் அலுவலக அறை, நூலகம், மின் பகிர்மான அறை ஆகியன அமைந்துள்ளன. நடைபாதையின் வலதுபுறம் வசந்த மண்டபம், திருவாதிரை மண்டபம் ஆகிய மண்டபங்களுடன் பொருட்கள் வைப்பு அறை உள்ளது. திரிகூட மண்டபத்தை அடுத்துள்ள வாயிலின் இடதுபுறம் அம்பல விநாயகர் சந்நிதி, சாசுதா ஆகியனவும் வலதுபுறம் ஆறுமுகநாயினார் சந்நிதியும் உள்ளன. ஆறுமுகநாயினார் ஆறு முகங்களுடன் இடதுபுறம் நோக்கிய மயிலுடன் காட்சியளிக்கிறார்.

இவ்வாயிலைக் கடந்ததும் முதலில் இருப்பது ஸ்நபன மண்டபம் ஆகும். இப்பகுதியில் இறைவன், இறைவிக்கு பஞ்சாங்க, அட்டாங்க வணக்க முறைகள் செலுத்தப்படுவதால் ஸ்நபன மண்டபம் இருக்கும் பகுதியை 'நமற்கார மண்டபம்' என்றும் அழைக்கின்றனர். ஸ்நபன மண்டபத்தை கிழக்குப் பகுதியாகக் கொண்டு அமைந்திருப்பது சங்க வீதியாகும். சங்க வீதியை கடிகார சுழற்சி முறையில் சுற்றி வந்தால் முதலில் இருப்பது மடப்பள்ளியாகும். இறைவி சந்நிதியின் தெற்கு வாயில் அருகே தலவிருட்சமான குறும்பலா மரம் உள்ளது. குறும்பலா மரத்தின் முன்னே உள்ள பலிபீடத்தை குறும்பலாநாதர் என்று அழைக்கின்றனர். சங்க வீதியின் தெற்குப் பகுதியில் ஆதி குறும்பலா மரம், அறுபத்துமூன்று நாயன்மார்கள், தொகையடியார்கள், விநாயகர், காசி விசுவநாதர் ஆகியன அமையப்பெற்றுள்ளன. தெற்கு மதிற்சுவரையொட்டி சைலப்பர் சந்நிதி மேற்கு நோக்கியும் பத்துத் திருக்கரங்களுடன் வல்லபை கணபதி சந்நிதி கிழக்கு நோக்கியும் அமைந்துள்ளன.

சங்க வீதியின் தெற்கு நடைபாதை எதிரே மேற்கு மதிற்சுவர் அருகில் அமைந்திருப்பது நன்னகரப் பெருமாள் சந்நிதியாகும். இச்சந்நிதியின் வாயிலில் இத்திருத்தலத்தில் முத்தியடைந்த ஒரு வைணவரின் சிலை விநாயகர் வடிவத்திலும்,

நன்னகரப் பெருமாள் அருகே ஆதிசேடன் மேல் நர்த்தனமாடும் கண்ணனின் திருவுருவமும் உள்ளன. இச்சந்நிதியின் வரிசையிலேயே மேற்கு மதிற்சுவரை ஒட்டி அடுத்து அமைந்திருப்பது பாபநாசர் சந்நிதியாகும். விமானத்துடன் கட்டப்பட்டிருக்கும் இச்சந்நிதியில் கிழக்கு நோக்கி பாபநாசர் நந்தியுடனும், தெற்கு நோக்கி உலகம்மன் வீற்றிருக்கிறார்கள். பாபநாசர் சந்நிதியைத் தொடர்ந்து கிணறு, நெல்லையப்பர் சந்நிதி ஆகியன அமைந்துள்ளன. விமானத்துடன் கூடிய இச்சந்நிதியில் நெல்லையப்பர் எதிரே நந்தியுடன் கிழக்கு நோக்கியும் காந்திமதி தெற்கு நோக்கியும் அமைந்துள்ளனர். நெல்லையப்பர் சந்நிதியைத் தொடர்ந்து இருப்பது மணக்கோலநாதர் சந்நிதியாகும். மணக்கோலநாதர் சந்நிதியில் இறைவன், இறைவி மணக்கோலத்திலும் திருமால் தாரை வார்த்துக் கொடுக்கும் கோலத்திலும் காட்சி தருகின்றனர். இத்திருமணத்தை பிரம்மா நடத்தி வைக்க அகத்தியர், பிருகு முனிவர் திருமணக்காட்சி காண்கின்றார். மணக்கோலநாதர் சந்நிதியை அடுத்து நாறும்புநாதர் சந்நிதி அமையப் பெற்றுள்ளது. இதையடுத்து நந்தி, தேவியுடன் முறையே சங்கரலிங்கர் சந்நிதியும் பால்வண்ணநாதர் சந்நிதியும் அமைந்துள்ளன. இதனையடுத்து வாயிலில் விநாயகர், நந்தி வாகனத்துடன் சொக்கலிங்கர் சந்நிதி மீனாட்சியுடன் அமைந்துள்ளது. இச்சந்நிதியைக் கடந்தால் தர்ம சாசுதா சந்நிதி, விமானத்துடன் தேவியான அறம்வளர்த்த அம்மனுடன் மதுநாதேசுவரர் சந்நிதி, வாயிலில் விநாயகர், சிவாலய முனிவருடன் அகத்தியர் சந்நிதி, லிங்கமும் நந்தியும் முன்னால் அமைந்திருக்க சிவபூசை செய்யும் நிலையில் வாசுகி சந்நிதி ஆகியன முறையே அமைந்துள்ளன. அகத்தியர், வாசுகி சந்நிதிக்கு நேர் எதிரே சங்க வீதியின் வடக்கு நடைபாதை உள்ளது.

சங்க வீதியின் மேற்கு நடைபாதையின் கிழக்குப் பகுதியில் நந்தவனம், விமானம், வாயிலில் விநாயகருடன் சோமலிங்கர் சந்நிதி, கிழக்கு முகமாக வாயிலில் விநாயகருடன் மகாலிங்கர் சந்நிதி, கிழக்கு முகமாக சகசுரலிங்கம் சந்நிதி ஆகியன அமையப்பெற்றுள்ளன. மேற்குறிப்பிட்ட சோமலிங்கர் சந்நிதியில் இருந்து ‘பஞ்ச தரிசனம்’ பெறலாம். அஃதாவது சோமலிங்கர், விநாயகர், இறைவன் விமானம், திரிகூட மலை, தேனருவி ஆகியனவற்றை ஒரே இடத்திலிருந்து காணலாம்.

சங்க வீதியின் வடக்கு வாயில் அருகே பெரியாண்டவர், சாசுதா ஆகியனவும் காசி விசுவநாதர் சந்நிதியும் உள்ளன. காசி விசுவநாதர் சந்நிதி வாயிலில் விநாயகர், நந்தி, விசாலாட்சி ஆகியோர் இடம்பெற்றுள்ளனர். வடக்கு வாயிலின் வெளியே

பன்றிமாடசாமி, வெள்ளக்கால் பூதத்தார், பேச்சியம்மன், சங்கிலி பூதத்தார் ஆகிய தெய்வங்களும் பதினெட்டாம்படி கருப்பர் சந்நிதியும் அமைந்துள்ளன.

வடக்கு நடைபாதையின் முடிவில் மேற்கு நோக்கி விமானத்துடன் சிவாலய முனிவர் சந்நிதி அமைந்துள்ளது. இச்சந்நிதியின் வாயிலில் விநாயகர் இருக்கின்றார். சிவாலய முனிவர் சந்நிதிக்கு அடுத்து தெற்கு நோக்கி பைரவர் சந்நிதி அமையப்பெற்றுள்ளது. வடக்கு நடைபாதையின் தெற்கில் முன் மண்டபம், திருச்சுற்றுடன் பராசக்தி பீடம் எனப்படும் 'தரணி பீடம்' உள்ளது. பராசக்தி பீடத்தின் எதிரே உள்ள முன்மண்டபம் சபாபதி மண்டபம் என்று அழைக்கப்படுகிறது. பராசக்தி பீடத்தின் தெற்கேயிருப்பது வியஞ்சன அறையாகும். வியஞ்சன அறையின் எதிரே யாக சாலை, மண்டபம், நவக்கிரக சந்நிதி ஆகியன உள்ளன. வியஞ்சன அறையின் வாயில் அருகே நடராசர் அபிசேக மண்டபம் உள்ளது. இதை மணி மண்டபம் என்றும் அழைக்கின்றனர்.

இறைவி சந்நிதியின் மகா மண்டபத்தின் இடதுபுறம் உள்ள மிகப் பெரிய சாளரத்தின் வழியே குறும்பலா மரத்தைக் காணலாம். இவ்விடத்தில் அருவி விழும் ஓசையையும் கேட்க இயலும். இம்மண்டபத்தின் நடுவே நந்தி நிறுவப்பட்டுள்ளது.

மகா மண்டபத்தின் வலது புறம் பள்ளியறை அமைந்துள்ளது. மகா மண்டபத்தை அடுத்துள்ள இறைவி சந்நிதி திருச்சுற்றின் தென்மேற்கு மூலையில் நந்தியுடன் கைலாசநாதர் சந்நிதியும், வடமேற்கு மூலையில் துர்க்கை சந்நிதியும் அமைந்துள்ளன. உயரமான அர்த்த மண்டப வாயிலில் இடதுபுறம் விநாயகர், பலிபீடம் உள்ளன. இப்பலிபீடம் 'அன்னாவி பிள்ளை' என்பார் இங்கு முக்தி அடைந்ததை உணர்த்த நிறுவப் பெற்றுள்ளது. இவ்வாயிலின் இடதுபுறம் பிரம்படிமாடன் உள்ளார். அர்த்த மண்டபத்தை அடுத்துள்ள கருவறையில் இறைவி இருக்கிறாள்.

இறைவன் சந்நிதியின் வாயில் எதிரே பலிபீடம், கொடிமரம், நந்தி ஆகியன அமைந்துள்ளன. இதில் கொடிமரம், நந்தி ஆகியன வாயிலுக்கு நேர் எதிராக அமையாமல் சற்று தள்ளி அமைந்துள்ளன. இவைகளைக் கடந்ததும் இருக்கும் மண்டபம் ஆட்கொண்டார் குறடு ஆகும். வாயிலின் இடதுபுறம் விநாயகர் நின்ற நிலையிலும், அமர்ந்த நிலையிலும் என இரண்டு வடிவங்களிலும் துவார பாலகரான உய்யக்கொண்டாரும் அமைந்துள்ளனர். வாயிலின் வலதுபுறம் துவார பாலகரான ஆட்கொண்டார் உள்ளார். வாயிலைக் கடந்ததும் அமைவது இறைவன் சந்நிதி

திருச்சுற்றின் கிழக்குப் பகுதியாகும். தன் தேவியுடன் அதிகாரநந்தி, கால கண்டேசுவரர், கால கண்டேசுவரி ஆகிய திருவுருவங்கள் இவ்வாயிலை ஒட்டி திருச்சுற்று மண்டபத்தில் உள்ளன. இவைகளுக்கடுத்து மேற்கு நோக்கி சூரியன் உள்ளார்.

கோட்டத்தின் தெற்கில் தெட்சிணாமூர்த்தி தனி சந்நிதியாகக் கட்டப்பட்டுள்ளார். இறைவன் சந்நிதி திருச்சுற்றின் தெற்கு திருச்சுற்று மண்டபத்தில் மேற்கு நோக்கி பஞ்சலிங்கம், கும்பமுனி, பிரம்மா, சப்த மாதர், சுர தேவர், மகாலெட்சுமி, அய்யனார், மகாவிட்ணு, நரசிம்மர், விநாயகர் ஆகிய திருவுருவங்கள் நிறுவப்பெற்றுள்ளன. கோட்டத்தின் மேற்கில் திருமாலின் திருவுருவம் இடம்பெற்றுள்ளது.

மேற்குத் திருச்சுற்று மண்டபத்தின் தென்மேற்கு மூலையில் கன்னி விநாயகர் அமைந்துள்ளார். இதையடுத்து பஞ்சமூர்த்திகள் சந்நிதி அமைந்துள்ளது. பஞ்சமூர்த்திகள் சந்நிதியைத் தொடர்ந்து சந்திரன், தேவியுடன் வன்மீகநாதர், தேவியுடன் சம்புகேசுவரர், நந்தி, தேவியுடன் அண்ணாமலைநாதர், நந்தி, தேவியுடன் காளத்தியப்பர், தேவியுடன் திருமூலநாதர், தேவியுடன் ராமலிங்கர், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் ஆகியோர் முறையே அமைந்துள்ளனர். வள்ளி தெய்வானை, சுப்பிரமணியர் முன்பு காசி விசுவநாதர், விசாலாட்சி நிறுவப்பெற்றுள்ளனர். இவர்கள் இருவரும், முன்னர் திருக்கோயிலின் வெளியே சந்நிதி கொண்டிருந்தனர். 1891ஆம் ஆண்டு பெய்த பெருமழையால் அருவியில் தண்ணீர் பெருக்கெடுத்து விழுந்து இச்சந்நிதியை சேதம் செய்தது. அருவியினால் ஆபத்து இருப்பதால் இவை இவ்விடத்தில் பிரதிட்டை செய்யப்பட்டுள்ளன.[92]

கோட்டத்தின் வடக்கில் பிரம்மாவும், சண்டிகேசுவரர் சந்நிதியும் உள்ளன. வடக்கு திருச்சுற்று மண்டபத்தில் சனீசுவரர் உள்ளார். இறைவன் சந்நிதி மகா மண்டபத்தின் நடுவே நந்தி உள்ளது. மகா மண்டபத்தின் வலது புறம் நடராசர் சந்நிதி அமைந்துள்ளது. நந்தியை அடுத்து இடதுபுறம் வரம்தரும் விநாயகர், காசி விசுவநாதர், விசாலாட்சி இடம் பெற்றுள்ளனர். வாயிலைத் தாண்டி அர்த்த மண்டபம் உள்ளது. இதையடுத்த கருவறையின் வடகிழக்கில் மனோன்மணித் தாயாரின் செப்புத் திருமேனி உள்ளது. கருவறையில் இறைவன் இருக்கிறார்.

**திருநெல்வேலி:**

திருநெல்வேலி பாண்டிப் பதினான்கு திருத்தலங்களில் பதினான்காவதாக விளங்குகிறது. இது அமைந்திருப்பது திருநெல்வேலி மாவட்டம் ஆகும்.

**மூர்த்தி:**

இறைவன் பெயர் நெல்லையப்பர், இறைவி பெயர் காந்திமதி என்று வழங்கப்படுகிறது. நெல்லையப்பர் சந்நிதியின் வெளியே வடகிழக்கில் அமைந்திருக்கும் 'மூல மகாலிங்கம்' சந்நிதியும் முக்கியமாக கருதப்படுகின்றது. இரட்டைக் கருவறையில் நெல்லையப்பரும், நெல்லைக் கோவிந்தரும் இருக்கின்றார்கள். வேணுவனேசுவரர், வேணுவனநாதர், வேயீன்றமுத்தர், வேய்முத்தர், வேண்டவளர்ந்தார், சாலீவாடிசுவரர் ஆகிய பெயர்கள் இறைவனுக்கும் வடிவுடைநாயகி, வடிவம்மை, அறம் வளர்த்த நாயகி ஆகிய பெயர்கள் இறைவிக்கும் வழங்கப்படுகின்றன.

உற்சவர் அனவரததான நாதசுந்தர தியாகராசர்[93] என்று அழைக்கப்படுகிறார்.

**திருத்தலம்:**

திருநெல்வேலிக்கு பழமை வாய்ந்த முதன்மையான இரண்டு தலபுராணங்கள் கிடைக்கப் பெற்றுள்ளன. முதலாவது 1910இல் பதிப்பிக்கப்பட்ட ம.அழகர்சாமிபிள்ளை இயற்றிய 'திருநெல்வேலித் தலபுராண வசனம்' என்ற நூல். இந்நூல் 1869இல் நெல்லையப்பக் கவிராயர் என்பவரால் நூற்றியிருபது சருக்கங்களில் ஆராயிரத்து எண்ணூற்று தொன்னூற்றியொன்று பாடல்கள் கொண்டு வடமொழியிலிருந்து தமிழில் இயற்றப்பட்ட 'திருநெல்வேலித் தலபுராணம்' என்ற நூலின் வசனமாகும். இரண்டாவதாக 1914ஆம் ஆண்டில் மு.ரா.அருணாசலக்கவிராயரின் உரைக்குறிப்புடன் பதிப்பிக்கப்பெற்ற 'வேணுவன புராணம்' என்ற நூல் ஒன்பது சருக்கங்களுடன் நானூற்று ஐம்பத்திநான்கு பாடல்களுடன் இயற்றப்பட்டுள்ளது. இதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இந்நூலும் வடமொழியிலிருந்து தமிழில் எழுதப்பட்டுள்ளது என்பது முகவுரையிலிருந்து அறியலாகின்றது.

இவை இரண்டைத் தவிர மு.ரா.அருணாசலக்கவிராயர் எழுதிய உரைக்குறிப்புடன் 1914ஆம் ஆண்டில் பதிப்பிக்கப்பெற்ற 'காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ்', அம்பிகாபதி ஐயர் இயற்றிய 'நெல்லை வருக்கக் கோவை', 1915ஆம் ஆண்டில் பதிப்பிக்கப்பெற்ற வ.நா.காமாட்சி நாதன் செட்டியார் இயற்றிய 'நெல்லைச்

சிந்து’, ‘ஸ்ரீ காந்திமதியம்பிகை பேரிற் சந்தப்பஞ்சகம்’, சண்முகதாசபிள்ளை என்பார் இயற்றிய ‘திருநெல்வேலி ஸ்ரீ ஆறுமுகக்கடவுள் பிள்ளைத்தமிழ்’ ஆகிய நூல்கள் கிடைக்கப் பெற்றுள்ளன.

ம.அழகர்சாமி பிள்ளையின் திருநெல்வேலி தலபுராண வசனத்தைத் தழுவி செய்த்தலைமணியன் எழுதி அ.வெங்கிட சுப்பிரமணியன் என்பவரால் ‘தாமிரசபை மலர்க்குழு’ மூலம் பதிப்பிக்கப்பட்டு 24.02.2017 அன்று வெளியிடப்பட்டுள்ள ‘திருநெல்வேலித் தலபுராணம்’ நூலும், தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலையத்துறை வெளியிட்டுள்ள ‘திருக்கோயில்கள் வழிகாட்டி திருநெல்வேலி மாவட்டம்’ என்ற நூலும் கிடைக்கப் பெற்றுள்ளன.

இத்திருத்தலத்தின் முதன்மைச் சான்றாய் விளங்குகின்ற மேலே குறிப்பிடப்பட்ட இரண்டு தலபுராணங்களில் ‘திருநெல்வேலித் தலபுராண வசனம்’ என்ற நூலில் அதிகமான செய்திகள் கூறப்பட்டிருப்பினும் முதன்மையாக மூன்று செய்திகள் அமைந்துள்ளன.

இந்நூலின் அறுபதாவது சருக்கமாக ‘வேண்டவளர்ந்த சருக்கம்’ அமைந்துள்ளது. இதில் ‘நெல்லையப்பர்’ என்று அழைக்கப்படும் இறைவன் திருமேனி தோன்றிய வரலாறு கூறப்பட்டுள்ளது.

பொருநை நதியின் கரையில் மணவை என்ற நகரத்தை ‘முழுதுங்கண்ட ராமன்’ என்ற பாண்டிய மன்னன் ஆண்டு வந்தான். அரண்மனையில் ஆநிரைகள் அதிகம் இருந்தன. அவற்றைக் கண்காணிக்க ஆயர்கள் பலர் இருந்தனர். அவர்களுக்குத் தலைவனாய் விளங்கியவன் ‘முழுதுங்கண்ட ராமன்’ என்று மன்னன் பெயரையே தாங்கிய ஒருவன். இவன் மன்னனின் ஆநிரைகளை வேய் வனத்தில் மேய்த்து பொருநை நீரை உண்பித்து ஆநிரைகளின் பாலை குடங்களில் நிரப்பிக் கொண்டு வந்தான். ஒரு நாள் அவ்வாறு வரும் பொழுது மூங்கில் தளையொன்று இடறப் பாற்குடங்கள் தரையில் பட்டு சிந்தின. ஆனால் குடம் உடையவில்லை. மனம் கலங்கி மீதம் உள்ள பாலை குடத்துடன் கொண்டு போய் அரண்மனையில் சேர்ப்பித்தான். வாயிற் காவலர்கள் பால் குறைந்ததைக் கண்டு வினவ, நாளை சரியாக கொண்டு வருகிறேன் என்று சொல்லிப் போனான்.

இவ்வாறே இரண்டாம் நாளும் மூன்றாம் நாளும் நடக்க வாயிற் காப்போரும் சமையற்காரரும் ஆயனை மன்னனிடம் கொண்டு சென்றனர். மன்னனும் சினந்து வினவ நாளை சரியாகக் கொண்டு வருகின்றேன் என்று சொல்லி வந்தான். அம்மூங்கில் தளை இடறும் பொழுதெல்லாம் அதை வெட்ட வேண்டும் என்று கோடாலியை எடுத்து வர நினைப்பான். ஆனால் மறந்து விடுவான். நாளை அம்மூங்கில் தளையை வெட்ட வேண்டும் என்று எண்ணி மறக்காமல் ஒரு கோடாலியை எடுத்து வைத்தான். மறுநாளும் இடறவே ஆத்திரங் கொண்டு மூங்கில் தளையை வெட்டினான். அதிலிருந்து குருதி, வெள்ளம் போல் ஓடியது. பதறிய ஆயன் ஓடிச் சென்று மன்னனிடம் தெரிவிக்க, அவன் உடனே பரிவாரங்களுடன் வேய்வனம் வந்து தன் கையால் துடைக்க குருதி நின்றது. அங்கே லிங்க வடிவம் தோன்றிற்று. அபிசேகம் செய்யும் பொருட்டு வளர்வாய் என்று மன்னன் வேண்டியதால் வானுயர வளர்ந்து நின்றது லிங்கம். மலைத்த அரசன் குறுக என்று வேண்டியதால் லிங்கம் குறுகியது. லிங்க பாணத்திற்கு கற்றோரைக் கொண்டு ஆவுடை சாற்றினான் மன்னன். ஓவ்வொரு ஆவுடை சாற்றச் சாற்ற லிங்கம் வளர்ந்து கொண்டே போனதால், இனி வளர்ந்தால் என் உயிரை விடுவேன் என்று மன்னன் கூற, இருபத்தியொன்றாவது ஆவுடையில் லிங்கம் வளர்வது நின்றது. இவ்வாறு மன்னன் வேண்ட, லிங்கம் வளர்ந்ததால் ‘வேண்டவளர்ந்தநாதர்’ என்ற பெயரை இறைவன் பெற்றார்.[94] வேணுவனப் புராணத்தில் இச்செய்தி இருப்பினும் இருபத்தியொன்று ஆவுடைகள் சாற்றிய நிகழ்ச்சி கூறப்படவில்லை.

வடநாட்டிலிருந்து ‘வேதசன்மா’ என்ற அந்தணன் தன் மனைவி மக்களோடு திருத்தல யாத்திரை செய்து முழுதுங்கண்ட ராமனின் தலைநகரான மணவையில் வாழ்ந்து வந்தான். அப்பொழுது பெரும் பஞ்சம் தோன்றிற்று. வேதசன்மா கனவில் தோன்றிய இறைவன் அவர்களை திருநெல்வேலி வருமாறு பணித்தார். திருநெல்வேலி வந்த வேதசன்மாவிற்கு இறைவன் பெருஞ் செல்வத்தைத் தந்தான். இறைவன் அளித்த செல்வத்தைக் கொண்டு நெல்லறுத்து பூசை செய்து வந்தார். இறைவன் திருவிளையாடலால் வேதசன்மாவின் செல்வமும் கரைந்து போயிற்று. இருப்பினும் பூசையைத் தவறாது செய்து வந்தார். ஒரு நாள் பூசைக்கு நெல்லை திருக்கோயிலில் காய வைத்துவிட்டு நீராடச் சென்றார். இறைவன் திருவருளால் வெள்ளம் புரண்டோடுமளவிற்கு மழை பெய்தது. பதைபதைத்து வந்த வேதசன்மா தான் காய

வைத்த நெல்லைச் சுற்றி வெள்ளம் ஓட நடுவில் நெல்லின் மீது வெயில் படும் அதிசயத்தைக் கண்டு முழுதுங்கண்ட ராமனிடம் கூறினார். மன்னனும் வந்து கண்டு ‘‘நெல்லை மழை வெள்ளத்திலிருந்து காத்ததினால் ‘நெல்வேலிநாதர்’ என்றுன்னை வழங்குவதாக’’ என்றான் என்பதாகச் செய்தி ‘திருநெல்வேலி தலபுராண வசனத்தில்’ உள்ளது.[95]

பஞ்சம் தலைவிரித்தாடியது என்று பொதுவாகச் சொன்னது திருநெல்வேலி தலபுராண வசனம். ஆனால் பஞ்சம் பன்னிரண்டு வருடங்கள் என்று வேணுவன புராணம் கூறுகின்றது.[96] அதே போல் அந்தணர் பெயர் வேதசன்மா என்று திருநெல்வேலி தலபுராண வசனத்தில் கூறப்பட்டுள்ளது. ஆனால் வேணுவன புரானத்தில் அந்தணர் பெயர் குறிப்பிடப்படவில்லை. சிவமறையோன்,[97] அந்தணன்,[98] வேதியன்[99] என்று பொதுவாக குறிப்பிடப்பட்டுள்ளது. மன்னன் முழுதுங்கண்ட ராமன் ‘நெல்வேலிநாதர்’ என்ற பெயர் வழங்கினான் என்று திருநெல்வேலி தலபுராண வசனத்தில் கூறப்பட்டுள்ளது. ஆனால் வேணுவனப் புரானத்தில் வானவர்கள் ‘நெல்வேலிநாதன்’ என்று போற்றினார்கள்[100] என்ற செய்தி கூறப்பட்டுள்ளது. இவ்வாறு நெல்லுக்கு வேலியிட்டு காத்ததால் ‘வேய்வனம்’, ‘நெல்வேலி’ ஆனதாகக் கூறுகிறது வேணுவனப் புராணம்.[101]

‘சுவேதகேது’ என்ற அரசன் உரிய காலம் வந்ததும் தன் மகனிடம் அரசாட்சியைத் தந்து விட்டு மனைவியுடன் தவ வாழ்க்கை மேற்கொண்டார். அந்த காலத்தில் மனைவி இறந்து விடுகிறாள். இறப்பின் பொழுது அவள் அடைந்த துன்பத்தைக் கண்டு எம பயம் கொள்கிறார். அத்துன்பத்தை போக்க வழி தேடி எல்லா தலங்களுக்கும் சென்று கடைசியில் திருநெல்வேலி அடைகிறார். அங்கிருந்த அகத்திய முனிவரின் அறிவுரையின்படி இறைவனை நினைத்து தவம், பூசைகள் முதலியனவற்றைச் செய்கின்றார். ஒரு நாள் எமன் அவர் உயிரைப் பறிக்க வருகிறான். சுவேதகேது லிங்கத்தை கட்டியணைத்து தோத்திரம் செய்கின்றார். இறைவன் லிங்கத்திலிருந்து தோன்றி எமனின் மார்பில் உதைக்க அவன் இறந்துவிடுகிறான். பின்னர் அதிக நாள் வாழ்ந்து உரிய காலத்தில் சுவேதகேது முக்தியை அடைந்தார்.[102] இச்செய்தி திருநெல்வேலி தலபுராண வசனத்தில் இருப்பினும் வேணுவனப் புராணத்தில் இடம்பெறவில்லை.

இத்திருக்கோயில் நகரின் மையப் பகுதியில் 14 ஏக்கர் நிலப்பரப்பில் 850 அடி நீளத்தில் 756 அடி அகலத்தில் அமைந்துள்ளது.[103] ஒரே திருக்கோயிலில் இறைவன் சந்நிதி, இறைவி சந்நிதி என்று இல்லாமல் தனித்தனி திருக்கோயில்களாக கட்டப்பட்டுள்ளது. பூசைகளும் திருவிழாக்களும் தனித்தனியே நடைபெறுகின்றன. இறைவன் திருக்கோயில் காமிக ஆகமப்படியும் இறைவி திருக்கோயில் விருத்லா ஆகமப்படியும் அமைந்துள்ளன. தனித்தனி திருக்கோயிலாக இருந்தாலும் மக்கள் இரண்டையும் சேர்த்து 'நெல்லையப்பர் திருக்கோயில்' என்றே குறிப்பிடுகின்றனர். இத்திருக்கோயில் 64 சக்தி பீடங்களில் ஒன்று.[104] சக்தி பீடங்களில் இறைவி சந்நிதி வலப்புறமாக கிழக்கு நோக்கி இருப்பது மரபு. இதன் அடிப்படையிலேயே இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

தமிழகத்தில் சைவத் திருத்தலங்களில் பரிவார சந்நிதியாக இல்லாமல் முதன்மையாக இறைவன் சந்நிதி போலவே திருமால் சந்நிதியிருக்கும் பன்னிரண்டு திருக்கோயில்களில்[105] சயனத் திருக்கோலத்தில் சிவ பூசை செய்யுமாறு அமைக்கப் பெற்ற ஒரே திருக்கோயில் இதுவே ஆகும். இறைவனுக்குச் சொல்லப்படும் பஞ்ச சபைகளில் இது தாமிரசபை. முனிவர்களுக்காக இறைவன் தாண்டவம் ஆடுகிறார்.[106] அதனால் இத்தாண்டவம் 'முனி தாண்டவம்' அல்லது 'காளிகா தாண்டவம்' என்று அழைக்கப்படுகிறது.[107]

திருக்கோயிலுக்கு ஐந்து கோபுரங்கள் இருக்கின்றன. இறைவி திருக்கோயிலுக்கு ஒரு இராசகோபுரமும் இறைவன் திருக்கோயிலுக்கு நான்கு திசைகளில் நான்கு கோபுரங்களும் உள்ளன. 1606ஆம் ஆண்டு இறைவன் திருக்கோயிலின் இராசகோபுரமும் 1626ஆம் ஆண்டு இறைவி திருக்கோயிலின் இராசகோபுரமும் கட்டப்பட்டது.[108] இறைவன், இறைவி திருக்கோயில் இராசகோபுரம் ஏழு நிலைகளும், தெற்கு, மேற்கு, வடக்கு கோபுரங்கள் ஐந்து நிலைகளும் கொண்டன. இறைவன் திருக்கோயில் இராசகோபுரம் 65 அடி, தெற்கு கோபுரம் 65 அடி, மேற்கு கோபுரம் 50 அடி, வடக்கு கோபுரம் 65 அடி உயரம் கொண்டன. இறைவி திருக்கோயில் இராசகோபுரம் 70 அடி உயரம் கொண்டது.[109] இறைவன் திருக்கோயில் இராசகோபுரம் அகலமாகவும் உயரம் குறைவானதாகவும், இறைவி திருக்கோயில் இராசகோபுரம் குறுகலாக உயரம் அதிகமானதாகவும்

அமைந்திருக்கின்றன. இறைவன் திருக்கோயில் கொடிமரம் 1555லும் இறைவி திருக்கோயில் கொடிமரம் 1625லும் பிரதிட்டை செய்யப்பட்டுள்ளன.[110]

**“செப்புமொரு நூற்றெழுபத் தொன்று பரிவாரநற் றேவதைகள் கோவில்தனி லுண்டு”** [111] என்று நெல்லைச் சிந்து 171 பரிவார தெய்வங்கள் திருக்கோயிலில் உண்டு என்று குறிப்பிட்டுள்ளது.

இத்திருக்கோயிலுக்கு ‘பஞ்சமூர்த்திகள்’ என்று கூறப்படும் ஐம்பெரும் கடவுளர்களுக்கு ஐந்து தேர்கள் உள்ளன. இதில் இறைவனுக்கான பெரிய தேரின் எடை 450 டன். அகலம் 28 அடி, நீளம் 28 அடி, உயரம் 35 அடி. அலங்காரத்தோடு தேரின் உயரம் 80 அடி. இத்தேருக்கு 8 சக்கரங்கள் உள்ளன. ஒரே வார்ப்பில் செய்யப்பட்ட இரண்டு அச்சுக்களும் வெள்ளையர் காலத்தவை என்று அறியலாகிறது.[112] தமிழகத்தின் மூன்றாவது பெரிய தேர் இதுவாகும்.[113] ரத வீதிகள் அரியநாயக முதலியாரால் வகுக்கப்பட்டு 1505இல் தேர் வெள்ளோட்டம் விடப்பட்டது.[114]

இறைவன் திருக்கோயிலில் மூன்று திருச்சுற்றுகள் உள்ளன. கருவறையைச் சுற்றியிருக்கும் முதல் திருச்சுற்று ‘சிவலோக பத்தி’, ‘சிவலோகத் திருச்சுற்று’ என்று அழைக்கப்படுகிறது. இரண்டாம் திருச்சுற்றில் தாமிரசபை இருப்பதினால் ‘தாமிரசபை பத்தி’, ‘தாமிரசபை திருச்சுற்று’ என்று வழங்கப்படுகிறது. மூன்றாம் திருச்சுற்று ‘சீபலித் திருச்சுற்று’ ஆகும். சீபலித் திருச்சுற்றின் நான்கு பகுதிகள் கிழக்குத் திருச்சுற்று, தெற்குத் திருச்சுற்று, மேற்குத் திருச்சுற்று, வடக்குத் திருச்சுற்று என்று அழைக்கப்படுகின்றன.

தெற்குத் திருச்சுற்றும் வடக்குத் திருச்சுற்றும் 387 அடி நீளமும் 42 அடி அகலமும் உடையன. கிழக்குத் திருச்சுற்றும் மேற்குத் திருச்சுற்றும் 295 அடி நீளமும் 40 அடி அகலமும் கொண்டுள்ளன.

இறைவி திருக்கோயில் திருச்சுற்றுகள் முதல் திருச்சுற்று, இரண்டாம் திருச்சுற்று, மூன்றாம் திருச்சுற்று அல்லது வெளித் திருச்சுற்று என்று வழங்கப்படுகின்றன.

***ஊஞ்சல் மண்டபம்:***

இறைவி திருக்கோயில் எதிரே அமைந்துள்ளது ஊஞ்சல் மண்டபம். நீள வாக்கில் 16 தூண்களும் அகல வாக்கில் 14 தூண்களுமாக 96 தூண்கள் உள்ளன.

இம்மண்டபம் 1636இல் சேர குளம் பிறவிப் பெருமாள் பிள்ளையால் கட்டப்பட்டது.[115] இம்மண்டபத்தில் உள்ள 96 தூண்களுடன் இறைவன் இறைவி எழுந்தருளும் பொழுது நான்கு கால்களைச் சேர்த்து 100 தூண்களாக மாறுவது ஐதீகமாகக் கொள்ளப்படுகிறது.[116]

***ஆயிரங்கால் மண்டபம்:***

இறைவி திருக்கோயிலின் தென்புறம் ஆயிரம் தூண்களுடன் அமைந்துள்ளது. இதன் நீளம் 520 அடி, அகலம் 63 அடி.[117]

***வசந்த மண்டபம்:***

இதில் 100 தூண்கள் உள்ளதால் ‘நூறுகால் மண்டபம்’ என்றும் அழைக்கப்படுகிறது. சங்கிலி மண்டபத்திற்கு மேற்கேயும் இறைவி திருக்கோயிலின் வடமேற்கிலும் அமைந்துள்ளது. 1756இல் திருவேங்கிட கிருஷ்ணமுதலியார் என்பவர் கட்டியுள்ளார்.[118]

***சங்கிலி மண்டபம்:***

இறைவன் திருக்கோயிலையும் இறைவி திருக்கோயிலையும் இணைப்பது சங்கிலி மண்டபமாகும்.

இது இறைவன் திருக்கோயிலின் தெற்கு கோபுரத்திலிருந்து இறைவி திருக்கோயில் நந்தி மண்டபம் வரை பொற்றாமரைத் தீர்தத்தின் மேற்கே அமைந்துள்ளது. 1647இல் வடமலையப்ப பிள்ளையால் கட்டப்பட்டது.[119]

***நந்தி மண்டபம்:***

இறைவன் திருக்கோயில், இறைவி திருக்கோயிலில் நந்தி அமைந்திருக்கும் மண்டபம் நந்தி மண்டபமாகும். இறைவன் திருக்கோயில் நந்திக்கு ‘மாகாளை’[120] என்ற பெயர் உள்ளது. இது சுதையால் செய்யப்பட்டது. இம்மண்டபம் 1654ஆம் ஆண்டில் சிவந்திநாயக்கரால் கட்டப்பட்டதாகும்.[121]

***திங்கள் மண்டபம்:***

‘சோமவார மண்டபம்’ என்றும் அழைக்கப்படும் இது நந்தி மண்டபத்தின் வடக்கே உள்ளது. இதில் எழுபத்தியெட்டு தூண்கள் உள்ளன.

***சீபலி மண்டபம்:***

சீபலி திருச்சுற்றின் தெற்குத் திருச்சுற்றின் நடைபாதைக்கு தெற்கே உள்ள பகுதி சீபலி மண்டபம் என்று வழங்கப்படுகிறது.

***மணி மண்டபம்:***

தாமிரசபை திருச்சுற்றிலிருந்து சிவலோகத் திருச்சுற்றுக்கு படியேறி செல்லுமிடத்தில் அமைந்திருப்பது மணி மண்டபமாகும். இதன் நடுவே மணி கட்டியிருப்பதால் மணி மண்டபம் என்று பெயர் வழங்கப்படுகிறது. இதிலுள்ள பத்து தூண்கள் இசைத் தூண்களாகும். இறைவி திருக்கோயிலிலும் மணி மண்டபம் உள்ளது.

இந்த எட்டு மண்டபங்களும் திருக்கோயிலுக்கு உள்ளே அமையப் பெற்றவை.

***சிந்துபூந்துறைத் தீர்த்த மண்டபம்:***

சிந்துபூந்துறைத் தீர்த்தத்தில் உள்ள இம்மண்டபத்தை ஊஞ்சல் மண்டபம் கட்டிய சேரகுளம் பிறவிப்பெருமாள் பிள்ளை கட்டியுள்ளார்.[122] இதைத் ‘தைப்பூச மண்டபம்’ என்றும் அழைக்கின்றனர்.

இதைத்தவிர இறைவன், இறைவி திருக்கோயில்களின் எதிரில் கீழ ரத வீதியை அடுத்து ‘அனுப்பு மண்டபம்’ அமைந்துள்ளது. இறைவி திருக்கோயிலின் முன்னே ‘சௌந்திர மண்டபம்’ உள்ளது. இவை மூன்றும் திருக்கோயிலுக்கு வெளியே அமைந்துள்ளன.

இறைவன் திருக்கோயிலின் தென்கிழக்கு மூலையில் ‘அனவரத நாதர்’ சந்நிதி உள்ளது. முகமது அலியின் தானாதிபதி ‘அன்வர்டிகான்’ என்பவன் மனைவியின் தீராத நோயை நெல்லையப்பர் தீர்த்து வைத்ததினால் அவன் பிரதிட்டை செய்த லிங்கமே இது.[123]

தலபுராணங்களின் மூலம் அகத்தியர், நளன், தயரதன், ராமன், பஞ்சபாண்டவர்கள், வியாழன், மனு ஆகியோர் வழிபட்டுள்ளனர். இத்திருத்தலத்திற்கு உத்திர கோடித்தலம், விட்ணுபுரம், கச்சப்பாளையம், சர்வதீர்த்தபுரம், பிரமவிருத்தபுரம், வேணுவனம், பிரளயசித்து, தென்காஞ்சி, பேரண்டம், சிவபுரம், திரிமூர்த்திபுரம், இடபபுரி, தரணிசாரம், விண்டு தலம் ஆகிய புராணப் பெயர்கள் இருந்ததும் அறியலாகின்றது.

இத்திருக்கோயிலின் தலவிருட்சம் மூங்கில். இசைக்கருவி சாரங்கி.[124]

தமிழக அரசால் 2002ஆம் ஆண்டு இத்திருக்கோயிலில் அன்னதானத்திட்டம் தொடங்கப்பட்டு நாள்தோறும் 100 நபர்களுக்கு அன்னதானம் நடைபெறுகிறது.

**தீர்த்தம்:**

இத்திருக்கோயிலுக்கு முப்பத்தியிரண்டு தீர்த்தங்கள் உள்ளன என்பதை தல புராணம் மூலம் அறிய முடிகின்றது.[125] இதில் நான்கு தீர்த்தங்கள் முதன்மையானவை ஆகும். இறைவி திருக்கோயிலின் வடகிழக்கே உள்ள பொற்றாமரைத் தீர்த்தம் 'சுவர்ணபுட்கரணி'[126], 'ஏமபுட்கரணி'[127] என்று அழைக்கப்படுகின்றது. இப்பொற்றாமரைத் தீர்த்தத்தில் பாதாளவாகினியாக பாடலங்கம்பை நதி பாய்வதாய் நம்பிக்கை விளங்குகின்றது.[128] இப்பாடலங்கம்பை நதி கோயிலின் தென் மேற்கில் ஓடுகின்றது. கரி உருமாறித் தீர்த்தம் இறைவி திருக்கோயிலின் தென்மேற்கில் அமைந்துள்ளது. இத்தீர்த்தத்தின் பெயருக்கு ஒரு புராணக் கதை உள்ளது. முனிவரின் சாபத்தால் கரியாக மாறிய பாண்டிய மன்னனை ஒரு சிங்கம் விரட்டியது. பயந்த கரி இத்தீர்த்தத்தில் விழுந்தது. உடனே சாப விமோசனம் அடைந்து மன்னனாக மாறியது. 'கரி' 'மன்னனாக' உருவம் மாறியதால் 'கரி உருமாறித் தீர்த்தம்' என்ற பெயர் பெற்றுள்ளது.[129] இப்பெயர் மருவி தற்பொழுது 'கருமாரித் தீர்த்தம்' என்று அழைக்கப்படுகின்றது. இதையொட்டியே இதன் அருகேயிருக்கும் முருகன், 'கருமாரி முருகன்' என்று வழங்கப்படுகிறார்.

இறைவன் திருக்கோயிலுக்கு வெளியே கிழக்கே உள்ள தெப்பக்குளம் 'சந்திரபுட்கரிணி' என்றும் 'வெளித் தெப்பக்குளம்' என்றும் அழைக்கப்படுகின்றது.[130] தாமிரபரணி நதியின் துறைகளில் ஒன்றாகிய சிந்துபூந்துறை தீர்த்தமாக விளங்குகின்றது. சிந்துபூந்துறையில் பாதாளவாகியாக கரி உருமாறித் தீர்த்தம் உள்ளதாய் நம்பிக்கை உள்ளது.[131]

இந்த நான்கைத் தவிரப் பாடலங்கம்பை நதியும் தீர்த்தமாக கொள்ளப்படுகின்றது.[132] பாடலங்கம்பை நதி தற்பொழுது கம்பா நதி, கம்பை நதி என்று வழக்கில் அழைக்கப்படுகின்றது.

**திருக்கோயிலமைப்பு:**

***இறைவி திருக்கோயில்:***

இறைவி திருக்கோயிலின் இராசகோபுரத்தின் இடது பக்கம் அம்பல விநாயகர், வலது பக்கம் சுப்பிரமணியர் புடைப்புச் சிற்பங்கள் உள்ளன. இராசகோபுரத்தைத் தாண்டி உள்ளே முதலில் அமைவது ஊஞ்சல் மண்டபம். ஊஞ்சல் மண்டபத்தின்

இடப்புறம் அன்னதானக் கூடம் உள்ளது. வலப்புறம் பொற்றாமரைத் தீர்த்தமும் அதன் நடுவே நீராழி மண்டபமும் அமையப் பெற்றுள்ளன. ஊஞ்சல் மண்டபத்தைத் தாண்டி அமைந்திருப்பது நந்தி மண்டபமாகும். இதில் கிழக்கிலிருந்து மேற்காக முதலில் கொடிமரம், சதுர வடிவிலான பீடம், பீடத்தின் மேல் அமையப்பெற்ற பலிபீடம், சிறிய விமானத்துடன் கூடிய மண்டபத்தில் நந்தி ஆகியன அமைந்திருக்கின்றன. நந்தி அமைந்திருப்பதால் ‘நந்தி மண்டபம்’ என்று வழங்கப்படுகின்றது.

நந்தி மண்டபத்தின் இடப்புறம் ஆயிரங்கால் மண்டபம் அமைந்துள்ளது. வலப்புறம் சங்கிலி மண்டபமும் அதன் வாயிலில் யாக சாலையும் அமையப்பெற்றுள்ளன.

நந்தி மண்டபத்திலிருந்து இரண்டாம் திருச்சுற்று வழியாக மூன்றாம் திருச்சுற்றை அடையலாம். மூன்றாம் திருச்சுற்றின் தென்மேற்கில் கரி உருமாறித் தீர்த்தம் அமைந்துள்ளது. வடமேற்கில் வசந்த மண்டபம் அமைந்துள்ளது. வசந்த மண்டபத்தின் கிழக்கில் சங்கிலி மண்டபமும் பொற்றாமரைத் தீர்த்தமும் உள்ளன. வசந்த மண்டபத்தின் எதிரே விமானத்துடன் கூடிய சிறிய சதுர வடிவிலான மண்டபம் உள்ளது. மூன்றாம் திருச்சுற்றின் வடக்கில் அம்மையப்பர் சந்நிதி, கோ சாலை, மண்டபம் ஆகியன உள்ளன. கிழக்கில் வன்னிமர விநாயகர் உள்ளார்.

நந்தி மண்டபத்திலிருந்து இறைவி சந்நிதி செல்லும் வாயிலின் இடப்புறம் விநாயகர் சந்நிதி, சுற்று விளக்கு அறை, பாதுகாப்பு அறை, அறை, சுற்று விளக்கு அறை ஆகியனவும் வலப்புறம் வள்ளி, தெய்வானையுடன் முருகன், அறை, பொருட்கள் வைப்பு அறை ஆகியன உள்ளன. இச்சந்நிதிகள் அனைத்தும் விமானத்துடன் விளங்குகின்றன.

நந்தி மண்டபத்தின் வாயிலைக் கடந்து சென்றால் இறைவி சந்நிதி இருக்கும் முதல் திருச்சுற்றின் முன் மண்டபத்தை அடையலாம். இடப்பக்கம் சிறிய மண்டபம் உள்ளது.

திருவிழாக் காலங்களில் இறைவி இங்கு எழுந்தருளச் செய்யப்படுகிறாள். தென்கிழக்கு மூலையில் மடப்பள்ளி அமைந்துள்ளது. இறைவி சந்நிதியின் மகா மண்டபத்திலிருந்து முதல் திருச்சுற்றை அடைய வாயில் உள்ளது. முதல் திருச்சுற்றிலிருக்கும் இவ்வாயில் வழியே பள்ளியறையைக் காணலாம். பள்ளியறையிலிருந்து பார்க்கும்படி கண்ணாடி, மடப்பள்ளியின் வாயிலில் உள்ளது.

தென்மேற்கு மூலையில் கன்னிமூல கணபதி சந்நிதி உள்ளது. இச்சந்நிதியின் உள்ளே கிழக்கு நோக்கி மூன்று கணபதிகளும் வெளியே வடக்கு நோக்கி ஒரு கணபதியும் அமைந்துள்ளனர். வடமேற்கு மூலையில் வள்ளி, தெய்வானையுடன் சுப்பிரமணியர் சந்நிதி உள்ளது. வடக்குப் பகுதியில் சண்டிகேசுவரி சந்நிதி, வடகிழக்கு மூலையில் அறையும் வள்ளி, தெய்வானையுடன் சுப்பிரமணியர் சந்நிதியும் அமைந்துள்ளன. இச்சந்நிதி சுற்றி வந்து வணங்கும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது.

இறைவி திருக்கோயிலில் முன்மண்டபத்தில் இரண்டு இசைத்தூண்கள் உள்ளன.

முதல் திருச்சுற்றிலிருந்து இறைவி சந்நிதிக்குச் செல்ல இரண்டு புறமும் படிக்கட்டுகள் உள்ளன. அதன் வழியே மகா மண்டபத்தை அடையலாம். மகா மண்டபத்தின் உள்ளே இடதுபுறம் விநாயகர், லிங்கம் ஆகிய சிலைகள் உள்ளன. வலதுபுறம் பள்ளியறை உள்ளது.

மகா மண்டபத்தை அடுத்து அர்த்த மண்டபம் உள்ளது. அர்த்த மண்டபத்தை அடுத்த கருவறையில் இறைவி இருக்கிறாள்.

நந்தி மண்டபத்தின் வடக்கிலிருந்து இறைவன் திருக்கோயிலின் தெற்கு கோபுரம் வரை அமைந்திருப்பது சங்கிலி மண்டபமாகும். இது தெற்கு வடக்காக இருப்பதால் இதன் கிழக்கிலும் மேற்கிலும் சந்நிதிகள் அமைந்துள்ளன. கிழக்கில் சுவாமி ஐயப்பன் சந்நிதி, மஞ்சன வடிவு அம்மன் சந்நிதி அமைந்துள்ளன. சங்கிலி மண்டபத்தின் கிழக்கே பொற்றாமரைத் தீர்த்தம் அமைந்துள்ளது. இவையிரண்டிற்கும் நடுவே விநாயகர், காசி விசுவநாதர், மீனாட்சி சுந்தரேசுவரர், காசி விசுவநாதர், பொற்றாமரை விநாயகர், காசி விசுவநாதர், காசி விசுவநாதர், காசி விசுவநாதர், காசி விசுவநாதர், காசி விசுவநாதர், காசி விசுவநாதர், சரசுவதி அம்மன், காசி விசுவநாதர், ஞானானந்த தெட்சிணாமூர்த்தி ஆகிய சந்நிதிகள் அமைந்துள்ளன.

சங்கிலி மண்டபத்தின் மேற்கே வள்ளி, தெய்வானையுடன் கருமாரி முருகன் சந்நிதி உள்ளது. இச்சந்நிதி கருவறை, அர்த்த மண்டபம், மகா மண்டபம், முன் மண்டபம் ஆகிய அமைப்பிலானது.

இச்சந்நிதி கருவறை - அர்த்த மண்டபம், கருவறை - அர்த்த மண்டபம் - மகா மண்டபம் என்ற முறையில் தனித்தனியே சுற்றி வரும் அமைப்பில் கட்டப்பட்டுள்ளது. இதனையடுத்து லிங்கம், காசி விசுவநாதர், மகாலிங்கம் ஆகியன உள்ளன.

மகாலிங்கம் சந்நிதியின் வாயிலில் இடப்பக்கம் விநாயகரும், வலப்பக்கம் சுப்பிரமணியர் ஆகிய மூர்த்திகளும் நடுவே நந்தியும் உள்ளன. மகாலிங்கம் சந்நிதியின் இடப்பாகத்தில் பெரியநாயகி சந்நிதி உள்ளது. இதன் வாயிலில் மயில் மீது ஆறுமுகத்துடன் உள்ள முருகன் சிலை உள்ளது. இச்சந்நிதி 'ட' வடிவத்தில் பெரியநாயகியை இடப்புறமாகவும் மகாலிங்கம் வலப்புறமாகவும் கொண்டிருப்பதால் 'அர்த்தநாரீசுவரர்' அமைப்புடன் உள்ளது. சங்கிலி மண்டபத்திலிருந்து வடக்கே சென்றால் இறைவன் திருக்கோயிலின் தெற்கு கோபுரம் வழியாக சீபலித் திருச்சுற்றின் தெற்குத் திருச்சுற்றை அடையலாம்.

***இறைவன் திருக்கோயில்:***

கிழக்கு நோக்கியிருக்கும் இராசகோபுரத்தின் இடப்பக்கம் விநாயகர், வலப்பக்கம் சுப்பிரமணியர் புடைப்புச் சிற்பங்கள் அமைந்துள்ளன. இராசகோபுரத்தைத் தாண்டியதும் உள்ள மண்டபம் நந்தி மண்டபமாகும். நந்தி மண்டபத்தில் கிழக்கிலிருந்து மேற்காக படிகளுடன் கூடிய உயர்ந்த பீடத்தின் மேல் பலிபீடம், நந்தி, கொடிமரம் ஆகியன உள்ளன. நந்தி மண்டபத்திற்கு இடப்புறம் வடக்கு நோக்கி நால்வர் சந்நிதி விமானத்துடன் அமைந்துள்ளது. நால்வர் சந்நிதியில் சேரமான் பெருமாள் நாயனார் சிலையும் அமைந்துள்ளது. இதற்கடுத்து தீர்த்தக்கிணறு, மேற்கு நோக்கி விமானத்துடன் சைலப்பர் சந்நிதியும் அமைந்துள்ளன.

நந்தி மண்டபத்தின் வலப்புறம் அமைந்திருப்பது திங்கள் மண்டபம். இதற்குச் செல்லும் பாதையின் இடப்புறம் தங்கத்தேர் பாதுகாப்பு அறை உள்ளது. நந்தி மண்டபத்தைத் தாண்டியதும் அமைவது சீபலித் திருச்சுற்றின் கிழக்குத் திருச்சுற்றாகும். கிழக்குத் திருச்சுற்றிலிருந்து தெற்கு நோக்கிச் செல்லும் நடைபாதையின் வலப்பக்கம் அறை, சிறிய மண்டபம், அலுவலகம் அமைந்திருக்கின்றன. அலுவலகத்தை அடுத்து உள்ளது சுப்பிரமணியர் சந்நிதியாகும். இது 'ட' வடிவில் அமைந்துள்ளது. மூலையில் ஒரு பகுதி மையமாக அமைந்து அதிலிருந்து கீழ் மேலாக இரண்டு பகுதிகளும் தென் வடலாக இரண்டு பகுதிகளுமாக உள்ளன. மையப் பகுதியின் இரு புற வாயில்களில் விநாயகர் சிலைகள் உள்ளன. இதற்கடுத்த பகுதியின் மையத்தில் நந்தியும் இடப்பக்கம் விநாயகர், வலப்பக்கம் முருகன் சிலைகள் உள்ளன. இதையடுத்த பகுதியின் நடுவில் சுப்பிரமணியர், இடப்பக்கம் வள்ளி, சுப்பிரமணியருக்கு முன்னால் லிங்கம் ஆகியன உள்ளன. தென்வடலாக இருக்கும் பகுதியில் தெய்வானை சிலை

மட்டும் அமைந்துள்ளது. சுப்பிமணியர் சந்நிதியை அடுத்து அறை, ஒளிபரப்பு அறை, குடிநீர் அறை ஆகியன அமைந்துள்ளன. கிழக்குத் திருச்சுற்றின் நடைபாதையின் இடப்பக்கம் இறைவன் திருக்கோயிலின் தென்கிழக்கு மூலையில் கிழக்கு நோக்கி அனவரத லிங்கம் சந்நிதி உள்ளது.

தெற்குத் திருச்சுற்றின் நடைபாதையின் இடப்பக்கம் அலுவலக அறை உள்ளது. இதை அடுத்து உள்ள பகுதி சீபலி மண்டபமாகும். இங்கு இறைவன் இறைவியின் வாகனங்கள் வைக்கப்பட்டுள்ளன. இதைத் தாண்டியதும் தெற்கு கோபுரமும், அதையடுத்து அறையும் அமைந்துள்ளன. தெற்கு கோபுரத்திற்கு எதிரே தெற்குத் திருச்சுற்றின் நடைபாதையின் வலப்பக்கம் மரத்தாலான முன் மண்டபம், விமானத்துடன் கூடிய தெட்சிணாமூர்த்தி சந்நிதி அமைந்துள்ளது.

மேற்குத் திருச்சுற்று நடைபாதையின் இடப்புறம் 'ட' வடிவில் அமைந்த சங்கர நாராயணர் சந்நிதி கிழக்கு நோக்கியும் கோமதி அம்மை சந்நிதி தெற்கு நோக்கியும் அமைந்துள்ளன. இவை இரண்டும் பொதுவான முன்மண்டபத்தோடு இரண்டு பகுதிகளாக அமைந்துள்ளன. இரண்டு சந்நிதிகளுக்கும் விமானம் உள்ளது. சங்கர நாராயணர் சந்நிதியை ஒட்டி வலதுபுறத்தில் கசலெட்சுமியின் புடைப்புச் சிற்பம் சிறிய சுவரில் உள்ளது.

இதனை அடுத்து மேற்குத் திருச்சுற்றுக்கும் தெற்கு மதிற்சுவருக்கும் இடையே அறை உள்ளது. மேற்குத் திருச்சுற்றின் வலப்புறம் முழுவதற்கும் அமைந்திருப்பது ஆறுமுகநாயினார் சந்நிதியாகும். இச்சந்நிதி மூன்று பகுதிகளாக அமைந்துள்ளது. இரண்டாவது பகுதியின் நடுவே 'தாளச் சக்கரம்' அமைந்துள்ளது. இதைத்தாண்டி மூன்று வாயில்கள் உள்ளன. உள்ளே வள்ளி, தெய்வானையுடன் ஆறுமுகநாயினார் உள்ளார். வள்ளி, தெய்வானை, ஆறுமுகநாயினாரை சுற்றி வந்து வணங்கலாம்.

ஆறுமுகநாயினார் சந்நிதியை ஒட்டியுள்ள சஷ்டி விநாயகர் சந்நிதி மேற்கு கோபுரத்திற்கு எதிரே உள்ளது. மேற்குத் திருச்சுற்றுக்கும் மதிற்சுவருக்கும் இடையே உள்ள இறைவன் திருக்கோயிலின் வடமேற்குப் பகுதியில் தீர்த்தக்கிணறும், 'ட' வடிவில் தனித்தனி விமானத்துடன் காசி விசுவநாதர் சந்நிதியும் காசி விசாலாட்சி சந்நிதியும் அமையப் பெற்றுள்ளன. இவை இரண்டும் பொதுவான முன் மண்டபத்துடன் இரண்டு பகுதிகளாக உள்ளன.

சீபலித் திருச்சுற்றின் வடமேற்கு மூலையில் விமானத்துடன் கூடிய வாயுலிங்கம் சந்நிதி கிழக்கு நோக்கி உள்ளது. இச்சந்நிதி உள்ளே வாயுலிங்கத்தின் அருகே நாகர் சிலை உள்ளது.

வடக்குத் திருச்சுற்றுக்கும் தாமிரசபை திருச்சுற்று மதிற்சுவருக்கும் இடையே நின்றசீர் நெடுமாறன் கலையரங்கம் உள்ளது. வடக்குத் திருச்சுற்று நடைபாதையின் இடப்புறம் வடக்கு கோபுரத்தையடுத்து யானைக் கொட்டகையும் அதைத் தாண்டி யாக சாலையும் அமைந்துள்ளன. வடக்குத் திருச்சுற்று நடைபாதையின் வலப்பக்கம் இறுதியில் சந்நிதியாக இல்லாமல் பீடத்தின் மேல் கிழக்கு நோக்கி பூரண, புட்கலையுடன் வன்னியடி சாசுதா, தெட்சிணாமூர்த்தி ஆகியன அமைந்துள்ளன. தாமிரசபை திருச்சுற்று மதிற்சுவரின் வடகிழக்கு மூலையில் சீபலித் திருச்சுற்றுக்கும் தாமிரசபை திருச்சுற்று மதிற்சுவருக்கும் இடையில் காலபைரவர் சந்நிதி முன் மண்டபத்துடன் இரண்டு பகுதிகளாக விமானத்துடன் தெற்கு நோக்கி அமைந்துள்ளது. கிழக்குத் திருச்சுற்றின் இடப்புறம் நவக்கிரக சந்நிதி உள்ளது. வலப்புறம் வாயிலை ஒட்டி அறை, மீனாட்சி சொக்கர் சந்நிதி, சுற்று விளக்கு அறை, மண்டபம், சுற்று விளக்கு அறை ஆகியன அமைந்துள்ளன.

சீபலித் திருச்சுற்றிலிருந்து தாமிரசபை திருச்சுற்று செல்லும் வாயில் மாடத்தின் வெளியே இடதுபுறம் விநாயகர், வலதுபுறம் சுப்பிரமணியர் புடைப்புச் சிற்பங்கள் உள்ளன. உள்ளே இடதுபுறம் வேதபட்டர், அதிகார நந்திகேசுவரர், நமச்சிவாய மூர்த்தி, லிங்கம், விநாயகர் ஆகிய சிலைகள் உள்ளன.

தாமிரசபை திருச்சுற்றில் இறைவன் சந்நிதிக்கு எதிரே சிறிய கொடிமரம் அமைந்துள்ளது. வாயில் மாடத்திலிருந்து இடதுபுறம் திரும்பியதும் சூரியன் சிலை அமைந்துள்ளது. தென்கிழக்கு மூலையில் மடப்பள்ளி இருக்கின்றது. இதற்கடுத்து அறை, நால்வர் சந்நிதி உள்ளன. நால்வர் சந்நிதியில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோருடன் சேரமான் பெருமாள் நாயனாரின் செப்புத் திருமேனியும் உள்ளது.

சிவலோகத் திருச்சுற்றிலிருக்கும் நடராசர் சந்நிதிக்கு நேராக நால்வர் சந்நிதி உள்ளது. நால்வர் சந்நிதியை அடுத்து அறை, அறுபத்துமூன்று நாயன்மார்கள் சந்நிதி, அகத்தியர், முனிவர்கள், சுர தேவர், சப்த மாதர், லிங்கங்கள், விநாயகர், வீரபத்திரர் ஆகியன உள்ளன.

இதனையடுத்து நந்தி தேவர், சனற்குமாரர், சத்திய ஞான தரிசினிகள், பரஞ்சோதிமுனிவர், மெய்கண்ட தேவர், அருணந்தி சிவாச்சாரியார், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவாச்சாரியார், அறுபத்திமூன்று நாயன்மார்கள், லிங்கம், விநாயகர் ஆகிய செப்புத் திருமேனிகள் கொண்ட சந்நிதி உள்ளது.

தாமிரசபை திருச்சுற்றின் வலதுபுறத்தில் அறையும் அதன் பின்னால் சிவலோகத் திருச்சுற்றிலிருந்து தாமிர சபை திருச்சுற்றை அடையும் படிகளும் உள்ளன. படிகளின் பின்னே இரண்டு பகுதிகள் கொண்ட சந்நிதி உள்ளது. அதன் முதற்பகுதியின் இடப்பக்கம் விநாயகர், வலப்பக்கம் சுப்பிரமணியர், நாகர் சிலைகள் உள்ளன. உள்பகுதியான இரண்டாவது பகுதியில் அப்புலிங்கம் உள்ளது. இச்சந்நிதியின் பின்னே ஓர் அறை அமையப் பெற்றுள்ளது. இதற்கு இடப்பக்கம் மேடான ஒரு சந்நிதியில் செப்புத் திருமேனிகள் இருக்கின்றன. இச்சந்நிதி தாமிரசபை திருச்சுற்றின் தெற்கு நடைபாதையின் நடுவில் அமைந்துள்ளது. இதன் உள்ளே செல்ல இருபுறமும் படிகள் அமைந்திருக்கின்றன.

இதற்குப் பின்னே இரண்டு பகுதிகள் கொண்ட இரண்டு சந்நிதிகள் அருகருகே ஒரே முன் மண்டபத்தை பகிர்ந்து கொண்டு அமைந்துள்ளன. சிவலோகத் திருச்சுற்று சுற்றுச்சுவரை ஒட்டி பொல்லாப்பிள்ளையார் கிழக்கு நோக்கி உள்ளார். இதன் வாயில் தெற்கு நோக்கி உள்ளது. இதற்கடுத்து உள்ள சந்நிதியின் உள் பகுதியில் தேயுலிங்கமும் வெளிப்பகுதியில் லிங்கம், நந்தி ஆகியன உள்ளன. இதற்கு முன்னால் இருக்கும் முன் மண்டபத்தின் வழியே தான் இச்சந்நிதியையும் பொல்லாப்பிள்ளையார் சந்நிதியையும் அடைய முடியும்.

தாமிரசபை திருச்சுற்றின் தென்மேற்குப் பகுதியில் மேல் மண்டபத்தில் சோமாசுகந்தர் சந்நிதி உள்ளது. இதை அடைய இரண்டு புறமும் படிகள் உள்ளன. இப்படிகளின் நடுவே உள்ள பகுதியின் கீழே இராவணேசுவரன் சிலை உள்ளது.

தாமிரசபை திருச்சுற்றின் மேற்குப்பகுதியில் இருப்பது தாமிரசபை பந்தல் மண்டபம். இப்பந்தல் மண்டபத்தின் இடதுபுறம் சோமாசுகந்தர், வாயுலிங்கம், இரண்டு புறம் நாகர்களைக் கொண்ட விநாயகர் ஆகியன உள்ளன. இதனையடுத்து முழுதுங்கண்ட ராமன், அவன் மனைவி சிலைகள் உள்ளன. இதற்கடுத்து இரண்டு பகுதிகள் கொண்ட சந்நிதியின் உட்பகுதியில் ஆகாசலிங்கமும் வெளியே இடப்புறம் விநாயகர் வலப்புறம் சுப்பிரமணியார் நடுவில் லிங்கம் ஆகியன உள்ளன. இதனை

அடுத்து வள்ளி, தெய்வானையுடன் சுப்பிரமணியர் சந்நிதி இரண்டு பகுதிகளாக அமைந்துள்ளது. இச்சந்நிதி, ஆகாச லிங்கம் சந்நிதியின் நடுவே சிவலோகத் திருச்சுற்று சுற்றுச்சுவரையொட்டி தலவிருட்சமான மூங்கில் மரங்கள் உள்ளன. அதன் அருகே விநாயகர் சிலை உள்ளது.

தாமிரசபை பந்தல் மண்டபத்தின் எதிரே திறந்த ஆகாயத்தின் கீழ் தாமிரசபை அமைந்துள்ளது. இதன் பின்னால் சந்தன சபாபதி, சிவகாமி, வியாக்ர பாதர், பதஞ்சலி ஆகியோர் உள்ள சந்நிதியும் அதன் அருகே பொருட்கள் வைப்பறையும் உள்ளன. தாமிரசபை திருச்சுற்றின் வடக்குப்பகுதியின் இடப்புறம் அட்டலெட்சுமிகளின் சந்நிதியும் சனீசுவரன் சந்நிதியும் உள்ளன. வலப்புறம் நீண்ட முன்மண்டபத்தை உடைய சகசுரலிங்கம் சந்நிதி, அறை உள்ளன. இவ்வறையைத் தாண்டி சிறிய முன் மண்டபத்தோடு கூடிய குபேரலிங்கம் சந்நிதி கிழக்கு நோக்கி உள்ளது.

இத்திருச்சுற்றின் வடகிழக்கு மூலையில் முன்மண்டபத்தோடு கூடிய சந்நிதியில் நடராசர், சிவகாமி, காரைக்கால் அம்மையார் செப்புத் திருமேனிகள் உள்ளன. இந்த நடராசர் ‘பெரிய சபாபதி’ என்று வழங்கப்படுவதால் இச்சந்நிதி பெரிய சபாபதி சந்நிதி என்று வழங்கப்படுகின்றது. இதனையடுத்த வாயிலினருகே சந்திரன் சிலை உள்ளது. சிறிய கொடிமரத்தின் முன் இருபுறமும் படிகள் கொண்டு மணி மண்டபம் அமைந்துள்ளது.

மணி மண்டபத்தைத் தாண்டி வாயிலின் உள்ளே அமைவது மகா மண்டபமாகும். இதனைச் சுற்றி அமைந்திருப்பது சிவலோகத் திருச்சுற்று ஆகும். மகா மண்டபத்தின் நடுவே நந்தியும் பீடமும் உள்ளன. கருவறை வாயிலின் இருபுறம் துவார பாலகர்கள், வலப்புறம் விநாயகர், இடப்புறம் சுப்பிரமணியர் சிலைகள் உள்ளன.

இதனருகே சந்திரசேகரர் பவானி அம்மை சந்நிதி உள்ளது. இத்திருச்சுற்றின் தெற்குப் பகுதியில் கருவறை கோட்டத்தில் தெட்சிணாமூர்த்தி சந்நிதி அமைந்துள்ளது. மேற்குப் பகுதியின் இடப்புறம் கன்னிமூல விநாயகர், உற்சவர் சந்நிதி, உற்சவர் அலங்கார சந்நிதி, உற்சவர் சந்நிதி, கங்காளநாதர் சந்நிதி, சுப்பிரமணியர் சந்நிதி ஆகியன உள்ளன. வடக்குப் பகுதியில் சண்டிகேசுவரர் சந்நிதி அமைந்துள்ளது.

இதனையடுத்து முன்மண்டபத்தோடு அமைந்திருப்பது மூல மகாலிங்கம் சந்நிதியாகும். இதன் இடப்புறம் சுவரை ஒட்டி பிரித்வி லிங்கம் அமைந்துள்ளது. பிரித்வி லிங்கத்தை அடுத்துள்ள சந்நிதியின் உள்ளே பெரியதும் சிறியதுமான இரண்டு

நடராசர், சிவகாமி செப்புத் திருமேனிகள் உள்ளன. இதனையடுத்து மகிசாசுரமர்த்தினி சந்நிதியும் பைரவர் சந்நிதியும் அமையப் பெற்றுள்ளன.

இரட்டைக் கருவறைகளில் இடப்புறம் சிறிய கொடிமரத்திற்கு எதிரே நெல்லையப்பர், வலப்புறம் நெல்லைக் கோவிந்தர் உள்ளனர். நெல்லையப்பருக்கு மட்டும் அர்த்த மண்டபம் உள்ளது. நெல்லையப்பர் கருவறையின் உள்ளே மனோன்மணித் தாயாரின் செப்புத் திருமேனி உள்ளது.

## தொகுப்புரை

- இறைவன், இறைவிக்கு தமிழ்ப் பெயர்களுடன் வடமொழிப் பெயர்களும் வழங்கப்பட்டு வருகின்றன. சிவாச்சாரியார்கள் அருச்சனையின் பொழுதும் மற்ற வழிபாடுகளின் பொழுதும் வடமொழிப் பெயர்களையும் பயன்படுத்துகின்றனர். திருநெல்வேலி, திருப்பூவணம் ஆகிய திருக்கோயில்களின் உற்சவர்களுக்கு எனத் தனிப் பெயர்கள் உள்ளன.
- தேவாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ள திருத்தலங்களின் பெயர்கள் சில மக்கள் வழக்கில் மாற்றம் கண்டுள்ளன. தேவாரத்துள் திருவாப்பனூர் என்று குறிப்பிடப்பட்ட திருத்தலம் ஆப்புடையார் திருக்கோயில் என்றும், திருக்கொடுங்குன்றம் என்று குறிப்பிடப்பட்ட திருத்தலம் பிரான்மலை என்றும், திருப்புத்தூர் என்று குறிப்பிடப்பட்ட திருத்தலம் திருப்பத்தூர் என்றும், திருப்புனவாயில் என்று குறிப்பிடப்பட்ட திருத்தலம் திருப்புனவாசல் என்றும், திருக்கானப்பேர் என்று குறிப்பிடப்பட்ட திருத்தலம் காளையார் கோயில் என்றும், திருப்பூவணம் என்று குறிப்பிடப்பட்ட திருத்தலம் திருப்புவனம் என்றும், திருச்சுழியல் என்று குறிப்பிடப்பட்ட திருத்தலம் திருச்சுழி என்றும் மக்களால் மருவி அழைக்கப்படுகின்றன.
- புராணம், வரலாற்றுச் சிறப்புக் கருதியும் திருத்தலங்களுக்குப் பல பெயர்கள் வழங்கப்படுகின்றன. சான்றாக திருநெல்வேலி திருத்தலத்திற்கு உத்திர கோடித்தலம், விட்ணுபுரம், கச்சப்பாளையம், சர்வதீர்த்தபுரம், பிரமவிருத்தபுரம், வேணுவனம், பிரளயசித்து, தென்காஞ்சி, பேரண்டம், சிவபுரம், திரிமூர்த்திபுரம், இடபபுரி, தரணிசாரம், விண்டு தலம் ஆகிய பெயர்கள் வழங்கப்படுகின்றன.
- திருத்தலத்தின் பெருமையையும் திருக்கோயில்களின் சிறப்பையும் தலபுராணங்களின் வழி அறியமுடிகின்றது. தலபுராணம் திருத்தலங்களின் வரலாறுகள் மட்டுமல்லாது மூர்த்திகளையும் தீர்த்தங்களையும் எடுத்துரைக்கின்றன.
- தற்காலத்து எழுதப்படும் திருத்தல வரலாறுகளுக்கும் பழமையான தல புராணங்கள் ஆதாரமாய் அமைந்துள்ளன.
- ஆய்வில் எடுத்தாளப்பட்ட பதினொரு திருக்கோயில்களும் அத்திருத்தலங்களின் ‘பிரதான திருக்கோயில்’ எனப்படும் பெருந்தெய்வத் திருக்கோயிலாக

விளங்குகின்றன. எனவே இத்திருக்கோயில்கள் பரிவார சந்நிதிகளுடன் விளங்குகின்றன.

- ❖ திருக்கோயில்களுக்கு திருச்சுற்றுகள் வகுக்கப்பட்டுள்ளன. தேரோட்டம், திருவீதி புறப்பாடு, மாதாந்திர சுற்றுதல் ஆகியனவற்றுக்கு முறையாக திருச்சுற்றுகள் ஒதுக்கப்பட்டுள்ளன. சில திருக்கோயில்களில் திருச்சுற்றுகள் தனிப் பெயர்கள் கொண்டு விளங்குவதை அறியமுடிகின்றது.
- ❖ திருக்கோயில்களுக்கு தீர்த்தங்கள் அமைந்துள்ளன. தீர்த்தங்கள் அனைத்தும் வரலாற்று தொடர்புடனும் அதற்கென உரிய தனிச் சிறப்புகளுடனும் விளங்குகின்றன. திருக்கோயிலில் நடைபெறும் தெப்பம், தீர்த்தாவாரி நிகழ்ச்சிகளுக்கு என முறையாக தீர்த்தங்கள் வகைப்படுத்தப்பட்டுள்ளன.
- ❖ தலவிருட்சம் திருக்கோயில்களுக்கு அமைந்துள்ளது.
- ❖ திருக்கோயில்களுக்கு முறையாக குடமுழுக்குகள் நடைபெற்றுள்ளன.
- ❖ அன்னதானத்திட்டம் செயல்படுத்தப்பட்டு 50 அல்லது 100 நபர்களுக்கு அன்னதானம் திருக்கோயில்களில் வழங்கப்படுகிறது.

## சான்றெண் விளக்கம்

1. அண்ணாமலை தேசிகர், சிவக்ஷேத்திர விளக்கம். ப.3.

2. மாணிக்கம் பிள்ளை.எஸ், சிவக்ஷேத்திர யாத்திரை விளக்கம், ப.187.

3. இந்நூலாசிரியர்களின் அருள் வரலாறு, தருமை ஆதீனம், மெய்கண்ட சாத்திரம், பக்கம் எண்ணிடப்படவில்லை.

4. இராசமாணிக்கனார்.மா, கால ஆராய்ச்சி, ப.139.

5. http://www.tamilvu.org/library/141c1/html/141c1048.htm

6. அருணாசலம்.மு, தமிழ் இலக்கிய வரலாறு, பன்னிரண்டாம் நூற்றாண்டு, முதல் பாகம், ப.74.

7. மாணிக்கம் பிள்ளை.எஸ், சிவக்ஷேத்திர யாத்திரை விளக்கம், ப.88.

8. சாம்பசிவ நாயனார்.மு, சிவக்ஷேத்திர யாத்திரானுகூலம், ப.9.

9. திருப்பதிக்கோவை, பா.10:1-6

10. சுப்பிரமணிய பிள்ளை.த, சிவஸ்தல மஞ்சரி, ப.3-7.

11. சாம்பசிவ நாயனார்.மு, சிவக்ஷேத்திர யாத்ரானுகூலம், ப.4.

12. மாணிக்கம் பிள்ளை.எஸ், சிவக்ஷேத்திர யாத்திரை விளக்கம், முகவுரை.

13. சுப்பிரமணிய பிள்ளை.த, சிவஸ்தல மஞ்சரி, ப.182

14. மீனாட்சியம்மை குறம், பா.21

15. சுப்பிரமணியன்.ச.வே, தமிழ் இலக்கிய வரலாறு, ப.232.

16. http://www.tamilvu.org/courses/degree/p202/p2022/html/p202262.htm.

17. http://www.tamilvu.org/courses/diploma/a071/a0712/html/a071262.htm.

18. http://www.tamilvu.org/courses/degree/p202/p2022/html/p202263.htm.

19. கந்தசாமிப்புலவர், திருவாப்பனூர்ப்புராணம், ஆப்பனூர்ச் சருக்கம், பக்.11-24

20. கள ஆய்வின் பொழுது நேர்காணல் – கோ.சுவாமிநாதன், சிவாச்சாரியார், நாள்: 17.09.2017, நேரம்: காலை 08.40 மணி

21. கந்தசாமிப்புலவர், திருவாப்பனூர்ப்புராணம், இடவபுரச் சருக்கம், பக்.24-29

22. மேலது, அன்னவினோதச் சருக்கம், பக்.30-36

23. கள ஆய்வின் பொழுது நேர்காணல் – கோ.சுவாமிநாதன், சிவாச்சாரியார், நாள்: 17.09.2017, நேரம்: காலை 08.45 மணி

24. கந்தசாமிப்புலவர், திருவாப்பனூர்ப்புராணம், குபேரச் சருக்கம், பா.5

25. கள ஆய்வின் பொழுது நேர்காணல் – கோ.சுவாமிநாதன், சிவாச்சாரியார், நாள்: 17.09.2017, நேரம்: காலை 08.50 மணி

26. மேலது

27. மேலது – பா.பரசுராம பட்டர், சிவாச்சாரியார், நாள்: 05.11.2017, நேரம்: காலை 09.30 மணி

28. கழகத் தமிழ் அகராதி, பக்.393

29. குன்றக்குடி பெரியபெருமாள், குன்றக்குடி ஆதீன ஐந்து கோயில்கள், 2016, ப.7

30. மேலது, ப.5

31. திருப்புத்தூர் அருள்மிகு ஸ்ரீ நின்ற நாராயணப்பெருமாள் திருக்கோயில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா – சிறப்பு மலர், ப.57

32. குன்றக்குடி பெரியபெருமாள், குன்றக்குடி ஆதீன ஐந்து கோயில்கள், 2016, ப.32

33. திருப்புத்தூர் அருள்மிகு ஸ்ரீ நின்ற நாராயணப்பெருமாள் திருக்கோயில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா – சிறப்பு மலர், ப.58

34. மாரிமுத்து.கா, திருப்புத்தூர் அருள்மிகு ஸ்ரீ திருத்தளிநாதர் ஆலயத் திருத்தல வரலாறு, பக்.18-19

35. அருள்மிகு சிவகாமசுந்தரி உடனாய திருத்தளிநாதர் ஸ்ரீ யோகபைரவர் திருக்கோயில் - சம்பக சஷ்டி விழா சிறப்பிதழ், 2010, ப.13

36. திருப்புத்தூர் அருள்மிகு ஸ்ரீ நின்ற நாராயணப்பெருமாள் திருக்கோயில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா – சிறப்பு மலர், ப.59

37. தொலைபேசி வழி நேர்காணல் – வை.சுப்பையா, சிவாச்சாரியார், மலேசியா (இருப்பு), நாள்: 31.08.2017, நேரம்: மதியம் 12.42 மணி

38. கள ஆய்வின் பொழுது நேர்காணல் – தி.கணேச குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 21.06.2017, நேரம்: காலை 08.30 மணி

39. மேலது – இரா.செல்வகணேச சிவம், சிவாச்சாரியார், நாள்: 26.08.2017, நேரம்: காலை 09.30 மணி

40. மேலது – காளியப்பன், கோயில் காப்பாளர், நாள்: 26.08.2017, நேரம்: மதியம் 01.30 மணி

41. மேலது – தி.கணேச குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 21.06.2017, நேரம்: காலை 08.40 மணி

42. மேலது – இரா.செல்வகணேச சிவம், சிவாச்சாரியார், நாள்: 26.08.2017, நேரம்: காலை 10.00 மணி

43. மேலது – தி.கணேச குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 21.06.2017, நேரம்: காலை 09.00 மணி

44. மேலது – கணபதி.சௌந்தரதியாகராஜ குருக்கள், நாள்: 21.01.2018, நேரம்: காலை 09.30 மணி

45. மேலது

46. மேலது

47. மேலது – ஸ்வர்ண.சந்திரசேகர குருக்கள், நாள்: 27.01.2018, நேரம்: காலை 07.40 மணி

48. மேலது

49. மேலது

50. மேலது – க.சுப்பிரமணிய குருக்கள், நாள்: 21.01.2018, நேரம்: காலை 08.30 மணி

51. மேலது – ஸ்வர்ண.சந்திரசேகர குருக்கள், நாள்: 27.01.2018, நேரம்: காலை 10.20 மணி

52. மேலது

53. மேலது – மு.சுவாமிநாத குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 11.06.2018, நேரம்: காலை 10.00 மணி

54. காளையார்கோவிற் புராண வசனம், வெள்ளையானை சாபந்தீர்ந்த படலம், பக்.101-104

55. மேலது, வீரசேன பாண்டியப் படலம், பக்.70-75

56. கள ஆய்வின் பொழுது நேர்காணல் – இரா.சிவசெந்தில் குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 11.06.2018, நேரம்: காலை 10.10 மணி

57. மேலது – மு.சுவாமிநாத குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 11.06.2018, நேரம்: காலை 11.00 மணி

58. திருவிளையாடற் புராணம், வரகுணனுக்குச் சிவலோகங்காட்டிய படலம்

59. திருக்கோவையார், பா.306, திருக்கோவையார், பா.327

60. கோயில் திருப்பண்ணியார் விருத்தம், பா.62

61. கள ஆய்வின் பொழுது நேர்காணல் – மு.சுவாமிநாத குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 11.06.2018, நேரம்: காலை 11.10 மணி

62. மேலது – சௌ.சுரேஷ் குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 16.01.2019, நேரம்: மதியம் 02.20 மணி

63. காளைராசன்.கி, திருப்பூவணப் புராணம், ப.13

64. கந்தசாமிப்புலவர், திருப்பூவணநாதருலா, நூலாசிரியர் வரலாறு

65. கள ஆய்வின் பொழுது நேர்காணல் – கி.காளைராசன், நாள்: 10.12.2018, நேரம்: மாலை 06.15 மணி

66. மேலது

67. மேலது – சௌ.சுரேஷ் குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 16.01.2019, நேரம்: மதியம் 02.40 மணி

68. மேலது

69. கந்தசாமிப்புலவர், திருப்பூவணப் புராணம், தருமஞ்ஞுன் முக்தி பெற்ற சருக்கம், பா.1-38

70. பரஞ்சோதி முனிவர், திருவிளையாடற் புராணம், இரசவாதஞ்செய்த படலம், பா.1-30

71. கள ஆய்வின் பொழுது நேர்காணல் – சௌ.சுரேஷ் குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 16.01.2019, நேரம்: மதியம் 03.30 மணி

72. மேலது – கி.காளைராசன், நாள்: 10.12.2018, நேரம்: மாலை 06.40 மணி

73. காளைராசன்.கி, திருப்பூவணக் காசி, ப.68

74. கள ஆய்வின் பொழுது நேர்காணல் – கி.காளைராசன், நாள்: 10.12.2018, நேரம்: மாலை 07.10 மணி

75. திருச்சுழியற் புராணம், பூமிதேவி பூசைச்சருக்கம், பக்.12-16

76. மேலது, பாண்டியன் பிரமகத்திதீர்த்த சருக்கம், பக்.17-21

77. மேலது, பிரளயஞ்சுழித்த சருக்கம், பக்.30-36

78. மேலது, கௌதமச் சருக்கம், பக்.44-55

79. கள ஆய்வின் பொழுது நேர்காணல் – க.ஹாலாஸ்யம், சிவாச்சாரியார், நாள்: 08.10.2017, நேரம்: காலை 10.30 மணி

80. மேலது – ஹா.சுந்தரமூர்த்தி சிவம், சிவாச்சாரியார், நாள்: 01.10.2017, நேரம்: காலை 08.40 மணி

81. மேலது – க.ஹாலாஸ்யம், சிவாச்சாரியார், நாள்: 01.10.2017, நேரம்: காலை 08.50 மணி

82. மேலது

83. மேலது

84. https://shaivam.org/siddhanta/sp/spt_p_cuziyal.htm

85. ஷண்முகநயினார்.ஏ.சி., திருக்குற்றாலத் தலவரலாறு, 1986, ப.54

86. கள ஆய்வின் பொழுது நேர்காணல் – ந.ஜானகி, திரிகூடராசப்பக் கவிராயரின் கொள்ளுப்பெயர்த்தி, நாள்: 10.07.2018, நேரம்: காலை 11.05 மணி

87. மேலது – ச.கணேச குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 20.06.2018, நேரம்: மாலை 06.00 மணி

88. மேலது – கி.ஜெயமணி சுந்தர குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 21.06.2018, நேரம்: காலை 10.10 மணி

89. மேலது – ச.கணேச குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 20.06.2018, நேரம்: மாலை 06.30 மணி

90. திருப்புத்தூர்ப் புராணம், கௌரி தாண்டவச் சருக்கம், பா.13

91. கள ஆய்வின் பொழுது நேர்காணல் – ச.கணேச குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 20.06.2018, நேரம்: மாலை 06.40 மணி

92. ஷண்முகநயினார்.ஏ.சி., திருக்குற்றாலத் தலவரலாறு, 1986, ப.67

93. செய்த்தலைமணியன், திருநெல்வேலித் தலபுராணம், ப.xiv

94. அழகர்சாமிபிள்ளை.ம, திருநெல்வேலித் தலபுராண வசனம், வேண்டவளர்ந்த சருக்கம், பக்.406–416

95. மேலது, நெல்லுக்கு வேலியிட்ட சருக்கம், பக்.416–420

96. வேணுவனப் புராணம், நெல்வேலிச் சருக்கம், பா.2

97. மேலது, பா.7

98. மேலது, பா.14

99. மேலது, பா.16

100. மேலது, பா.15

101. மேலது, பா.20

102. அழகர்சாமிபிள்ளை.ம, திருநெல்வேலித் தலபுராண வசனம், சுவேதமுனி காலனைக் கடந்த சருக்கம், பக்.420–428

103. செய்த்தலைமணியன், திருநெல்வேலித் தலபுராணம், ப.xxix

104. குடமுழுக்கு விழாமலர், 2004, ப.1

105. 1.திருவோத்தூர் – ஆதிகேசப் பெருமாள், 2.கச்சியேகம்பம் – நிலாத்துண்டப் பெருமாள், 3.கொடிமாடச் செங்குன்றூர் – ஆதிகேசவப் பெருமாள், 4.சிதம்பரம் – கோவிந்தராசப் பெருமாள், 5.சிக்கல் – கோலவாமனப் பெருமாள், 6.திருநணா – ஆதிகேசவப் பெருமாள், 7.திருநாவலூர் – வரதராசப் பெருமாள், 8.திருநெல்வேலி – நெல்லைக் கோவிந்தர், 9.திருப்பழனம் – கோவிந்தர், 10.பாண்டிக் கொடுமுடி – அரங்கநாதர், 11.திருப்பத்தூர் (வேலூர் மாவட்டம்) – அரங்கநாதர், 12.திருக்கரை – அரங்கநாதர்

106. வேணுவனப் புராணம், நிருத்தச் சருக்கம், பா.16

107. செய்த்தலைமணியன், திருநெல்வேலித் தலபுராணம், ப.xxxii

108. தச்சநல்லூர் சுவாமி வேதமூர்த்தி மடாலயத்தின் சீதாள ஓலைக்கணக்கில் உள்ளபடி

109. செய்த்தலைமணியன், திருநெல்வேலித் தலபுராணம், ப.xxxxi

110. குடமுழுக்கு விழாமலர், 2004, ப.1

111. காமாட்சிநாதன் செட்டியார்.வ.நா., நெல்லைச்சிந்து, பா.9:6

112. செய்த்தலைமணியன், திருநெல்வேலித் தலபுராணம், ப.xxxxv

113. தமிழகத்தின் முதல் பெரிய தேர் திருவாரூர் தேர், இரண்டாவது பெரிய தேர் திருவில்லிபுத்தூர் ஆண்டாள் தேர்

114. திருக்கோயில்கள் வழிகாட்டி திருநெல்வேலி மாவட்டம், ப.12

115. செய்த்தலைமணியன், திருநெல்வேலித் தலபுராணம், ப.xxxvi

116. கள ஆய்வின் பொழுது நேர்காணல் – விசாலாட்சி, பக்தர், நாள்: 25.06.2017, நேரம்: மதியம் 01.30 மணி

117. செய்த்தலைமணியன், திருநெல்வேலித் தலபுராணம், ப.xxxvi

118. குடமுழுக்கு விழாமலர், 2004, ப.2

119. திருக்கோயில்கள் வழிகாட்டி திருநெல்வேலி மாவட்டம், ப.11

120. குடமுழுக்கு விழாமலர், 2004, ப.3

121. மேலது

122. திருக்கோயில்கள் வழிகாட்டி திருநெல்வேலி மாவட்டம், பக்.11–12

123. பாஸ்கரத் தொண்டைமான்.தொ.மு., வேங்கடம் முதல் குமரி வரை, பாகம் – 4, ப.226

124. திருக்கோயில்கள் வழிகாட்டி திருநெல்வேலி மாவட்டம், ப.1

125. அழகர்சாமிபிள்ளை.ம, திருநெல்வேலித் தலபுராண வசனம், தீர்த்தச் சருக்கம் பக்.346–350

126. திருக்கோயில்கள் வழிகாட்டி திருநெல்வேலி மாவட்டம், ப.11

127. வேணுவனப் புராணம், அகத்தியரருச்சனைச் சருக்கம், பா.32

128. மேலது, தீர்த்தச் சருக்கம், பா.7

129. அழகர்சாமிபிள்ளை.ம, திருநெல்வேலித் தலபுராண வசனம், கருமாரி மகிமைச் சருக்கம், பக்.336–338

130. திருக்கோயில்கள் வழிகாட்டி திருநெல்வேலி மாவட்டம், ப.1

131. செய்த்தலைமணியன், திருநெல்வேலித் தலபுராணம், ப.xxxxviii

## திருத்தலங்களின் இறைவனும் இயற்கையும்

பாண்டிப் பதினான்கு திருத்தலங்களில் ஆய்விற்கு எடுத்தாளப்பட்ட பதினொரு திருக்கோயில்களில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோர் வந்து வழிபட்டு பதிகம் பாடிய முறைமை பெரிய புராணத்தின் வழி குறிப்பிடப்பெற்றுள்ளது. இத் தேவாரப் பதிகங்களில் காணப்படுகின்ற இறைவன், புராணம், இயற்கை, திருத்தலம் ஆகியவை பற்றிய செய்திகள் ஆய்ந்து விளக்கப்பட்டுள்ளன.

பக்தித் திறம், இயற்கை வளம், திருத்தல அமைப்பு ஆகியவை ஆய்வின் வழி எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**திருவாப்பனூர்:**

திருவாப்பனூர் திருத்தலத்திற்கு முதலாம் திருமுறையில் அமைந்த திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று உள்ளது.

**திருஞானசம்பந்தர் தேவாரம்:**

திருஆலவாயினின்று திருஞானசம்பந்தர், நின்றசீர் நெடுமாற நாயனார், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் ஆகிய மூவருடன் திருப்பரங்குன்றம் ஏகி பின்னர் அங்கிருந்து திருவாப்பனூர் வந்தணைந்தனர் என்பதை,

**“ஆறணிந்தார் தமைவணங்கி அங்குப் போற்றி**

**அணிஆப்ப னூரணைந்து பணிந்து பாடி”**[1]

என்ற அடிகளால் அறிய முடிகின்றது. திருஞானசம்பந்தர் திருவாப்பனூரில் அருளிச் செய்த தேவாரப் பதிகம் குறிஞ்சிப் பண்ணில் அமைந்ததாகும்.

**இறைவன்:**

திருவாப்பனூர் இறைவன் தன் சடைமேல் என்றும் முதிராத இளமையான சந்திரனையும் இடையில் அரவினையும் அணிந்து சினம் இல்லாமல் எல்லோராலும் வெறுத்தலின்றி விரும்பப்படுபவன் என்பதை,

**“முற்றுஞ் சடைமுடிமேன் முதிரா விளம்பிறையன்**

**ஒற்றைப் படவரவ மதுகொண் டரைக்கணிந்தான்**

**செற்றமில் சீரானை...”** (1:88:1:1-3)

என்ற முதற்பாடல் உணர்த்தி நிற்கும்.

‘குரா’ என்ற மலரின் நறுமணம் வீசும் கூந்தலுடைய இறைவி உடனிருக்க வானோர் வணங்கும் இயல்பினனான இறைவன் வளைந்த பல்லையும் கொடிய விடத்தையும் உடைய அரவத்தை அணிந்தவன் என்பதனைப்,

**“குரவங் கமழ்குழலாள் குடிகொண்டு நின்றுவிண்ணோர்**

**விரவுந் திருமேனி விளங்கும் வளையெயிற்றின்**

**அரவ மணிந்தானை யணியாப்ப னூரானை”** (1:88:2:1-3)

மேற்கண்ட பாடலடிகள் விளக்கிநிற்கின்றது. இப்பாடலிலும் பின்னர் பயின்று வரும் பாடல்களிலும் ‘அணி ஆப்பனூரானை’ என்று திருஞானசம்பந்தர் பாடியதை ஒட்டி சேக்கிழாரும் **“அணிஆப்ப னூரணைந்து”**[2] என்று பாடியுள்ளார்.

இத்திருக்கோயிலின் இறைவிக்கு வழங்கப்படும் பெயர்களுள் ஒன்று குரவங்கமழ் குழலம்மை என்பதாகும். இதனையே திருஞானசம்பந்தர் தன்னுடைய திருவாப்பனூர் தேவாரத்தில் குறிப்பிட்டுள்ளார் என்பார் பி.ரா.நடராசன்.[3] ஆனால், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோர் ‘குரா மலர் சூடும் இறைவி’ எனும் பொருளில் பாடிய பாடல்கள் திருமுறைகளில் அதிகம் காணப்படுகின்றன.

**“பெருங்காட்டின் அரவ மணிந்தானை”** (1:88:3:2-3) என்ற அடியை இருவகையாய்ப் பொருள் கொள்ளலாம். ‘பெருங்காட்டின்’ என்பதைப் பெரிய காடு என்றவாறாகக் கொண்டு, பெரிய காட்டில் இருக்கும் அரவத்தை ஆபரணமாகக் கொண்டவன் என்றும், சுடுகாட்டை பெருங்காடாகக் கொண்டு, அரவம் அணிந்து சுடுகாட்டில் வசிப்பவன் என்றும் பொருள் கொள்ளலாம்.

கங்கையைத் தன் முடிமேல் கொண்டு கையில் தீச்சுடரை ஏந்திக் கோவணத்தை உடுத்திச் சுடுகாட்டில் நடனமிடும் தன்மையனான இறைவன் உயிர்களின் பிணியையும் பிறப்பையும் அறுத்தெறிபவன் என்பதை,

**“பிணியும் பிறப்பறுப்பான் பெருமான் பெருங்காட்டில்**

**துணியி னுடைதாழச் சுடரேந்தி யாடுவான்**

**அணியும் புனலானை யணியாப்ப னூரானை”** (1:88:4:1-3)

என்ற பாடல் மூலம் அறியமுடிகிறது.

எல்லா எழுத்துக்களுக்கும் ஆதாரமாய் ‘அகரம்’ நிற்பது போல, உயிர்கள் அனைத்திற்கும் ஆதாரமாய் விளங்குபவன் இறைவன் என்பதை, **“அகர முதலானை...”** (1:88:5:3) என்ற அடி விளக்கிநிற்கும்.

**“அகர முதல எழுத்தெல்லாம் ஆதி**

**பகவன் முதற்றே உலகு”** [4]

என்ற திருக்குறளும், எழுத்துகளுக்கு அகரம் முதன்மையாக இருப்பது போல உலக உயிர்களுக்கு இறைவன் முதன்மையாய் இருப்பதைக் குறிப்பிடுகின்றது.

இறைவன், கையில் அனல் ஏந்தி சுடுகாட்டைத் தன் இடமாகக் கொண்டு இரவில் நடனம் புரிபவன் என்பதை,

**“காட திடமாகக் கனல்கொண்டு நின்றிரவில்**

**ஆடுந் தொழிலானை...”** (1:88:6:2-3)

என்ற அடிகள் உணர்த்திநிற்கும். ஆறாவது பாடலில் இறைவன் மட்டும் நடனம் ஆடுவதைக் குறித்த திருஞானசம்பந்தர் ஏழாவது பாடலான,

**“இயலும் விடையேறி யெரிகொண் மழுவீசிக்**

**கயலி னிணைக்கண்ணா ளொருபாற் கலந்தாட**

**இயலு மிசையானை...”** (1:88:7:1-3)

என்பதில் இறைவன் தன் மனம் போல் செல்லும் இடபத்தில், கையில் மழுவேந்தி கயற்கண்களை உடைய இறைவியை இடப்புறம் கொண்டு நடனம் புரிபவன் என்பதைக் குறிப்பிடுகிறார். நீலநிற விடத்தைக் கண்டத்தில் தாங்கியவனான இறைவன் வெண்மையான சந்திரனைத் தலையிலும், சினங்கொண்ட பாம்பைக் கச்சிலும் அணிந்து தன்னை வணங்கும் அடியவர்களை மனமுருகச் செய்பவன் என்பதை,

**“கருக்கு மணிமிடறன் கதநாகக் கச்சையினான்**

**உருக்கு மடியவரை யொளிவெண் பிறைசூடி”** (1:88:8:1-2)

என்ற பாடலடிகள் வெளிக்காட்டும். இறைவன் தன் சடைமேல் கொன்றையை அணிந்தவன் என்பதை, **“மலர்க்கொன்றை சடைமே லுடையானை”** (1:88:11:2) என்ற அடி கூறும். இப்பதிகத்தின் பாடலடிகள் அனைத்தும் இறைவனை ‘திருவாப்பனூரான்’ என்று விளித்து, அவனைப் பற்றுவார், பரவுவார், பணிவார், பகருவார், பாடுவார்,

பயிலுவார், பருகுவார், பண்ணின் இசையொடு பகர்வார், நினைப்பார் ஆகியோர் வினைப் பற்றுகளை அறுப்பார்கள் என்பதாக முடிகின்றன.

**புராணச் செய்திகள்:**

தன் தவத்தைக் கலைத்ததினால் செற்றங்கொண்ட இறைவன், நெற்றிக்கண்ணால் மன்மதனை எரித்தனன். பின்னர் எரித்த இறைவனே மன்மதனுக்கருளினான் என்பதை திருஞானசம்பந்தர்,

**"முருகு விரிகுழலார் மனங்கொ ளநங்கனைமுன்**

**பெரிது முனிந்துகந்தான் பெருமான்..."** (1:88:3:1-2)

என்றவாறு பாடியுள்ளார். இப்பாடலின் வழி மன்மதன், மணம் பொருந்திய கூந்தலையுடைய மங்கையரால் நினைக்கப்பெறுபவன் என்பதை அறியமுடிகிறது.

**"விட்ட வெம் பகழி ஐந்தும் வியத்தகு விமலன் மீது**

**பட்டலும் சிறிதே வேளைப் பார்த்தனன் பார்த்தலோடும்**

**கட்ட அழல்பொதிந்த நெற்றிக் கண்ணது நெடிதே காமன்**

**சுட்டது கயிலை முற்றும் சூழ் புகை பரவிற்று அன்றே"** [5]

என்று கச்சியப்ப சிவாச்சாரியாரும் கந்த புராணத்தில் காமதகனத்தைக் குறிப்பிடுகின்றார்.

இறைவன் முப்புரங்களை எரித்த தன்மையை இரண்டு இடங்களில் பாடியிருக்கின்றார் திருஞானசம்பந்தர்.

**"தகர மணியருவித் தடமால் வரைசிலையா**

**நகர மொருமூன்று நலங்குன்ற வென்றுகந்தான்"** (1:88:5:1-2)

என்ற பாடலடிகளில், மணங்கமழும் பொருட்களோடு மணிகளும் கலந்து விழும் அருவிகளையுடைய மேருமலையை வில்லாக வளைத்து முப்புரங்களைப் பொடிபடச் செய்தது பயின்று வருகின்றது.

ஓடியும், பறந்து திரிந்தும் மாயங்கள் புரிந்த முப்புரங்களை கண்ணிமைக்கும் நேரத்தில் இறைவன் அழித்தான் என்பதை, **"ஓடுந் திரிபுரங்க ளுடனே யுலந்தவிய"** (1:88:6:1) என்ற அடி உணர்த்தும்.

பதினெட்டாம் நூற்றாண்டில் தோன்றிய சிற்றிலக்கியமான அபிராமி அந்தாதியில்,

**“அரணம் பொருள்என் றருள் ஒன்**

**றிலாத அசுரர் தங்கள்**

**முரண்அன் றழிய முனிந்தபெம்**

**மானும்....”** [6]

என்ற பாடலடியில் இறைவன் திரிபுரங்களை அழித்த வரலாறு பாடப்பெற்றுள்ளது.

எட்டாவது பாடலில் இராவணனின் திறத்தை அழித்ததும் ஒன்பதாவது பாடலில் திருமாலும் பிரம்மனும் இறைவனின் அடிமுடி காணப்போந்து தோற்ற செய்தியும் பயின்று வருகின்றன.

**திருத்தலம்:**

திருவாப்பனூர் திருத்தலம் விண்ணோரால் விரவப்படும் சிறப்புடையது என்பதை இரண்டாவது பாடல் கூறுகிறது. இத்திருத்தலம் அழகிய குளிர்ந்த நீர்வளம் கொண்ட வைகையாற்றின் கரையில் அமைந்திருக்கின்றது என்பதை, **“அந்தண் புனல்வைகை யணியாப்ப னூர்மேய”** (1:88:11:1) என்ற அடிகளால் அறியலாம். இதில் குறிக்கப்படும் வைகை இத்திருக்கோயிலின் தீர்த்தங்களுள் ஒன்றாகும். கொன்றை, குரா ஆகிய இருமலர்கள் இப்பதிகத்தில் குறிக்கப் பெறுகின்றன.

சுந்தரர் மூவேந்தர்களுடன் திருஆலவாய் அடைந்து பணிந்தேத்திப் பின்னர் திருவாப்பனூர் வந்தார் என்பதை,

**“செஞ்சடையார் திருவாப்ப**

**னூர்திருவே டகம்முதலாம்**

**நஞ்சணியுங் கண்டரவர்**

**நயந்தபதி நண்ணியே”** [7]

என்ற சேக்கிழாரின் அடிகளால் அறியமுடிகிறது.

**திருவேடகம்:**

மூன்றாம் திருமுறையில் அமைந்த திருஞானசம்பந்தர் தேவாரப் பதிகம் ஒன்று திருவேடகத்திற்கு உள்ளது.

**திருஞானசம்பந்தர் தேவாரம்:**

திருஞானசம்பந்தர் திருஆலவாய்த் திருத்தலத்தில் கூன் பாண்டியனின் வெப்பு நோயை நீக்கினார். பின்னர் சமணர்களுடன் புரிந்த அனல் வாதத்தில் வென்றார்.

இரண்டிலும் தோற்ற சமணர்கள் புனல் வாதத்திற்குத் திருஞானசம்பந்தரை அழைத்தனர். சமணர்கள் தங்களின் மந்திரமான ‘அத்தி நாத்தி’ என்பதை ஏட்டில் எழுதி வைகையாற்றில் விட அது ஆற்றின் ஓட்டத்திலேயே சென்று மறைந்தது. பின்னர் திருஞானசம்பந்தர் கௌசிகப் பண்ணில் அமைந்த ‘திருப்பாசுரம்’ என்று வழங்கப்படும் ‘வாழ்க அந்தணர்’ எனத் தொடங்கும் பதிகத்தை ஏட்டில் எழுதி வைகையாற்றில் இட்டார். கீழ் நோக்கி ஓடும் ஆற்றின் ஓட்டத்தை எதிர்த்து ஏடு மேல்நோக்கி நீரைக் கிழித்துச் சென்றதை,

**“திருவுடைப் பிள்ளை யார்தந்**

**திருக்கையால் இட்ட ஏடு**

**மருவிய பிறவி யாற்றில்**

**மாதவர் மனஞ்சென் றாற்போல்**

**பொருபுனல் வைகை யாற்றில்**

**எதிர்ந்துநீர் கிழித்துப் போகும்**

**இருநிலத் தோர்கட் கெல்லாம்**

**இதுபொரு ளென்று காட்டி”** [8]

என்ற சேக்கிழாரின் பாடல் குறிப்பிடுகின்றது. ‘வாழ்க அந்தணர்’ எனும் பதிகத்தில் ‘வேந்தனும் ஓங்குக’ என்று பாடியதால் பாண்டியனின் கூனும் நிமிர்ந்தது.

ஓட்டத்தை எதிர்த்துச் செல்லும் ஏட்டை எடுத்துவரக் குலச்சிறையார் குதிரையில் வைகைக் கரையில் தொடர்ந்து சென்றார். அவ்வமயம் ஏடு தங்கத் திருஞானசம்பந்தரால் பாடப்பெற்றது ‘வன்னியு மத்தமும்’ எனத் தொடங்கும் கொல்லிப் பண்ணில் அமைந்த பதிகமாகும். இதனை,

**“ஆற்றின்மேற் செல்லும்ஏடு**

**தொடர்ந்தெடுப் பதற்கு வேண்டிக்**

**காற்றென விசையிற் செல்லும்**

**கடும்பரி ஏறிக் கொண்டு**

**கோற்றொழில் திருத்த வல்ல**

**குலச்சிறை யார்பின் சென்றார்**

**ஏற்றுயர் கொடியி னாரைப்**

**பாடினார் ஏடு தங்க"** [9]

என்ற பாடல் உணர்த்தும். குதிரை ஏறிச் சென்ற குலச்சிறையார் திருவேடகத்து இறைவன் திருக்கோயில் அருகே வைகையாற்றில் தங்கிய ஏட்டினை எடுத்தார் என்பதனை,

**"ஏடகம் பிள்ளை யார்தாம்**

**வன்னிஎன் றெடுத்துப் பாடக்**

**கூடிய நீரில் ஏடு**

**குலச்சிறை யாருங் கூடிக்**

**காடிட மாக ஆடும்**

**கண்ணுதல் கோயில் மாடு**

**நடுநீர் நடுவுட் புக்கு**

**நின்றஏ டெடுத்துக் கொண்டார்"** [10]

என்ற பாடல் விளக்கி நிற்கும்.

**இறைவன்:**

வன்னி, ஊமத்தை ஆகிய மலர்களுடன் சந்திரனையும் சடையில் தாங்கிய இறைவனை,

**"வன்னியு மத்தமு மதிபொதி சடையினன்**

**பொன்னிய றிருவடி புதுமல ரவைகொடு**

**மன்னிய மறையவர் வழிபட வடியவர்**

**இன்னிசை பாடல ரேடகத் தொருவனே"** (3:32:1)

என்ற பாடலில் குறிப்பிடும் திருஞானசம்பந்தர், இவ் இறைவனின் பொன்னார்த் திருவடிகளை பீடுடைய அந்தணர்கள் வழிபடவும் அடியவர்கள் இன்னிசைப் பாடல்கள் பாடிப் பரவவும் செய்வர் என்று பாடுகின்றார்.

திருவேடகத்தில் உறையும் இறைவனை அன்பு கொண்டு விழுந்து வணங்கினால் வினைகள் அழியும் என்பதனை,

**"தடிகளை யடிபணிந் தரற்றுமி னன்பினால்**

**இடிபடும் வினைகள்போ யில்லைய தாகுமே"** (3:32:2:3-4)

என்ற பாடல் அடிகள் மூலம் விளக்குகின்றார். சைவ சமயத்தில் வழங்கப்படும் ஐந்து வணங்கும் முறைகளான ஓரங்க வணக்கம், மூவங்க வணக்கம், பஞ்சாங்க வணக்கம், அட்டாங்க வணக்கம், சாட்டாங்க வணக்கம் ஆகியனவற்றுள் கடையில் அமையும் மூன்று வணக்க முறைகள் விழுந்து வணங்குதல் ஆகும். இப்பாடல் அடிகளில் விழுந்து செய்யப்பெறும் பஞ்சாங்க, அட்டாங்க, சாட்டாங்க வணக்க முறைகளைத் திருஞானசம்பந்தர் குறிப்பிடுகின்றார்.

இறைவன் தன் சடைமேல் வண்டுகள் மொய்க்கும் கொன்றையையும் சந்திரனையும் கொண்டு, காதில் குண்டலங்களையணிந்து மணியோசை உடைய இடபத்தின் மேல் ஊர்ந்து வருபவன் என்பதனை,

**"குண்டலந் திகழ்தரு காதுடைக் குழகனை**
**வண்டலம் புல்மலர்க் கொன்றைவான் மதியணி**
**செண்டலம் பும்விடைச் சேடனூ ரேடகம்**
**கண்டுகை தொழுதலுங் கவலைநோய் கழலுமே"** (3:32:3)

என்று பாடிய திருஞானசம்பந்தர், இறைவன் உறையும் திருவேடகம் சென்று கை கூப்பி வணங்கினால் கவலைகள் அகலும் என்று உணர்த்துகின்றார். இப்பாடலில் மூவங்க வணக்கத்தைப் பாடியுள்ளார்.

திருவேடகத் திருத்தலம் ஆல், சந்தனம், மாதவி, செண்பகம் ஆகிய மரங்களை மிகுதியாகக் கொண்டது. வளங்கள் பொருந்திய திருவேடகத்தில் இடபத்தை வாகனமாகக் கொண்ட இறைவன் மயிர்ச்சாந்து தடவியதால் மணம் பொருந்திய கூந்தலுடைய இறைவியோடு இருப்பவன் என்பதை,

**"ஏலமார் தருகுழ லேழையோ டெழில்பெறும்**
**கோலமார் தருவிடைக் குழகனா ருறைவிடம்"** (3:32:4:1-2)

என்ற பாடல் அடிகள் விளக்கி நிற்கும். திருவேடகத்தின் இறைவியின் பெயர் 'ஏழவார் குழலியம்மை' என்றிருப்பதால் திருஞானசம்பந்தர் திருத்தல இறைவியின் பெயரையே பாடியுள்ளார் என்பார் பி.ரா.நடராசன்.[11] 'ஏலமார்' என்பது 'ஏலம்+ஆர்' என்று பிரிந்து ஏலம் என்று அழைக்கப்படும் மயிர்ச்சாந்து ஆர்த்த கூந்தலுடைய இறைவி என்று பொருள்படும்.

பெருமை பொருந்திய இறைவன் ஆணாகவும் பெண்ணாகவும் அலியாகவும் திகழ்கின்ற சோதி வடிவானவன் என்பதை **"பெரியவன் பெண்ணினோ டாணலி யாகிய எரியவன்"** (3:32:5:3-4) என்ற பாடல் அடி குறிப்பிடும். இறைவன் எருக்கு, வன்னி, ஊமத்தம் ஆகிய மலர்களை அணிந்த திருமுடியினன் என்பதை, **"மடவர லெருக்கொடு வன்னியு மத்தமும் இடமுடைச் சடையினன்"** (3:32:8:3-4) என்ற அடிகளினாலும், வண்டுகள் சுற்றிவரும் கொன்றையும் வன்னியும் அணிந்தவன் என்பதை,

**"வண்டிரைக் கும்மலர்க் கொன்றையும் வன்னியும்**

**இண்டைசேர்க் குஞ்சடை யேடகத் தெந்தையே"** (3:32:10:3-4)

என்ற அடிகளாலும் அறிய முடிகின்றது. இதில் திருஞானசம்பந்தர் இறைவனை 'தந்தை' என்று விளிக்கின்றார்.

மாணிக்கவாசகர் திருவாசகத்தில் **"ஈசனடி போற்றி எந்தை அடி போற்றி"** [12] என்றும், **"ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே"** [13] என்றும் இறைவனை தந்தை என்று விளித்துப் பாடியுள்ளதைக் காணமுடிகின்றது.

**புராணச் செய்திகள்:**

**"வரியணி நயனிநன் மலைமகண் மறுகிடக்**

**கரியினை யுரிசெய்த கறையணி மிடறினன்"** (3:32:5:1-2)

என்ற பாடல் அடிகளில் தேவர்களின் பொருட்டு விடம் உண்ட இறைவனே, யானையை உரித்து தோலாகப் போர்த்தியவன் என்பதைக் குறிப்பிட்டு, சிவந்த வரிகளையுடைய கண்களைக் கொண்ட இறைவி இறைவன் யானையின் தோலையுரித்த பொழுது கலங்கினாள் என்றும் பாடியுள்ளார்.

திருஞானசம்பந்தர் தனது பதிகத்தின் ஒன்பதாவது பாடலில் பிரம்மனும் திருமாலும் அடிமுடி காணப் போந்து தோற்றத்தைப் பாடுகிறார்.

**"அன்னமா மயனுமா லடிமுடி தேடியும்**

**இன்னவா றெனவொணான் ஏடகத் தொருவனே"** (3:32:9:3-4)

என்ற பாடல் அடிகளில் பிரம்மன் அன்னமாகவும் திருமால் பன்றியாகவும் உருவெடுத்து இறைவனின் முடியையும் அடியையும் தேடித் தோற்றனர் என்று குறிப்பிடுகின்றார்.

**இயற்கை:**

திருவேடகம், ஆல், மாதவி, சந்தனம், செண்பகம் ஆகிய மரங்களைக் கொண்டது என்பதை, **"சாலமா தவிகளுஞ் சந்தனஞ் சண்பகம்"** (3:32:4:3) என்ற அடி குறிப்பிடும்.

குளங்கள், சோலைகளில் அன்றலர்ந்த மலர்களைத் தழுவி அதனின் மணத்தைக் கவர்ந்த தென்றல் வீசுகின்ற திருவேடகம் வைகையாற்றின் வடகரையில் அமைந்துள்ளதை,

**"பொய்கையின் பொழிலுறு புதுமலர்த் தென்றலார்**

**வைகையின் வடகரை மருவிய வேடகம்"** (3:32:6:1-2)

என்ற பாடல் அடிகள் உணர்த்தும். வைகையாற்றில் பொன், மணி, சந்தனம், அகில் ஆகிய மரங்கள் வந்து சேரும் என்பதனை,

**"பொன்னுமா மணிகளும் பொருதிரைச் சந்தகில்**

**தன்னுளார் வைகையின் கரைதனிற் சமைவுற"** (3:32:9:1-2)

என்ற பாடல் அடிகளும், யானையின் தந்தம், சந்தனம், அகில் ஆகியனவற்றை அலைகள் மூலம் கரைக்குக் கொண்டு வரும் வைகையை, **"கோடுசந் தனமகில் கொண்டிழி வைகைநீர்"** (3:32:11:1) என்ற பாடல் அடியும் விளக்கி உணர்த்துகின்றது.

**திருத்தலம்:**

திருவேடகத்தில் உள்ள மாளிகைகளின் கோபுரங்கள் சந்திரனைத் தழுவும் வண்ணம் உயர்ந்தோங்கி உள்ளதை,

**"கொடிநெடு மாளிகை கோபுரங் குளிர்மதி**

**வடிவுற வமைதர மருவிய வேடகத்து"** (3:32:2:1-2)

என்ற அடிகள் உணர்த்தி நிற்கும். திருவேடகத் திருத்தலம் ஊர் எனப்பட்டது என்பதனை, **"செண்டலம் பும்விடைச் சேடனூ ரேடகம்"** (3:32:3:3) என்ற அடியும், திருவேடகத்தில் இறைவன் திருக்கோயிலில் உறைபவன் என்பதை, **"எரியவ னுறைவிட மேடகக் கோயிலே"** (3:32:5:4) என்ற அடியும் குறிப்பிடும்.

இப்பதிகத்தில் வைகையாறு மூன்று இடங்களிலும், வன்னி மூன்று இடங்களிலும், ஊமத்தம், கொன்றை இரண்டு இடங்களிலும் எருக்கு ஓரிடத்திலும் குறிப்பிடப்பட்டுள்ளன. பதிகத்தின் ஏழாவது பாடல் கிடைக்கப்பெறவில்லை.

திருநாவுக்கரசர் திருவேடகம் வந்ததற்கான குறிப்புப் பெரிய புராணத்தில் இல்லையாகினும், திருஅதிகை வீரட்டானத்தில் பாடிய காப்புத் திருத்தாண்டகத்தில் திருவேடகத்தை, **"உண்ணீரார் ஏடகமும்"**(6:7:7:2) என்று நீர்வளம் மிக்கது எனப் பாடியுள்ளார். இத்திருத்தலம் வைகையாற்றின் கரையில் இருப்பதினால் நீர்வளத்தைக் குறிப்பிட்டு பாடியுள்ளார் திருநாவுக்கரசர்.

சுந்தரர், சேரமான் பெருமாள் நாயனாருடன் சேர்த்து மூவேந்தர்கள் திருவேடகம் வந்தணைந்ததை,

**"செஞ்சடையார் திருவாப்ப**
**னூர்திருவே டகம்முதலாம்**
**நஞ்சணியுங் கண்டரவர்**
**நயந்தபதி நண்ணியே"** [14]

என்ற பாடல் உணர்த்துகின்றது.

**திருக்கொடுங்குன்றம்:**

இத்திருத்தலத்திற்கு முதல் திருமுறையில் அமைந்த திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று உள்ளது.

**திருஞானசம்பந்தர் தேவாரம்:**

பாண்டி பதினான்குத் திருத்தலங்களில் முதலில் தேவாரப் பதிகம் பெற்றதும், திருஞானசம்பந்தரால் முதலில் பாடப் பெற்றதுமான திருத்தலம் திருக்கொடுங்குன்றம் ஆகும்.

சோழ நாட்டிலிருந்து பல ஆறுகளையும், நாடுகளையும் கடந்து திருஞானசம்பந்தர் திருக்கொடுங்குன்றம் அடைந்ததை,

**"மன்றல்மலர்ப் பிறங்கல்மருங்**
**கெறிந்துவரு நதிகள்பல**
**சென்றணைந்து கடந்தேறித்**
**திரிமருப்பின் கலைபுணர்மான்**

**கன்றுதெறித் தெனவுகைக்கும்**

**கானஅதர் கடந்தணைந்தார்**

**கொன்றைநறுஞ் சடைமுடியார்**

**மகிழ்ந்ததிருக் கொடுங்குன்றம்"** [15]

என்னும் சேக்கிழாரின் அடிகளால் அறியமுடிகிறது. திருக்கொடுங்குன்றத்து இறைவன் மேல் நட்டபாடை பண்ணில் அமைந்த பதிகத்தைப் பாடிப் பின்பு அங்கிருந்து யானை மலை உள்ளிட்ட மலைகளைக் கடந்து திருஆலவாய் திருத்தலத்தைத் திருஞானசம்பந்தர் சென்று அணைந்ததை,

**"கொடுங்குன்றத் தினிதமர்ந்த**

**கொழும்பவளச் செழுங்குன்றை**

**அடுங்குன்றம் உரித்தானை**

**வணங்கிஅருந் தமிழ்பாடி**

**நெடுங்குன்றம் படர்கானும்**

**நிறைநாடுங் கடந்துமதி**

**தொடுங்குன்ற மதில்மதுரைத்**

**தொன்னகர்வந் தணைகின்றார்"** [16]

என்ற பெரியபுராண பாடல் குறிப்பிடும்.

**இறைவன்:**

ஆவினின்று பெறப்படும் ஆனைந்தால் திருமுழுக்காட்டப்படுபவனான இறைவன், தேன் போன்ற இனிமையான மொழியுடைய இறைவியுடன் இவ்வுலகம் ஏற்றம் பெறத் திருக்கொடுங்குன்றத்தில் இருப்பதை,

**"ஆனிற்பொலி யைந்தும்அமர்ந்**

**தாடியுல கேத்தத்**

**தேனிற்பொலி மொழியாளொடு**

**மேயான்திரு நகரே"** (1:14:1:3-4)

என்ற அடிகள் உணர்த்தும்.

இறைவன் கையிலிருக்கும் அனல், கூரிய வேல் போன்று நீண்டும் வெண்மையான ஒளி நிறைந்தும் விளங்குவதை,

**“அயில்வேன்மலி நெடுவெஞ்சுடர்**

**அனலேந்திநின் றாடி”** (1:14:2:3)

என்ற அடியினால் அறியமுடிகிறது.

**“கிளர்கங்கையொ டிளவெண்மதி**

**கெழுவுஞ்சடை தன்மேல்**

**வளர்கொன்றையும் மதமத்தமும்**

**வைத்தான்வள நகரே”** (1:14:3:3-4)

என்ற பாடல் அடிகள், இறைவன் பொங்கி எழும் கங்கை, வெண்மதி ஆகியவை அழகுறப் பொருந்திய சடைமேல் மணமிக்க கொன்றை மலரையும் ஊமத்தை மலரையும் சூடி நிற்கும் பாங்கை உணர்த்துகின்றன. பிறிதோர் இடத்தில், இறைவன் அரவத்துடன் வெண்மதியைச் சூடி, மணம் கமழும் கொன்றை மலரைத் தன் சடைமேல் நிரவ வைத்துள்ள பான்மையை,

**“அரவத்தொடு மிளவெண்பிறை**

**விரவும்மலர்க் கொன்றை**

**நிரவச்சடை முடிமேலுடன்**

**வைத்தானெடு நகரே”** (1:14:7:3-4)

என்ற பாடல் அடிகளில் குறிப்பிடுகின்றார் திருஞானசம்பந்தர்.

திருக்கொடுங்குன்றத்தில் உறையும் இறைவன், இறைவியுடன் மேவி நிற்கும் தன்மையை,

**“பெருமானவ னுமையாளொடு**

**மேவும்பெரு நகரே”** (1:14:4:4)

என்ற பாடல்அடி குறிப்பிடும்.

நாகத்துடன் வெண்பிறையைச் சூடிய இறைவன், தன் ஒரு பாகமாக அழகிய நல்லாளான இறைவியைக் கொண்டிருப்பதை,

**“நாகத்தொடும் இளவெண்பிறை**

**சூடிந்நல மங்கை**

**பாகத்தவ னிமையோர்தொழ**

**மேவும்பழ நகரே”** (1:14:5:3-4)

என்ற அடிகள் சுட்டும்.

அடியார்கள், இறைவனை சீவமுக்தி தரும் தலைவனாக நினைத்து, மனத்துட் வைத்துத் தியானிப்பார்கள். இவ்வாறு அடியார்கட்கு ‘அம்மான்’ ஆக விளங்கும் இறைவன் அவர்களுக்கு அருள் செய்யும் ‘பெம்மான்’ ஆக இருப்பதை,

**“அம்மானென வுள்கித்தொழு**

**வார்கட்கருள் செய்யும்**

**பெம்மானவ னிமையோர்தொழ**

**மேவும்பெரு நகரே”** (1:14:6:3-4)

என்ற பாடல் அடிகள் உணர்த்தி நிற்கும்.

**“பெம்மான் பெருநந்தி பேச்சற்ற பேரின்பத்(து)**

**அம்மான் அடிதந்(து) அருட்கடல் ஆடினோம்”** [17]

என்று திருமூலர் திருமந்திரமும் இறைவனை ‘பெம்மான்’ என்றும் ‘அம்மான்’ என்றும் அழைப்பதைக் காணமுடிகின்றது.

பதிகத்தின் கடைசி பாடலில் திருஞானசம்பந்தர் இறைவனின் குணத்தை வழுத்திப் பாடும் பொழுது, கூனற் பிறையைச் சடையின் மீது மிகுந்த அழகு பொருந்துமாறு சூடியவன் என்பதை,

**“கூனற்பிறை சடைமேன்மிக**

**வுடையான்கொடுங் குன்றை”** (1:14:11:1)

என்ற அடியில் குறிப்பிடுகின்றார்.

**புராணச் செய்திகள்:**

இறைவன் வில்லில் கணை தொடுத்து முப்புரங்களை எரித்ததை,

**“எயில்முன்பட எய்தானவன்**

**மேயவ்வெழில் நகரே”** (1:14:2:4)

என்றும்,

**“பொருமாவெயில் வரைவில்தரு**

**கணையிற்பொடி செய்த”** (1:14:4:3)

என்றும், இரு இடங்களில் தன் திருக்கொடுங்குன்றத் தேவாரத்தில் குறிப்பிடுகின்றார் திருஞானசம்பந்தர்.

இராவணனின் பத்துத் தலையை நெறித்ததும், மறைக்கு உரியவனான நான்முகன், நெடியோனான திருமால் இருவரும் அடிமுடி காணப் போந்து தோற்றமை ஆகிய இரண்டினையும் முறையே பதிகத்தின் எட்டு, ஒன்பதாவது பாடல்களில் பாடியுள்ளார் திருஞானசம்பந்தர்.

**இயற்கை:**

திருக்கொடுங்குன்றத்துச் சாரல்கள், கூனற்பிறை வானில் உள்ள மழை தரும் சூல் முற்றிய மேகங்களைக் கிழித்து ஓடிச் சென்று சேரும் இயல்பினை,

**"வானிற்பொலி வெய்தும்மழை**

**மேகங்கிழித் தோடிக்**

**கூனற்பிறை சேருங்குளிர்**

**சாரற்கொடுங் குன்றம்"** (1:14:1:1-2)

என்ற அடிகள் உரைக்கும்.

சாரல்களில் சுற்றித்திரியும் ஆண் மயில்கள் கற்பு நிலையில் நின்று தத்தம் பெண் மயில்களைத் தழுவி தோகையை விரித்தாடுவதும், குயில்கள் இன்னிசை பாடுவதுமான குளிர்ந்த சோலைகளின் அழகினை,

**"மயில்புல்குதண் பெடையோடுட**

**னாடும்வளர் சாரல்**

**குயிலின்னிசை பாடுங்குளிர்**

**சோலைக்கொடுங் குன்றம்"** (1:14:2:1-2)

என்ற அடிகள் எடுத்துக்காட்டுகிறது.

குளிர்ச்சி பொருந்திய மலைச்சாரல்களில் உள்ள அருவிகளின் குளிர்ந்த நீர் ஒளி பொருந்திய மணிகள், பசும்பொன், வாசனை மிகுந்த மலர்கள் ஆகியனவற்றைத் தள்ளிக் கொண்டு வந்து சொரிவதை,

**"மிளிரும்மணி பைம்பொன்னொடு**

**விரைமாமல ருந்திக்**

**குளிரும்புனல் பாயுங்குளிர்**

**சாரற்கொடுங் குன்றம்"** (1:14:3:1-2)

என்ற அடிகள் உரைக்கும்.

**"மேகத்திடி குரல்வந்தெழ**

**வெருவில்வரை யிழியும்**

**கூகைக்குல மோடித்திரி**

**சாரற்கொடுங் குன்றம்"** (1:14:5:1-2)

என்ற அடிகள், மேகத்தினின்று இடிகுரல் எழுவதைக் கேட்டு அஞ்சிய கோட்டான்கள், மலையை விட்டு இறங்கி அங்கும் இங்கும் ஓடித்திரியும் திருக்கொடுங்குன்றத்து சாரல்களின் அழகினைக் கூறுகிறது.

மரவம், மாதவி என்னும் குருக்கத்தி, முல்லை ஆகிய மலர்களின் அரும்புகள் குரவ மலர்களோடு விரவும் பொழில்கள் சூழ்ந்த குளிர்ச்சி பொருந்திய திருக்கொடுங்குன்றத்தை,

**"மரவத்தொடு மணமாதவி**

**மௌவல்லது விண்ட**

**குரவத்தொடு விரவும்பொழில்**

**சூழ்தண்கொடுங் குன்றம்"** (1:14:7:1-2)

என்ற அடிகள் உணர்த்திக் காட்டும்.

திருஞானசம்பந்தர் திருக்கொடுங்குன்றம் தேவாரத்தில் ஐந்து பாடல்களில் யானையைக் குறிப்பிடுகிறார்.

பருத்த கரிய மத யானைகள், சிங்கங்கள் நீரும் உணவும் தேடி மலையினின்று கீழிறங்கி வந்து திரியும் சாரல்களும், மணியையும் பொன்னையும் கொண்டு வந்து கொட்டும் அருவிகளும் நிறைந்த திருக்கொடுங்குன்றத்தை,

**"பருமாமத கரியோடரி**

**யிழியும்விரி சாரல்**

**குருமாமணி பொன்னோடிழி**

**யருவிக்கொடுங் குன்றம்"** (1:14:4:1-2)

என்ற பாடலடிகளால் அறியமுடிகிறது.

**"கைம்மாமத கரியின்னின**

**மிடியின்குர லதிரக்**

**கொய்ம்மாமலர்ச் சோலைபுக**

**மண்டுங்கொடுங் குன்றம்"** (1:14:6:1-2)

என்ற பாடல் அடியில், மத யானைகள் இடியின் குரலைக் கேட்டு அதிர்ந்து, கொய்யத்தக்கதான நல்ல மலர்களை உடைய சோலைகளில் ஒளிந்து வாழும் இயல்பினைத் திருஞானசம்பந்தர் குறிப்பிடுகின்றார்.

யாரும் தடுப்பார் இன்றி அலையும் யானைகள், முதிர்ந்த மூங்கில்களைப் பிடுங்கி எறிந்தும், தானே உருவான நீர்ச்சுனையில் இறங்கி நீராடும் விதத்தை,

**"முட்டாமுது கரியின்னின**

**முதுவேய்களை முனிந்து**

**குட்டாச்சுனை யவைமண்டிநின்**

**றாடுங்கொடுங் குன்றம்"** (1:14:8:1-2)

என்ற அடிகளால் அறியமுடிகின்றது. இதில் 'குட்டாச்சுனை' என்பது 'பொல்லாப்பிள்ளையார்' என்பது போல, மனிதனால் உருவாக்கப்படாது, தானே இயற்கையாய் உருவான சுனை என்பதாகும்.

அறைந்து கொல்லும் இயல்பினதான சிங்கத்தின் கர்ச்சனையைக் கேட்டு அஞ்சிய யானை மன எழுச்சி குன்றி, முழையிடை வைகுவதை,

**"அறையும்மரி குரலோசையை**

**யஞ்சியடு மானை**

**குறையும்மன மாகிம்முழை**

**வைகுங்கொடுங் குன்றம்"** (1:14:9:1-2)

என்ற பாடல் அடிகள் உணர்த்தி நிற்கும். மேலும் வலிமையான சிங்கங்கள் வருவதைக் கண்ட மதயானைகள் தம் வலிமையால் மலையைக் குத்தி குகையை ஏற்படுத்தி அதிற் சென்று வைகுதலை மேற்கொள்ளும். இதனை,

**"மத்தக்களி றாளிவ்வர**

**வஞ்சிம்மலை தன்னைக்**

**குத்திப்பெரு முழைதன்னிடை**

**வைகுங்கொடுங் குன்றம்"** (1:14:10:1-2)

என்ற பாடல் அடிகள் சுட்டி நிற்கும்.

**திருத்தலம்:**

திருக்கொடுங்குன்றம் திருத்தலத்தை திருஞானசம்பந்தர் தன்னுடைய தேவாரத்தில், எழில் நகர், வள நகர், பெரு நகர், பழ நகர், நெடு நகர் எனக் கூறிச் சிறப்பித்துள்ளார். எனவே திருஞானசம்பந்தர் காலத்தில் திருக்கொடுங்குன்றம் பழமையான, வளம் நிறைந்த, எழில் கொண்ட பெரிய நகரமாய் இருந்ததை அறியமுடிகிறது.

திருஞானசம்பந்தர் திருக்கொடுங்குன்றம் தேவாரத்தில் கொன்றை இரண்டு இடங்களிலும், ஊமத்தை, மரவம், மாதவி, முல்லை, குரா ஆகிய மலர்கள் ஓர் இடத்திலும் குறிப்பிடப்பட்டுள்ளன.

திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோர் திருக்கொடுங்குன்றம் வந்ததற்கான சான்றுகள் பெரிய புராணத்துள் காணப்பெறவில்லை. ஆயினும், **"கொடுங்குன்றன் காண்"** (6:24:9:3) என்று திருவாரூர்த் திருத்தாண்டகத்தில் திருநாவுக்கரசரும், **"கொடுக்கி லாதானைப் பாரி யேயென்று கூறி னுங்கொடுப் பாரிலை"** (7:34:2:2) என்று திருப்புகலூர் தேவாரத்தில் சுந்தரரும் நினைந்துள்ளனர்.

**திருப்புத்தூர்:**

முதல் திருமுறையில் அமைந்த திருஞானசம்பந்தர் தேவாரப் பதிகம் ஒன்றும், ஆறாம் திருமுறையில் அமைந்த திருநாவுக்கரசர் தேவாரப் பதிகம் ஒன்றும் திருப்புத்தூர் திருத்தலத்திற்கு உள்ளது.

**திருஞானசம்பந்தர் தேவாரம்:**

திருஞானசம்பந்தர், நின்றசீர் நெடுமாற நாயனார், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் ஆகியோர் திருஆலவாய், திருப்பரங்குன்றம், திருவாப்பனூர் ஆகிய திருத்தலங்களை வணங்கிப் போற்றிப் பின்பு திருப்புத்தூர் போந்து சில நாட்கள் தங்கியிருந்தனர் என்பதை,

**"ஆறணிந்தார் தமைவணங்கி அங்குப் போற்றி**
**அணி ஆப்ப னூரணைந்து பணிந்து பாடி**
**நீறணிந்த செல்வர்பதி பிறவுஞ் சேர்ந்து**
**நிலவுதிருப் பதிகங்கள் நிகழப் பாடிச்**

**சேறணிந்த வயற்பழனக் கழனி சூழ்ந்த**

**சிரபுரத்து வந்தருளுஞ் செல்வர் செங்கண்**

**ஏறணிந்த வெல்கொடியார் திருப்புத் தூரை**

**எய்திஇறைஞ் சிச்சிலநாள்அங் கிருந்தா ரன்றே"** [18]

என்ற பெரிய புராணத்தின் பாடலால் அறியப்படும்.

திருப்புத்தூரில் 'தக்கராகம்' அமைந்த பதிகம் ஒன்றைப் பாடிப் பின்னர் நால்வரும் திருப்பூவணம் சென்று அணைந்தனர், என்பது திருமுறைகளின் வழித் தெரியவருகிறது.

**இறைவன்:**

கங்கை தங்குதற்கு இடமான முடியை உடைய இறைவன், எங்கள் தலைமேல் வைத்து தொழத்தக்கவன் என்பதை,

**"திங்க ளோடு திளைக்குந் திருப்புத்தூர்க்**

**கங்கை தங்கு முடியா ரவர்போலும்**

**எங்க ளுச்சி யுறையு மிறையாரே"** (1:26:1:2-4)

என்ற பாடல் அடிகளில் குறிப்பிடுகிறார் திருஞானசம்பந்தர். தன்னை ஒருமையில் விளிக்காது, 'எங்கள்' என்று பன்மையில் விளித்திருப்பது திருஞானசம்பந்தருடன் நின்றசீர் நெடுமாற நாயனார், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் ஆகியோர் உடனிருந்தமையை புலப்படுத்தும்.

பன்றியின் முள்ளையும் பல்லையும் புனைந்துள்ள இறைவன், குற்றம் இன்றி திருப்புத்தூரில் உறைந்திருப்பதை,

**"ஊனமின்றி யுறைவா ரவர்போலும்**

**ஏன முள்ளு மெயிறும் புனைவாரே"** (1:26:2:3-4)

என்ற அடிகள் சுட்டி நிற்கும்.

**"தாங்கு திங்கள் தவழ்புன் சடையாரே"** (1:26:3:4)

என்ற அடியின் மூலம் இறைவன் தன் செஞ்சடைமேல் திங்களைத் தாங்கியவன் என்பது அறியப்படுகிறது.

எம் இறைவன், ஏறு கொடியுடன் திருப்புத்தூரில் ஊறிய வாழ்க்கையை உடையவன் என்பதைத் திருஞானசம்பந்தர்,

**“ஊறல் வாழ்க்கை யுடையா ரவர்போலும்**

**ஏறு கொண்ட கொடியெம் மிறையாரே”** (1:26:4:3-4)

என்று குறிப்பிடுகிறார். இதில் ‘ஊறல் வாழ்க்கை’ என்பது, பல காலம் திருப்புத்தூரில் இறைவன் உறைந்திருப்பதை உணர்த்துகிறது. இதன் மூலம் திருப்புத்தூர் இறைவன் தொன்மையானவன் என்பது அறியப்படுகிறது. இப்பாடலிலும் ‘எம் இறையாரே’ என்று பன்மையில் விளித்திருத்தலைக் காணமுடிகிறது.

பெண்ணாகிய கங்கை தங்கும் அழகு பொருந்திய சென்னியை உடைய இறைவன் அன்பு பெருகுமாறு அருளும் தன்மையுடையவர் என்பது,

**“பசைவி ளங்கப் படித்தா ரவர்போலும்**

**வசைவி ளங்கும் வடிசேர் நுதலாரே”** (1:26:5:3-4)

என்ற அடியினால் அறியப்படுகிறது.

வெண்ணிற விடையின் உருவம் தீட்டப்பெற்ற கொடியை உடைய இறைவனை,

**“ஒண்ணி றத்த வொளியா ரவர்போலும்**

**வெண்ணி றத்த விடைசேர் கொடியாரே”** (1:26:6:3-4)

என்ற அடிகளில் குறிப்பிடும் திருஞானசம்பந்தர், இறைவன் வெண்மையான ஒளிப்பிழம்பின் வடிவானவர் என்று உணர்த்துகிறார்.

கரிய நிறம் பொருந்திய விடம் மருவும் மிடறு உடைய இறைவன், மகிழ்ந்து இறைவியைத் தன் பாகமாகக் கொண்டவன் என்பது,

**“தையல் பாக மகிழ்ந்தா ரவர்போலும்**

**மையு ணஞ்ச மருவு மிடற்றாரே”** (1:26:7:3-4)

என்ற அடிகளால் உணரப்படும்.

இறைவன், திருப்புத்தூரில் உறைவதால் மேலும் பெருகியவனாய் இருப்பதை,

**“பெருகி வாழும் பெருமா னவன்போலும்”** (1:26:9:3)

என்ற அடி சுட்டும். பெருமை பொருந்திய இறைவன் திருப்புத்தூர் திருத்தளியில் இருப்பதால் மேலும் பெருமை பெருகியவனானான் என்பது இதனால் புலப்படுகிறது.

**“ஆறு நான்கு மமர்ந்தா ரவர்போலும்**

**ஏறு கொண்ட கொடியெம் மிறையாரே”** (1:26:10:3-4)

என்ற பாடல் அடிகள், ஏறு கொடியைக் கொண்ட எம் இறைவர் ஆறு அங்கங்களாகவும் நான்கு வேதங்களாகவும் இருப்பதாக திருஞானசம்பந்தர் குறிப்பிடுவதை உரைக்கின்றன. இப்பாடலிலும் பன்மை உருபே பயன்படுத்தப்பட்டுள்ளமை நோக்குதற்குரியது.

பதிகத்தின் இறுதியில் திருப்புத்தூரில் உறையும் இறைவனை 'செல்வர்' என்றும் 'சேடர்' என்றும் திருஞானசம்பந்தர் அழைப்பதை,

**"செல்வர் சேட ருறையுந் திருப்புத்தூர்"** (1:26:11:2)

என்ற அடியினால் அறியலாம்.

**இயற்கை:**

விருப்பம் கொள்ளக்கூடிய தேன், விம்மிச் சுரந்து எங்கும் மணம் வீசக் கூடியதான பொழில்களும் சோலைகளும் வானின்கண் உள்ள திங்களுடன் ஒன்றித் திளைக்கும் திருப்புத்தூரை,

**"வெங்கள் விம்மு வெறியார் பொழிற்சோலை**

**திங்க ளோடு திளைக்குந் திருப்புத்தூர்"** (1:26:1:1-2)

என்ற அடிகள் குறிப்பிடுகிறது.

இப்பொழில்கள் இயல்பாக எழில் கொண்டும், எல்லா திசைகளிலும் சூழ்ந்துள்ளமையை,

**"இசைவி ளங்கு மெழில்சூழ்ந் தியல்பாகத்**

**திசைவி ளங்கும் பொழில்சூழ் திருப்புத்தூர்"** (1:26:5:1-2)

என்ற பாடல் அடிகள் சுட்டிநிற்கும்.

பொழில்களிலும் சோலைகளிலும் கமழும் நறுமணம், மேகம் வரை வீசும் தன்மையை,

**"கருக்க மெல்லாங் கமழும் பொழிற்சோலை"** (1:26:8:1)

என்பதினால் அறியலாம்.

வேனிற் காலத்தில் எங்கும் மணம் பரப்பும் பொழில்களிலும் சோலைகளிலும் உள்ள தேனை உண்டு வண்டுகள் திளைப்பதை,

**"வேனல் விம்மு வெறியார் பொழிற்சோலை**

**தேனும் வண்டுந் திளைக்குந் திருப்புத்தூர்"** (1:26:2:1-2)

என்ற பாடல் அடிகள் உணர்த்துகின்றன.

நல்ல வரிகளை உடைய வண்டுகள் இசை பாடுவதை,

**“பாங்கு நல்ல வரிவண் டிசைபாடத்**

**தேங்கொள் கொன்றை திளைக்குந் திருப்புத்தூர்”** (1:26:3:1-2)

என்ற அடிகள் குறிப்பிட்டு, அவ்வண்டுகளின் இசைக்காகத் தேனைச் சொரியும் கொன்றை மலர்கள் திளைத்து விளங்கும் எனத் திருப்புத்தூரைப் போற்றுகிறது.

மணம் வீசும் மலர்ந்த மலர்களைத் தன் வாயால் கவ்வி அதில் உள்ள தேனை உண்டு திளைக்கும் வண்டின் செயலை,

**“நாற விண்ட நறுமா மலர்கவ்வித்**

**தேறல் வண்டு திளைக்குந் திருப்புத்தூர்”** (1:26:4:1-2)

என்ற அடிகள் சுட்டி நிற்கும்.

மணம் நாறும் வெண்ணிற மலர்களை அடித்துச் செல்லும் தெள்ளிய புனல் பாயும் திருப்புத்தூரை,

**“வெண்ணி றத்த விரையோ டலருந்தித்**

**தெண்ணி றத்த புனல்பாய் திருப்புத்தூர்”** (1:26:6:1-2)

என்ற அடிகள் விளக்கும்.

**“நெய்த லாம்பல் கழுநீர் மலர்ந்தெங்கும்”** (1:26:7:1)

என்ற அடியின் மூலம், திருப்புத்தூரில் நெய்தல், நீலஆம்பல், செங்கழுநீர் ஆகிய மலர்கள் எங்கும் மலர்ந்துள்ள பான்மையை அறியலாம்.

**திருத்தலம்:**

திருப்புத்தூர் திருத்தலத்தில் உள்ள திருக்கோயிலான ‘திருத்தளியை’,

**“ஓங்கு கோயி லுறைவா ரவர்போலும்”** (1:26:3:3)

என்ற அடியில் குறிப்பிடுகிறார் திருஞானசம்பந்தர். ‘ஓங்கு கோயில்’ என்பது மிக்க புகழ் வாய்ந்த திருக்கோயில் என்ற பொருளைத் தரும். அ.்.தாவது கற்றளியால் கட்டப்பெற்றதனால் மிகுந்த புகழை அடைந்தது. இதை இப்பதிகத்தின் ஒன்பதாவது பாடலில் இறைவனை,

**“பெருகி வாழும் பெருமா னவன்போலும்”** (1:26:9:3)

என்று பெருமை மேலும் பெருகியவன் எனக் கூறுவதனின்று அறியலாம். மேலும்,

**“இசைவி ளங்கு மெழில்சூழ்ந் தியல்பாக”** (1:26:5:1)

என்ற அடியில், புகழால் விளக்கம் பெற்ற திருப்புத்தூர் என்று குறிப்பிடுகிறார் திருஞானசம்பந்தர்.

திருப்புத்தூரில் செல்வம் நிறைந்தவர்களும் செம்மையானவர்களும் வாழ்வதை,

**“திருக்கொள் செம்மை விழாவார் திருப்புத்தூர்”** (1:26:8:2)

என்ற பாடல் அடி உணர்த்தும்.

திருப்புத்தூர் தெருக்களின் அழகை,

**“மருவி யெங்கும் வளரும் மடமஞ்ஞை**

**தெருவு தோறுந் திளைக்குந் திருப்புத்தூர்”** (1:26:9:1-2)

என்ற பாடல் அடிகளில் குறிப்பிடும் திருஞானசம்பந்தர், அத்தெருக்கள் எங்கும் இளமையான மயில்கள் திளைப்பதைப் பாடுகிறார். திருப்புத்தூர் திருஞானசம்பந்தர் தேவாரத்தில் கொன்றை, நெய்தல், நீலஆம்பல், செங்கழுநீர் ஆகிய மலர்கள் ஓர் இடத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன.

**திருநாவுக்கரசர் தேவாரம்:**

சோழ நாட்டின் திருப்பூந்துருத்தியில் இருந்த திருநாவுக்கரசரை திருஞானசம்பந்தர் கண்டு பாண்டிய நாட்டில் சைவத்தைத் தழைக்கச் செய்தமையையும் நின்றசீர் நெடுமாற நாயனாரின் கூனை நிமிர்த்தியதையும் கூறி, மங்கையர்க்கரசியாரின் அன்பையும் குலச்சிறையாரின் பெருமையையும் விவரித்தார். இதைக் கேட்ட திருநாவுக்கரசர் பாண்டிய நாட்டைக் காண விழைந்து திருப்பூந்துருத்தியினின்று முதலில் திருப்புத்தூரை அடைந்து பதிகம் பாடித் திருஆலவாய்ப் போந்தார். இதை,

**“ஆண்டஅர சங்கணர்சீர்**

**அருள்பெற்றப் பதிநின்றும்**

**பாண்டிநாட் டெழுந்தருளும்**

**பான்மையராய்த் தென்திசைபோய்க்**

**காண்டகைய திருப்புத்தூர்**

**பணிந்தேத்திக் கதிர்மதியம்**

**தீண்டுகொடி மதில்மதுரைத்**

**திருவால வாய்சேர்ந்தார்"** [19]

என்ற பெரிய புராணத்தின் பாடலால் அறியமுடிகிறது.

**இறைவன்:**

மணம்மிக்க கொன்றைக் கண்ணியைச் சூடி, போர்த் தொழில் கொண்ட விடையை வாகனமாகக் கொண்டு விண்ணோர்களால் விரும்பி தொழுதேத்தப்படும் இறைவன், ஏழு உலகங்களாக விரிந்தும் பல உயிர்களுக்குள்ளே விளங்கும் ஆத்ம தத்துவமாய் இருப்பவன். இதனை,

**"புரிந்தமரர் தொழுதேத்தும் புகழ்தக் கோன்காண்**

**போர்விடையின் பாகன்காண் புவன மேழும்**

**விரிந்துபல வுயிராகி விளங்கி னான்காண்**

**விரைக்கொன்றைக் கண்ணியன்காண்"** (6:76:1:1-2)

என்ற பாடல் அடிகள் விளக்கும்.

திருமாலைத் தன் பாகமாகக் கொண்டு தீர்த்தனாக விளங்கும் இறைவனை, **"தீர்த்தன்காண் திருமாலோர் பாகத் தான்காண்"** (6:76:1:3) என்ற அடி உணர்த்தும். திருமாலைத் தன் பாகமாகக் கொண்டவன் என்பது திருமால், பிரம்மன் உள்ளிட்ட அனைவரையும் சிருட்டித்தவன் என்றவாறு ஆகும்.

மாமறைகளின் பொருளாகவும் மண், விண், வெந்தழல், காற்று, நீர், உயர்ந்த மலை ஆகியவனும், நஞ்சுண்டதால் கறுத்த கண்டம் கொண்டவனும், எண் தோளினனுமான இறைவன், கச்சை அணிந்த முலைகளையுடைய இறைவியைத் தன் பாகமாகக் கொண்டு கயிலை மலையில் வாழ்வதை,

**"வாராரும் முலைமங்கை பாகத் தான்காண்**

**மாமறைக ளாயவன்காண் மண்ணும் விண்ணுங்**

**கூரார்வெந் தழலவனுங் காற்றும் நீருங்**

**குலவரையும் ஆயவன்காண் கொடுநஞ் சுண்ட**

**காராருங் கண்டன்காண் எண்டோ ளன்காண்**

**கயிலைமலைப் பொருப்பன்காண்..."** (6:76:2:1-3)

என்ற அடிகள் விளக்கி நிற்கும்.

மின்னலைப் போன்ற கொடி இடையாளான இறைவியின் விருப்பத்திற்கு உரியவனும் மலையைச் சிலையாக வளைத்த கையினனான இறைவனை,

**“மின்காட்டுங் கொடிமருங்குல் உமையாட் கென்றும்**

**விருப்பவன்காண் பொருப்புவலிச்சிலைக்கை யோன்காண்”**

(6:76:3:1)

என்ற பாடல் அடிகள் போற்றி உரைக்கும்.

இதழ்கள் பொருந்திய தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரம்மன், திருமால், இந்திரன் ஆகியோரால் இறைவன் வணங்கப்படுவதை,

**“ஏடேறு மலர்க்கமலத் தயனும் மாலும்**

**இந்திரனும் பணிந்தேத்த இருக்கின் றான்காண்**

**தோடேறு மலர்க்கடுக்கை வன்னி மத்தந்**

**துன்னியசெஞ் சடையான்காண்...”** (6:76:4:1-2)

என்ற பாடல் அடிகள் உணர்த்தி, அவனின் செஞ்சடையில் கொன்றை, வன்னி, ஊமத்தை மலர்கள் செறிந்துள்ள அழகினை சுட்டுகின்றன.

மறுபிறவிக்குக் காரணமான வலிய நோயான வினையைப் போக்குபவன் என்பதை, **“கருமருவு வல்வினைநோய் காற்றி னான்காண்...”** (6:76:5:1) என்ற அடியும், ‘கற்பக விருட்சம் போன்ற வள்ளல் தன்மை உடைய அளகைக் கோன்’ என்றழைக்கப்படும் குபேரனின் நண்பன் இறைவன் என்பதை, **“தருமருவு கொடைத்தடக்கை யளகைக் கோன்றன் சங்காதி...”** (6:76:5:3) என்ற அடியும் முறையே உணர்த்தி நிற்கும்.

மூங்கிலைப் போன்ற தோள்களையுடைய இறைவி காணுதற் பொருட்டு, சீற்றம் மிகுந்த பாம்பைக் கையில் கங்கணமாய்க் கொண்டு பல நட்டங்களைக் கலந்தாடியவனும், மண்டையோட்டில் உணவை ஏற்பவனும், பவளம் போன்று சிவந்த மலையை ஒத்த வடிவினான இறைவன், சினம் கொண்ட விடையை யானையைப் போன்று வாகனமாகக் கொண்டு, சீற்றம் பொருந்திய பாம்பை கச்சையாக உடுத்தியவன் என்பதை,

**“காம்பாடு தோளுமையாள் காண நட்டங்**

**கலந்தாடல் புரிந்தவன்காண் கையில் வெய்ய**

**பாம்பாடப் படுதலையிற் பலிகொள் வோன்காண்**

**பவளத்தின் பருவரைபோல் படிவத் தான்காண்**

**தாம்பாடு சினவிடையே பகடாக் கொண்ட**

**சங்கரன் காண் பொங்கரவக் கச்சை யோன்காண்”** (6:76:6:1-3)

என்ற பாடல் அடிகள் விளக்கி நிற்கும்.

மணம் விரவும் கொன்றை, வன்னி இவற்றுடன் ஒளி விளங்கும் திங்களைத் தன் விரிந்த சடைமேல் சூடியவனும், புள்ளிகளை உடைய நாகத்தையும், எலும்பு மாலை பூண்டவனும், போர்த் தொழில் கொண்ட புலியின் தோலை ஆடையாக உடுத்தியவனுமான இறைவனை,

**“வெறிவிரவு மலர்க் கொன்றை விளங்கு திங்கள்**

**வன்னியொடு விரிசடைமேல் மிலைச்சி னான்காண்**

**பொறிவிரவு கதநாகம் அக்கி னோடு**

**பூண்டவன்காண் பொருபுலித்தோ லாடை யான்காண்**

**அறிவரிய நுண்பொருள்க ளாயி னான்காண்**

**ஆயிரம்பே ருடையவன்காண்...”** (6:76:7:1-3)

என்ற பாடல் அடிகள் குறிப்பிட்டுரைக்கும். மேலும் இறைவனே ஆயிரம் நாமங்கள் கொண்டு விளங்கினானும் அறிதற்குரிய நுண்பொருளாய் உள்ளவன் என்றும் உரைக்கின்றது.

**“அண்ணலை வானவர் ஆயிரம் பேர்சொல்லி**

**உன்னுவர் உள்மகிழ்ந் (து) உள்நின் றடிதொழ”** [20]

என்ற திருமந்திரப் பாடல் அடிகள், இறைவனை வானவர்கள் ஆயிரம் நாமங்களைச் சொல்லி போற்றுவதைக் குறிப்பிடுகின்றது.

**“வெண்மதியைத் தலைசேர்த்த தன்மை யோன்காண்...”** (6:76:8:2)

என்ற அடி, இறைவன் தலையில் வெண்மையான சந்திரனைச் சூடியுள்ளதை குறிப்பிடுகிறது.

தேவர்களுக்கும் மற்றவர்களுக்கும் பராபரனாய் விளங்கும் இறைவன், அடியவர்களுக்குத் துணையாய் இருப்பதை,

**“பற்றவன்காண் ஏனோர்க்கும் வானோ ருக்கும்**

**பராபரன்காண்..."** (6:76:9:1)

என்ற அடி உணர்த்தும்.

**".... கொடுஞ்சினத்தை யடங்கச் செற்று**

**ஞானத்தை மேன்மிகுத்தல் கோளாக் கொண்ட**

**பெற்றியன்காண்...."** (6:76:9:2-3)

என்ற அடிகள், இறைவன் கொடிய சினத்தை அடக்கி ஞானத்தை மேலும் பெருக்கும் கொள்கையைக் கொண்ட பெற்றியைக் குறிப்பிடுகிறது.

இறைவன், விடம் கொண்ட அரவத்தையே செம்பொன்னாக மதித்து ஆரமாகவும் பூணாகவும் அணிந்த பான்மையை,

**"அரமதித்துச் செம்பொன்னி னாரம் பூணா**

**அணிந்தவன்காண்...."** (6:76:10:3)

என்ற அடியினால் அறியலாம்.

திருநாவுக்கரசர் திருப்புத்தூர் தேவாரத்தில் இயற்கையைப் பற்றிப் பாடும் பொழுது பிற திருத்தலங்களின் வளத்தையும் குறிப்பிட்டுள்ளார்.

இறைவன், திருஆலவாய் திருத்தலத்தில் 'தருமி' என்பவனுக்கு தானே பாட்டை ஈந்து, தமிழ்ச் சங்கத்தில் அவனுக்கு 'பொற்கிழி' கிடைக்கச் செய்தமையை,

**"நன்பாட்டுப் புலவனாய்ச் சங்க மேறி**

**நற்கனகக் கிழிதருமிக் கருளி னோன்காண்"** (6:76:3:2)

என்ற அடிகளால் குறிப்பிடுகிறார் திருநாவுக்கரசர்.

**"சங்கத் தமிழ்மாலை"** [21] என்று ஆண்டாளும், **"சங்கமுகத் தமிழ்"** [22] என்று திருமங்கையாழ்வாரும் தமிழ்ச் சங்கத்தைக் குறித்திருப்பது நோக்குதற்குரியது.

திருப்புத்தூரில் உறையும் இறைவன் யார் எனில், கண்டவுடன் விருப்பம் கொள்ளும் அழகிய திருக்கச்சியேகம்பத்தில் அருளும் இறைவனே யாவான் என்பதை, **"...காமருபூங் கச்சியே கம்பத் தான்காண்"** (6:76:5:1) என்ற அடி விளக்கி நிற்கும்.

இப்பேருலகில், பிணிகளைத் தீர்ப்பவனான இறைவன் பெரும்பற்றப்புலியூர் ஆன தில்லையில் ஆடும் தன்மையை,

**"பெருமருவு பேருலகில் பிணிகள் தீர்க்கும்**

**பெரும்பற்றத் தன்புலியூர் மன்றா டிகாண்"** (6:76:5:2)

என்ற அடி கூறி நிற்கும்.

திருவாரூர் திருத்தலத்தில் அமர்ந்திருக்கும் ஒப்பற்ற யானையான இறைவன், திருப்புத்தூர் திருத்தளியிலும் நிலவி திருநாவுக்கரசர் சிந்தையிலும் உறைந்திருப்பதை,

**"ஆரூரில் தனியா னனகாண்"** (6:76:5:3)

என்ற பாடல் அடி குறிப்பிடுகின்றது.

**புராணச் செய்திகள்:**

வேதம் நான்கையும் அறிந்து படைப்புத் தொழிலைப் புரிந்த பிரம்மன், தானே இவ்வுலகிற்கு முதன்மையானவன் என்று இறுமாந்திருந்தான். இதையறிந்த முழுமுதற் பொருளான இறைவன் பிரம்மனின் ஒரு சிரத்தைக் கொய்தனன். இதை திருநாவுக்கரசர்,

**"....வேதம் நான்கும்**

**தெரிந்துமுதற் படைத்தோனைச சிரங்கொண்டோன்காண்"** (6:76:1:2-3)

என்ற அடிகளில் குறிப்பிடுகின்றார்.

இறைவன், பாற்கடலை கடைந்த பொழுது வெளிப்பட்ட நஞ்சை உண்டதால் கறுத்த கண்டத்தைப் பெற்றதை,

**"....கொடுநஞ் சுண்ட**

**காராருங் கண்டன்காண்...."** (6:76:2:2-3)

என்ற அடிகள் உணர்த்தும்.

**"புக்கடைந்த வேதியற்காக் காலற் காய்ந்த**

**புண்ணியன்காண் வெண்ண கைவெள் வளையாளஞ்ச**

**மிக்கெதிர்ந்த கரிவெருவ உரித்த கோன்காண்"** (6:76:8:1-2)

என்ற அடிகளில், வேதியன் மார்க்கண்டேயனுக்காக எமனை காலாற் காய்ந்ததும், வெண்மையான பற்களும் வெள்ளிய வளையல்கள் பூண்ட இறைவியின் அச்சத்தைப் போக்க, எதிர்த்து வந்த யானையின் தோலை உரித்துப் போர்த்தியதும் ஆகிய புராணங்கள் கூறப்படுகின்றன.

தன்னை மதியாது தக்கன் நிகழ்த்திய வேள்வியை அழித்ததை, **"....தக்கன்றன் வேள்வி செற்ற கொற்றவன்காண்"** (6:76:9:1-2) என்றும், அழகிய மன்மதனை

எரித்ததை, **“பேரெழிலார் காம வேளைச் செற்றவன்காண்”** (6:76:9:3-4) என்றும் தன் பதிகத்தில் குறிப்பிடுகிறார் திருநாவுக்கரசர்.

ஊழியைப் படைக்கும் இறைவனை விட, தான் வலிமையானவன் என்று ஆணவம் கொண்டிருந்த சலந்தரனின் உடம்பைக் கிழித்தவனும், சூரியனின் பல்லைப் பறித்தவனும், இந்திரனின் புயம் நெறித்த வல்லாளனும், கடல் சூழ்ந்த இலங்கை வேந்தனின் சிரத்தை நெறித்தவனுமான இறைவனை,

**“உரம்மதித்த சலந்தரன்தன் ஆகங் கீண்ட**
**வோராழி படைத்தவன்காண் உலகு சூழும்**
**வரம்மதித்த கதிரவனைப் பற்கொண் டான்காண்**
**வானவர்கோன் புயம்நெரிந்த வல்லா ளன்காண்**
**அரமதித்துச் செம்பொன்னி னாரம் பூணா**
**அணிந்தவன்காண் அலைகடல்சூழ் இலங்கை வேந்தன்**
**சிரம் நெரித்த சேவடிகாண்...”** (6:76:10:1-4)

என்ற பாடல் குறிப்பிடுகிறது.

இத்தகைய குணங்களையுடைய திருப்புத்தூரின் திருக்கோயிலாகிய திருத்தளியில் உறையும் இறைவன் என் சிந்தையில் உள்ளவன் என்று பாடல்களின் இறுதியில் திருநாவுக்கரசர் வெளிப்படுத்துகிறார்.

**இயற்கை:**

பொன்னைப் போன்ற நிறமுடைய கொன்றை மரத்தின் அருகே காந்தள் மலர் கையை விரிப்பது போன்று விரிந்து மலர்ந்துள்ளது. இதன் அருகே வண்டு இன்னிசை பாடுகின்றது. அப்பொழுது கொன்றை மலர் உதிர்ந்து காந்தளின் மேல் விழுகின்றது. இக்காட்சியைக் கண்ட திருநாவுக்கரசர் திருஆலவாய் திருத்தலத்தில் இறைவன் நிகழ்த்திட்ட திருவிளையாடலை இயற்கையுடன் பொருத்துகிறார்.

வண்டை இறைவனாகவும், பொன்னிற கொன்றையை பொற்கிழியாகவும் காந்தளை தருமியாகவும் உவமேயப்படுத்துகிறார். வண்டின் இன்னிசையைக் கேட்ட கொன்றை, காந்தள் மேல் விழுவது, இறைவனின் பாட்டிற்கு தருமி பொற்கிழி பெற்றதைப் போல் இருந்தது என்பதனை,

**“நன்பாட்டுப் புலவனாய்ச் சங்க மேறி**

**நற்கனகக் கிழிதருமிக் கருளி னோன்காண்**

**பொன்காட்டக் கடிக்கொன்றை மருங்கே நின்ற**

**புனக்காந்தள் கைகாட்டக் கண்டு வண்டு**

**தென்காட்டுஞ் செழும்புறவின் திருப்புத் தூரில்**

**திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே"** (6:76:3:2-4)

என்ற பாடலில் குறிப்பிடுகிறார் திருநாவுக்கரசர். இ∴தில் 'செழும்புறவு' என்று திருப்புத்தூர், குறிஞ்சியும் முல்லையும் மயங்கிய நிலமாகக் குறிக்கப்பெறுகிறது. வளமை மிகுந்த நிலத்தில் உள்ள பயிர்களைத் தின்று எருமை, கரை மீது ஏறி நிற்கும் தன்மையை,

**"....வளங்கொள் மேதி**

**சேடேறி மடுப்படியுந் திருப்புத் தூரில்**

**.."** (6:76:4:3-4)

என்ற அடிகள் எடுத்துரைக்கும்.

திருப்புத்தூர் திருத்தலம் எங்கும் பொழில்கள் சூழ்ந்துள்ளதை, **"திருமருவு பொழில்புடை சூழ்திருப்புத் தூரில்.."** (6:76:5:4) என்றும், அழகு செறிந்த பொழில்கள் சூழ்ந்திருப்பதை, **"செறிபொழில்சூழ் மணிமாடத் திருப்புத் தூரில்"** (6:76:7:4) என்றும் தன் பதிகத்தில் குறிப்பிடுகிறார் திருநாவுக்கரசர்.

**".... அந்தண் தென்றல்**

**திக்கணைந்து வருமருங்கின் திருப்புத் தூரில்**

**திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே"** (6:76:8:3-4)

என்ற அடிகள், தென்றல் காற்று வந்து வீசும் திக்கில் அமைந்தது திருப்புத்தூர் என்று குறிக்கின்றது.

திருப்புத்தூர் தேவாரத்தில் மூன்று திருத்தலங்களினுடைய இயற்கைக் குறிப்புகள் பாடப்பெற்றுள்ளன. குற்றம் இல்லாத சங்குகள் கரை மீது ஏறி முத்தை ஈனும் கடலை எல்லையாகக் கொண்ட திருமறைக்காட்டை,

**"....துகள்தீர் சங்கம்**

**மாடேறி முத்தீனுங் கானல் வேலி**

**மறைக்காட்டு மாமணிகாண்....”** (6:76:4:2-3)

என்ற பாடல் அடிகள் குறிப்பிடும்.

கரும்பும் புன்னை மரங்களும் நெருங்கி வளர்ந்த சோலைகளை தன்னகத்தே உடையது திருவாரூர். இதை,

**“அக்கரும்பு பெரும்புன்னை நெருங்கு சோலை**

**ஆரூருக் கதிபதிகாண்....”** (6:76:8:3)

என்ற அடியினால் உணரலாம்.

அருவிகள் விளங்கும் திருக்கழுக்குன்றத்தை,

**“....பிறங்கருவிக் கழுக்குன் றத்தெம்**

**பிஞ்ஞகன்காண்....”** (6:76:9:3)

என்ற பாடல் அடி குறிப்பிடும்.

**திருத்தலம்:**

திருப்புத்தூர், திருத்தி பண்படுத்தப்பெற்ற வயல்களால் சூழப்பெற்ற திருத்தலம் என்பது,

**“திருந்துவயல் புடைதழுவு திருப்புத் தூரில்**

**திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே”** (6:76:1:4)

என்ற அடியினால் உணரப்படும். இத்தகைய வயல்களில் நீர் சேம்புகள் நிறைந்துள்ளதை,

**“சேம்பாடு வயல்புடைசூழ் திருப்புத் தூரில்**

**திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே”** (6:76:6:4)

என்ற பாடல் அடி குறிப்பிடுகின்றன.

இதனால், திருநாவுக்கரசர் காலத்தில் திருப்புத்தூரில் செம்மையான வேளாண்மை நடைபெற்றதை அறிய முடிகின்றது.

தேர் ஓடும் நீண்ட வீதிகளைக் கொண்டு திருப்புத்தூர் விளங்கியதை,

**“தேராரும் நெடுவீதித் திருப்புத் தூரில்**

**திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே”**(6:76:2:4)

என்ற பாடல் அடியின் மூலம் அறிய முடிகிறது.

திருப்புத்தூர் திருத்தலம் வரிசையாய் அமைக்கப்பெற்ற மாடங்கள் கொண்டிருப்பதை,

**“....மணிமாடத் திருப்புத் தூரில்**

**திருத்தளியான் காண் அவனென் சிந்தை யானே”** (6:76:7:4)

என்ற அடி சுட்டி நிற்கும்.

**“....சீர்மருவு திருப்புத் தூரில்**

**திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே”** (6:76:9:4)

என்ற அடியின் மூலம் திருப்புத்தூர் மிக்க புகழ் கொண்டிருந்ததை அறிய முடிகிறது.

திருப்புத்தூர் திருநாவுக்கரசர் தேவாரத்தில் கொன்றை நான்கு இடங்களிலும், வன்னி இரண்டு இடங்களிலும், தாமரை, ஊமத்தை, காந்தள் ஆகியன ஓர் இடத்திலும் குறிப்பிடப்பெற்றுள்ளன.

திருவாரூர்த் திருத்தலத்தை இரண்டு இடங்களிலும், திருஆலவாய், திருக்கச்சியேகம்பம், தில்லை, திருமறைக்காடு, திருக்கழுக்குன்றம் ஆகிய திருத்தலங்களை ஓர் இடத்திலும் திருநாவுக்கரசர் தனது திருப்புத்தூர் தேவாரத்தில் பாடியுள்ளார்.

சுந்தரரும் சேரமான் பெருமாள் நாயனாரும் சோழநாட்டின் திருஅகத்தியான்பள்ளி என்னும் திருத்தலத்தினையும் திருக்கோடிக்குழகர் திருக்கோயிலையும் வணங்கிப் பின்னர் பாண்டி நாடு புகுந்து முதலில் வணங்கியது திருப்புத்தூர் ஆகும். இதை,

**“அங்கு வைகிப் பணிந்தருளால்**

**போவார் அகன்சோ ணாட்டரனார்**

**தங்குமிடங்கள் வணங்கிப் போய்ப்**

**பாண்டி நாடு தனைச்சார்ந்து**

**திங்கண் முடியார் திருப்புத்தூர்**

**இறைஞ்சிப் போந்து சேண்விளங்கு**

**மங்குல் தவழும் மணிமாட**

**மதுரை மூதூர் வந்தணைந்தார்”** [23]

என்ற சேக்கிழாரின் பாடல் உணர்த்தும்.

திருப்புத்தூரில் சுந்தரர் பாடிய தேவாரம் கிடைத்திலது.

**திருப்புனவாயில்:**

திருப்புனவாயிலுக்கு மூன்றாம் திருமுறையில் அமைந்த திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்றும் ஏழாம் திருமுறையில் அமைந்த சுந்தரர் பதிகம் ஒன்றும் உள்ளன.

**திருஞானசம்பந்தர் தேவாரம்:**

திருவிராமேச்சுரத்தைப் பாடி பின்பு அங்கிருந்த படியே நினைந்து திருக்கோணமலை, திருக்கேதீச்சுரம் ஆகிய திருத்தலங்களைப் பாடிய பின்னர் திருஞானசம்பந்தர், நின்றசீர் நெடுமாற நாயனார், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் திருவாடானையை அடைந்து பின்னர் அங்கிருந்து திருப்புனவாயில் அடைந்தனர் என்பதை,

**"செப்பரிய புகழ்த்திருவா டானை சேர்ந்து**
**செந்தமிழ்மா லைகள்சாத்திச் சிவனார் மன்னும்**
**ஒப்பரிய புனவாயில் போற்றி செய்து**
**வணங்கினார் உலகுய்ய ஞானம் உண்டார்"** [24]

என்னும் சேக்கிழாரின் அடிகளால் அறியலாம். பாண்டிப் பதினான்கு திருத்தலங்களில் திருஞானசம்பந்தரால் பாடல் பெற்ற பதிமூன்று திருத்தலங்களுள் கடைசியாக பாடல் பெற்றது திருப்புனவாயிலேயாகும். திருப்புனவாயிலிலிருந்து திருஞானசம்பந்தர், நின்றசீர் நெடுமாற நாயனார், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் ஆகிய நான்கு பேரும் குலச்சிறையாரின் ஊரான 'திருமணமேற்குடி' சென்று அங்கிருந்து திருஞானசம்பந்தர் சோழநாடு சென்றடைந்தார். மூன்றாம் திருமுறையில் அமைந்திருக்கும் திருஞானசம்பந்தரின் திருப்புனவாயில் தேவாரம் 'காந்தார பஞ்சமம்' பண்ணில் அமைந்தது.

**இறைவன்:**

இறைவனின் சிவந்த சடை, மின்னல் போல் ஒளிர்கின்றது. அதில் பிறைச் சந்திரனைச் சூடி மார்பில் முப்புரி நூல் அணிந்து அன்னம் போன்ற நடை கொண்ட இறைவியுடன் இருப்பவன். அவனே வேதங்களின் தலைவன் என்பதை,

**"மின்னியல் செஞ்சடை வெண்பிறை யன்விரி நூலினன்**
**பன்னிய நான்மறை பாடியா டிப்பல வூர்கள்போய்**
**அன்னமன் னந்நடை யாளொடும் ......."** (3:11:1:1-3)

என்ற அடிகள் குறிக்கும். இறைவி வண்டுகள் மொய்க்கும் கூந்தலுடையவள். அவளை இடபத்தில் சென்று அடைந்திருந்தனன் என்பதை, **“விடை யேறிப்போய் வண்டம ருங்குழல் மங்கையொ டும்மகிழ்ந் தானிடம்”** (3:11:2:1-2) அடிகளால் அறியலாம்.

இறைவன் வெற்றிக்கு அடையாளமான இடபக் கொடியையும் மழுப்படையையும் கையிலேந்தி கொன்றை மாலையணிந்து, பால், நெய்யால் திருமுழுக்காட்டப்படுபவன். இவனே வீரமிக்க பூதகணங்கள் சூழ திருநடனஞ் செய்பவன். இதனை,

**“விடையுடை வெல்கொடி யேந்தினா னும்விறற் பாரிடம்**
**புடைபட வாடிய வேடத்தா னும்புன வாயிலில்**
**தொடைநவில் கொன்றையந் தாரினா னுஞ்சுடர் வெண்மழுப்**
**படைவல னேந்திய பால்நெய்யா டும்பர மனன்றே”** (3:11:3)

என்ற பாடல் விளக்கி நிற்கும். வெண்மையான சங்கினால் தோடும், தாழ்ந்த சடையும், நெருப்பை உள்ளங்கையிலும் பாம்பாபரணமும் சூடி வெண்ணிற இடபத்தில் எழுந்தருள்பவன் என்பதை,

**“சங்கவெண் தோடணி காதினா னுஞ்சடை தாழவே**
**அங்கையி லங்கழ லேந்தினா னும்மழ காகவே**
**பொங்கர வம்மணி மார்பினா னும்புன வாயிலில்**
**பைங்கண்வெள் ளேற்றண்ண லாகிநின் றபர மேட்டியே”** (3:11:4)

என்ற பாடலினால் அறியலாம். இடபத்தில் காட்சிதரும் இறைவன், புலித்தோலை மேலாடையாகவும் பாம்பை இடையில் கச்சாகவும், கங்கை, எருக்கு, ஊமத்தம், பிறைச்சந்திரன் ஆகியவைகளைக் கொண்டவன் என்பதை,

**“புலியதள் பாம்பரைச் சுற்றினா னும்புன வாயிலில்**
**ஒலிதரு தண்புன லோடெருக் கும்மத மத்தமும்**
**மெலிதரு வெண்பிறை சூடிநின் றவிடை யூர்தியே”** (3:11:5:2-4)

என்ற அடிகளால் அறிய முடிகின்றது.

**“வாருறு மென்முலை மங்கைபா டநட மாடிப்போய்க்**
**காருறு கொன்றைவெண் டிங்களா னுங்கனல் வாயதோர்**
**போருறு வெண்மழு வேந்தினா னும்புன வாயிலில்**
**சீருறு செல்வமல் கவ்விருந் தசிவ லோகனே”** (3:11:6)

என்ற பாடலில் கச்சையணிந்த மென்முலைகளையுடைய இறைவி பாட இறைவன் ஆடுவதும், கார் காலத்தில் மலர்கின்ற கொன்றையணிபவன், வெண்ணிறத் திங்களையும் மழுப்படையையும் கையில் தாங்கி அடியவர்க்கருள் செய்பவன் ஆகிய செய்திகள் அறியப்படுகின்றன. இதில் இறைவனின் திருநாமமாகிய 'சிவலோகன்' என்பது பயின்று வருகின்றது.

மேற்குறிப்பிட்ட பாடலில் இறைவன் ஆடுவதை மட்டும் குறித்த திருஞானசம்பந்தர், **"பெருங் காட்டிடைத் திருந்திள மென்முலைத் தேவிபா டந்நட மாடி"** (3:11:7:1-2) என்ற அடிகளில் சுடுகாட்டில் நடனஞ் செய்பவன் இறைவன் என்று கூறுகின்றார்.

இறைவன் வேதத்தின் பொருளாயிருப்பவன் என்பதை, **"வேதனை நாடொறு மேத்துவார் மேல்வினை வீடுமே"** (3:11:10:4) என்றும், தன் இடப்பக்கம் பொன்வளையல்களை அணிந்த இறைவியைக் கொண்டிருப்பவன் என்பதை, **"பொற்றொடி யாளுமை பங்கன்"** (3:11:11:1) என்ற அடிகள் விளக்கிக் கூறும்.

**புராணச் செய்திகள்:**

இறைவன் முப்புரங்களை எரித்தது, **"விண்டவர் தம்புர மூன்றெரித்து"** (3:11:2:1) என்ற அடியிலும், **"பொருந்தலர் தம்புர மூன்றுமெய்து"** (3:11:7:3) என்ற அடியிலும் கூறப்பட்டுள்ளது.

பாற்கடலை கடையும் பொழுது வெளிப்பட்ட நஞ்சையுண்டதை, **"கலிபடு தண்கடல் நஞ்சமுண் டகறைக் கண்டனும்"** (3:11:5:1) என்றும், **"பெருங்கடல் நஞ்சமு துண்டு"** (3:11:7:1) என்றும் பாடப் பெற்றுள்ளன.

எட்டாவது பாடலில் இராவணன் கயிலையைப் பெயர்த்த பொழுது இறைவன் தன் கால் விரலால் அடர்த்ததைக் குறிக்குங்கால், இராவணன் வேல், வாள் முதலிய படைகளைக் கொண்டவன் என்று அவனின் வீரத்தையும் படைபலத்தையும் பாடியுள்ளார் திருஞானசம்பந்தர்.

ஒன்பதாவது பாடலில் பிரம்மனும் திருமாலும் இறைவனின் அடிமுடி தேடிக் காணாததை அறிய முடிகின்றது.

**இயற்கை:**

புன்னை மரத்திலுள்ள மலர்கள் தங்கள் பொன்னிற தாதுக்களை உதிர்க்கும் என்பதை, **"புன்னைநன் மாமலர் பொன்னுதிர்க்கும்"** (3:11:1:4) என்ற அடியினாலும் தாழை, கொன்றை பூக்கள் தழைத்து வளர்ந்திருக்கும் கடற்கரைச் சோலைகளை,

**"கண்டலு ஞாழலு நின்றுபெ ருங்கடற் கானல்வாய்ப்**

**புண்டரீ கம்மலர்ப் பொய்கைசூழ்ந் தபுன வாயிலே"** (3:11:2:3-4)

என்ற பாடல் அடிகளாலும் அறியலாம். இதில் தாமரை மலர்கள் சூழ்ந்த பொய்கைகள் இருந்தமை அறியலாகின்றது. கொன்றை மலரின் நறுமணத்தைச் சுமந்து தென்றல் காற்று எங்கும் வீசும் என்பது, **"புனமிகு கொன்றையந் தென்றலார்ந்த"** (3:11:8:4) என்ற அடியின் மூலம் அறியப்படுகிறது.

**"நரல்சுரி சங்கொடும் இப்பியுந் திந்நல மல்கிய**

**பொருகடல் வெண்டிரை வந்தெறி யும்புன வாயிலே" (**3:11:9:3-4)

என்ற பாடலடிகள் கடற்கரை வளங்களை காட்டுகின்றன. வெண்ணிற அலைகளைக் கொண்ட கடல், கரையை மோதும் பொழுது சங்குகளும் சிப்பிகளும் வந்து சேரும் வளத்தைக் கொண்டிருந்தது.

குளிர்ச்சி பொருந்திய சோலைகளில் பூக்கள் மலர்ந்துள்ளன என்பதை, **"போதவிழ் தண்பொழில் மல்குமந் தண்புன வாயிலில்"** (3:11:10:3) என்ற அடி சுட்டும்.

திருஞானசம்பந்தர் இப்பதிகத்தில் கடலின் வளத்தை நேரிடையாக இரண்டு, ஒன்பதாவது பாடலிலும், இறைவன் வெண் சங்கினால் தோடணிந்தவன் என்று குறிப்பாக நான்காவது பாடலிலுமாக மொத்தம் மூன்று இடங்களில் குறிக்கின்றார். இப்பதிகத்தில் கொன்றை நான்கு இடங்களிலும், ஊமத்தம், எருக்கு, புன்னை, தாழை, தாமரை ஆகியன ஓர் இடத்திலும் குறிப்பிடப்பட்டுள்ளன.

புன்னை மரம் இத்திருக்கோயிலின் தலவிருட்சமாகும். திருக்கோயிலின் வாயிலில் தற்காலத்தும் பழமையான புன்னை மரம் உள்ளது குறிப்பிடத்தக்கது. இப்பதிகத்தின் முதற்பாடலிலேயே புன்னை மரம் சுட்டப்பெற்றுள்ளது.

**திருத்தலம்:**

இறைவனின் பழமையான புகழைப் போற்றும் பாடல்களும் ஆடல்களும் நிறைந்தவூர் என்பதை, **"இனமிகு தொல்புகழ் பாடல்ஆ டல்எழின் மல்கிய"** (3:11:8:3) என்ற அடி விளக்கும்.

பத்தாவது பாடலில் திருஞானசம்பந்தர் பௌத்தரையும் சமணரையும் நிந்தனை புரிகின்றார்.

**சுந்தரர் தேவாரம்:**

சுந்தரரும் சேரமான் பெருமாள் நாயனாரும் திருக்கானப்பேர் அடைந்து பின்னர் திருப்புனவாயில் வந்தனர் என்பதை சேக்கிழார்,

**"காராரு மலர்ச்சோலைக்**

**கானப்பேர் கடந்தணைந்தார்**

**போரானேற் றார்கயிலைப்**

**பொருப்பர்திருப் புனவாயில்"** [25]

என்ற அடிகளால் உணர்த்துகிறார். பாண்டிப் பதினான்கு திருத்தலங்களில் சுந்தரரால் பாடப்பெற்ற ஐந்து திருத்தலங்களுள் கடைசியாகப் பாடப்பெற்றது திருப்புனவாயில் ஆகும். பின்னர் இங்கிருந்து சுந்தரரும் சேரமான் பெருமாள் நாயனாரும் சோழ நாட்டிற்குச் சென்றனர். ஏழாம் திருமுறையில் உள்ள சுந்தரர் பாடிய திருப்புனவாயில் தேவாரம் 'பழம் பஞ்சுரம்' பண்ணில், தன் மனத்தை நோக்கி 'சூள் அறு' என்றும், ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் 'மனமே திருப்புனவாயில் உறைந்திருக்கும் இறைவனையே நினை' என்று கூறும் வண்ணமும் பாடப்பட்டுள்ளது.

**இறைவன்:**

சுந்தரர் இறைவனை முதற்பாடலிலேயே 'அழகன்' என்ற பொருளில் 'மணாளன்' என்று பாடியுள்ளார். இறைவன் எருதின் மேல் ஊர்பவன் என்பதை, **"எருது மேற்கொளும் எம்பெருமான்"** (7:50:2:2) என்ற அடியால் அறிய முடிகிறது.

இறைவன் எலும்பையும் பாம்பையும் அணிந்து ஆடையில்லாமல் இருந்து நம்மை ஆள்பவன் என்ற கூற்று,

**"நக்கானமை ஆளுடை யான்நவி லும்மிடம்**

**அக்கோடர வார்த்தபி ரானடிக் கன்பராய்ப்''** (7:50:3:2-3)

மேற்கண்ட அடிகளில் பயின்று வருகின்றது.

**"நல்லான்நமை ஆளுடை யான்"** (7:50:5:2) என்ற பாடலடியில் இறைவன் நன்மை வடிவாக நின்று நம்மையாள்பவன் என்பது குறிப்பிடப்படுகிறது. இவ்வுலகிலுள்ள எல்லா உயிர்களுக்கும் உறவும் காலமுமாகயிருப்பவன் இறைவன் என்று, **"உறவும் ஊழியும் ஆயபெம் மான்"** (7:50:6:2) என்ற பாடலடி விளக்கி நிற்கும்.

**புராணச் செய்திகள்:**

மதயானையின் தோலையுரித்து போர்த்தியதை, **"மத்த யானையின் ஈருரி போர்த்த"** (7:50:1:2) என்ற அடியினால் அறியலாம்.

**இயற்கை:**

காடுகளும் சோலைகளும் அடர்ந்து வளர்ந்துள்ளதால் பகல் இரவு எதுவென்று புலப்படாமல் ஆந்தைகள் மரப்பொந்துகளில் இருந்து ஒழியாது பாடிக் கொண்டேயிருக்கும் என்பதை, **"பொத்தில் ஆந்தைகள் பாட்ட றாப்புன வாயிலே"** (7:50:1:4) என்ற பாடலடி சுட்டும்.

மலைகள் பொன்னிறத்தில் இருப்பதால் அதில் பறக்கும் காகங்கள் கூட பொன்னிறம் கொண்டுள்ளன. இதோடு மட்டுமல்லாது, புதர்கள், கடற்கரைச் சோலைகள் கூட அந்தி நிறத்தில் பொன்னிறங்கொண்டு காட்சியளிக்குந் தன்மையை,

**"பொற்குன்றஞ் சேர்ந்ததொர் காக்கைபொன் னாமதுவேபுகல்**

**கற்குன்றுந் தூறுங் கடுவெளி யுங்கடற் கானல்வாய்ப்**

**புற்கென்று தோன்றிடு....."** (7:50:4:2-4)

என்ற பாடலடிகள் விளக்கும். திருப்புனவாயில் தேவாரத்துள் இப்பாடல் ஒன்றில் தான் கடல் குறிக்கப்பெறுகிறது. வேடர்களின் வில்லின் ஒலிக்குப் பயந்து புள்ளிமான்கள் வந்து ஒளியும் திருப்புனவாயில் என்பதனை,

**"வில்வாய்க்கணை வேட்டுவ ராட்ட வெருண்டுபோய்ப்**

**புல்வாய்க்கணம் புக்கொளிக் கும்புன வாயிலே"** (7:50:5:3-4)

என்ற அடிகள் கூறும்.

**"பிறவு கள்ளியின் நீள்கவட் டேறித்தன் பேடையைப்**

**புறவங் கூப்பிடப்...''** (7:50:6:3-4)

என்ற அடிகளில், பேடையைப் பிரிந்த சேவல் அதை கள்ளிப் புதரின் மீது ஏறி நின்று கூப்பிடும் செய்தியை அறிய முடிகின்றது.

காடு வெப்பம் மிகவுடையது. இத்தகைய காட்டை கொள்ளி போல் சிவந்த முனையுடைய பன்றி கீறும் பொழுது மாணிக்கங்கள் நிலத்திலிருந்து வெளிவருகின்றன. வெப்பத்தால் கள்ளிச் செடிகள் உலர்ந்து, புற்கள் கருகியிருக்கும் தன்மையுடைய காடு என்பதனை,

**''கொள்ளி வாயின கூரெயிற் றேனங் கிழிக்கவே**

**தெள்ளி மாமணி தீவிழிக் கும்மிடஞ் செந்தறை**

**கள்ளிவற் றிப்புற் றீந்துவெங் கானங் கழிக்கவே**

**புள்ளி மானினம் புக்கொளிக் கும்புன வாயிலே''** (7:50:8)

என்ற பாடல் விளக்கி நிற்கும். மேலும் வெப்பத்தால் காட்டில் உள்ள புள்ளிமான்கள் வந்தொளியும் திருப்புனவாயில் என்பதனையும் அறிய முடிகின்றது. புதர்களிலும் காடுகளிலும் இரையையுண்ட காட்டுக்கோழிகள் கரையான் புற்றுக்களின் மேல் நின்று 'கூகூ' என அழைப்பதை,

**''கற்றூ றுகார்க் காட்டிடை மேய்ந்தகார்க் கோழிபோய்ப்**

**புற்றேறிக் கூகூ என அழைக் கும்புன வாயிலே''** (7:50:9:3-4)

என்ற அடிகளால் அறியலாம்.

திருப்புனவாயில் திருத்தலத்தின் சுந்தரர் தேவாரத்தில் தலவிருட்சமாய்க் கருதப்படுகின்ற கள்ளிச் செடி ஆறு, எட்டு ஆகிய பாடல்களில் பயின்று வருகின்றது.

**திருத்தலம்:**

அடியவர்கள் பலர் பல திருப்பாடல்களை இறைவன் மீது பாடியாடும் பழமையான திருத்தலம் என்று, **''பத்தர் தாம்பலர் பாடிநின் றாடும் பழம்பதி''** (7:50:1:3) பாடலடி கூறும். பாசத்தை விட்டொழித்தவர்கள் பாடியும் ஆடியும் இறைவனை தொழுதேத்துவர் என்பதை, **''பாசற்றவர் பாடிநின் றாடும் பழம்பதி''** (7:50:7:2) என்ற அடி விளக்கும். சுந்தரர் இரண்டு இடங்களில் பழமையான திருத்தலம் என்பதைக் குறிப்பிடும் வண்ணம் 'பழம்பதி' என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றார். இவ்வாறு

அடியவர்கள் பாடியாடுதலை திருஞானசம்பந்தரும் திருப்புனவாயில் தேவாரத்தின் எட்டாவது பாடலில் குறிப்பிடுவது ஈண்டு நோக்குதற்குரியது.

தேவர்களும் வானவர்களும் இருக்குமிடமான திருப்புனவாயிலில் வேடர்கள் பிறருடன் போரிட்டு உடலை மாய்க்கும் ஒலி தீராது கேட்கும் என்பதை,

**“மருத வானவர் வைகும் இடம்மற வேடுவர்**

**பொருது சாத்தொடு பூசல றாப்புன வாயிலே”** (7:50:2:3-4)

என்ற அடிகளாலும், பல ஊர்களிலிருந்து அடியவர்கள் பலர் காலையிலும் மாலையிலும் வந்து வணங்கும் திருப்புனவாயிலில் வேடர்களின் போர்ப்பறைச் சத்தம் ஒலித்துக் கொண்டேயிருக்கும் என்பதை,

**“தேசத் தடியவர் வந்திரு போதும் வணங்கிடப்**

**பூசற்றுடி பூசல றாப்புன வாயிலே”** (7:50:7:3-4)

என்ற அடிகளாலும் அறிய முடிகின்றது. சுந்தரர் வேடர்களை மூன்று இடங்களில் குறிப்பிடுகின்றார்.

எங்கும் பொன் நிறைந்து காணப்படுகின்ற காடுகளைக் கொண்ட திருப்புனவாயில் என்று, **“பொன்புனஞ் சூழ்புன வாயிலே”** (7:50:6:4) என்ற பாடலடியால் உணரப்படுகிறது.

திருநாவுக்கரசர் திருநெல்வேலி, திருக்கானப்பேர் முதலிய திருத்தலங்களுக்குச் சென்றார் என்பதை,

**“தொழுதுபல வகையாலும்**

**சொற்றொடைவண் டமிழ்பாடி”** [26]

என்ற சேக்கிழாரின் பாடல் அடியினால் அறியலாம். இவர் பாடிய பிற தலங்களை ‘நிகழ் தானங்கள்’ என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார். பாண்டி நாட்டிலிருந்து சோழநாடு சென்றார் என்று சொல்லுங்கால்,

**“தேம்பொழில்சூழ் செந்தமிழ்நாட்**

**டினில்எங்குஞ் சென்றிறைஞ்சிப்**

**பாம்பணிவார் தமைப்பணிவார்**

**பொன்னிநா டதுஅணைந்து”** [27]

என்பதிலிருந்து பாண்டி நாட்டின் திருத்தலங்களுக்குச் சென்று பாடினார் என்பது இரண்டிடங்களில் புலப்படுகின்றது. மேலும் திருநாவுக்கரசர் பொதுப் பதிகம் ஒன்றில், **“மறிகடல்சூழ் புனவாயில்”** (6:71:7:3) என்று கடல் அலைகள் பொங்கியெழும் திருப்புனவாயில் என்று குறித்திருக்கின்றார். திருப்புனவாயிலின் கடலை திருஞானசம்பந்தர் மூன்று இடங்களிலும் சுந்தரர் ஓர் இடத்திலும் தங்களுடைய பதிகத்தில் பாடியிருப்பது நோக்கற்பாலது.

**திருவாடானை:**

இரண்டாம் திருமுறையில் அமைந்த திருஞானசம்பந்தர் தேவாரப் பதிகம் ஒன்று திருவாடானை திருத்தலத்திற்கு உள்ளது.

**திருஞானசம்பந்தர் தேவாரம்:**

திருவிராமேச்சுரத்தைப் பாடிப் பின்பு அங்கிருந்த படியே நினைந்து திருக்கோணமலை, திருக்கேதீச்சுரம் ஆகிய திருத்தலங்களைப் பாடிய பின்னர் திருஞானசம்பந்தர், நின்றசீர் நெடுமாற நாயனார், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் திருவாடானை அடைந்தனர் என்பதை,

**“செப்பரிய புகழ்த்திருவா டானை சேர்ந்து**

**செந்தமிழ்மா லைகள்சாத்திச் சிவனார் மன்னும்”** [28]

என்னும் சேக்கிழாரின் பாடல் அடி உணர்த்தும். திருஞானசம்பந்தரின் திருவாடானை தேவாரம் ‘நட்டராகம்’ எனும் பண்ணில் அமைந்தது.

**இறைவன்:**

இறைவன் உலர்ந்த மண்டையோட்டை கையில் தாங்கி ஆடுபவன் என்பதை,

**“வாடல்வெண்டலை யங்கையேந்திநின்**

**றாடலானுறை யாடானை**

**தோடுலாமலர் தூவிக்கைதொழ**

**வீடுநுங்கள் வினைகளே”** (2:112:2)

என்ற பாடல் மூலம் உணர்த்தும் திருஞானசம்பந்தர், இத்தகைய இறைவனை இதழ்கள் கொண்ட மலர்களால் அருச்சித்து கை தொழ வினைகள் அழியும் என்று பாடுகின்றார்.

ஐயப்பனைக் குறிக்கும் ‘ஐயன்’ என்ற சொல்லால் இறைவனை,

**“கொய்யணிம்மலர்க் கொன்றைசூடிய**

**ஐயன்மேவிய வாடானை**

**கையணிம்மல ரால்வணங்கிட**

**வெய்யவல்வினை வீடுமே"** (2:112:5)

என்ற பாடலில் திருஞானசம்பந்தர், கொய்யப் பெற்ற அழகிய கொன்றை மலரைச் சூழும் ஐயனைக் கைகளினால் மலர்த்தூவி வணங்கிடக் கொடிய வினைகள் மாயும் என்று குறிப்பிடுகின்றார்.

திருவாடானை திருத்தலத்தில் உறையும் இறைவன் தன் ஒரு பாகமாய் இறைவியைக் கொண்டு மான் கன்றை கையில் உடையவன். இறைவனைத் தன் கைகளினால் தொழுது ஏத்த வல்லவர்களின் நோய்கள் கெட்டு பிணிகள் மாயும் என்பதை,

**"மங்கைகூறினன் மான்மறியுடை**

**அங்கையானுறை யாடானை**

**தங்கையாற்றொழு தேத்தவல்லவர்**

**மங்குநோய்பிணி மாயுமே"** (2:112:3)

என்ற பாடல் மூலம் குறிப்பிடுகின்றார்.

சந்தனச் சுண்ணத்தை தன் உடலெங்கும் பூசி மார்பில் திருநீறு அணிந்து மான் தோலை உடைய பூணூலை அணிந்துள்ள திருவாடானை இறைவனை நேரில் அருச்சிப்பவர்கள் மட்டுமல்லாது வண்ணமும் மணமும் உடைய மலர்களைத் தூவி கைகளால் தொழ எண்ணுபவர்களின் இடர்கள் மாயும் என்பதை,

**"சுண்ணநீறணி மார்பிற்றோல்புனை**

**அண்ணலானுறை யாடானை**

**வண்ணமாமலர் தூவிக்கைதொழ**

**எண்ணுவாரிட ரேகுமே"** (2:112:4)

என்ற பாடலின் கண் குறித்துள்ளார். இப்பாடலில் நினைத்த மட்டிலும் இடர்கள் மாயும் என்பதைக் குறிப்பாக உணர்த்தியுள்ளார்.

**"துலங்குவெண்மழு வேந்திச்சூழ்சடை**

**ஆலங்கலானுறை யாடானை**

**நலங்கொண்மாமலர் தூவிநாடொறும்**

**வலங்கொள்வார்வினை மாயுமே''** (2:112:7)

என்ற பாடலில் வெண் மழுவைக் கையில் ஏந்தி சடையில் மாலை சூடப்பெற்ற திருவாடானை இறைவனை நல்ல மலர்களைத் தூவி நாள் தோறும் வலம் வந்து வணங்கி வருவாராயின் வினைகள் மாயும் என்று பாடியுள்ளார். இப்பாடலில் 'வலங் கொளல்' வழிபாட்டு முறை பயின்று வந்துள்ளது.

தீயில் வெந்த திருநீற்றை தன் உடல் முழுவதும் பூசி, மார்பில் மான் தோல் உடுத்திய இறைவன் இறுதி இல்லாதவன் என்பதை,

**''வெந்தநீறணி மார்பிற்றோல்புனை**

**அந்தமில்லவ னாடானை**

**கந்தமாமலர் தூவிக்கைதொழும்**

**சிந்தையார்வினை தேயுமே''** (2:112:8)

என்ற பாடல் மூலம் உணர்த்தி, இறைவனை மணம் பொருந்திய மலர்த்தூவி கைதொழச் சிந்தனை செய்பவர்களின் வினை மாயும் என்று குறிக்கின்றார் திருஞானசம்பந்தர். மேற்குறிப்பிட்ட ஆறு பாடல்களிலும் கைகூப்பி வணங்கும் 'மூவங்க வணக்க முறை' பயின்று வந்துள்ளது.

இறைவன் இறைவியைத் தன் ஒரு பாகமாகக் கொண்டு விடைமேல் ஏறி அருள் தருபவன் என்பதை,

**''மாதோர்கூறுகந் தேறதேறிய**

**ஆதியானுறை யாடானை**

**போதினாற்புனைந் தேத்துவார்தமை**

**வாதியாவினை மாயுமே''** (2:112:1)

என்ற பாடல் விளக்கி நிற்கும். இவ் இறைவனை போதுகளால் அலங்கரித்து அருச்சித்து ஏத்துபவர்களின் வினை மாயும் என்பதை அறியலாம். இதில் 'ஆதியான்' என்பது இத்திருக்கோயிலில் இறைவனுக்கு வழங்கும் பெயராய் அமைந்திருக்கின்றது.

வேதம் நன்கு கற்றறிந்த அந்தணர்கள், தேவர்களால் வணங்கப்படும் இறைவன் திருமாலும் பிரம்மனும் கையால் தொழும் மேன்மை கொண்டவர் என்பதை,

**''மறைவலாரொடு வானவர்தொழு**

**தறையுந்தண்புன லாடானை**

**உறையும்ஈசனை யேத்தத்தீவினை**

**பறையுநல்வினை பற்றுமே"** (2:112:9),

**"மாயனும்மல ரானுங்கைதொழ**

**ஆயவந்தண னாடானை**

**தூயமாமலர் தூவிக்கைதொழத்**

**தீயவல்வினை தீருமே"** (2:112:10)

ஆகிய இரண்டு பாடல்கள் விளக்கி நிற்கும். இத்தகைய இறைவனை, தூய மலர்களைத் தூவி கையினால் தொழ தீயவினைகள் தீரும் என்று உணர்த்தும் திருஞானசம்பந்தர் இறைவனை 'அந்தணன்' என்றும் திருமாலை 'மாயன்' என்றும் குறிப்பிடுகின்றார்.

திருவாடானை தேவாரத்தின் பதினோறாவது பாடலான,

**"வீடினார்மலி வெங்கடத்துநின்**

**றாடலானுறை யாடானை"** (2:112:11:1-2)

என்பதில் இறைவன், இறந்தவர் உடல்கள் எரிந்ததால் உண்டான வெப்பம் மிகுதியுள்ள சுடுகாட்டில் ஆடும் தன்மையை விளக்குகின்றார்.

**இயற்கை:**

திருவாடானை நீர்வளம் சான்ற திருத்தலம் என்பது **"உறையுந் தண்புன லாடானை"** (2:112:2) என்ற பாடல் அடி உணர்த்தி நிற்கும்.

திருஞானசம்பந்தரின் திருவாடானை தேவாரம் இறைவனை அருச்சனை செய்து வினைகளை கடக்கும் பான்மையில் பாடப்பட்டுள்ளது. இத்தேவாரத்தில் கொன்றை மட்டும் ஓர் இடத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

திருநாவுக்கரசர், சுந்தரர் திருவாடானை வந்ததை அறிய அகச்சான்றுகள் பெரிய புராணத்தில் கிடைக்கப் பெறவில்லை.

**திருக்கானப்பேர்:**

திருக்கானப்பேர் திருத்தலத்திற்கு மூன்றாம் திருமுறையில் அமைந்த திருஞானசம்பந்தர் தேவாரப் பதிகம் ஒன்றும் ஏழாம் திருமுறையில் அமைந்த சுந்தரர் தேவாரப் பதிகம் ஒன்றும் என இரண்டு பதிகங்கள் உள்ளன.

**திருஞானசம்பந்தர் தேவாரம்:**

திருப்புத்தூரிலிருந்து திருப்பூவணத்தை அடைந்து அங்கு பதிகம் பாடிப் பின்னர் கற்றவர்கள் தொழுது ஏத்தும் திருக்கானப்பேர் திருத்தலம் வந்து திருஞானசம்பந்தர் இறைவனைப் பாடினார் என்பது,

> **“ .... திருப்புத்தூர் பணிந்து போந்து**
> **புற்றாரும் பணிபூண்ட புனித னார்தம்**
> **பூவணத்தைப் புக்கிறைஞ்சிப் புகழ்ந்து பாடிக்**
> **கற்றார்கள் தொழுதேத்துங் கானப் பேரும்**
> **கைதொழுது தமிழ்பாடி ....”** [29]

என்ற பெரிய புராணத்தின் அடிகளால் அறிய முடிகிறது. இப்பதிகம் கொல்லிப் பண்ணில் அமைந்ததாகும்.

**இறைவன்:**

நெற்றிக்கண்ணை உடைய திருக்கானப்பேர் இறைவன், நுண்ணிடையையும் பெரிய அல்குலையும், நூபுரம் அணிந்த மென்மையான பாதங்களையும் உடைய, பெண்ணில் நல்லாளான இறைவியை தன் உடம்பில் ஒரு பாகமாகக் கொண்டவன். இதனை,

> **“நுண்ணிடைப் பேரல்குல் நூபுர மெல்லடிப்**
> **பெண்ணின்நல் லாளையோர் பாகமாப் பேணினான்**
> **கண்ணுடை நெற்றியான் கருதிய கானப்பேர்**
> **விண்ணிடை வேட்கையார் விரும்புதல் கருமமே”** (3:26:2)

என்ற பாடலடிகளில் குறிப்பிட்டு, சைவர்களின் குறிக்கோளான கைலாயம் அடைதலை விரும்பும் மாக்கள் திருக்கானப்பேர் இறைவனை விரும்புதலே கடமையாகக் கொள்ள வேண்டும் என்கிறார் திருஞானசம்பந்தர்.

புணுகு எனும் வாசனைப்பொருள், சந்தனம் முதலியவற்றுடன் பூக்களையும் நீரையும் பெய்து தொண்டர்களால் திருமுழுக்காட்டப்படுபவர் என்பதை,

> **“நாவிவாய்ச் சாந்துளும் பூவுளு ஞானநீர்**
> **தூவிவாய்ப் பெய்துநின் றாட்டுவார் தொண்டரே”** (3:26:3:3-4)

என்ற அடிகளால் அறியலாம்.

மனத்தை ஐம்பொறிகளின் வழி செல்ல விடாது, நீர், பூ ஆகியவற்றால் பூசை செய்து, முழவு முழங்க தோத்திரங்கள் கூறி படையல் வைத்து, கறுத்த கண்டம் உடைய இறைவனை வழிபடும் மெய்யடியார்களுக்கு குறைகள் நீங்கும் என்பதை,

**“நிறையுடை நெஞ்சுளும் நீருளும் பூவுளும்**

**பறையுடை முழவுளும் பலியுளும் பாட்டுளும்**

**கறையுடை மிடற்றண்ணல் கருதிய கானப்பேர்**

**குறையுடை அவர்க்கலாற் களைகிலார் குற்றமே”** (3:26:4)

என்ற பாடலில் குறிப்பிட்டுத் திருஞானசம்பந்தர் பாடியுள்ளார்.

எந்த மக்கள் தீவினைகள் களைவர் என்பதையும், தேவர்களின் ஊரில் வாழும் தகுதி பெறுபவர்கள் யார் என்பதையும்,

**“ஏனப்பூண் மார்பின்மேல் என்புபூண் டீறிலா**

**ஞானப்பே ராயிரம் பேரினா னண்ணிய**

**கானப்பேர் ஊர்தொழுங் காதலார் தீதிலர்”** (3:26:5:1-3)

என்ற பாடல் அடிகளில் விளக்கி, பன்றிக் கொம்பை ஆபரணமாகவும் என்பை மாலையாகவும் அணிந்தவனான திருக்கானப்பேர் இறைவனை ஆயிரம் திருநாமங்களைக் கொண்டு பூசிப்பவர்கள் மேற்குறிப்பிட்ட செல்வங்களைப் பெறுவதாக திருஞானசம்பந்தர் குறிப்பிடுகிறார்.

**“பள்ளமே படர்சடைப் பாற்படப் பாய்ந்தநீர்**

**வெள்ளமே தாங்கினான் வெண்மதி சூடினான்”** (3:26:6:1-2)

என்ற அடிகள் மூலம், இறைவன் கங்கையையும் வெண்மையான சந்திரனையும் தன் சடையிற் தாங்கியவன் என்பது அறியப்படுகிறது.

பெண் யானையை ஒத்த மடமை குணம் பொருந்திய இளமையான கொடி போன்ற இறைவியைத் தன் இடப்பாகத்தே கொண்ட இறைவனை கை தொழுதல் நம் கடமை என்பது,

**“.... மடப்பிடி வளர்இளங் கொழுங்கொடி**

**கறித்தெழு கானப்பேர் கைதொழல் கருமமே”** (3:26:10:3-4)

என்ற பாடலடிகள் மூலம் பெறப்படுகிறது. இதில் கையால் தொழுவதான மூவங்க வணக்கமுறை பயின்று வருகின்றது.

திருக்கானப்பேர் இறைவன் சுடுகாட்டில் ஆடுபவன் என்பது, **“காட்டகத்து ஆடலான் கருதிய கானப்பேர்”** (3:26:11:1) என்ற பாடலடி உணர்த்துகின்றது.

**புராணச் செய்திகள்:**

திருஞானசம்பந்தர் இராவணனைக் குறிக்குங்கால், அவன் வாட் பயிற்சியும் வேல் பயிற்சியும் உடையவன் என்பதை,

**“வாளினான் வேலினான் மால்வரை யெடுத்ததிண்**

**தோளினான்....”** (3:26:8:1-2)

என்ற பாடல் அடிகள் மூலம் குறிப்பிடுகிறார்.

இறைவன் முப்புரங்களைத் தன் வில்லினால் தீப்பற்றி எரியச் செய்தவன் என்பதை,

**“சிலையினான் முப்புரந் தீயெழச் செற்றவன்”** (3:26:9:1)

என்ற பாடல் அடிகளில் குறிப்பிட்டு, இறைவனை ‘சிலையினன்’ என்ற பெயரால் அழைக்கிறார் திருஞானசம்பந்தர்.

**இயற்கை:**

திருக்கானப்பேர், நறுமணம் கமழ்கின்ற பூஞ்சோலைகளைத் தன்னகத்தே உடைய அழகினை, **“கடியுலாம் பூம்பொழிற் கானப்பேர்...”** (3:26:1:3) என்ற பாடலடி உணர்த்துகின்றது.

பகற்பொழுது முழுவதும் தாமரை மலர்களில் தங்கி, அதன் தேனை உண்டு களிக்கும் வண்டினம், இரவானதும் தாமரை மலர்கள் கூம்புவது கண்டு, அப்பொழுது மலரும் நீலோற்பவ மலரை நோக்கிப் பண்ணிசைத்துச் செல்லும் திருக்கானப்பேரின் அழகினை,

**“வாவிவாய்த் தங்கிய நுண்சிறை வண்டினம்**

**காவிவாய்ப் பண்செயுங் கானப்பேர்...”** (3:26:3:1-2)

என்ற பாடல் அடிகள் சுட்டி நிற்கும்.

திருக்கானப்பேரில் எப்பொழுதும் மலர்களின் தேன் கமழும் தன்மையை, **“... புறவிற்றேன் கமழ்தரு கானப்பேர்”** (3:26:9:3) என்ற பாடல் அடி உணர்த்துகிறது.

**திருத்தலம்:**

பெண் யானைகள் பின் தொடர நீண்ட துதிக்கையை உடைய ஆண் யானைகள் விடியலில் குளத்தில் மூழ்கி மலர்களைக் கொண்டு விதிப்படி திருக்கானப்பேர் இறைவனை பூசை செய்யும் பான்மையை,

**"பிடியெலாம் பின்செலப் பெருங்கைமா மலர்தழீஇ**

**விடியலே தடமூழ்கி விதியினால் வழிபடும்"** (3:26:1:1-2)

என்று திருஞானசம்பந்தர் திருக்கானப்பேர் தேவாரத்தின் முதல் இரண்டு அடிகள் குறிப்பிடுகின்றன. மேலும் இவ்வாறு வணங்கப்படும் இறைவனையன்றி அடியவர்கள் சரண் அடைய வேறு இடம் யாதுளது என்று திருஞானசம்பந்தர் போற்றிப் பரவுகிறார்.

மனிதர்களின் உடம்பு ஊனம் கொண்டது. அ∴தாவது ஆணவம், கன்மம், மாயை ஆகிய குறைகளைக் கொண்டது. இம்மும்மலங்கள் நீங்கப் பெறுதற்கு ஞானமாமலர்களான மனம், வாக்கு, காயம் ஆகியவற்றால் இறைவனை வணங்க வேண்டும். இது எவ்வாறு எனில், பெரிய பெண் யானை துதிக்கையால் மலர்களைத் தூவ ஆண் யானைகள் திருக்கானப்பேர் இறைவனை வழிபடும் சிரத்தையுடன் நடைபெற வேண்டும் என்பதை,

**"மானமா மடப்பிடி வன்கையால் அலகிடக்**

**கானமார் கடகரி வழிபடுங் கானப்பேர்**

**ஊனமாம் உடம்பினில் உறுபிணி கெடஎண்ணில்**

**ஞானமா மலர்கொடு நணுகுதல் நன்மையே"** (3:26:7)

என்ற பாடல் கூறி நிற்கும்.

இவ்விரண்டு பாடல்களிலும் திருக்கானப்பேர் திருத்தலத்தின் தலவரலாறு பாடப்பட்டுள்ளது. முதற்பாடலில் ஐராவதம் இறைவனை அடைந்து வழிபட்டுச் சாப விமோசனம் பெற்றதும் ஏழாவது பாடலில் ஐராவதம் கர்வம் கொண்டு நந்தி வாலை இழுத்ததும் பின்னர் இறைவனை வணங்கி ஆணவ மலத்தை நீக்கியதும், ஆக இரண்டும் குறிப்பாகப் பாடப்பெற்றுள்ளன.

திருக்கானப்பேர் திருத்தலத்தின் மெய்யடியார்கள் உள்ளத்தில் எஞ்ஞான்றும் இறைவன் இருப்பதால், அவ்வடியார்களின் உள்ளத்தையே திருக்கோயிலாக வழிபடுவேன் என்பதைத் திருஞானசம்பந்தர்,

**"கள்ளமே செய்கிலார் கருதிய கானப்பேர்**

**உள்ளமே கோயிலா உள்கும்என் உள்ளமே"** (3:26:6:3-4)

என்ற பாடல் அடிகளில் குறிப்பிடுகிறார்.

திருக்கானப்பேர் தேவாரத்தில் தாமரை, நீலோற்பவம் ஆகிய மலர்கள் ஓர் இடத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன.

**சுந்தரர் தேவாரம்:**

திருச்சுழியல் திருத்தலத்தில் சேரமான் பெருமாள் நாயனாருடன் தங்கியிருந்த சுந்தரரின் கனவில், பொற் செண்டுடன் சுழியமும் அணிந்து இறைவன் தோன்றித் தான் இருப்பது திருக்கானப்பேர் என்று கூறினார்.

கண் விழித்த சுந்தரர், இறைவன் கனவில் தனக்குக் காட்டிய திருக்கோலத்தைச் சேரமான் பெருமாள் நாயனாருக்கு உரைத்தார். பின்னர், இருவரும் திருச்சுழியல் விட்டகன்று திருக்கானப்பேர் அடைந்தனர். சுந்தரர் 'தொண்டரடித் தொழலும்' எனத் தொடங்கும் புறநீர்மை பண்ணில் அமைந்த பதிகத்தைப் பாடி திருக்கானப்பேர் அடைந்ததை,

**"கண்டருளும் படிகழறிற்**

**றறிவார்க்கு மொழிந்தருளிப்**

**புண்டரிகப் புனற்சுழியல்**

**புனிதர்கழல் வணங்கிப்போய்**

**அண்டர்பிரான் திருக்கானப்**

**பேரணைவார் ஆரூரர்**

**தொண்டரடித் தொழலும்எனுஞ்**

**சொற்பதிகத் தொடைபுனைவார்"** [30]

என்றும்,

**"காளையார் தமைக்கண்டு**

**தொழப்பெறுவ தென்றென்று**

**தாளைநா ளும்பரவத்**

**தருவார்பாற் சார்கின்றார்**

**ஆளைநீ ளிடைக்காண**

**வஞ்சியநீர் நாயயலே**

**வாளைபாய் நுழப்பழன**

**முனைப்பாடி வளநாடர்"** [31]

என்றும் இரு பாடல்களின் மூலம் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்

சேக்கிழார், 'தொண்டரடித் தொழலும்' எனத் தொடங்கும் பதிகத்தைச் சுந்தரர் பாடினார் என்று குறிப்பிட்டுள்ளாரேனும், எவ்விடத்தில் அது பாடப் பெற்றது என்பதைக் குறிப்பிடவில்லை.

சுந்தரர் திருக்கானப்பேர் திருக்கோயிலை அடைந்து, அதை வலமாகச் சுற்றி வந்து வணங்கி பின் உள்நுழைந்து தமிழ் மாலைசூட்டினார் என்பது,

**"மன்னுதிருக் கானப்பேர்**

**வளம்பதியில் வந்தெய்திச்**

**சென்னிவளர் மதியணிந்தார்**

**செழுங்கோயில் வலங்கொண்டு**

**முன்னிறைஞ்சி யுள்ளணைந்து**

**முதல்வர்சே வடிதாழ்ந்து**

**பன்னுசெழுந் தமிழ்மாலை**

**பாடினார் பரவினார்"** [32]

என்ற பாடலால் உணரப்படுகிறது. இந்நிகழ்வின் பொழுது பாடிய பதிகம் கிடைத்திலது.

எல்லையற்ற காதலால் திருக்கானப்பேரில் சில காலம் தங்கியிருந்த சுந்தரரும் சேரமான் பெருமாள் நாயனாரும் பின்னர் மேகங்கள் சூழ்ந்து வந்து தங்குதற்கு இடமான மலர்ச் சோலைகளையுடைய திருக்கானப்பேர் நீங்கித் திருப்புனவாயில் போந்ததை,

**"ஆராத காதலுட**

**னப்பதியிற் பணிந்தேத்திச்**

**சீராருந் திருத்தொண்டர்**

**சிலநாளங் கமர்ந்தருளிக்**

**காராரு மலர்ச்சோலைக்**

**கானப்பேர் கடந்தணைந்தார்**

**போரானேற் றார்கயிலைப்**

**பொருப்பர்திருப் புனவாயில்”** [33]

என்ற பாடல் விளக்கி நிற்கும்.

**இறைவன்:**

திருக்கானப்பேர் உறையும் இறைவன், தொண்டர்களால் வணங்கப்படும் திருவடியையும், ஒளி மிகுந்த இளமையான பிறை சந்திரனையும், சூதாடு கருவி போன்ற மெல்லிய முலைகளையுடைய இறைவியைத் தன் பாகமாகவும் கொண்டதுடன் செந்தாமரை போன்ற மேனியும் கொண்டிருந்த தன்மையை,

**“தொண்டர் அடித்தொழலும் சோதி இளம்பிறையும்**

**சூதன மென்முலையாள் பாகமும் ஆகிவரும்**

**புண்டரிகப் பரிசாம் மேனியும்.....**

**......”** (7:84:1:1-2)

என்ற பாடல் அடிகள் எடுத்துக்காட்டும். இத்தகைய குணங்களுடன் எண் தோளினையும் அழகிய அணிகலன்கள் சூடிய சடையையும் உடைய காளை வடிவினனான திருக்கானப்பேர் இறைவனை என்று காண்பேனோ! என்று சுந்தரர் ஏக்கமுற்றுப் பாடுவதை,

**“........ மெண்டோளுங்**

**கோல நறுஞ்சடைமேல் வண்ணமுங் கண்குளிரக்**

**கண்டு தொழப்பெறுவ தென்றுகொ லோஅடியேன்**

**கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே”** (7:84:1:3-4)

என்ற பாடல் அடிகள் விளக்கி நிற்கும்.

குளிர்ச்சி பொருந்திய கங்கை பாய்கின்ற சடையில் பாம்பு, கொக்கின் இறகு, குளிர்ந்த ஊமத்தை மலரைச் சூடி இருக்கும் திருக்கானப்பேர் இறைவன் மீது பக்தியின் மிகுதியால் அடியவர்கள் இசை பொருந்தப் பாடல்கள் பல பாடுவர். அதனால் அடியவர்கள் இறைவனாகவே ஆகும் பேறு பெறுவர் என்பதை,

**“கூத லிடுஞ்சடையும் கோளர வும்விரவுங்**

**கொக்கிற குங்குளிர்மா மத்தமும் ஒத்துனதாள்**

**ஓத லுணர்ந்தடியார் உன்பெரு மைக்குநினைந்**

**துள்ளுரு காவிரசும் மோசையைப் பாடலும்நீ**

**ஆத லுணர்ந்தவரோ டன்பு பெருத்தடியேன்**

**அங்கையின் மாமலர்கொண் டென்கண தல்லல்கெடக்**

**காத லுறத்தொழுவ தென்றுகொ லோஅடியேன்**

**சனர்வயல் சூழ்கானப் பேருறை காளையையே"** (7:84:2)

என்ற பாடலில் குறிப்பிடும் சுந்தரர், அத்தகைய அடியார்களுடன் அன்பு பொருந்த தன் கையால் மலர்களைக் கொண்டு காளை வடிவினனான இறைவனைப் பூசித்து அல்லல் கெடுவது எந்நாளோ! என்று ஏங்குகிறார். இதில் 'குளிர்ச்சி' என்பதற்கு 'கூதல்' என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார் சுந்தரர்.

தனக்கு உடைமையான செல்வமாகவும், நன்மையை நாளும் தருபவனாகவும், தன்னையே வீடு பேற்றின் பற்றுக் கோடாய் கொண்டவரின் சொற்பதமாகவும், தேன், அமுதம் ஆகியனவற்றின் சுவையாகவும், தேவர்களின் தலைவனாகவும், பூக்கள் உயர்ந்து காணப்பெரும் சென்னியில் வான் மதியை சூடப்பெற்றவனாகவும், ஐம்பூதங்களின் ஆதாரமாய் இருப்பவனாகவும், சுடுகாட்டில் நடனம் புரிபவனுமாகிய இறைவனை நான் என்று கண்டு எய்துவெனோ! என்பதனை,

**"நானுடை மாடெனவே நன்மை தரும்பரனை**

**நற்பத மென்றுணர்வார் சொற்பத மார்சிவனைத்**

**தேனிடை இன்னமுதை மற்றத னிற்றெளிவைத்**

**தேவர்கள் நாயகனைப் பூவுயர் சென்னியனை**

**வானிடை மாமதியை மாசறு சோதியனை**

**மாருத மும்மனலும் மண்டல மும்மாய**

**கானிடை மாநடனென் றெய்துவ தென்றுகொலோ**

**கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே"** (7:84:3)

என்ற பாடலில் குறிப்பிடுகிறார் சுந்தரர்.

தன்னை நினைப்பவர்களின் நினைவாக நிற்பதும் அவர்களை நடத்தும் சக்தியாகவும் குற்றமில்லாத அடியவர்களின் இசையாகவும் விளங்கி, கோவணத்துடன் புலித்தோலை அரையில் உடுத்தியவனும், வலிமையான தோள்கள் உடையவனும், காதலால் இறைவி தழுவியதால் ஏற்பட்ட சுவடு உடைய மார்பில் திருநீறும்

கொண்டவனுமாகிய இறைவனின் புகழை தான் கற்ற கல்வியின் பயனால் பாடி கையினால் தொழுவது எந்நாளோ! என்று சுந்தரர் வினவி நிற்பதனை,

**"…..**

**சேவக முந்நினைவார் பாவக முந்நெறியும்**

**குற்றமில் தன்னடியார் கூறு மிசைப்பரிசும்**

**கோசிக மும்மரையிற் கோவண மும்மதளும்**

**மற்றிகழ் திண்புயமும் மார்பிடை நீறுதுதை**

**மாமலை மங்கையுமை சேர்சுவ டும்புகழக்**

**கற்றன வும்பரவிக் கைதொழ லென்று கொலோ**

**கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே"** (7:84:4)

என்ற பாடலடிகளால் அறிய முடிகிறது. இதில் சுந்தரர், மூவங்க வணக்க முறையுடன் தான் பெற்ற கல்வியையும் குறிப்பிடுகின்றார்.

முல்லை நிலத்திற்குரிய விடையைக் கொண்டவனும், நறுஞ்சடையில் கொத்தாய் கட்டிய மலர் மாலையை அணிந்தவனும், முல்லைப் பூவைப் போல குறுநகை உடைய மென்மையான குணம் பொருந்திய இறைவியைக் காதலால் தன் பாகமாக உடையவனும், தில்லை நகர்ப் பொருந்த நடனம் ஆடுபவனும், கையில் மழு, தீ ஆகியவற்றுடன் அடியார்கள் சாற்றும் மணி வடத்தையும் பூண்ட இறைவனை என்று காண எய்துமோ! என்று சுந்தரர் கருதுவதை,

**"கொல்லை விடைக்குழகுங் கோல நறுஞ்சடையிற்**

**கொத்தல ரும்மிதழித் தொத்தும் அதனருகே**

**முல்லை படைத்தநகை மெல்லிய லாளொருபால்**

**மோக மிகுத்திலகுங் கூறுசெ யெப்பரிசும்**

**தில்லை நகர்ப்பொதுவுற் றாடிய சீர்நடமுந்**

**திண்மழு வுங்கைமிசைக் கூரெரி யும்மடியார்**

**கல்ல வடப்பரிசுங் காணுவ தென்றுகொலோ**

**கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே"** (7:84:5)

என்ற பாடல் விளக்கி நிற்கும்.

திருமகளைப் போன்ற அழகுடை மகளிர், யாழில் பண்ணமைத்துப் பாடுதலும், தம் பக்தித் திறத்தால் அதில் நிற்றலையும் அருளும் இறைவனே துன்பங்களைக் களைந்து வீடு பேற்றை அருள்பவன் எனத் தெளிந்து துயிலெழும் அடியார்கள் வணங்கும் எந்தையாகிய இறைவனை தான் காண்பது எந்நாளோ! என்று சுந்தரர் நினைந்துருகுவதை,

**"பண்ணுத லைப்பயனார் பாடலும் நீடுதலும்**

**பங்கய மாதனையார் பக்தியு முத்தியளித்**

**தெண்ணுத லைப்பெருமான் என்றெழு வாரவர்தம்**

**மேசற வும்மிறையாம் எந்தையை யும்விரவி**

**நண்ணுத லைப்படுமா றெங்ஙன மென்றயலே**

**நையுறு மென்னைமதித் துய்யும்வ ணம்மருளுங்**

**கண்ணுத லைக்கனியைக் காண்பது மென்றுகொலோ**

**கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே"** (7:84:6)

என்ற பாடல் உணர்த்துகின்றது. இப்பாடலில் கனி போன்ற சுவை பொருந்திய திருக்கானப்பேர் இறைவன், அயலே நின்றாலும் தன்னையும் ஒரு பொருளாக மதித்து உய்யும் வண்ணம் வந்து ஆட்கொண்டதைக் கூறுகின்றார். அயலே என்றது, திருக்கானப்பேர் இறைவன் சுந்தரர் தங்கியிருந்த அயலான திருச்சுழியலில் கனவிற் வந்து ஆட்கொண்டதைக் குறிப்பிடுகின்றார்.

இதில் 'ஏசுறவும் இறை' என்று இறைவனைப் பாடியிருப்பது சுந்தரரை திருவெண்ணெய்நல்லூர் திருத்தலத்தில் அவரது துன்பவினைகள் ஒழிய தடுத்தாட்கொண்டதைப் போல அடியார்களின் துன்பங்களைக் களைபவன் என்ற பொருளில் உணர்த்தியதாகும்.

**"மாவை யுரித்ததள்கொண் டங்க மணிந்தவனை**

**வஞ்சர் மனத்திறையும் நெஞ்சணு காதவனை**

**மூவ ருருத்தனதாம் மூல முதற்கருவை**

**மூசிடு மால்விடையின் பாகனை ஆகமுறப்**

**பாவக மின்றிமெய்யே பற்று மவர்க்கமுதைப்**

**பால்நறு நெய்தயிர்ஐந் தாடு பரம்பரனைக்**

**காவல் எனக்கிறையென் றெய்துவ தென்றுகொலோ**

**கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே"** (7:84:7)

என்ற பாடலில் யானைத் தோலைப் போர்த்தியவனும், வஞ்சனையுடைய மனத்தில் உட்புகாதவனும், மும்மூர்த்திகளை தோற்றுவித்தவனும், முதற்பொருளாய் இருப்பவனும், 'மூசு' என்ற ஒலியை எழுப்பும் இடபத்தின் மீதூர்பவனும், பொய்யின்றி மெய்யாகத் தன்னைப் பற்றுபவர்களுக்கு அமுதத்தைப் போன்ற சுவையுடையவனாய் உள்ளவனும், ஆனைந்தால் திருமுழுக்காட்டப்படுபவனுமான திருக்கானப்பேர் இறைவனே தனக்கு காவல் என்று எய்துவது எந்நாளோ! என்று பாடுகிறார் சுந்தரர்.

நால் வேதத்தின் பொருளாய் இருப்பவனும், வேதத்தை ஓதுபவனான இறைவன், தொண்டர்களுக்கு எளிய சோதி வடிவினன் என்பதை,

**"தொண்டர் தமக்கெளிய சோதியை வேதியனைத்**

**தூய மறைப்பொருளாம் நீதியை ... "** (7:84:8:1)

என்ற பாடலடியால் அறியப்படுகிறது.

இவ் இறைவனே, ஊழி தோறும் உலகங்களைச் சிருட்டிக்கும் பிரம்மனும் அழகான திருமாலும் அறியவொண்ணாத பொருளாய் நின்றவன். தேவர்களுக்குத் தலைவனாய் இருந்து அவர்களுக்கு ஆகம நூல்களை மொழிந்தவன் என இறைவனின் குணங்களை,

**"....."**

**ஊழி படைத்தவனோ டொள்ளரி யும்முணரா**

**அண்டனை அண்டர்தமக் காகம நூல்மொழியும்**

**ஆதியை மேதகுசீ ரோதியை வானவர்தம்**

**கண்டனை யன்பொடுசென் றெய்துவ தென்றுகொலோ**

**கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே"** (7:84:8:2-4)

என்று பாடி, அவனை அன்பொடு சென்று எய்துவது எந்நாளோ! என்று ஏக்கமுறுகிறார் சுந்தரர்.

நாதமாகவும் நாதத்திலிருந்து எழும் இசையாகவும் ஞானமென்னும் விளக்கின் ஒளியாகவும், ஊனாகவும், ஊனை இயங்கச் செய்யும் உயிராகவும், பயிராகவும் உள்ள இறைவன், இறைவியைத் தன் பாகமாகக் கொண்டு விளங்குபவன் என்பதை,

**“நாதனை நாதமிகுத் தோசைய தானவனை**

**ஞான விளக்கொளியாம் ஊனுயி ரைப்பயிரை**

**மாதனை....”** (7:84:9:1-2)

என்ற பாடல் அடிகள் உணர்த்தி நிற்கும்.

பக்தர்கள் மேல் தனக்கு உள்ள பற்றை சிறிதும் விடாதவனும் குற்றமில்லாதவனுமான இறைவன் தனக்குத் தோழனாக இருந்து தூது சென்றமையை,

**“...... மேதகுதன் பத்தர் மனத்திறையும்**

**பற்றுவிடாதவனைக் குற்றமில் கொள்கையனைத்**

**தூதனை யென்றனையாள் தோழனை நாயகனைத்**

**தாழ்மக ரக்குழையுந் தோடு மணிந்ததிருக்**

**காதனை நாயடியேன் எய்துவ தென்றுகொலோ**

**கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே”** (7:84:9:2-4)

என்ற அடிகளில் சுந்தரர் குறிப்பிடுகிறார். தாழ்ந்து தொங்கும் மகரக் குண்டலத்தையும் தோடணிந்த திருச்செவியையும் நாயடியேன் என்று எய்துவனோ! என்று தன்னை நாயிற்கு அடியாய்ப் பாடுகிறார். இதில் ஆலால சுந்தரராய் இருந்து மண்ணில் சுந்தரராய் வந்து தோன்றிய தன்மீது பற்று விடாது இறைவன் வந்து ஆட்கொண்டதைக் குறிப்பாக உணர்த்துகிறார்.

**“நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்கு”** [34] என்று மாணிக்கவாசகரும், **“அங்காடி நாய்போல் அலைந்தனையே நெஞ்சமே”** [35] என்று பட்டினத்தாரும், **“நாயே னையும்இங் கொருபொரு ளாக நயந்துவந்து”** [36] என்று அபிராமி பட்டரும் தங்களை நாயாகக் குறிப்பிட்டுள்ளமையைக் காணமுடிகின்றது.

**“கன்னலை இன்னமுதை”** (7:84:10:1) என்ற அடியில் இறைவனைக் கரும்புச் சாறாகவும் அமுதமாகவும் போற்றிப் பாடுகிறார் சுந்தரர்.

**புராணச் செய்திகள்:**

தேவர்களும் அசுரர்களும் பூசலிட்டுக் கடலைக் கடைந்த பொழுது தோன்றிய நஞ்சை, அனைவரையும் காக்கும் பொருட்டு இறைவன் உண்டார். அந்த ஆலகால விடம் தன் நினைவுக்குறி நீங்காது கருத்த மேகம் போன்ற நிறத்துடன் இறைவனின் கண்டத்தில் இருப்பதை,

**"......வானவர்கள்**

**பூச லிடக்கடல்நஞ் சுண்ட கருத்தமரும்**

**கொண்ட லெனத்திகழுங் கண்டமு...."** (7:84:1:2-3)

என்ற அடிகள் குறிப்பிடும். பிறிதொரு இடத்தில், இறைவன் கடல் நஞ்சுண்டதை, **"வார்கடல்நஞ் சுண்ட"** (7:84:8:2-3) என்ற அடிகளும் கூறி நிற்கும்.

**"செற்றவர் முப்புரமன் றட்ட சிலைத்தொழிலார் ......."** (7:84:4:1) என்ற பாடல் அடி, இறைவன் தன் சிலைத்தொழிலால் முப்புரங்கள் எரித்ததைக் கூறும்.

**இயற்கை:**

திருக்கானப்பேர் சுந்தரர் தேவாரத்தின் முதல் ஒன்பது பாடல்களின் ஈற்றடியும் பத்தாவது பாடலின் முதல் அடியும் 'கார்வயல் சூழ்கானப் பேர்' என்று, மிக்க நீரையுடைய வயல்களால் சூழப்பெற்றது திருக்கானப்பேர் எனக் குறிப்பிடும். இதைத் தவிர திருக்கானப்பேரைப் பற்றிய வேறு இயற்கைச் செய்திகள் இப்பதிகத்தில் இடம்பெறவில்லை.

தாமரை, ஊமத்தை ஓர் இடத்தில் குறிக்கப்பெற்றுள்ளது.

திருநாவுக்கரசர், திருவிராமேச்சுரத்திலிருந்து திருநெல்வேலி அடைந்து பின்னர் விடையின் மீதூறும் இறைவன் அருளும் திருக்கானப்பேர் உள்ளிட்ட திருத்தலங்களைச் சென்று பாடியதை,

**"பொங்குதமிழ்த் திருநாட்டுப்**

**புறம்பணைசூழ் நெல்வேலி**

**செங்கண்விடை யார்மன்னுந்**

**திருக்கானப் பேர்முதலா**

**எங்குநிகழ் தானங்கள்**

**எல்லாம்புக் கிறைஞ்சுவார்"** [37]

என்று சேக்கிழாரின் பெரிய புராணம் உரைக்கும். திருக்கானப்பேர் திருத்தலத்தில் திருநாவுக்கரசர் பாடிய பதிகம் கிடைத்திலது.

**திருப்பூவணம்:**

பாண்டிப் பதினான்கு திருத்தலங்களில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரின் தேவாரப் பதிகங்களும் கிடைக்கப்பெறும் திருத்தலம்

திருப்பூவணம் ஆகும். முதல், மூன்றாம் திருமுறையில் திருஞானசம்பந்தர் பதிகங்களும், ஆறாம் திருமுறையில் திருநாவுக்கரசர் பதிகமும், ஏழாம் திருமுறையில் சுந்தரர் பதிகமும் என நான்கு பதிகங்கள் திருப்பூவணத்திற்கு உள்ளன.

**திருஞானசம்பந்தர் தேவாரம்:**

திருஞானசம்பந்தர் தன்னுடன் போந்த நின்றசீர் நெடுமாற நாயனார், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் ஆகியோருடன் சில காலம் திருப்புத்தூரில் தங்கியிருந்து பின்னர் ‘திருப்பூவணம்’ அடைந்தார் என்பதை,

**“பற்றார்தம் புரங்கள்மலைச் சிலையால் செற்ற**
**பரமனார் திருப்புத்தூர் பணிந்து போந்து**
**புற்றாரும் பணிபூண்ட புனித னார்தம்**
**பூவணத்தைப் புக்கிறைஞ்சிப் புகழ்ந்து பாடி”** [38]

என்ற பெரிய புராணத்தின் அடிகளால் அறியலாம். திருப்பூவணத்தில் திருஞானசம்பந்தர், முதல் திருமுறையில் ‘தக்கேசிப்’ பண்ணில் அமைந்த பதிகம் ஒன்றும் மூன்றாம் திருமுறையில் ‘காந்தார பஞ்சமம்’ பண்ணில் அமைந்த பதிகம் ஒன்றும் என இரண்டு பதிகங்கள் பாடியுள்ளார்.

**முதலாம் திருமுறை:**

**இறைவன்:**

ஆர்ப்பரித்து வரும் கங்கையையும் ஆத்தி மலரையும் படமெடுத்து ஆடும் பாம்பையும் தாங்கிய சடையின் மேல் பிறை மதியைச் சூடியும் இறைவியைத் தன் கூறாகவும் உடைய இறைவனை,

**“அறையார்புனலு மாமலரு**
**மாடரவார் சடைமேல்**
**குறையார்மதியுஞ் சூடிமாதோர்**
**கூறுடையா னிடமாம்”** (1:64:1:1-2)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன.

**“ ....மாமலையான் மடந்தை**
**ஒருபால்பாக மாகச்செய்த**
**வும்பர்பிரா னவனூர்”** (1:64:2:1-2)

என்ற அடிகளில் உம்பர் பிரானாகிய இறைவன் மலையத்துவசனின் மகளாகிய இறைவியை ஒருபாலாகக் கொண்டதை உரைக்கின்றது.

‘மலையத்துவசன்’ என்ற பாண்டிய மன்னனுக்கும் அவன் மனைவியாகிய காஞ்சனமாலை என்பாளுக்கும் பிறந்தவள் ‘தடாதகை’ ஆவாள். இவளே ‘அங்கயற்கண்ணி’ என்றும் ‘மீனாட்சி’ என்றும் அழைக்கப்படும் திருஆலவாய் திருக்கோயிலின் இறைவியாவாள்.

குமரகுருபரர் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில்,

**“இமயப் பொருப்பில் விளையாடும்**
**இளமென் பிடியே எறிதரங்கம்**
**உடுக்கும் புவனம் கடந்து நின்ற**
**ஒருவன் திருவுள்ளத்தில் அழகு**
**ஒழுக எழுதிப் பார்த்து இருக்கும்**
**உயிர் ஓவியமே மதுகரம்வாய்**
**மடுக்கும் குழற் காடேந்தும்இள**
**வஞ்சிக் கொடியே வருகவே**
**மலயத் துவசன் பெற்ற பெரு**
**வாழ்வே வருக வருகவே”** [39]

என்று இறைவியைப் பாடியுள்ளார்.

திருஞானசம்பந்தர் திருஆலவாயினின்று திருப்புத்தூர் அடைந்து பின்னர் திருப்பூவணம் போந்தார். திருஆலவாய் திருத்தலத்தின் எண்ணம் மிகுதியாக இருந்ததாலும் திருப்பூவணம் திருஆலவாய்க்கு அருகில் இருப்பதாலும் இவ்வரலாற்றுக் குறிப்பை திருஞானசம்பந்தர் பாடியுள்ளார்.

**“...மெல்லியலாளோர்**
**பான்மகிழ்ந் தானிடமாம்”** (1:64:5:2)

என்ற பாடல் அடி திருப்பூவணத்து இறைவன், மெல்லியலாளான இறைவியை மகிழ்ந்து தன் பாகமாகக் கொண்டவன் என்பதை உணர்த்தும். பதிகத்தின் மூன்றாவது பாடல் இறைவனை ‘பொடி அணிந்த மேனியன்’, ‘நெற்றிக் கண்ணை உடையவன்’ என்றும் பதினொறாவது பாடல் ‘பொன்னார் மேனியன்’ என்றும் குறிப்பிடுகிறது.

மணம் வீசுகின்ற கொன்றை மாலையை கழுத்திலும் நீண்ட குழையை காதில் சூடியவனும் வெண்ணிற விடைக் கொடியை உடையவனும் கோவணத்தை உடுத்தியவனுமான இறைவனை,

**“கடியாரலங்கற் கொன்றைசூடிக்**

**காதிலொர் வார்குழையன்**

**கொடியார்வெள்ளை யேறுகந்த**

**கோவணவன் னிடமாம்”** (1:64:4:1-2)

என்ற பாடலடிகள் குறிப்பிடுகிறது.

வாயில் படம் பொருந்திய பாம்பை அரையில் கட்டி, சிவகணங்கள் போற்றி இசைத்துப் பாட, உடல் முழுவதும் நீறு பூசி விடையில் ஏறுபவனான இறைவன் உறையும் இடம் திருப்பூவணம் என்பதை,

**“பைவாயரவ மரையிற்சாத்திப்**

**பாரிடம் போற்றிசைப்ப**

**மெய்வாய்மேனி நீறுபூசி**

**யேறுகந் தானிடமாம்”** (1:64:7:1-2)

என்ற அடிகள் உரைக்கும்.

நன்மை தீமை என்னும் இருமைகளைக் கடந்தவனும் நான்மறைகளின் வடிவானவனும் தேவர்களின் தலைவனுமான இறைவனின் திருவடிகளைச் சென்று போற்றி ஏத்துதற்காக வேண்டித் திருப்பூவணத்தில் அமைந்திருப்பதை,

**“நன்றுதீதென் றொன்றிலாத**

**நான்மறை யோன்கழலே**

**சென்றுபேணி யேத்தநின்ற**

**தேவர்பிரா னிடமாம்”** (1:64:6:1-2)

என்ற அடிகள் சுட்டி நிற்கும்.

அலைகள் தவழும் நீரிடங்களில் நீராடுவதைத் துறந்த சமணர்களும் பௌத்தர்களும் அன்பு செய்யாத வண்ணம் ‘மாயம்’ வைத்த நின்மலன் இறைவனின் இடம் திருப்பூவணம் என்பதை,

**“அலையார்புனலை நீத்தவருந்**

**தேருமன்பு செய்யா**

**நிலையாவண்ண மாயம்வைத்த**

**நின்மலன் றன்னிடமாம்"** (1:64:10:1-2)

என்ற அடிகளில் திருஞானசம்பந்தர் குறிப்பிடுகின்றார்.

**புராணச் செய்திகள்:**

இறைவன், பகைவர்களின் மும்மதில்களை எரித்தவன் என்பதை,

**"மருவார்மதின்மூன் றொன்றவெய்து...."** (1:64:2:1)

என்ற அடியினாலும், கூர்மையான வாளியை சிலையிற் பூட்டி கொடிகள் பறக்கும் மூன்று மதில்களை அழித்த 'போரில் வில்லி' என்பதை,

**"கூரார்வாளி சிலையிற்கோத்துக்**

**கொடிமதில் கூட்டழித்த**

**போரார்வில்லி...."** (1:64:5:1-2)

என்ற அடிகளாலும் திருஞானசம்பந்தர் பாடியுள்ளார்.

போர்க் குணம் கொண்ட மதயானையின் தோலையுரித்து போர்த்தியதும் கடலில் தோன்றிய நஞ்சுண்டதுமான புராணங்களை,

**"போரார்மதமா வுரிவைபோர்த்துப்**

**பொடியணி மேனியனாய்க்**

**காரார்கடலி னஞ்சமுண்ட......"** (1:64:3:1-2)

என்ற பாடல் அடிகளால் அறியலாம்.

மாடங்களை உடைய வீதிகள் நிறைந்த இலங்கை மன்னன் இராவணனின் மாண்பினை அழித்து அவனின் இசையைக் கேட்டு வெற்றி நல்கும் வாளை இறைவன் அளித்ததை,

**"மாடவீதி மன்னிலங்கை**

**மன்னனை மாண்பழித்துக்**

**கூடவென்றி வாள்கொடுத்தாள்**

**கொள்கையி னார்க்கிடமாம்"** (1:64:8:1-2)

என்ற அடிகள் குறிப்பிடும்.

பொய்ப் பொருளன்றி மெய்ப்பொருளை உணர்த்தும் நான்மறைகளை ஓதும் நாவினை உடைய பிரம்மனும் நிலமகளின் காதலனுமான திருமாலும் கைகளினாற்றொழுது கழல்களை போற்றத் தீப்பிழம்பாய் இறைவன் நின்றதை,

**“பொய்யாவேத நாவினானும்**

**பூமகள் காதலனும்**

**கையாற்றொழுது கழல்கள்போற்றக்**

**கனலெரி யானவனூர்”** (1:64:9:1-2)

என்ற அடிகள் உணர்த்தும்.

**இயற்கை:**

பல வாய்க்கால்களின் வழியே பரவி மணியையும் பொன்னையும் கொழித்து ஓடும் வைகையாற்றின் கரையில் திருப்பூவணம் அமைந்திருப்பதை,

**“பாரார்வைகைப் புனல்வாய்பரப்பிப்**

**பன்மணி பொன்கொழித்துச்**

**சீரார்வாரி சேரநின்ற**

**தென்றிருப் பூவணமே”** (1:64:3:3-4)

என்ற பாடல் அடிகள் குறிப்பிடும்.

பலவித மணியையும் பொன்னையும் கொழித்து ஓடும் வைகைநீர் சூழ அமைந்திருக்கும் உயர்ந்த திருப்பூவணத்தை,

**“....பன்மணி பொன்கொழித்து**

**ஓடிநீரால் வைகைசூழு**

**முயர்திருப் பூவணமே”** (1:64:8:3-4)

என்ற அடிகள் சுட்டும்.

பொழில்களில் உள்ள கருநிற வண்டுகளின் இசையில் மயங்கித் தாமரை தேனைச் சுரப்பதும் வைகையாறு மணிகளைக் கொழித்து ஓடுவதுமான திருப்பூவணத்தின் இயற்கைச் செறிவை,

**“மையார்பொழிலின் வண்டுபாட**

**வைகைமணி கொழித்துச்**

**செய்யார்கமலந் தேனரும்புந்**

**தென்றிருப் பூவணமே”** (1:64:9:3-4)

என்ற அடிகள் மூலம் உணரக் கிடைக்கும்.

**திருத்தலம்:**

முடிசூடி முறையாக ஆளும் பாண்டியரும் அவர்களுக்குத் திறைப் பொருட்களை செலுத்தும் சேரர், சோழர் ஆகியோர் வணங்கும் செம்மை பொருந்தியது திருப்பூவணம் என்பதை,

**“முறையார்முடிசேர் தென்னர்சேரர்**

**சோழர்கள்தாம் வணங்கும்**

**திறையாரொளிசேர் செம்மையோங்குந்**

**தென்றிருப் பூவணமே”** (1:64:1:3-4)

என்ற அடிகளிலும்,

ஆராத அன்பினாற் மூவேந்தர்களும் போற்றி இசைத்துப் பாடும் இறைவன் உறையும் திருப்பூவணம் என்பதை,

**“ஆராவன்பிற் றென்னர்சேரர்**

**சோழர்கள் போற்றிசைப்ப”** (1:64:5:3)

என்ற அடியிலும் என இரண்டு இடங்களில் திருப்பூவணத்தில் மூவேந்தர்கள் வழிபாடு செய்துள்ளமையைக் குறிப்பிடுகின்றார் திருஞானசம்பந்தர்.

இதில் பாண்டியர் முறையாக அரசாள்வதாக திருஞானசம்பந்தர் குறிப்பிடுவது, நின்றசீர் நெடுமாற நாயனார் சமணத்தினின்று திருந்தி சைவத்திற்குத் திரும்பி முறையாக நாட்டை ஆள்வதை உணர்த்தவேயாகும்.

**“கருவார்சாலி யாலைமல்கிக்**

**கழன்மன்னர் காத்தளித்த**

**திருவான்மலிந்த சேடர்வாழுந்**

**தென்றிருப் பூவமே”** (1:64:2:3-4)

என்ற அடிகளில், கருக்கொண்ட நெற்பயிர்கள், கரும்புகள் மண்டிக்கிடக்கும் திருப்பூவணத்தில் கழல் சூடிய மன்னர் காத்துத் தந்த செல்வத்தைப் பெற்றிருக்கும் பெருமையுடையவர் வாழ்கின்றனர் என்று குறிப்பாக பாண்டிய மன்னரைப் பாடியுள்ளார் திருஞானசம்பந்தர்.

முடத்தாமக்கண்ணியார் பொருநராற்றுப்படையில்,

**“முரசு முழங்கு தானை, மூவரும் கூடி**

**அரசவை இருந்த தோற்றம் போல”** [40]

என்று மூவந்தர்களைக் குறிப்பிட்டு பாடியுள்ளது ஈண்டு குறிப்பிடத்தகுந்ததாகும்.

புதர்கள் நிறைந்த வைகை சூழ்ந்திருக்கும் திருப்பூவணத்தில் நிலத்தின்கண் உள்ள மக்கள் எல்லாரும் கூடி, நெடியதாய விளங்கும் இறைவனின் புகழைப் பாடுவர் என்பதை,

**“படியார்கூடி நீடியோங்கும்**

**பல்புகழாற் பரவச்**

**செடியார்வைகை சூழநின்ற**

**தென்றிருப் பூவணமே”** (1:64:4:3-4)

என்ற அடிகளால் அறியலாம்.

**“பாடலோடு மாடலோங்கி**

**பன்மணி பொன்கொழித்து”** (1:64:8:3)

என்ற அடியின் மூலம் திருப்பூவணத்தில் பாடலும் ஆடலும் ஓங்கியிருந்ததை அறியயியலும்.

**“கைவாழ்வளையார் மைந்தரோடுங்**

**கலவியி னானெருங்கிச்**

**செய்வார்தொழிலின் பாடலோவாத்**

**தென்றிருப் பூவணமே”** (1:64:7:3-4)

என்ற பாடல் அடிகள், கைகளில் வளையல்களைப் பூண்ட மகளிர் தம் காதலர்களோடு நெருங்கிச் செய்யும் கலவிக் காலத்து எழும் பாடல்கள் நீங்காத திருப்பூவணத்தைக் குறிப்பிடுகிறது.

திருப்பூவணத்தில் தேர் ஓடும் வீதிகளில் நீண்டு உயர்ந்த மாடங்கள் இருந்தமையை,

**“தேரார்வீதி மாடநீடுந்**

**தென்றிருப் பூவணமே”** (1:64:5:4)

என்றும், கல்லால் ஆன மதில்கள் சூழப்பெற்று, வெற்றியைப் பறைசாற்றும் வண்ணம் மலை போன்றுயர்ந்த மாளிகைகளின் அழகினை,

**“மலைபோற்றுன்னி வென்றியோங்கு**

**மாளிகை சூழ்ந்தயலே**

**சிலையார்புரிசை பரிசுபண்ணுந்**

**தென்றிருப் பூவணமே”** (1:64:10:3-4)

என்றும், மலையை ஒத்த வலிமை உடைய உயர்ந்த மாடங்கள் காணப்படுவதை,

**“திண்ணார்புரிசை மாடமோங்குந்**

**தென்றிருப் பூவணத்து”** (1:64:11:1)

என்றும் திருஞானசம்பந்தர் தன் தேவாரத்தில் குறிப்பிட்டுள்ளார்.

‘திறைப் பொருட்களால் ஒளி பொருந்தியது’ என்றும், ‘கழல் மன்னர் காத்துத் தந்த செல்வம்’ என்றும் திருப்பூவணத்தை திருஞானசம்பந்தர் பாடுவதால், பாண்டிய மன்னர் திறையாகப் பெற்ற செல்வத்தைக் கொண்டு, திருப்பூவணத்தை வலிமை பொருந்தச் செய்தனன் என்பதை அறிய முடிகின்றது. இதனாற்றான் சேரரும் சோழரும் வந்திருந்ததை திருஞானசம்பந்தர் குறிப்பிட்டுள்ளார்.

‘மாறவர்மன் அரிகேசரி’ என்ற பட்டப் பெயர் கொண்டிருந்த நின்றசீர் நெடுமாற நாயனார் மற்ற மன்னர்கள் திறை செலுத்த வாழ்ந்தனன் என்பதைப் பாண்டியர் வரலாறு உணர்த்துகின்றது.[41]

**“நண்ணாருட்கக் காழிமல்கு**

**ஞானசம்பந்தன் சொன்ன”** (1:64:11:3)

என்ற பதிகத்தின் இறுதிப்பாடல் அடியில், ‘பகைவராகிய புறச்சமயத்தார் அஞ்சுமாறு’ என்று, சமணர்களை அனல் வாதம் புனல் வாதத்தில் வென்று அவர்களை கழுவேற்றி, பாண்டிய மன்னனை சைவராக்கியதால் புறச்சமயத்தார் கொண்டுள்ள அச்சத்தை குறிப்பாகப் பாடியுள்ளார்.

**மூன்றாம் திருமுறை:**

**இறைவன்:**

இறைவியை தன் திருமேனியின் ஒரு பாகமாய் தாங்கியதால் **"மாதமர் மேனியன்"** (3:20:1:1) என்று மூன்றாம் திருமுறை பதிகத்தைத் தொடங்கியுள்ளார் திருஞானசம்பந்தர்.

உண்மைப் பொருளை உணர்த்தும் வேதங்களையும் அதன் ஆறு அங்கங்களையும் ஓதிய ஞான வடிவினன் என்று இறைவனை,

**"ஆனநல் லருமறை அங்கம் ஓதிய**
**ஞானனை அடிதொழ நன்மை யாகுமே"** (3:20:2:3-4)

என்ற அடிகள் புலப்படுத்தும்.

பறையும் முழவும் ஒலிக்க பாடி ஆடல் புரிபவனும் நான்கு வேதங்களை ஓதுபவனும் இறைவியைத் தன் கூறாகக் கொண்டவனுமாகிய இறைவனின் ஒலி பொருந்திய கழல் அணிந்த திருவடிகளைத் தொழ அல்லல் கெடும் என்பதை,

**"பறைமல்கு முழவொடு பாட லாடலன்**
**பொறைமல்கு பொழிலணி பூவ ணத்துறை**
**மறைமல்கு பாடலன் மாதொர் கூறினன்**
**அறைமல்கு கழல்தொழ அல்லல் இல்லையே"** (3:20:7)

என்ற பாடலடிகள் உணர்த்தும்.

துன்பத்தைத் தரும் நோயும் அந்நோய்க்கு காரணமான வினைகளும் தீர நினைப்பவர்கள், அந்தி வேளையிற் தோன்றும் பிறைச் சந்திரனையும் கங்கையையும் சூடி திருப்பூவணத்தில் உள்ள 'நந்தி' என்றழைக்கப்படும் இறைவனின் திருவடிகளைச் சிந்தையில் வைத்துத் தொழ நன்மை விளையும் என்பதை,

**"வெந்துயர் உறுபிணி வினைகள் தீர்வதோர்**
**புந்தியர் தொழுதெழு பூவ ணத்துறை**
**அந்திவெண் பிறையினோ டாறு சூடிய**
**நந்தியை அடிதொழ நன்மை யாகுமே"** (3:20:3)

என்ற பாடலால் அறியலாம்.

இதில் 'வெந்துயர்' என்பது நின்றசீர் நெடுமாற நாயனார் பெற்றிருந்த 'வெப்பு நோயையும்', அஃது இறைவனைத் தொழுததால் நீங்கிய பான்மையையும் குறிப்பாக உணர்த்துகின்றது.

மணம் பொருந்திய மலர்கள் மலிந்த மார்பில் திருநீற்றைப் பூசி திருப்பூவணத்தில் உள்ள இறைவனை, மலர்களால் புனையப்பட்ட மாலைகளைக் கொண்டு திருவடிகளை ஏத்தித் தொழுபவர்களுக்கு நன்மை விளையுமென்பதை,

**"வாசநன் மலர்மலி மார்பில் வெண்பொடிப்**

**பூசனைப் பொழில்திகழ் பூவ ணத்துறை**

**ஈசனை மலர்புனைந் தேத்து வார்வினை**

**நாசனை யடிதொழ நன்மை யாகுமே"** (3:20:4)

என்ற பாடல் குறிப்பிடும். வெண்பொடி பூசியதால் ஈசனை 'பூசன்' என்றும் தீமையை நாசம் செய்து நன்மை நல்குதலால் 'நாசன்' என்றும் இறைவன் அழைக்கப்படுகிறான்.

கோவணத்தை உடையாகக் கட்டியவனும் கெடுக்க முடியாத கொள்கையனுமான இறைவனின் மணம் வீசும் மலர்ப்பாதங்களை தொழுபவர்களுக்கு நன்மையாதலை,

**"கிறிபடு முடையினன் கேடில் கொள்கையன்**

**நறுமல ரடிதொழ நன்மை யாகுமே"** (3:20:6:3-4)

என்ற அடிகள் சுட்டி நிற்கும். வெண்மையான திருநீற்றையும் பொங்கி வரும் கங்கையையும் தாங்கிய திருப்பூவணனைப் போற்றும் அடியவர்களுக்கு பாவம் நீங்கும் என்பது,

**".........வெள்ளை நீற்றினன்**

**பொருபுனல் புடையணி பூவ ணந்தனைப்**

**பரவிய அடியவர்க் கில்லை பாவமே"** (3:20:8:2-4)

என்ற பாடலால் அறிய முடிகின்றது.

இறைவன் போர்த் தொழிலில் பயனாகும் மழுவை ஏந்தியவன் என்பதை, **"போர்மல்கு மழுவினன்"** (3:20:9:3) என்று திருஞானசம்பந்தர் குறிப்பிடுகின்றார்.

**புராணச் செய்திகள்:**

வெல்லுதற்கு அரிய வலிமை பொருந்திய தீங்கு நினைந்த அசுரர்களின் மூன்று அரண்களை அம்பு எய்து அழித்த இறைவனை,

**“வேதனை விரவலர் அரண மூன்றெய்த**

**நாதனை.....”** (3:20:1:3-4)

என்றும்,

**“அருந்திறல் அவுணர்தம் அரண மூன்றெய்த**

**பெருந்தகை.....”** (3:20:5:3-4)

என்றும் திருஞானசம்பந்தர் குறிக்கின்றார்.

இமயமலையைப் பெயர்க்க முயன்ற இராவணனின் நீண்ட முடியை விரலால் அடர்த்ததை எட்டாம் பாடலிலும், தாமரை மலரில் உறையும் பிரம்மனும் திருமாலும் காணமுடியாதவரானதை ஒன்பதாம் பாடலிலும் திருஞானசம்பந்தர் பாடியுள்ளார்.

**இயற்கை:**

வண்டுகள் விரும்பி அமரும் மலர்ப்போதுகளை நிரம்பப் பெற்ற சோலைகளும் பொழில்களும் திருப்பூவணத்தில் அழகு செய்தலை,

**“....வண்டொடு**

**போதமர் பொழிலணி பூவ ணத்துறை”** (3:20:1:1-2)

என்ற அடிகள் உணர்த்தும்.

**“வானணி மதிபுல்கு சென்னி வண்டொடு**

**தேனணி பொழிற்றிருப் பூவ ணத்துறை”** (3:20:2:1-2)

என்ற பாடலடிகள், வானின்கண் அழகுற விளங்கும் சந்திரனைத் தொடுமளவிற்கு உயர்வானதும் வண்டுகள் தேனை உண்ணும் மலர்களை உடையதுமான பொழில்களின் அழகைப் பாடுகிறது.

திருப்பூவணத்துச் சோலைகள் அமைதியும், வண்டுகள் சுற்றித் திரிகின்ற வளமையும் உடையதை,

**“பொறைமல்கு பொழிலணி பூவ ணத்துறை”** (3:20:7:2)

என்றும்,

**“வண்டமர் வளர்பொழின் மல்கு பூவணம்”** (3:20:10:3)

என்றும் குறிப்பிடுகிறார் திருஞானசம்பந்தர்.

குரவம், மாதவி, கோங்கு, மல்லிகை, மணம் கமழும் புன்னை, கொன்றை ஆகிய மலர்கள் நிறைந்த சோலைகள் திருப்பூவணத்தின்கண் இருப்பதை,

**“குருந்தொடு மாதவி கோங்கு மல்லிகை**

**பொருந்திய பொழிற்றிருப் பூவ ணத்துறை”** (3:20:5:1-2)

என்றும்,

**“வெறிகமழ் புன்னைபொன் ஞாழல் விம்மிய**

**பொறியர வணிபொழிற் பூவ ணத்துறை”** (3:20:6:1-2)

என்றும் திருஞானசம்பந்தர் பாடியுள்ளார்.

**திருத்தலம்:**

திருப்பூவணம் திருத்தலம் நல்லோர்களால் தொழுது போற்றப்படுவது என்பதை,

**“புண்ணியர் தொழுதெழு பூவ ணத்துறை”** (3:20:11:1)

என்ற அடியில் திருஞானசம்பந்தர் குறிப்பிட்டுள்ளார்.

திருப்பூவணத் தேவாரத்தில் திருஞானசம்பந்தர் கொன்றை, ஆத்தி, தாமரை ஆகிய மலர்களை முதலாம் திருமுறையின் ஓர் இடத்திலும் குரவம், மாதவி, கோங்கு, மல்லிகை, புன்னை, கொன்றை, தாமரை ஆகிய மலர்களை மூன்றாம் திருமுறையின் ஓர் இடத்திலும் குறிப்பிடப்பட்டுள்ளார்.

பறை, முழவு ஆகிய இசைக்கருவிகள் மூன்றாம் திருமுறை திருஞானசம்பந்தர் திருப்பூவணத் தேவாரத்தில் ஓர் இடத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன.

**திருநாவுக்கரசர் தேவாரம்:**

திருஆலவாய் திருத்தலத்தில் திருநேரிசை, திருத்தாண்டகம் முதலான பெருவாய்மைத் தமிழ்ப் பதிகங்களைப் பாடித் திருப்பணி செய்து திருநாவுக்கரசர் பின்னர் திருப்பூவணம் வந்தடைந்ததை,

**“திருவால வாய்அமர்ந்த**

**செஞ்சுடரைச் செழும்பொருள்நூல்**

**தருவானை நேரிசையும்**

**தாண்டகமும் முதலான**

**பெருவாய்மைத் தமிழ்பாடிப்**

**பேணுதிருப் பணிசெய்து**

**மருவார்தம் புரம்எரித்தார்**

**பூவணத்தை வந்தடைந்தார்"** [42]

என்ற பெரிய புராணப் பாடல் குறிப்பிடும்.

கொடிகள் பறக்கும் மாடங்கள் நிலவும் திருப்பூவணத் திருக்கோயிலுள் திருநாவுக்கரசர் நுழைந்த பொழுது காண்பதற்கு அரியவரான இறைவன் வெளிப்பட, தான் கண்ட தோற்றத்தைக் கொண்டு, 'திருப்பூவணத் திருத்தாண்டகம்' பாடினார் என்பதை,

**"கொடிமாடம் நிலவுதிருப்**

**பூவணத்துக் கோயிலினுள்**

**நெடியானுக் கறிவரியார்**

**நேர்தோன்றக் கண்டிறைஞ்சி**

**வடிவேறு திரிசூலத்**

**தாண்டகத்தால் வழுத்திப்போய்ப்**

**பொடிநீடு திருமேனிப்**

**புனிதர்பதி பிறபணிவார்"** [43]

என்ற அடிகள் உணர்த்தும்.

**இறைவன்:**

திருப்பூவணத்து இறைவனிடத்து கூர்மையான மூவிலை போலத் தோற்றம் உடைய சூலம், நீண்ட சடையின் மேல் இளமதி, கொன்றை மலரினால் கட்டப்பட்ட மாலை, தோடும் குழையும், இடி போன்ற குரலை உடைய களிற்றின் தோலாலான போர்வை, அழகு திகழும் திருமுடி, திருநீறு அணிந்த திருமேனி ஆகியன இருந்ததாக,

**"வடியேறு திரிசூலந் தோன்றுந் தோன்றும்**

**வளர்சடைமேல் இளமதியந் தோன்றுந் தோன்றும்**

**கடியேறு கமழ்கொன்றைக் கண்ணி தோன்றுங்**

**காதில்வெண் குழைதோடு கலந்து தோன்றும்**

**இடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்றும்**

**எழில்திகழுந் திருமுடியு மிலங்கித் தோன்றும்**

**பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்**

**பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே”** (6:18:1)

என்ற பாடலில் திருநாவுக்கரசர் குறிப்பிடுகிறார். இறைவன் காதில் குழையும் தோடும் கலந்து தோன்றுவதாய்ப் பாடியதால், இறைவனும் இறைவியும் ஒன்றாக மாதொருபாகனாகக் காட்சியளித்தது புலனாகும்.

ஆணாகவும் பெண்ணாகவும் அலியாகவும் அடியவர்களுக்குக் கிட்டுதற்கரிய அமுதமாகவும் உணவிற்காக ஊர் முழுதும் திரியும் பிட்சாடனராகவும் ஒற்றைப் பிறையைச் சூடிய சடையுடையவனாகவும் இறைவன் தோன்றுவதை,

**“ஆணாகிப் பெண்ணாய வடிவு தோன்றும்**

**அடியவர்கட் காரமுத மாகித் தோன்றும்**

**ஊணாகி யூர்திரிவா னாகித் தோன்றும்**

**ஒற்றைவெண் பிறைதோன்றும்...”** (6:18:2:1-2)

என்ற அடிகள் உணர்த்தி நிற்கிறது.

செத்தவர்களின் எலும்பினாற் செய்யப்பெற்ற பூநூலும் அரைஞாணும் இறைவன் பூண்டுள்ளதை,

**“.......**

**செத்தவர்தம் எலும்பினாற் செறியச் செய்த**

**பூணாணும் அரைஞாணும் பொலிந்து தோன்றும்**

**.......”** (6:18:2:3-4)

என்ற பாடலடிகள் குறிப்பிடும்.

கல்லாலின் நீழலில் அமர்ந்து நான்மறைகளைக் கற்றுணர்ந்த நால்வர்க்கு சொல்லால் நெறிகளைக் கூறியதும் இறைவனின் திருமேனியைச் சுற்றியிருக்கும் அரவத்துடன், மான் கன்றும் உலகிற்கு அமைந்த விதி அடியவர்களுக்குப் பொருந்தாதென்பதை அறியாத எமனை அடர்த்ததும் தன்னை நினைப்பவர்களுக்கு படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐவகையான் நிற்றலும் விருப்பம் தராதவாறு புலால் உடைய எலும்பிலான பூணும் ஆகியன தோன்றுவதாக திருநாவுக்கரசர்,

**“கல்லாலின் நீழற் கலந்து தோன்றுங்**

**கவின்மறையோர் நால்வர்க்கு நெறிக ளன்று**

**சொல்லாகச் சொல்லியவா தோன்றுந் தோன்றும்**

**சூழரவும் மான்மறியுந் தோன்றுந் தோன்றும்**

**அல்லாத காலனைமுன் அடர்த்தல் தோன்றும்**

**ஐவகையால் நினைவார்பால் அமர்ந்து தோன்றும்**

**பொல்லாத புலாலெலும்பு பூணாய்த் தோன்றும்**

**பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே"** (6:18:3)

என்ற பாடலில் உணர்த்துகின்றார்.

**"படைமலிந்த மழுவாளும் மானுந் தோன்றும்**

**பன்னிரண்டு கையுடைய பிள்ளை தோன்றும்**

**நடைமலிந்த விடையோடு கொடியுந் தோன்றும்**

**நான்மறையி னொலிதோன்றும் நயனந் தோன்றும்**

**உடைமலிந்த கோவணமுங் கீளுந் தோன்றும்**

**மூரல்வெண் சிரமாலை யுலாவித் தோன்றும்**

**புடைமலிந்த பூதத்தின் பொலிவு தோன்றும்**

**பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே"** (6:18:4)

என்ற பாடலில், படைக்கலமாய் விளங்கும் மழுவும் கையிலேந்திய மானும் பன்னிரு கைகளையுடைய பிள்ளை முருகரும் வீறு உடைய நடை கொண்ட விடையும் அவ்விடையின் உருவம் வரைந்த கொடியும் நான்மறைகளின் ஒலியும் நெற்றிக்கண்ணும் உடையாக அமைந்த கோவணத்துடன் கீளும் நகைப்பது போல் பற்கள் தெரியும் மண்டையோட்டு மாலையும் சுற்றியுள்ள பூத கணங்களின் பொலிவும் தோன்றுவதாகப் பாடியுள்ளார் திருநாவுக்கரசர்.

தன் மீது அன்பு கொண்ட அடியவர்களுக்கு நல்கும் அருளும் குற்றமற்ற சடையின் மேல் உள்ள மதியும் இடுகின்ற பிச்சையை இயல்பாக ஏற்றுக் கொள்வதுமான இறைவனின் குணங்களை,

**"மயலாகுந் தன்னடியார்க் கருளுந் தோன்றும்**

**மாசிலாப் புன்சடைமேல் மதியந் தோன்றும்**

**இயல்பாக இடுபிச்சை ஏற்றல் தோன்றும்"** (6:18:5:1-2)

என்ற பாடல் அடிகளில் திருநாவுக்கரசர் விளக்கியுள்ளார்.

இறைவனின் செம்மையான தாமரையை ஒத்த சேவடிகளில், கடலாற் சூழப்பட்ட நிலவுலகில் வாழ்கின்றோர் துதித்து வணங்கி சமர்ப்பித்திட்ட மலர்களும் நறுமணப் புகைகளும் அடியவர்களின் மனத்தினில் தோன்றுவதை,

**“பாராழி வட்டத்தார் பரவி யிட்ட**

**பன்மலரும் நறும்புகையும் பரந்து தோன்றும்**

**சீராழித் தாமரையின் மலர்க ளன்ன**

**திருந்தியமா நிறத்தசே வடிகள் தோன்றும்”** (6:18:6:1-2)

என்ற அடிகள் வெளிப்படுத்துகின்றது.

தன்னை அடைந்த அடியவர்க்கு அருள் புரிந்ததும், மின்னலைப் போன்ற நுண்ணிய இடை உடைய இறைவியைத் தன் பாகமாகக் கொண்டதும் குற்றமில்லாத மதி, கங்கையுடன் பாம்பை வைத்ததும் பொன்னைப் போன்று பொலிந்து தோன்றும் திருமேனியையும் உடைய இறைவனை,

**“தன்னடியார்க் கருள்புரிந்த தகவு தோன்றுஞ்**

**சதுர்முகனைத் தலையரிந்த தன்மை தோன்றும்**

**மின்னனைய நுண்ணிடையாள் பாகந் தோன்றும்**

**வேழத்தி னுரிவிரும்பிப் போர்த்தல் தோன்றும்**

**துன்னியசெஞ் சடைமேலோர் புனலும் பாம்புந்**

**தூயமா மதியுடனே வைத்தல் தோன்றும்**

**பொன்னனைய திருமேனி பொலிந்து தோன்றும்**

**பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே”** (6:18:7)

என்ற பாடல் குறிப்பிடும்.

**“செறிகழலுந் திருவடியுந் தோன்றுந் தோன்றுந்**

**திரிபுரத்தை யெரிசெய்த சிலையுந் தோன்றும்**

**நெறியதனை விரித்துரைத்த நேர்மை தோன்றும்**

**நெற்றிமேல் கண்தோன்றும் பெற்றந் தோன்றும்**

**மறுபிறவி யறுத்தருளும் வகையுந் தோன்றும்**

**மலைமகளுஞ் சலமகளும் மலிந்து தோன்றும்**

**பொறியரவும் இளமதியும் பொலிந்து தோன்றும்**

**பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே"** (6:18:8)

என்ற பாடலில், கழல் செறிந்த திருவடியும் சனகாதியர் நால்வர்க்கு நெறியை விரித்துரைத்ததுவும் நெற்றிக்கண்ணும் காளையும் அடியவர்களுக்கு மறுபிறவியை அழிக்கும் அருளும் இறைவியும் கங்கையும் புள்ளிகளைக் கொண்ட பாம்பும் இளமதியும் இறைவனிடத்துத் தோன்றுவதாகப் பாடியுள்ளார் திருநாவுக்கரசர்.

அரும்பினைப் போல் முலையுடைய இறைவியைத் தன்னில் ஒரு பாகமாய் வைத்ததும் வயிரக் கோவையை விஞ்சும் ஒளியை உடைய அழிக்கும் ஆற்றல் கொண்ட வராகத்தின் கொம்பும் மணம் மலிந்த திருநடனமும் தோன்றுவதை,

**"அருப்போட்டு முலைமடவாள் பாகந் தோன்றும்**

**அணிகிளரு முருமென்ன அடர்க்குங் கேழல்**

**மருப்போட்டு மணிவயிரக் கோவை தோன்றும்**

**மணமலிந்த நடந்தோன்றும்...."** (6:18:9:1-2)

என்ற அடிகளால் அறியலாம்.

**"பாங்கணைந்து பணிசெய்வார்க் கருளி யன்று**

**பலபிறவி யறுத்தருளும் பரிசுந் தோன்றும்**

**கோங்கணைந்த கூவிளமும் மதமத் தம்முங்**

**குழற்கணிந்த கொள்கையொடுகோலந் தோன்றும்"** (6:18:10:2-3)

என்ற பாடல் அடிகள், தன்னை அணைந்து பணி செய்யும் அடியவர்களின் பிறவித் தளையை நீக்குதலையும் சடைமுடியில் கோங்கு, வில்வம், ஊமத்தம் ஆகியன சூடிய அழகினையும் உரைக்கிறது.

எவ் உருவில் தன்னை உள்குகின்றனரோ அவ் உருவிலேயே அவர்தம் மனத்துட் தோன்றி நிற்றலும் கச்சணிந்த முலைகளின் மேலே பலவித அணிகலன்களைச் சூடியுள்ள இறைவியைத் தன் பாகமாக மகிழ்ந்து வைத்த வடிவும் இறைவனுக்கு உள்ளதனை,

**"ஆருருவ உள்குவார் உள்ளத் துள்ளே**

**அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந் தோன்றும்**

**வாருருவப் பூண்முலைநன் மங்கை தன்னை**

**மகிழ்ந்தொருபால் வைத்துகந்த வடிவந் தோன்றும்”** (6:18:11:1-2)

என்ற அடிகள் உணர்த்தும்.

**புராணச் செய்திகள்:**

யானையின் தோலையுரித்து அதைப் போர்வையாகக் கொண்டதை,

**“இடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்றும்”** (6:18:1:3)

என்று குறிப்பிடும் திருநாவுக்கரசர், வாசுகி என்னும் பாம்பை மலைகளால் ஆன வில்லின் நாணாகச் செய்து, திரிபுரங்களை எரியூட்டியதை,

**“ ....பற்றார் தம்மேல்**

**சேணாக வரைவில்லா லெரித்தல் தோன்றும்”** (6:18:2:2-3)

என்று பாடுகிறார்.

**“.....**

**திரிபுரத்தை யெரிசெய்த சிலையுந் தோன்றும்”** (6:18:8:1)

என்ற அடியில் இறைவன் திரிபுரத்தை எரியூட்டிய சிலை தன்முன் தோன்றுவதாகத் திருநாவுக்கரசர் குறிப்பிடுகின்றார்.

**“அல்லாத காலனைமுன் அடர்த்தல் தோன்றும்...”** (6:18:3:3)

என்ற பாடலடியில் மார்க்கண்டேயனுக்காக எமனை உதைத்ததை குறிப்பாக உணர்த்தியுள்ளார்.

கருநிறக் கடலினின்று தோன்றிய நஞ்சை உண்டதால் தோன்றிய கருத்த கண்டமும் கங்கை ஆயிரம் முகத்தினொடு விண்ணிலிருந்து நிலத்தில் பாய்ந்த பொழுது தன் சடையை விரித்துத் தாங்கியதுமான இறைவனின் குணங்கள்,

**“.....**

**இருங்கடல்நஞ் சுண்டிருண்ட கண்டந் தோன்றும்**
**கயல்பாயக் கடுங்கலுழிக் கங்கை நங்கை**
**ஆயிரமா முகத்தினொடு வானில் தோன்றும்**
**புயல்பாயச் சடைவிரித்த பொற்புத் தோன்றும்**
**பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே”** (6:18:5:2-4)

என்ற பாடலடிகளால் அறியப்படுகின்றது.

ஒப்புமை இல்லாத தேரை கொண்டிருந்த இலங்கை மன்னனை திருமால் அழித்ததனால் அவர்க்கு உண்டான பாவத்தை நீக்கியும் சக்கரத்தை அழித்தும் இறைவன் நிகழ்த்திட்ட காட்சியை,

**“.....**

**ஓராழித் தேருடைய இலங்கை வேந்தன்**

**உடல்துணித்த இடர்பாவங் கெடுப்பித் தன்று**

**போராழி முன்ஈந்த பொற்புத் தோன்றும்**

**பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே”** (6:18:6:3-4)

என்ற அடிகள் உரைக்கின்றது.

பிரம்மனின் சிரத்தைக் கொய்ததும் வேழத்தின் தோலை விரும்பிப் போர்த்தியதுமான இறைவனின் செயல்களை,

**“......**

**சதுர்முகனைத் தலையரிந்த தன்மை தோன்றும்**

**......**

**வேழத்தி னுரிவிரும்பிப் போர்த்தல் தோன்றும்”** (6:18:7:1-3)

என்ற பாடலடிகள் சுட்டி நிற்கும்.

**“........ மணியார் வைகைத்**

**திருக்கோட்டில் நின்றதோர் திறமுந் தோன்றுஞ்**

**செக்கர்வா னொளிமிக்குத் திகழ்ந்த சோதிப்**

**பொருப்போட்டி நின்றதிண் புயமுந் தோன்றும்**

**பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே”** (6:18:9:2-4)

என்ற அடிகள், வைகைக் கரையில் மண் சுமந்து நின்ற திருவிளையாடலையும் சிவந்த வானத்தில் ஒளி மிகுந்து தோன்றிய முப்புரங்களை அழித்த இறைவனின் திண்மையான புயங்களையும் குறிப்பிடுகிறது.

சண்டேசுவர நாயனாருக்கு அருள் செய்து தன் சடையின் மீதிருந்த கொன்றை மாலையை அளித்ததை,

**“ஆங்கணைந்த சண்டிக்கும் அருளி யன்று**

**தன்முடிமேல் அலர்மாலை யளித்தல் தோன்றும்”** (6:18:10:1)

என்றும், பூங்கணையைத் தொடுத்த மன்மதனை எரித்ததை,

**“பூங்கணைவே ளுருவழித்த பொற்புத் தோன்றும்**

**பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே”** (6:18:10:4)

என்றும் பாடியுள்ளார் திருநாவுக்கரசர்.

கடலினால் சூழப்பட்ட இலங்கை அரக்கர் கோனின் தலையை ‘நெறு நெறு’ என ஓசை எழுமாறு அடர்த்திட்ட நிலையும் போர்த் தொழில் செய்யும் உருவம் உடைய கூற்றுவனை உதைத்ததுவும்,

**“நீருருவக் கடலிலங்கை யரக்கர் கோனை**

**நெறுநெறென அடர்த்திட்ட நிலையுந் தோன்றும்**

**போருருவக் கூற்றுதைத்த பொற்புத் தோன்றும்**

**பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே”** (6:18:11:3-4)

என்ற பாடலடிகளினால் அறிய முடிகின்றது.

**இயற்கை:**

திருநாவுக்கரசரின் திருப்பூவணத் தேவாரத்தின் இறுதி அடிகளில் ‘பொழில்கள் திகழும் திருப்பூவணம்’ என்று பாடப்பட்டுள்ளது.

திருப்பூவணத் தேவாரத்தில் கொன்றையை இரண்டு இடங்களிலும் தாமரை, கோங்கு, வில்வம், ஊமத்தம் ஆகியனவற்றை ஓர் இடத்திலும் திருநாவுக்கரசர் குறிப்பிட்டுள்ளார்.

**சுந்தரர் தேவாரம்:**

சுந்தரர் திருஆலவாயைச் சுற்றியுள்ள இறைவன் உறையும் பிற திருத்தலங்களை சேரமான் பெருமாள் நாயனார் உள்ளிட்ட மூவேந்தர்களுடன் வணங்கிப் பாடி பின்னர் திருப்பூவணத்திற்குச் செல்கின்றார். திருப்பூவணத்தின் அண்மையில் நேரே செல்லுங்கால் அடியவர்கள் நிலைபெற்ற திருப்பூவணத்தைக் காட்ட, அங்கிருந்தே சுந்தரர் பதிகம் பாடிப் பரவினார் என்பதை,

**“அந்நாளில் மதுரைநகர்**

**மருங்கரனார் அமர்பதிகள்**

**பொன்னாரம் மணிமார்பிற்**

**புரவலர்மூ வரும்போதச்**

**செந்நாவின் முனைப்பாடித்**

**திருநாடர் சென்றிறைஞ்சிச்**

**சொன்மாலை களுஞ்சாத்தித்**

**தொழத்திருப்பூ வணத்தணைவார்”** [44]

என்றும்,

**“நீடுதிருப் பூவணத்துக்**

**கணித்தாக நேர்செல்ல**

**மாடுவருந் திருத்தொண்டர்**

**மன்னியஅப் பதிகாட்டத்**

**தேடுமறைக் கரியாரைத்**

**திருவுடையார் என்றெடுத்துப்**

**பாடிசையிற் பூவணமீ**

**தோவென்று பணிந்தணைவார்”** [45]

என்றும் சேக்கிழார் குறிப்பிடுகிறார். இவ்வமயம் பாடியது ‘இந்தளப்’ பண்ணில் அமைந்த தேவாரம் ஆகும்.

திருப்பூவணத் திருக்கோயிலை அடைந்து, சுற்றி வந்து வீழ்ந்து பணிந்து பதிகம் பாடினார் என்பதை,

**“சென்றுதிருப் பூவணத்துத்**

**தேவர்பிரான் மகிழ்கோயில்**

**முன்றில்வலங் கொண்டிறைவர்**

**முன்வீழ்ந்து பணிந்தெழுந்து**

**நின்றுபர விப்பாடி**

**நேர்நீங்கி யுடன்பணிந்த**

**வென்றிமுடி வேந்தருடன்**

**போந்தங்கண் மேவினார்”** [46]

என்ற சேக்கிழாரின் பாடல் உணர்த்தும். திருப்பூவணத் திருக்கோயிலினின்று சுந்தரர் பாடிய தேவாரம் கிடைத்திலது. சில நாட்கள் மூவேந்தர்களுடன் திருப்பூவணத்தில் தங்கியிருந்து மீண்டும் திருஆலவாய் அடைந்தார் என்பதை,

**“அப்பதியில் அமர்ந்திறைஞ்சிச்**

**சிலநாளில் ஆரூரர்**

**முப்பெருவேந் தர்களோடு**

**முதன்மதுரை நகரெய்தி**

**மெய்ப்பரிவில் திருவால**

**வாயுடையார் விரைமலர்த்தாள்**

**எப்பொழுதும் பணிந்தேத்தி**

**இன்புற்றங் கமர்கின்றார்”** [47]

என்ற பாடல் குறிப்பிடும்.

**இறைவன்:**

தன் உருவத்தில் இறைவியை ஒரு பாகமாகக் கொண்டு அன்புடன் தன்னை அடைபவரது வினையைத் தீர்க்கும் இயல்பினன் ஆதலால், திருப்பூவணத்து இறைவன் திருமால், பிரம்மன் ஆகியோரைக் காட்டிலும் ‘வீடு பேறு’ என்னும் செல்வத்தை நல்கும் தன்மையன் என்பதை,

**“திருவுடை யார்திரு மாலய னாலும்**

**உருவுடை யார்உமை யாளையொர் பாகம்**

**பரிவுடை யார்அடை வார்வினை தீர்க்கும்”** (7:11:1:1-3)

என்ற பாடல் அடிகள் உணர்த்தும்.

இருப்பினும் கிடப்பினும் நடப்பினும் ‘அண்ணல்’ என்று தன்னையே நினைப்பவரது வினையைத் தீர்ப்பவனான இறைவனை,

**“எண்ணி யிருந்து கிடந்தும் நடந்தும்**

**அண்ண லெனாநினை வார்வினை தீர்ப்பார்”** (7:11:2:1-2)

என்ற அடிகள் போற்றி நிற்கும்.

**“நெக்கிறை யேநினை வார்தனி நெஞ்சம்**

**புக்குறை வான்உறை பூவணம் ஈதோ!”** (7:11:7:3-4)

என்ற அடிகளில், தன்னை போற்றுபவர் நெஞ்சில் நீங்காது இருக்கும் இறைவனின் தன்மையை சுந்தரர் குறிப்பிடுகின்றார்.

இறைவனே முதல்வன் என்ற தெளிவையுடைய பேய், பூதம் ஆகியவற்றோடு நள்ளிருளில் நட்டம் புரிபவனும், வஞ்சனைக் கொண்டோர்க்கு தானும் வஞ்சகனாவோனும் ஆகிய இறைவனை,

**“தெள்ளிய பேய்பல பூத மவற்றொடு**

**நள்ளிருள் நட்டம தாடல் நவின்றோர்**

**புள்ளுவ ராகும் அவர்க்கவர் தாமும்**

**புள்ளுவ னார்உறை பூவணம் ஈதோ!”** (7:11:3)

என்ற பாடல் குறிப்பிடும்.

**“நிலனுடை மான்மறி கையது தெய்வக்**

**கனலுடை மாமழு ஏந்தியோர் கையில்**

**அனலுடை யார்அழ கார்தரு சென்னிப்**

**புனலுடை யார்உறை பூவணம் ஈதோ!”** (7:11:4)

என்ற பாடலில், இறைவன் நிலத்தின் கண் வாழும் மானையும், தெய்வக் கனலை ஒத்த தன்மையையுடைய மழுவையும் அனலையும் கைகளில் ஏந்தி, சென்னியில் கங்கையைச் சூடின பான்மையை சுந்தரர் பாடியுள்ளார்.

பீடுடைய நடையைக் கொண்ட ஆண் ஏற்றின் மீது ஏறுபவரும் இல்லந்தோறும் சென்று ‘பலி இடுமின்’ என்று இரப்பவரும் துடிபோன்ற இடையை உடைய இறைவி உடனிருக்க மார்பில் பொடி பூசியவனும் ஆன இறைவனை,

**“நடையுடை நல்லெரு தேறுவர் நல்லார்**

**கடைகடை தோறிடு மின்பலி என்பார்**

**துடியிடை நன்மட வாளொடு மார்பில்**

**பொடிஅணி வார்உறை பூவணம் ஈதோ!”** (7:11:5)

என்ற பாடல் குறிப்பிடும்.

மின்னல் போன்ற ஒளி பொருந்திய இறைவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாக விளங்கச் செய்தவனும் பொன்னையொத்த நிறமுடையவனும் ஆன இறைவனை,

**“மின்னனை யாள்திரு மேனிவி ளங்கவொர்**

**தன்னமர் பாகம தாகிய சங்கரன்**

**முன்னினை யார்புரம் மூன்றெரி யூட்டிய**

**பொன்னனை யான்உறை பூவணம் ஈதோ!"** (7:11:6)

என்ற பாடல் உணர்த்தும்.

**புராணச் செய்திகள்:**

இறைவன் முப்புரங்களை எரியூட்டியதை, **"முன்னினை யார்புரம் மூன்றெரி யூட்டிய"** (7:11:6:3) என்ற அடி சுட்டும்.

இறைவனே அனைத்திற்கும் முதல்வன் என்பதை மறந்து, தானே தலைவன் என்று இறுமார்ந்திருந்த இராவணனின் தலை நெறியுமாறு தன் கால் விரலால் சிறிது ஊன்றி அவனின் கர்வம் அழித்ததை,

**"மிக்கிறை யேயவன் துன்மதி யாலிட**

**நக்கிறை யேவிர லாலிற வூன்றி"** (7:11:7:1-2)

என்ற பாடல் அடிகள் விளக்கி நிற்கும்.

பிட்சாடனர் வேடமிட்டு, தாருகா வனத்து முனிபத்தினிகளிடம் பிட்சை ஏற்றதைக் குறிப்பாக, **"கடைகடை தோறிடு மின்பலி என்பார்"** (7:11:5:2) என்ற அடி உணர்த்தும்.

**திருத்தலம்:**

பண்ணில் அமைந்த இசையை ஒத்த மொழியை உடைய மகளிர் பலர் பாடும் திருப்பூவணம் என்பதை, **"பண்ணிசை யார்மொழி யார்பலர் பாட"** (7:11:2:3) என்ற அடி குறிப்பிடும்.

அழகு மிகப் பொலிந்துள்ளதும் இறைவன் விரும்பி உறைவதும் ஆன திருப்பூவணத்தை,

**"சீரின் மிகப்பொலி யுந்திருப் பூவணம்**

**ஆர விருப்பிட மாவுறை வான்றனை"** (7:11:10:1-2)

என்ற அடி சுட்டி நிற்கும்.

பாடல்களின் இறுதியில் 'பூவணம் இதுதானோ!' என்று குறிப்பிடுவதாலும் இயற்கையைப் பற்றிய குறிப்பு காணப்படவில்லையாதலாலும், சுந்தரரின் தேவாரம் திருப்பூவணத்திற்கு வெளியே இருந்து பாடப்பெற்றது என்பது தெள்ளிதின் அறியப்படுகிறது.

**திருச்சுழியல்:**

ஏழாம் திருமுறையில் அமைந்த சுந்தரரின் பதிகம் ஒன்று திருச்சுழியல் திருத்தலத்திற்கு உள்ளது.

**சுந்தரர் தேவாரம்:**

சுந்தரர், சேரமான் பெருமாள் நாயனாருடன் திருச்சுழியல் வந்து ‘நட்டபாடை’ பண்ணில் அமைந்த ‘ஊனாய் உயிராய்’ என்ற பதிகத்தைப் பாடியருளினார். இவ்வாறு இருக்கையில் ஒரு நாள் இரவு இறைவன் சுந்தரரின் கனவில், கையில் பொற்செண்டும், முடியில் சுழியமும் கொண்டு எங்கும் காண இயலாத திருக்கோலத்தில் தங்கத் திருமேனியராய் மிகுந்த ஒளியுடன் தோன்றினார் என்பதை,

**“அங்கணரைப் பணிந்துறையும்**
**ஆரூரர்க் கவ்வூரில்**
**கங்குலிடைக் கனவின்கண்**
**காளையாந் திருவடிவால்**
**செங்கையினிற் பொற்செண்டுந்**
**திருமுடியிற் சுழியமுடன்**
**எங்குமிலாத் திருவேடம்**
**என்புருக முன்காட்டி”** [48]

என்ற சேக்கிழாரின் பாடல் குறிப்பிடும். கனவிற் தோன்றிய இறைவன், ‘யாம் இருப்பது திருக்கானப்பேர் ஆகும். அங்கு வந்து என்னை வழிபடு’ என்றருளி மறைந்தார். இதை,

**“கானப்பேர் யாம்இருப்ப**
**தெனக்கழறிக் கங்கையெனும்**
**வானப்பே ராறுலவும்**
**மாமுடியார் தாம்அகல**
**ஞானப்பே ராளர்உணர்ந்**
**ததிசயித்து நாகமுடன்**
**ஏனப்பே ரெயிறணிந்தார்**
**அருளிருந்த பரிசென்பார்”** [49]

என்பதால் அறியலாம். சுந்தரர் தான் கண்ட கனவைச் சேரமான் பெருமாள் நாயனாருக்குக் கூறினார். திருக்கானப்பேர் உறையும் இறைவன் தங்கத் திருமேனியராய் திருச்சுழியலிலேயே காட்சி தந்தமையால் திருச்சுழியல் இறைவனுக்கும் ‘தங்கத்திருமேனிநாதர்’ என்ற பெயர் ஏற்பட்டு பின்னர் அதுவே மருவி ‘திருமேனிநாதர்’ என்று வழங்கப்படுகின்றது. சுந்தரர் பாடி ஏழாந் திருமுறையில் எண்பத்திநான்காவதாக அமைந்திருக்கும் ‘தொண்டர் அடித்தொழலும்’ எனத் தொடங்கும் பதிகத்தின் பாடல்கள் அனைத்தும் ‘கார்வயல் சூழ் கானப் பேருறை காளையையே என்று அடியேன் காண்பேனோ!’ என்ற பொருளில் முடிகின்றன. பதிகம் திருக்கானப்பேர் இறைவனைப் பற்றியிருப்பினும் இது திருச்சுழியலிலேயே சுந்தரரால் பாடப் பெற்றுள்ளது. சுந்தரர் திருச்சுழியல் திருத்தலத்தில் இவ் இறைவன் மீது ஒரு பதிகமும் திருக்கானப்பேர் உறையும் இறைவன் மேல் ஒரு பதிகமும் பாடியுள்ளார்.

**இறைவன்:**

இறைவன் உடம்பாயும் அதில் இருக்கும் உயிருமாயும் விளங்குபவன். நிலமாகியும் மழை தரும் மேகங்களைக் கொண்ட வானமாகியும் நிற்பவன். இத்தகையோனே நம் வினைக்குக் காரணமான மதியாகியும் இருப்பவன் என்பதை,

**“ஊனாய்உயிர் புகலாய்அக**

**லிடமாய்முகில் பொழியும்**

**வானாய்வரு மதியாய்விதி**

**வருவானிடம்....”** (7:82:1:1-2)

என்ற அடிகளால் குறிப்பிடுகிறார் சுந்தரர்.

மதி ஒருவனை நல்வழியில் அழைத்துச் சென்றால் வினைப்பயனிலிருந்து தப்பலாம். எனவே புண்ணிய பாவங்களுக்கு வித்து மதியே என்பதை உணரலாம். நம் அறிவை மறைப்பது ஆணவம் என்ற அழுக்கு. இதனால் தான் நமக்கு வினையும் இதன் பயனாய் உடம்பும் வருகின்றன. எனவே இந்த இருள்படர்ந்த மாசான ஆணவமலத்தை கங்கையை முடிமேற் கொண்டு திருச்சுழியல் அமர்ந்திருக்கும் இறைவனைச் சரணடைந்து நீக்கலாம் என்பதை சுந்தரர்,

**“மலந்தாங்கிய பாசப்பிறப்**

**பறுப்பீர்துறைக் கங்கைச்**

**சலந்தாங்கிய முடியான்அமர்ந்**

**திடமாந்திருச் சுழியல்**

**நிலந்தாங்கிய மலராற்கொழும்**

**புகையால்நினைத் தேத்தும்**

**தலந்தாங்கிய புகழான்மிகு**

**தவமாம்சது ராமே"** (7:82:6)

என்ற பாடலில் விளக்கியுள்ளார்.

இளமையான இடபத்தின் மேல் ஊறும் தன்மையனான இறைவன் மழுப்படையைக் கையில் கொண்டவன் என்று, **"தண்டேர்மழுப் படையான்மழ விடையான்"** (7:82:2:1) என்ற அடியால் அறியப்படுகின்றது. தன் இடப்புறத்தை மலையானின் மகளான இறைவிக்கு அளித்ததை, **"மலையான்மகள் மடமாதிட மாகத்தவண்"** (7:82:4:1) என்ற அடி குறிப்பிடும்.

சந்திரனைத் தன் சடைமேல் சூடி ஐம்புலன்களை வென்ற இறைவனே நமக்கு உறவாயிருப்பவன் என்கிறார் சுந்தரர். இதை,

**"உற்றான்நமக் குயரும்மதிச்**

**சடையான்புலன் ஐந்தும்**

**செற்றார்திரு மேனிப் பெரு**

**மான்ஊர்திருச் சுழியல்**

**பெற்றான்இனி துறையத்திறம்**

**பாமைத்திரு நாமம்**

**கற்றாரவர் கதியுட்செல்வர்**

**ஏத்தும்மது கடனே"** (7:82:5)

என்ற அடிகள் சுட்டி நிற்கும். இதில் திருச்சுழியல் இறைவன் பெயரான 'திருமேனிப் பெருமான்' என்பது பயின்று வரல் காணலாம். இப்பெயரைப் போற்றுபவர் நற்கதியடைவர் என்று சுந்தரர் பாடியுள்ளார்.

சிவந்த திருமேனியையுடைய இறைவன் திருநீற்றை அணிந்து இடபத்தினை வாகனமாகக் கொண்டு சிவாகமங்களிற் சொல்லப்பட்ட வேடம் பூண்டிருப்பவன்.

**“சைவத்தசெவ் வுருவன்திரு நீற்றன்னுரு மேற்றன்”** (7:82:7:1) என்ற அடி மேற்கண்ட கூற்றை சுட்டி நிற்கின்றது.

இறைவன் எருதுக் கொடியேந்தி மானைக் கையில் தாங்கியவன். இத்தகையோனே எங்கள் தலை மேல் உள்ளவன் ஆவான் என்பதை,

**“பூவேந்திய பீடத்தவன்**

**றானும்மடல் அரியும்**

**கோவேந்திய வினையத்தொடு**

**குறுகப்புக லறியார்**

**சேவேந்திய கொடியானவன்**

**உறையுந்திருச் சுழியல்**

**மாவேந்திய கரத்தான்எம**

**சிரத்தான்றன தடியே”** (7:82:8)

என்ற பாடலினால் அறிய முடிகின்றது. இக்குணங்களைக் கொண்ட இறைவனை பிரம்மனும் திருமாலும் கூட முழுதும் அறிய மாட்டார்கள் என்று குறிப்பிட்டுள்ளார் சுந்தரர்.

இறைவனின் குணங்களைக் குறிக்கும் சுந்தரர், அவன் உறையும் திருச்சுழியல் சென்று வணங்காது, அவனை வணங்கி வருவோரை வணங்கினாலும் பயன் உண்டு என்பதனை,

**“தெய்வத்தினை வழிபாடுசெய்**

**தெழுவார்அடி தொழுவார்**

**அவ்வத்திசைக் கரசாகுவர்**

**அலராள் பிரியாளே”** (7:82:3:3-4)

என்ற அடிகளில் குறிக்கின்றார். இவ்வாறு செய்பவர்கள் தாம் வாழ்கின்ற நாட்டிற்கு அரசராயும் நீங்காத திருமகளை உடன் பெற்றும் இருப்பர் என்பது புலனாகின்றது.

**புராணச் செய்திகள்:**

பாற்கடலைக் கடையும் பொழுது தோன்றிய நஞ்சை தேவர்களுக்காக இறைவன் உண்டு அவர்களைக் காத்தவன். அத்தகையோனே தேரில் ஏறி திரிபுரங்கள் எரியும் படி செய்தவன் என்பதை,

**“................. எழு கடல்நஞ்**

**சுண்டேபுரம் எரியச்சிலை**

**வளைத்தான்இமை யவர்க்காத்**

**திண்டேர்மிசை நின்றான்அவன்**

**உறையுந்திருச் சுழியல்”** (7:82:2:1-3)

என்ற அடிகளாலும், யானைத் தோலைப் போர்த்தியவன் என்பதை, **“கொலையானையின் உரிபோர்த்தஎம் பெருமான்”** (7:82:4:2) என்பதாலும், தன் வில்லால் மூன்று கோட்டைகளையும் எரித்தவன் என்பதை, **“கைவத்தொரு சிலையால்அரண் மூன்றும்மெரி செய்தான்”** (7:82:7:2) என்ற அடியினாலும் அறிய முடிகிறது.

பதிகத்தில் முன்னர் இறைவியை ‘மலையான் மகள்’ என்று குறித்த சுந்தரர், ஒன்பதாவது பாடலில் இறைவனை மதியாது அவன் செய்த வேள்வியை அறுத்ததை,

**“கொண்டாடுதல் புரியாவரு**

**தக்கன்பெரு வேள்வி**

**செண்டாடுதல் புரிந்தான்”** (7:82:9:1-2)

என்ற பாடலடிகளில் குறிப்பிட்டுள்ளார். இராவணன் கயிலை மலையில் எதிரொலிக்கும் வண்ணம் தன் தேரைச் செலுத்தியபொழுது இறைவன் அவன் தலைகளை நெரித்த செய்தியை சுந்தரர்,

**“நீருர்தரு நிலமன்திரு**

**மலையார்க்கயல் அருகே**

**தேரூர்தரும் அரக்கன்சிரம்**

**நெரித்தான்..”** (7:82:10:1-2)

என்று குறிப்பிடுகின்றார்.

**இயற்கை:**

**“............பொழிலின்**

**தேனாதரித் திசைவண்டினம்**

**மிழற்றுந்திருச் சுழியல்”** (7:82:1:2-3)

என்ற பாடலடிகளின் மூலம் தேனை விரும்பி உண்டு மகிழ்கின்ற வண்டுகள் இசைபாடும் சோலைகளைத் தன்னகத்தே கொண்டிருந்தது திருச்சுழியல் என்பது புலனாகின்றது.

ஓசையுடைய கடல் அலைகள் பெருமுழக்கத்துடன் முத்துக்களைக் கொண்டு வந்து கரையில் சேர்க்க அவ்விடத்தில் கொவ்வைப் பழம் போல் சிவந்த வாயுடைய பெண்கள் விளையாடும் இயல்புடையதான திருச்சுழியலின் வளத்தை,

**"கவ்வைக்கடல் கதறிக்கொணர்**

**முத்தங்கரைக் கேற்றக்**

**கொவ்வைத்துவர் வாயார்குடைந்**

**தாடுந்திருச் சுழியல்"** (7:82:3:1-2)

என்ற பாடலடிகள் குறிப்பிடும். இங்கு கவ்வை என்பது 'ஒலி' அல்லது 'ஓசை' என்ற பொருளில் பயின்று வருகின்றது. இத்திருக்கோயிலின் தீர்த்தங்களுள் ஒன்றான 'கௌவைக் கடல்' என்பது 'கவ்வைக் கடல்' என்றும் வழங்கப்படுவதால் பி.ரா.நடராசன் இதைத் தீர்த்தம் என்று குறிப்பிடுகின்றார்.[50]

திருச்சுழியலில் பாடப்பெற்ற இத்தேவாரப்பதிகத்துடன் சுந்தரர் வேறு இரண்டு பதிகப் பாடல்களில் திருச்சுழியலைப் பதிவு செய்துள்ளார்.

திருநாட்டுத்தொகையில், **"தென்னூர் கைம்மைத் திருச்சுழி"** (7:12:6:1) என்று ஒழுக்கம் நிறைந்த மக்கள் வாழுந் திருச்சுழியல் என்று குறிப்பிடுகின்றார்.

திருஇடையாறு என்னுமிடத்தில் சுந்தரர் 'இடைமருது' என்னும் திருத்தலத்தோடு ஏனைய திருத்தலங்களைக் குறிக்குங்கால், **"சுற்று மூர்சுழி யல்திருச் சோபுரந் தொண்டர்"** (7:31:2:1) என்று அடியார்கள் புடைசூழ சென்று வணங்கும் திருச்சுழியல் என்று பாடுகின்றார்.

திருநாவுக்கரசர் திருக்கானப்பேர் முதலான பல திருத்தலங்களுக்குச் சென்று இறைவனைப் பாடித் தொழுதார் என்பதை சேக்கிழாரின் பெரிய புராணத்தின் மூலம் அறியப்படுகின்றது. திருநாவுக்கரசர் திருஅதிகை வீரட்டானத் தேவாரத்தில், **"பெருநீர் வளர்சடையான் பேணி நின்ற பிரம புரம்சுழியல் பெண்ணாகடம்"** (6:7:12:3) என்று திருச்சுழியலைக் குறிப்பிட்டுள்ளார்.

திருஞானசம்பந்தர், நின்றசீர் நெடுமாற நாயனார், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் திருக்கானப்பேர் இறைவனைக் கண்டு திருச்சுழியல் வந்தனர் என்பதை,

**"கற்றார்கள் தொழுதேத்துங் கானப் பேரும்**

**கைதொழுது தமிழ்பாடிச் சுழியல் போற்றி"** [51]

என்ற பெரிய புராணத்தின் பாடலின் மூலம் அறியலாம். 'சுழியல் போற்றி' என்று சேக்கிழார் பாடியிருப்பதால் திருச்சுழியல் திருத்தலத்தில் திருஞானசம்பந்தர் தேவாரப் பதிகம் பாடியுள்ளார் என்பது அறியக்கிடைக்கிறது.

**திருக்குற்றாலம்:**

திருக்குற்றாலத் திருத்தலத்திற்கு திருஞானசம்பந்தரின் முதல் திருமுறையில் அமைந்த திருக்குற்றாலப் பதிகம், இரண்டாம் திருமுறையில் அமைந்த திருக்குறும்பலாப் பதிகம் என இரண்டு பதிகங்கள் உள்ளன.

**திருஞானசம்பந்தர் தேவாரம்:**

திருஞானசம்பந்தர், நின்றசீர் நெடுமாற நாயனார், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் ஆகியோருடன் திருக்கானப்பேரில் தொழுது பாடிப் பின்னர் திருச்சுழியல் வந்து, அங்கிருந்து திருக்குற்றாலம் வந்தணைந்து இரண்டு பதிகங்கள் பாடினார் என்பதை,

**"கற்றார்கள் தொழுதேத்துங் கானப் பேரும்**

**கைதொழுது தமிழ்பாடிச் சுழியல் போற்றிக்**

**குற்றாலங் குறும்பலாக் கும்பிட் டேத்திக்**

**கூற்றுதைத்தார் நெல்வேலி குறுகினாரே"** [52]

என்ற பெரிய புராணத்தின் அடிகள் குறிப்பிடும்.

திருக்குற்றாலப் பதிகம் குறிஞ்சிப் பண்ணிலும், திருக்குறும்பலாப் பதிகம் காந்தாரப் பண்ணிலும் அமைந்ததாகும்.

**திருக்குற்றாலப் பதிகம்:**

**இறைவன்:**

நல்ல நகரமான திருக்குற்றாலத்தில் உறையும் இறைவன், பால், நெய் கொண்டு நீராடல் புரிபவன், மலர்ந்த கொன்றையைச் சூடியிருப்பவன் என்பதை,

**"அம்பானெய்யோ டாடலமர்ந்தா**

**னலர்கொன்றை**

**நம்பான்மேய நன்னகர்போலும்**

**நமரங்காள்"** (1:99:1:3-4)

என்ற பாடலில் குறிப்பிடும் திருஞானசம்பந்தர், இறைவனை நம்முடையவன் என்று பொருள்பட 'நம்பான்' என்று அழைக்கின்றார்.

இறைவனை வணங்கும் அடியவர்களை நோக்கி, இறைவன் கொன்றையையும் வில்வ மாலையையும் விரும்பி அணிபவன் என்று,

**"கடிகொள்கொன்றை கூவிளமாலை**

**காதல்செய்**

**அடிகண்மேய நன்னகர்போலும்**

**மடியீர்காள்"** (1:99:2:3-4)

என்ற பாடல் அடிகள் மூலம் விளக்குகின்றார்.

இத்தகையோன், என்பு மாலை, பாம்பு, ஆமை ஆகியனவற்றையே ஆடையாக அணிபவன் என்பதை,

**"அக்கும்பாம்பு மாமையும்பூண்டோ**

**ரனலேந்தும்**

**நக்கன்மேய நன்னகர்போலும்**

**நமரங்காள்"** (1:99:4:3-4)

என்ற பாடல் அடிகள் உணர்த்தி நிற்கும். இதில் 'நக்கன்' என்ற சொல்லை நக்+நன் என்று பிரித்து இறைவன் ஆடையணியாதவன் என்றும் மேற்குறிப்பிட்டவற்றை ஆடையாகக் கொண்டவன் என்றும் இருவகையாகப் பொருள் கொள்ளலாம்.

திருக்குற்றாலத்தின் தண் பொருந்திய சூழலை இறைவனுக்கும் ஏற்றி, **"அருந்தண்மேய நன்னகர்..."** (1:99:10:4) என்ற பாடல் அடியில் திருஞானசம்பந்தர் குறிப்பிடுகிறார்.

**புராணச் செய்திகள்:**

'நம்பான்' ஆகிய இறைவன், முப்புரங்களைத் தன் வில்லினால் எரித்தது போல் நம் வினைகளையும் எரித்து அருள்வான் என்பதை,

**"வில்லினொல்க மும்மதிலெய்து**

**வினைபோக**

**நல்கும்நம்பா னன்னகர்போலுந்**

**நமரங்காள்"**(1:99:3:3-4)

என்ற பாடல் அடிகள் விளக்கி நிற்கும். இப்பதிகத்தின் முதற் பாடலிலும் மூன்றாம் பாடலிலும் இறைவனை 'நம்பான்' என்று திருஞானசம்பந்தர் விளிக்கின்றார்.

இறைவனை வில்லாளன் என்று பொருள்படும் 'சிலையான்' என்று குறிப்பிட்டு, இலை போன்ற வடிவங் கொண்ட திரிசூலத்தைக் கொண்டு மும்மதில்களை எரித்தவன் என்பதை,

**"இலையார்சூல மேந்தியகையா**

**னெயிலெய்த**

**சிலையான்மேய நன்னகர்போலுஞ்**

**சிறுதொண்டீர்"** (1:99:5:3-4)

என்ற பாடல் அடிகள் மூலம், இறைவனுக்கு சிறு தொண்டுகள் செய்பவர்களிடம் திருஞானசம்பந்தர் உணர்த்துகின்றார்.

**"சூலபாணி நன்னகர்போலுந் தொழுவீர்காள்"** (1:99:7:4)

என்ற பாடல் அடியில் திருஞானசம்பந்தர், 'சூலம் ஏந்தி திருக்குற்றால நன்னகர் உறையும் இறைவனைத் தொழுது வணங்குங்கள்' என்று உணர்த்துகின்றார்.

'கைம்மா' எனப்பெறும் யானையின் தோலை உரித்துப் போர்த்திய இறைவன் நம் தலைவன் என்பதை,

**"கைம்மாவேழத் தீருரிபோர்த்த**

**கடவுள்ளெம்**

**பெம்மான்மேய நன்னகர்போலும்**

**பெரியீர்காள்"** (1:99:6:3-4)

என்ற பாடல் அடிகள் குறிப்பிட்டு, இறைவன் மேல் பக்தி கொண்டவர்களை 'பெரியவர்கள்' என்று போற்றுகிறது.

காலனை தன் காலால் உதைத்த இறைவனின் தன்மையை, **"காலன்றன்னைக் காலாற்காய்ந்த கடவுள்"** (1:99:7:3) என்ற பாடல் அடி உணர்த்தும்.

**இயற்கை:**

திருக்குற்றாலத்தில் உள்ள மலை எத்தனை முறை காணினும் புதுமையாகவே தோற்றம் தரக்கூடிய தன்மை பொருந்தியது. நீண்ட மலைச்சாரலையும் யாழ் போல் இசைக்கும் வண்டுகள் சுற்றித்திரியும் வேங்கை மரங்கள் அடர்ந்த சோலைகளையும் தன்னகத்தே கொண்டது. இதை,

**"வம்பார்குன்றம் நீடுயர்சாரல்**

**வளர்வேங்கைக்**

**கொம்பார்சோலைக் கோலவண்டியாழ்செய்**

**குற்றாலம்"** (1:99:1:1-2)

என்ற பாடல் அடிகள் உரைக்கும். இதில் 'நீடுயர் சாரல்' என்பது காலத்தால் நீண்ட, உயரத்தால் நீண்ட என்று இருவகையில் பொருள் தருகிறது.

இயற்கைச் செல்வம் அதிகம் நிறைந்த திருக்குற்றாலத்தில் செண்பகம், வேங்கை மரங்களின் மீது காட்டு முல்லைக் கொடிகள் ஏறி அரும்புகளை ஈனும் செழுமையை,

**"செல்வமல்கு செண்பகம்வேங்கை**

**சென்றேறிக்**

**கொல்லைமுல்லை மெல்லரும்பீனுங்**

**குற்றாலம்"** (1:99:3:1-2)

என்ற பாடல் அடிகள் விளக்கி நிற்கும்.

**"பக்கம்வாழைப் பாய்கனியோடு**

**பலவின்தேன்**

**கொக்கின்கோட்டுப் பைங்கனிதூங்குங்**

**குற்றாலம்"** (1:99:4:1-2)

என்ற பாடல் அடிகளில், மலையின் பக்கங்களில் செழித்து வளர்ந்த கனிகளையுடைய வாழை மரங்களோடு தேன் வடியும் பலா மரங்களும் கனிகளைக் கொண்ட மா மரங்களும் ஆகிய முக்கனிகளும் விரவியிருக்கும் திருக்குற்றாலம் என்பது உணர்த்தப்படுகின்றது.

மலையின் சாரலுக்கு தன் குட்டிகளோடு வரும் குரங்கு அங்குள்ள தெவிட்டாத வாழைக்கனிகளை வயிறு புடைக்கத் தின்னும் அழகினை,

**"மலையார்சாரன் மகவுடன்வந்த**

**மடமந்தி**

**குலையார்வாழைத் தீங்கனிமாந்துங்**

**குற்றாலம்"** (1:99:5:1-2)

என்ற பாலடிகள் குறிப்பிடும்.

நீல நிறம் கொண்ட நெய்தல் மலர்கள் பூத்திருக்கும் குளிர்ச்சி பொருந்திய சுனைகளையும், ஆண் மயில்கள் தத்தம் பெண் மயில்களோடு இணைந்து ஆடும் நீண்ட சோலைகளையும் கொண்ட திருக்குற்றாலத்தை,

**"நீலநெய்தல் தண்சுனைசூழ்ந்த**

**நீள்சோலைக்**

**கோலமஞ்ஞை பேடையொடாடுங்**

**குற்றாலம்"** (1:99:7:1-2)

என்ற அடிகள் விளக்கி நிற்கும்.

திருக்குற்றால அருவி மலர்ப்போதுகளையும் பொன்னையும் இழுத்து வந்து சொரியும். குளிர்ந்த மழை நுண்மையான துளிகளாகப் பொழியும் தன்மையை,

**"போதும்பொன்னு முந்தியருவி**

**புடைசூழக்**

**கூதன்மாரி நுண்துளிதூங்குங்**

**குற்றாலம்"** (1:99:8:1-2)

என்ற பாடல் அடிகள் கூறும். இதில் பயின்று வரும் 'கூதல்' என்ற சொல் தற்காலத்து பேச்சு வழக்கிலும் பயன்படுத்தப்படுகிறது.

பாம்பின் வாயிலிருக்கும் கூரிய முள் போன்ற பற்களைப் போல அரும்புகளை ஈனும் குரவ மரங்கள் சோலைகளில் வளர்ந்திருப்பதை,

**"அரவின்வாயின் முள்ளெயிறேய்ப்ப**

**வரும்பீன்று**

**குரவம்பாவை முருகமர்சோலைக்**

**குற்றாலம்"** (1:99:9:1-2)

என்ற அடிகள் உணர்த்தும்.

**"பெருந்தண்சாரல் வாழ்சிறைவண்டு**

**பெடைபுல்கிக்**

**குருந்தம்மேறிச் செவ்வழிபாடுங்**

**குற்றாலம்"** (1:99:10:1-2)

என்ற பாடல் அடிகளில், குளிர்ச்சி பொருந்திய சாரலின் அருகே வாழ்கின்ற வண்டு, தன் பெடையுடன் கூடி பின்னர் குருந்த மரத்தின் மீது ஏறி, 'செவ்வழி' பண்ணைப் பாடும் பான்மையை அறியலாம்.

**திருத்தலம்:**

திருநீறு பூசிய அடியவர்கள் பின்னால் செல்ல, இறைவனுக்குரிய கொடிகளுடன் நாள்தோறும் விழா நிகழும் திருக்குற்றாலத்தின் சிறப்பை,

**"பொடிகள்பூசித் தொண்டர்பின்செல்லப்**

**புகழ்விம்மக்**

**கொடிகளோடுந் நாள்விழமல்கு**

**குற்றாலம்"** (1:99:2:1-2)

என்ற அடிகள் விளக்கி நிற்கும்.

'மை' போன்ற நிறமுள்ள கண்களை உடைய குறத்தியர், முற்றிய தினைப்புனங்களை கிளிகள் கொத்தித் திண்ண வரும் பொழுது மணிகளைக் கொண்டு விரட்டுவதை,

**"மைம்மாநீலக் கண்ணியர்சாரன்**

**மணிவாரிக்**

**கொய்ம்மாவேன லுண்கிளியோப்புங்**

**குற்றாலம்"** (1:99:6:1-2)

என்ற பாடலடிகள் குறிப்பிடும்.

திருக்குற்றாலப் பதிகத்தின் பாடல்களின் முதல் இரண்டு அடிகளில் திருக்குற்றாலத்தின் இயற்கை வளத்தையும் கடையிரண்டு அடிகளில் இறைவனையும் திருஞானசம்பந்தர் போற்றிப் பாடியுள்ளார்.

இப்பதிகத்தில் கொன்றை மலர் இரண்டு இடங்களிலும், நெய்தல் மலர் ஓர் இடத்திலும், முல்லை, குரா மலர் குறிப்பாக ஓர் இடத்திலும் பயின்று வருகின்றன.

**திருக்குறும்பலாப் பதிகம்:**

திருஞானசம்பந்தர் திருக்குற்றாலத்தின் தலவிருட்சமாகிய குறும்பலா மரத்தை ஊராகுபெயராகக் கொண்டு திருக்குறும்பலாப் பதிகத்தைப் பாடியுள்ளார்.

**இறைவன்:**

திருந்தப்பெற்ற மதியைத் தலையில் புனைந்து, குற்றமில்லாத கங்கை நீரை சடையில் மறைத்து இறைவியை தன் இடப்பாகமாகக் கொண்டவன் என்பதை,

**“திருந்த மதிசூடித் தெண்ணீர் சடைக்கரந்து**

**தேவிபாகம்**

**பொருந்திப் பொருந்தாத வேடத்தாற் காடுறைதல்**

**புரிந்தசெல்வர்”** (2:71:1:1-2)

என்ற பாடல் அடிகள் குறிப்பிட்டு, இத்தகைய உயர்வுடைய வேடத்தான் தனக்குப் பொருந்தாதாயினும் அடியவர்களுக்காகப் பொருந்தி சுடுகாட்டில் உறைபவன் என்று உணர்த்துகிறது.

**“பால்வெண் மதிசூடிப் பாகத்தோர் பெண்கலந்து”** (2:71:4:1)

என்ற அடியும்,

**“தலைவாண் மதியங் கதிர்விரியத் தண்புனலைத்**

**தாங்கித்தேவி**

**முலைபாகங் காதலித்த மூர்த்தி ...”** (2:71:5:1-2)

என்ற அடியும், இறைவன் பிறை மதியைச் சூடி, குளிர்ச்சியான கங்கையை சடைக் கரந்து, இறைவியைக் காதலால் தன் இடப்பாகம் கொண்டவன் என்பதனைக் குறிப்பிடுகிறது. இதில் கங்கை குளிர்ச்சி பொருந்தியவள் என்று குறிக்கப்பட்டுள்ளது.

இளமதியைத் தலையில் சூடி, திருநீறு அணிந்தவனாகிய நம்பான், நம்மை வந்து ஆட்கொள்ளும் ‘அம்மான்’ என்பதை,

**“நாட்பலவுஞ் சேர்மதியஞ் சூடிப் பொடியணிந்த**

**நம்பானம்மை**

**ஆட்பலவுந் தானுடைய வம்மா னிடம்போலும்**

**அந்தண்சாரல்"** (2:71:2:1-2)

என்ற அடிகள் விளக்கும்.

**"வாடற் றலைமாலை சூடிப் புலித்தோல்**

**வலித்துவீக்கி**

**ஆட லரவசைத்த வம்மா னிடம்போலும்**

**அந்தண்சாரல்"** (2:71:3:1-2)

என்ற பாடல் அடிகள், இறைவனை 'அம்மான்' எனக் குறிப்பிட்டு, அவன் தலையின் ஊன் வாடிய மண்டையோட்டை மாலையாகக் கொண்டு, தன் இடையில் ஆடும் பாம்புடன் புலித்தோலை இறுக்கக் கட்டியவன் என்பதை புலப்படுத்துகின்றது.

இறைவனின் நெற்றிக்கண்ணை குறிக்குமிடத்து,

**"நீற்றே துதைந்திலங்கு வெண்ணூலர் தண்மதியர்**

**நெற்றிக்கண்ணர்"** (2:71:6:1)

என்ற அடியில் இறைவன் வெண்ணீறுடன் முப்புரிநூலை அணிந்து தண் மதியைச் சூடியவன் என்று பாடியுள்ளார் திருஞானசம்பந்தர்.

இறைவனின் சடையை வருணிக்குங்கால்,

**"பொன்றொத்த கொன்றையும் பிள்ளை மதியும்**

**புனலுஞ்சூடிப்**

**பின்றொத்த வார்சடையெம் பெம்மா னிடம்போலும்**

**பிலயந்தாங்கி"** (2:71:7:1-2)

என்ற அடிகள் மூலம், கொன்றையையும் சடையையும் ஒப்பிடுகின்றார் திருஞானசம்பந்தர். கொன்றை மலர்கள் கொத்தாகத் தொங்குவது போல் பிறைமதி, கங்கையைச் சூடிய இறைவனின் சடை பின்னால் கொத்தாக உள்ளதாகப் பாடுகிறார்.

**"விரவி மதியணிந்த விகிர்தர்க் கிடம்போலும் ..."** (2:71:9:2),

**"... குறும்பலா மேவிய**

**கொல்லேற்றண்ணல்**

**நம்பா னடிபரவு ..."** (2:71:11:1-2)

ஆகிய பாடல் அடிகள் முறையே இறைவன் இளமதியைச் சூடியவன், எருதை வாகனமாகக் கொண்டவன் என்பதை உணர்த்துகின்றன. இத்திருக்குறும்பலாப் பதிகத்தில் இறைவனை இரண்டு இடங்களில் 'நம்பான்' என்று அழைக்கின்றார் திருஞானசம்பந்தர்.

**புராணச் செய்திகள்:**

இறைவன் மார்க்கண்டேயருக்காக எமனை உதைத்ததை,

**"...**

**பாடியாடிக்**

**கால னுடல்கிழியக் காய்ந்தா ரிடம்போலுங்**

**..."** (2:71:4:1-2),

**"கூற்றேர் சிதையக் கடிந்தா ரிடம்போலுங்"** (2:71:6:2)

என்று இரண்டு இடங்களில் குறிப்பிடுகிறார் திருஞானசம்பந்தர். இதில் முதல் பாடல் அடியில், இறைவன் எமனை உதைத்த பொழுது பாடியும் ஆடியும் காய்ந்தார் என குறிப்பிடுகின்றார். பாடி ஆடி என்பது, இறைவன் தாண்டவம் புரிந்தவாறே இதைச் செய்தனன் என்பதை உணர்த்துகிறது.

**இயற்கை:**

ஏலத்தின் நறுமணம் கமழ்வதுமான சோலைகளில், யாழ் போன்ற ஓசையை வண்டுகள் எழுப்பும். இவைகளுடன் குரா மலர்களின் மணம் வீசும் குன்றுகளின் அருகே குளிர்ச்சியான சாரல்கள் சூழப்பெற்றதான திருக்குற்றாலத்தை,

**"...லேலங்கமழ் சோலையின**

**வண்டியாழ்செய்**

**குருந்த மணநாறுங் குன்றிடஞ்சூழ் தண்சாரற்**

**குறும்பலாவே"** (2:71:1:3-4)

என்ற பாடல் அடிகள் விளக்கி நிற்கும்.

திருக்குற்றால வெற்பில் வாழும் பெண் குரங்குகள் தன் குட்டிகளோடு, பிளத்தர்க்குரிய பலாவைப் பிளந்து அதன் சுளைகளை உண்டு பின்னர் வீழ்த்திய மிச்சங்களை ஆண் குரங்குகள் உண்டு மகிழும் அழகினை,

**"கீட்பலவுங் கீண்டுகிளை கிளையன் மந்திபாய்ந்**

**துண்டுவிண்ட**

**கோட்பலவின் றீங்கனியை மாக்கடுவ னுண்டுகளுங்**

**குறும்பலாவே”** (2:71:2:3-4)

என்ற அடிகளால் உணரலாம்.

குளிர்ச்சியான திருக்குற்றாலச் சாரலில் பாடித் திரியும் பெண் வண்டுகள் போதுகளை மலரச் செய்வதால் அவற்றின் மகரந்தப் பொடிகள் பொன்துகள்களாய்ச் சிந்த, இதனுடன் காந்தள் மலர்ந்து மணம் பரப்பும் விதத்தினை,

**“பாடற் பெடைவண்டு போதலர்த்தத் தாதவிழ்ந்து**

**பசும்பொனுந்திக்**

**கோடன் மணங்கமழுங் குன்றிடஞ்சூழ் தண்சாரற்**

**குறும்பலாவே”** (2:71:3:3-4)

என்ற அடிகள் விளக்கும்.

திருக்குற்றாலத்தின் கற்கள் சூழ்ந்த வெற்பில் வண்டுகளின் இசையில் கருங்குவளை மலர்கள் கண் திறப்பது போன்று மலரும். இத்தகைய சோலைகளில் அழகிய ஆண் மயில்கள் தத்தம் பெண் மயில்களோடு ஆடும் பான்மையை,

**“...**

**கல்சூழ்வெற்பில்**

**நீல மலர்க்குவளை கண்டிறக்க வண்டரற்றும்**

**நெடுந்தண்சாரல்**

**கோல மடமஞ்ஞை பேடையொ டாட்டயருங்**

**குறும்பலாவே”** (2:71:4:2-4)

என்ற அடிகள் உணர்த்தும்.

**“...**

**முதுவேய்சூழ்ந்த**

**மலைவா யசும்பு பசும்பொன் கொழித்திழியும்**

**மல்குசாரல்**

**குலைவாழைத் தீங்கனியு மாங்கனியுந் தேன்பிலிற்றுங்**

**குறும்பலாவே”** (2:71:5:2-4)

என்ற அடிகளில், முதிய மூங்கில்களால் சூழப்பட்ட வெற்பில் ஆங்காங்கே பொசியும் நீர், ஒன்று சேர்ந்து பொன்னையும் மணியையும் கொண்டு வந்து சேர்க்கும் தன்மையை உணரலாம். இத்தண் மலைச்சாரலில் வாழையும் மாங்கனிகளும் தேன் பிலிற்றும் என்று திருஞானசம்மந்தர் பாடியுள்ளார். இப்பாடலில் முக்கனிகள் விரவி வந்துள்ளதாகக் குறிப்பிடுகிறார் புலவர் பி.ரா.நடராசன்.[53]

ஆண் பன்றிகளும் பெண் பன்றிகளும் கலந்து வெற்பிலிருந்து கீழிறங்கும் மலைச்சாரலில் உள்ள சோலைகளில் கொம்புத் தேனை சேகரிக்கும் வண்டுகள் இசை பாட அதைக் கேட்டு குயில் கூவும் திருக்குற்றாலத்தை,

**"ஏற்றேன மேன மிவையோ டவைவிரவி**
**யிழிபூஞ்சாரற்**
**கோற்றே னிசைமுரலக் கேளாக் குயில்பயிலுங்**
**குறும்பலாவே"** (2:71:6:3-4)

என்ற பாடல் அடிகளில் திருஞானசம்பந்தர் குறிப்பிடுகிறார்.

திருக்குற்றாலத்தின் மலை அருவி முழவம் போன்ற ஓசையுடன் பிரளய வெள்ளம் போல் மணி, வயிரம் ஆகியவற்றுடன் கொழித்து, இத்திருத்தலத்தில் ததும்பி நிற்கும் அழகினை,

**"...**
**பிலயந்தாங்கி**
**மன்றத்து மண்முழவ மோங்கி மணிகொழித்து**
**வயிரமுந்திக்**
**குன்றத் தருவி யயலே புனறதும்புங்**
**குறும்பலாவே"** (2:71:7:2-4)

என்ற அடிகள் உணர்த்துகின்றது.

மழைச்சாரலை உடைய மலைச்சாரலில் உள்ள ஆண் யானைகள் வேங்கை மரத்தின் பூங்கொத்துகளை ஒடித்து தன் மத்தகத்தில் ஏந்தி கூந்தல் உடைய பெண் யானைகளுடன் வணங்கும் இறைவன் வீற்றிருக்கும். இத்தகைய சிறப்புடைய திருக்குற்றாலத்தை,

**“...**

**சாரற்சாரல்**

**பூந்தணறு வேங்கைக் கொத்திறுத்து மத்தகத்திற்**

**பொலியவேந்திக்**

**கூந்தற் பிடியுங் களிறு முடன்வணங்குங்**

**குறும்பலாவே”** (2:71:8:2-4)

என்ற அடிகள் விளக்கி நிற்கும். இப்பாடலில் யானைகளுக்கு இறைவன் மேல் உள்ள பக்தித் திறத்தை வெளிப்படுத்தியுள்ளார் திருஞானசம்பந்தர்.

பூஞ்சோலைகள் எங்கும் விரிந்து கிடக்கும் குன்றுகளில் மரவம், மல்லிகை, சண்பகம் ஆகியன மலர்ந்திருக்க, குரவ மலர் முறுவல் செய்வது போல் அலர்ந்திருக்கும். இதனை,

**“...**

**விரிபூஞ்சாரல்**

**மரவ மிருகரையு மல்லிகையுஞ் சண்பகமு**

**மலர்ந்துமாந்தக்**

**குரவ முறுவல்செய்யுங் குன்றிடஞ்சூழ் தண்சாரற்**

**குறும்பலாவே”** (2:71:9:2-4)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றது.

திருக்குற்றாலத்தின் கற்கள் சூழ்ந்த வெற்பில் ஆண் குரங்கு நீண்டு உயர்ந்த மூங்கில்களின் மீது ஏறி அதை வளைத்து அதன் மேல் நடனஞ் செய்யும். அங்கு கூடிய வேடர்கள் தங்கள் கைகளை வாயில் வைத்து ‘குய்’ என்று ஒலி எழுப்புவதை,

**“...**

**கல்சூழ்வெற்பில்**

**நீடுயர் வேய்குனியப் பாய்கடுவ னீள்கழைமேல்**

**நிருத்தஞ்செய்யக்**

**கூடிய வேடுவர்கள் குய்விளியாக் கைமறிக்குங்**

**குறும்பலாவே”** (2:71:10:2-4)

என்ற பாடல் அடிகள் குறிப்பிடும். குரங்குகள் செய்யும் சேட்டைகளை கூறுங்கால், ‘நிருத்தம்’ செய்வதாகப் பாடியுள்ளார் திருஞானசம்பந்தர்.

இப்பதிகத்தில், குரா இரண்டு இடங்களிலும், கொன்றை, காந்தள், குவளை, வேங்கை, மரவம், மல்லிகை, சண்பகம் ஆகிய மலர்கள் ஓர் இடத்திலும் குறிப்பிடப்பட்டுள்ளன.

**திருத்தலம்:**

திருக்குற்றாலத் திருத்தலம் சாந்த குணம் கொண்ட திருநீறு பூசிய சைவர்கள் வாழுமிடம் என்பதை,

**“சாந்தமென நீறணிந்த சைவ ரிடம்போலுஞ்**

**சாரற்சாரல்”** (2:71:8:2)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றது. திருஞானசம்பந்தர் இத்திருக்குறும்பலாப் பதிகத்தில் குறிப்பிடுவது போல், அவர்தம் பிற பதிகங்களிலும் ‘சைவன்’, ‘சைவர்’ ஆகிய சொல்லாடல்கள் அதிகம் காணப்படுகின்றன.

திருஞானசம்பந்தர் தன் பதிகங்களில் இறைவனை சைவர் என்ற சொல்லால், திருஆவூர்ப் பசுபதீச்சுரம் (1:8:10:2), திருமுதுகுன்றம் (1:12:2:1), திருக்கற்குடி (1:43:3:2), திருமுதுகுன்றம் (1:53:6:2), திருச்சிரபுரம் (1:109:7:2), திருவறையணிநல்லூர் (2:77:9:4), திருவேதிகுடி (3:78:10:2), திருப்பரிதிநியமம் (3:104:6:3), திருஆலவாய் (3:108:7:4), திருக்கழுமலம் (3:118:3:2) ஆகிய திருத்தலங்களில் குறிப்பிடுகிறார்.

இறைவனை வழிபடும் அடியவர்களை சைவர்கள் என்று, திருக்குற்றாலத்துடன் சேர்த்து மூன்று திருத்தலங்களில் மட்டுமே குறிப்பிடுகிறார். திருச்சண்பைநகரில் சைவர்களும் பாசுபதர்களும் இறைவனை வணங்குவதை, **“சைவர்பாசு பதர்கள் வணங்குஞ் சண்பை நகராரே”** (1:66:4:4) என்று பாடுகிறார். திருஆலவாய் திருத்தலத்தில் திருஞானசம்பந்தர் ஏட்டை வைகை ஆற்றில் விட்டு, ஆற்றின் நீரோட்டத்தை எதிர்த்துச் சென்று திருவேடகத்தில் தங்குமாறு செய்தார். இவ்வாறு செய்தமையால் சமணர்களால் சைவர்களுக்கு வந்த பழி நீங்கியமையை திருக்கழுமலத்தில்,

**“பருமதில் மதுரைமன் னவையெதிரே**

**பதிகம தெழுதிலை யவையெதிரே**

**வருநதி யிடைமிசை வருகரனே**

**வசையொடு மலர்கெட வருகரனே**

**கருதலி லிசைமுர றருமருளே**

**கழுமல மமரிறை மருளே**

**மருவி தமிழ்விர கனமொழியே"** (3:11:3:12)

என்ற பாடல் மூலம் குறிப்பாக சைவர்களைப் பாடுகிறார். எந்த திருத்தலங்களில் சைவர்கள் குறிப்பிடத் தகுந்த இடத்திலோ அல்லது எண்ணிக்கையிலோ வாழ்ந்தனரோ அத்திருத்தலங்களில் அவர்களை திருஞானசம்பந்தர் குறிப்பிட்டுப் பாடியுள்ளார்.

திருக்குறும்பலாப் பதிகத்தின் முதல் இரண்டு அடிகளில் இறைவனையும் மூன்று, நான்காவது அடிகளில் இயற்கை வளங்களையும் பிறவற்றையும் திருஞானசம்பந்தர் பாடியுள்ளார்.

திருநாவுக்கரசர் திருக்குற்றாலம் வந்தணைந்து தேவாரம் பாடியதற்கான நேரிடைச் சான்று பெரிய புராணத்துள் இல்லை. ஆயினும், திருஅங்கமாலையில் உள்ள,

**"உற்றா ராருளரோ – வுயிர்**

**கொண்டு போம்பொழுது**

**குற்றா லத்துறை கூத்தனல் லால்நமக்**

**குற்றா ராருளரோ"** (4:9:10)

என்ற பாடலில், திருக்குற்றாலத்தில் உறையும் கூத்தரே கூற்றுவன் உயிர் கொண்டு போகும் பொழுது துணையாய் இருப்பவன் என்று பாடியுள்ளார்.

மூவேந்தர்களுடன் பாண்டிய நாட்டில் பல திருத்தலங்களுக்குச் சென்ற சுந்தரர் பின்னர் சேரமான் பெருமாள் நாயனாருடன் மலையின் சாரலில் அமைந்திருக்கும் திருக்குற்றாலம் வந்தனர் என்பதை,

**"இருபெருவேந் தரும்இயல்பின்**

**மீண்டதற்பின் எழுந்தருளும்**

**பொருவருஞ்சீர் வன்றொண்டர்**

**புகழ்ச்சேர ருடன்புனிதர்**

**மருவியதா னம்பலவும்**

**பணிந்துபோய் மலைச்சாரல்**

**குருமணிகள் வெயிலெரிக்கும்**

**குற்றாலஞ் சென்றடைந்தார்"** [54]

என்ற பாடலில் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். பின்னர் திருக்குற்றாலத்திலிருக்கும் கூத்தர் திருக்கோயிலையும் குறும்பலா மரத்தையும் வணங்கிப் பாடினார் என்பதை,

**"குற்றாலத் தினிதமர்ந்த**

**கூத்தர்குரை கழல்வணங்கிச்**

**சொல்தாம மலர்புனைந்து**

**குறும்பலாத் தொழுதிப்பால்**

**முற்றாவெண் மதிமுடியார்**

**பதிபணிந்து மூவெயில்கள்**

**செற்றார்மன் னியசெல்வத்**

**திருநெல்வே லியையணைந்தாரர்"** [55]

என்ற பாடல் அடிகள் உணர்த்தி நிற்கும். இங்கு குறிப்பிடப்பட்டிருக்கும் கூத்தர் திருக்கோயில் திருக்குற்றாலத் திருக்கோயிலின் துணைத் திருக்கோயிலாகும். இவ்விரு பதிகங்களும் கிடைத்தில.

**திருநெல்வேலி:**

மூன்றாம் திருமுறையில் அமைந்த திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று திருநெல்வேலிக்கு உள்ளது.

**திருஞானசம்பந்தர் தேவாரம்:**

திருஞானசம்பந்தர், நின்றசீர் நெடுமாற நாயனார், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் ஆகியோர் திருக்கானப்பேர், திருச்சுழியல், திருக்குற்றாலம் வந்தணைந்து அங்கிருந்து திருநெல்வேலி வந்தனர் என்பதை,

**"குற்றாலங் குறும்பலாக் கும்பிட் டேத்திக்**

**கூற்றுதைத்தார் நெல்வேலி குறுகினாரே"** [56]

என்ற பெரிய புராணத்தின் அடிகள் குறிப்படும். திருஞானசம்பந்தர் திருநெல்வேலியில் சாதாரிப் பண்ணில் தேவாரப் பதிகம் பாடியுள்ளார்.

**இறைவன்:**

இறைவனாகிய சிவபெருமான் எப்பொழுதும் நிலையான ஒரே இயல்பு கொண்டவன் அல்லன், தாழ்ந்த குலத்தினர் என்று வழங்கப்படும் செடிச்சியர் வீடுகளுக்கு இடபத்தில் சென்று பிட்சை எடுப்பவன் என்பதை,

**"என்றுமோ ரியல்பின ரெனநினை வரியவ ரேறதேறிச்**

**சென்றுதாஞ் செடிச்சியர் மனைதொறும் பலிகொளு மியல்பதுவே"**

(3:92:2:1-2)

என்ற அடிகளால் அறியலாம். இதில் 'செடிச்சியர்' என்பவர் வேட்டுவ மகளிர் ஆவர். வேடர்கள் காடுகள், மலைகள் சென்று விலங்குகளை வேட்டையாடி வருவர். வேட்டுவ மகளிர் அவர்தம் வசிப்பிடங்களில் உள்ள விளைநிலங்களை பறவைகள், விலங்குகள் முதலியனவற்றிலிருந்து காப்பர். வேட்டுவ ஆண்களைப் போல் பெரிய ஆயுதங்களைத் தாங்கிராமல் 'கவண்' என்னும் ஆயுதத்தை பயன்படுத்துவர். இது திருஞானசம்பந்தரின் திருக்காளத்தி பதிகத்தில்,

**"ஏனமிள மானினொடு கிள்ளைதினை கொள்ளவெழி லார்கவணினால்**

**கானவர்த மாமகளிர் கனகமணி விலகுகா ளத்திமலையே"**

(3:69:1:3-4)

என வருதல் காணலாம். மேற்குத் தொடர்ச்சி மலையருகே திருநெல்வேலி அமைந்திருப்பதால் 'செடிச்சியர்' இனக்குழு அங்கேயிருந்திருப்பதை அறியமுடிகின்றது.

இறைவன் பாம்பை ஆபரணமாக அணிபவர், கங்கை, சந்திரனை முடிமேல் அணிந்தவர், வெண்ணீறு பூசியவர் என்பது,

**"பொறிகிள ரரவமும் போழிள மதியமுங்கங் கையென்னும்**

**நெறிபடு குழலியைச் சடைமிசைச் சுலவிவெண் ணீறுபூசி"**

(3:92:3:1-2)

என்ற அடிகளால் விளங்கும்.

இறைவியாகிய உமையாளை இடப்பாகம் கொண்டவர் என்பதை, **"காண்டகு மலைமகள் கதிர்நிலா முறுவல்செய் தருளவேயும்"** (3:92:4:1) என்ற அடியினாலும்,

சுடுகாட்டில் நடனஞ் செய்பவர் என்பதை, **“புறங் காடரங் காநட மாடல்பேணி”** (3:92:4:2) என்றதினாலும் அறியலாம்.

பன்றிக் கொம்பு, ஊமத்தை ஆகியனவற்றை விரும்பி அணிபவர், புலித்தோலை இடையில் உடுப்பவர், ஆனைந்தால் திருமுழுக்காட்டப்படுவர். அவரே வேதங்களை அருளியவர் என்பதை,

**“ஏனைவென் கொம்பொடு மெழில்திகழ் மத்தமு மிளவரவும்**

**கூனல்வெண் பிறைதவழ் சடையினர் கொல்புலித் தோலுடையார்**

**ஆனினல் ஐந்துகந் தாடுவர் பாடுவ ரருமறைகள்”** (3:92:5:1-3)

என்றதினால் அறியலாம். **“வெடிதரு தலையினர் வேனல்வெள் ளேற்றினர் விரிசடையர்”** (3:92:6:1) என்றதினால் இறைவன் மண்டையோட்டு மாலை அணிபவர் என்பதும், வெண்ணிற இடபத்தை உடையவர் என்பதும் அறியப்படுகின்றன.

இறைவன் சங்கு, மணிகள் கட்டிய இடையினன் என்பது, **“அக்குலா மரையினர்”** (3:92:7:1) என்ற அடியினால் விளங்கும்.

இப்பதிகத்தின் முதற்பாடல் இறைவனின் திருநாமப் பெருமையை உணர்த்தும்படி அமைந்துள்ளது. இறைவனின் திருநாமம் நோய்க்கு மருந்தாகவும், மந்திரமாகவும், இம்மை மட்டுமல்லாது மறுமைக்கும் நற்கதி அருள்வதாயும், துன்பம் போக்கும் என்பதனை,

**“மருந்தவை மந்திர மறுமைநன் னெறியவை மற்றுமெல்லாம்**

**அருந்துயர் கெடுமவர் நாமமே.........”** (3:92:1:1-2)

என்ற பாடல் அடிகள் கூறி நிற்கும். இறைவனுக்கு வழங்கப்பெறும் திருநாமங்களில் ஒன்றான, அழகிய கண்களையுடையவன் என்ற பொருள்படும் ‘அங்கணன்’ என்ற திருநாமம் **“அங்கணா வருளென வவரவர்”** (3:92:9:2) என்ற பாடல் அடியில் பயின்று வருகின்றது.

**புராணச் செய்திகள்:**

கங்களாநாதர் வேடம் பூண்டு தாருகாவனத்து முனி பத்தினிகளை மயக்கியதை, **“கிறிபட நடந்துநற் கிளிமொழி யவர்மனங் கவர்வர்போலும்”** (3:92:3:3) என்ற அடிகள் விளக்கி நிற்கும். இதில் ‘கிறிபட நடந்து’ என்பது இறைவன் தன்

திருவிளையாடல்களில் ஒன்றாகத் தன் கால்களால் நடந்து சென்று பிச்சை எடுத்ததைக் குறிக்கும். தாருகாவனத்து முனிபத்தினிகளின் பேச்சு கிளியைப்போல இனிமையுடையது என்பதை ‘கிளிமொழி’ சுட்டும்.

இறைவனை மதியாது இறைவியின் தந்தை தக்கன் செய்த வேள்வியை அழித்தது **“தக்கனார் வேள்வியைச் சாடிய சதுரனார்”** (3:92:7:2) என்ற அடிகளில் பயின்றுவருகின்றது.

கயிலையைப் பெயர்த்தெடுக்க முனைந்த இராவணனின் நிலை, திருமாலும் பிரம்மனும் அடிமுடி காணாது நின்றது ஆகியன முறையே எட்டு, ஒன்பதாவது பாடல்களில் அமைந்துள்ளது. இப்பதிகத்தில் குறிப்பாக திருமாலைக் குறிக்குமிடத்து **“பைங்கண்வா ளரவணை யவனொடு பனிமல ரோனுங்காணா”** (3:92:9:1) என்ற ஒன்பதாவது பாடல் அடியில் இத்திருக்கோயிலின் இரட்டைக் கருவறை ஒன்றிலிருக்கும் ‘நெல்லைக் கோவிந்தர்’ பற்றிய செய்தி இடம்பெறாமை நோக்கற்பாலது.

**இயற்கை:**

திருநெல்வேலியில் குளிர்ச்சிமிக்க சோலைகள் இருந்தன என்பதை **“பொருந்துதண் புறவினிற்”** (3:92:1:3) என்ற அடிகள் கூறும். ‘பொருந்துதண் புறவினிற்’ என்பதை ‘தண்பொருந்து’ என்று முன்பின்தொக்கத்தொகையாகக் கொண்டு ‘தாமிரபரணி’ நதியைக் குறித்தது.

நெருங்கி வளர்ந்துள்ள சோலைகள் **“துன்றுதண் பொழில்”** (3:92:2:3) என்றும், **“செறிபொழி றழுவிய”** (3:92:3:4) என்றும், வண்டுகள் தேன்பருக அமரும் சோலைகள் **“தேனில்வண் டமர்பொழில்”** (3:92:5:4) என்றும், புதர்கள் மண்டிக்கிடக்கும் சோலைகள் **“செடிபடு பொழிலணி”** (3:92:6:4) என்றும், வரியுடைய வண்டுகள் பண்ணிசைக்கும் சோலைகள் **“வரிதரு வண்டுபண் முரலுஞ்சோலை”** (3:92:7:3) என்றும், நறுமணம் கமழும் சோலைகளில் பெண் குரங்குகள் தாவி ஆடுவது **“கந்தமார் தருபொழின் மந்திகள் பாய்தர”** (3:92:8:3) என்றும் இப்பதிகத்தில் குறிப்பிடப்படுகின்றன.

சோலைகளில் பெண் குரங்குகள் தாவுவதால் தேன் கீழே சிந்தும் பூக்களுடைய நீர்த்துறைகள் அமைந்திருப்பதை,

**“....................................... மதுத்திவலை**

**சிந்துபூந் துறைகமழ்........................"** (3:92:8:3-4)

என்ற பாடல் அடிகள் கூறும். இதில்வரும் 'பூந்துறை' என்பது தாமிரபரணி நதியின் நீர்த்துறைகளுள் ஒன்று. திருஞானசம்பந்தரால் தேன் சிந்துகின்ற பூக்கள் உள்ள துறையான பூந்துறை என்ற பொருளில் 'சிந்துபூந்துறை' என்று பாடப்பட்டு பின்னர் அவ்வாறே இதன் பெயர் மருவியுள்ளது.

தற்காலத்தும் இத்திருக்கோயிலின் தீர்த்தவாரிகள் அனைத்தும் சிந்துபூந்துறை தீர்த்தத்திலேயே நடத்தப்பெறுகின்றன.

கொன்றை மரங்கள் மலர்களை உதிர்க்க அருகேயிருக்கும் பொன்போன்ற செருந்தி மரங்களின் பூக்கள் விரிந்தன என்பதை,

**"............ கொன்றைபொன் சொரிதரத் துன்றுபைம்பூம்**

**செருந்திசெம் பொன்மலர்.........."** (3:92:1:3-4)

என்ற அடிகள் குறிப்பிடும்.

சோலைகளில் நுழைந்த தென்றல் அங்கிருக்கும் தாழையில் நுழைந்து வந்தது என்பதை,

**"துன்றுதண் பொழினுழைந் தெழுவிய கேதகைப் போதளைந்து**

**தென்றல்வந் துலவிய......."** (3:92:2:3-4)

என்ற அடிகள் கூறிநிற்கும். இறைவன் அணியும் ஊமத்தை, கொன்றை, செருந்தி, தாழை ஆகிய நான்கு மலர்கள் இப்பதிகத்தின்கண் குறிப்பிடப்படுகின்றன.

**திருத்தலம்:**

திருநெல்வேலி உயர்ந்த நெருங்கிய மாடங்கள் கொண்டிருந்ததை **"ஈண்டுமா மாடங்கண் மாளிகை"** (3:924:3) என்ற அடியாலும், எல்லா திசைகளிலும் இத்திருத்தலத்தின் புகழ் பரவியிருந்ததை **"திக்கெலாம் புகழுறு"** (3:92:7:4) என்ற அடியாலும் அறிய முடிகின்றது.

வேதம் உணர்ந்த அந்தணர்கள் வாழ்ந்தவூர் என்பதை **"பேணுகல்வித் திருந்துமா மறையவர்"** (3:92:11:1-2) என்ற அடிகள் விளக்கி நிற்கும்.

மாத உற்சவங்களும் நாள் வழிபாடுகளும் அதிகம் நடைபெறும் திருநெல்வேலி என்பதை, **"திங்கணாள் விழமல்கு திருநெல்வேலி"** (3:92:9:4) என்ற அடிகள் விளக்கும்.

தற்காலத்தும் பன்னிரெண்டு மாதங்கள் உற்சவங்களும் நாள் வழிபாடுகளும் இத்திருக்கோயிலில் நடத்தப்பெறுகின்றன.

இப்பதிகத்தின் எல்லா பாடல்களுமே ‘திருநெல்வேலி யுறை செல்வர் தாமே’ என்று முடிகின்றன. திருநெல்வேலியைப் பற்றிய இலக்கியங்களில் பழமையானது திருஞானசம்பந்தர் தேவாரம். திருஞானசம்பந்தர் காலத்திற்கு முன்னர் இத்திருத்தலம் பெற்றிருந்த பெயர் அறியப்படவில்லை. திருஞானசம்பந்தரால் ‘மதுத்திவலை சிந்துபூந் துறை’ என்று பாடப்பெற்று பின்னர் பூந்துறை எவ்வாறு ‘சிந்துபூந்துறை’ என்றே பெயர் மருவியதோ அதேபோல் திருஞானசம்பந்தரால் பாடப்பெற்ற பின்னரே ‘திருநெல்வேலி’ என்று இத்திருத்தலம் அழைக்கப்படலாயிற்று.

தலபுராணங்களில் கூறப்பட்ட அந்தணருக்காக இறைவன் நெல்லுக்கு வேலிகட்டியதும், மூங்கில் வனத்தில் தோன்றியதால் ‘வேணுவனநாதர்’ என்றான செய்தியும், சுவேத கேதுவிற்கு எமபயம் தீர்த்ததுமாகிய புராணச் செய்திகள் திருஞானசம்பந்தரால் பதிகத்தில் பாடப்பெறாமை ஈண்டு நோக்குதற்குரியது.

சிறிய இனக்குழுவான வேட்டுவ மக்களின் பெண்டிரான ‘செடிச்சியர்’ என்பவரைக் குறித்த திருஞானசம்பந்தர் வேதம் கற்ற மறையவரைக் குறிப்பிடவில்லை. இத்திருத்தலத்தைச் சுற்றி செந்நெற்பயிர்கள் செழித்து வளர்ந்திருந்தன என்பதை, **“சாலி சூழுஞ் சேத்திரமெனுந் திருநெல்வேலி”** [57], **“செந்நெல்சுற்றும் நெல்லைநகர் தன்னின்”** [58] என்று நெல்லைச் சிந்து குறிப்பிடும். திருநெல்வேலி என்பதற்குச் சுற்றிலும் நெல்லால் வேலி போன்று சூழப்பட்ட திருத்தலம் என்ற பொருளில் ‘திரு’ என்ற அடைமொழியோடு ‘திருநெல்வேலி’ என்று பாடியுள்ளார் திருஞானசம்பந்தர்.

கொன்றை மரம், செருந்தி மரம் போன்றனவற்றைப் பாடிய திருஞானசம்பந்தர் தலவிருட்சமான மூங்கிலைப் பாடவில்லை. ஆனால் திருக்குற்றாலத்தின் தலவிருட்சமான குறும்பலாவிற்கென தனிப்பதிகம் பாடியிருப்பது நோக்குதற்குரியது.

திருவிராமேச்சுரத்திலிருந்து திருநாவுக்கரசர் திருநெல்வேலி, திருக்கானப்பேர் முதலிய திருத்தலங்களுக்குச் சென்றார் என்பதை,

**“அங்குறைந்து கண்ணுதலார்**

**அருள்சூடி அகன்றுபோய்ப்**

**பொங்குதமிழ்த் திருநாட்டுப்**

**புறம்பணைசூழ் நெல்வேலி"** [59]

என்ற சேக்கிழாரின் பெரிய புராணத்தால் அறியலாம்.

சுந்தரரும் சேரமான் பெருமாள் நாயனாரும் திருக்குற்றாலத்திலிருந்து திருநெல்வேலி வந்ததை,

**"............................... மூவெயில்கள்**

**செற்றார்மன் னியசெல்வத்**

**திருநெல்வே லியையணைந்தார்"** [60]

என்ற அடிகள் குறிப்பிடும். திருஞானசம்பந்தர் 'திருநெல்வேலி யுறை செல்வர் தாமே' என்று குறிப்பதைப்போல் சேக்கிழாரும் இதை அடியொற்றி 'செல்வத் திருநெல்வேலி' என்று பாடியுள்ளார்.

சுந்தரர் திருத்தொண்டத்தொகையில்,

**"நிறைக்கொண்ட சிந்தையான் நெல்வேலி வென்ற**

**நின்றசீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்"**(7:39:8:2)

என்று, திருநெல்வேலியில் அயல்நாட்டு அரசரை வென்றவர் நின்றசீர் நெடுமாற நாயனார் என்று திருநெல்வேலியைப் பாடியுள்ளார். நின்றசீர் நெடுமாற நாயனாரின் பட்டப் பெயர் மாறவர்மன் அரிகேசரி என்பதாகும். இவன் செழியன் சேந்தன் என்பானின் மகன். இவன் சேரர், பரவர், குறுநிலமன்னர் சிலரையும் பாழி, திருநெல்வேலி, செந்நிலம் முதலான இடங்களில் வெற்றிகொண்டான் என்று வேள்விக்குடிச் செப்பேடுகள் கூறுகின்றன.[61] இதையே சுந்தரர் தன் திருத்தொண்டத்தொகையில் பாடியுள்ளார்.

திருநாவுக்கரசர், சுந்தரர் திருநெல்வேலி வந்திருந்தும் அவர்கள் பாடிய தேவாரங்கள் கிடைக்கப்பெறவில்லை.

திருப்புத்தூரில் சிலநாட்கள் தங்கயிருந்த திருஞானசம்பந்தர், நின்றசீர் நெடுமாற நாயனார், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் பின்னர் அங்கிருந்து திருப்பூவணம், திருக்கானப்பேர், திருச்சுழியல், திருக்குற்றாலம் வந்து பின்னர், **"கூற்றுதைத்தார் நெல்வேலி குறுகினாரே"** [62] என்று எமனை எட்டியுதைத்த திருநெல்வேலி வந்தணைந்தார் எனப் பாடியுள்ளார்.

## தொகுப்புரை

- jpUQhdrk;ge;jH ghba Njthuk; Kjy;> ,uz;L> %d;whk; jpUKiwapYk;> jpUehTf;furH ghba Njthuk; ehd;F> Ie;J> Mwhk; jpUKiwapYk;> Re;juH ghba Njthuk; Vohk; jpUKiwapYk; ,lk; ngw;Ws;sd.
- jpUQhdrk;ge;jH jpUthg;gD}H> jpUNtlfk;> jpUf;nfhLq;Fd;wk;> jpUg;Gj;J}H> jpUg;Gdthapy;> jpUthlhid> jpUf;fhdg;NgH> jpUg;G+tzk;> jpUf;Fw;whyk;> jpUney;Ntyp Mfpa jpUj;jyq;fspy; Njthuk; ghbAs;shH.
- jpUehTf;furH jpUg;Gj;J}H> jpUg;G+tzk; Mfpa jpUj;jyq;fspy; Njthuk; ghbAs;shH.
- jpUg;Gdthapy;> jpUf;fhdg;NgH> jpUg;G+tzk;> jpUr;Ropay; Mfpa jpUj;jyq;fspy; Re;juH Njthuk; ghbAs;shH.
- jpUQhdrk;ge;jH jpUr;RopaypYk;> jpUehTf;furH jpUf;fhdg;NgH> jpUney;NtypapYk;> Re;juH jpUthg;gD}H> jpUNtlfk;> jpUg;Gj;J}H> jpUf;Fw;whyk;> jpUney;NtypapYk; gjpfk; ghbajw;fhd rhd;Wfs; nghpa Guhzj;Js; cs;sd.
- jpUehTf;furH jpUNtlfk;> jpUf;nfhLq;Fd;wk;> jpUg;Gdthapy;> jpUr;Ropay;> jpUf;Fw;whyk; Mfpa jpUj;jyq;fisj; jd; Njthuj;jpy; itg;Gj; jyq;fshfTk; ghbAs;shH.
- Re;juH jpUf;nfhLq;Fd;wj;ijj; jd; gjpfj;jpy; epide;Js;shH.

### சான்றெண் விளக்கம்

1. பெரிய புராணம், 28:885:1-2

2. மேலது, 28:885:2

3. பி.ரா.நடராசன், திருஞானசம்பந்தர் சுவாமிகள் தேவாரம், மூன்றாம் பகுதி, ப.30

4. திருக்குறள்,1

5. கந்த புராணம், காமதகனப் படலம், பா.89

6. அபிராமி அந்தாதி, பா.51:1-2

7. பெரிய புராணம், 37:101:1-2

8. மேலது, 28:846

9. மேலது, 28:849

10. மேலது, 28:850

11. பி.ரா.நடராசன், திருஞானசம்பந்தர் சுவாமிகள் தேவாரம், மூன்றாம் பகுதி, ப.2

12. திருவாசகம், 1:11

13. மேலது, 1:74

14. பெரிய புராணம், 37:101:1-2

15. மேலது, 28:629

16. மேலது, 28:630

17. திருமந்திரம், 8:43:1-2

18. பெரிய புராணம், 28:885

19. மேலது, 21:402

20. திருமந்திரம், 5:12:1-2

21. திருப்பாவை, பா.30

22. பெரிய திருமொழி, 3:10

23. பெரிய புராணம், 37:90

24. மேலது, 28:891:3-4

25. மேலது, 37:117:3-4

26. மேலது, 21:411:1

27. மேலது, 21:412:1-2

28. மேலது, 28:891:3

29. மேலது, 28:886:1-3

30. மேலது, 37:114

31. மேலது, 37:115

32. மேலது, 37:116

33. மேலது, 37:117

34. திருவாசகம்,1:60

35. பட்டினத்தார் பாடல்கள், பா.404

36. அபிராமி அந்தாதி, பா.61:1

37. பெரிய புராணம், 21:410:2-4

38. மேலது, 886:1-2

39. மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், பா.69

40. பொருநராற்றுப்படை, பா.54-55

41. சதாசிவ பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு, ப.42

42. பெரிய புராணம், 21:406

43. மேலது, 21:407

44. மேலது, 37:97

45. மேலது, 37:98

46. மேலது, 37:99

47. மேலது, 37:100

48. மேலது, 37:112

49. மேலது, 37:113

50. பி.ரா.நடராசன், சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம், ப.435

51. பெரிய புராணம், 28:886:3

52. மேலது, 28:886:3-4

53. பி.ரா.நடராசன், திருஞானசம்பந்தர் சுவாமிகள் தேவாரம், மூன்றாம் பகுதி, ப.63

54. பெரிய புராணம், 37:106

55. மேலது, 37:107

56. மேலது, 28:886:4

57. வ.நா.காமாட்சிநாதன் செட்டியார், நெல்லைச் சிந்து, பா.1:1

58. மேலது, பா.10:9

59. பெரிய புராணம், 21:410:1-2

60. மேலது, 37:107:3-4

61. சதாசிவ பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு, ப.42

62. பெரிய புராணம், 28:886:4

## சிற்பம், ஓவியம், கட்டிடக்கலைச் செய்திகள்

இவ் இயலில், ஆய்விற்கு எடுத்தாளப்பட்ட திருக்கோயில்களில் காணப்படுகின்ற சிற்பங்கள், ஓவியங்கள், இறைவன், இறைவி திருவுருவ அமைப்பு முறை ஆய்ந்து வெளிக்கொணரப்பட்டுள்ளது. திருக்கோயில்களின் கட்டுமான நுட்பங்கள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. இத்தகைய சிறப்புகளின் வழி வெளிப்பட்டு நிற்கும் தமிழரின் வாழ்வியல் முறைகள், அறிவியல் அறிவு ஆகியவை ஆய்ந்து வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

**திருவாப்பனூர்:**

திருவாப்பனூர் திருக்கோயில் சிற்பச் செறிவு மிக்கதாய் அமைந்துள்ளது.

**சிற்பச் செய்திகள்:**

இறைவன் சந்நிதி மகா மண்டபத்தின் தூண்களில் திருநீற்று விநாயகர், கருப்பர், அகோர வீரபத்திரர், தாயுமானவர், மார்க்கண்டேயனுக்காக இறைவன் எமனை காலால் உதைத்தது, தெட்சிணாமூர்த்தி, அனுமன் ஆகிய சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. கொடிமரத்தின் மேலே மேற்கூரையில் பன்னிரெண்டு ராசிகளை உணர்த்தும் சிற்பங்களின் நடுவே சரசுவதியின் சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது.

மகா மண்டபத்திலிருந்து இரண்டாம் திருச்சுற்று நுழையும் இடத்தின் இடப்புறம் திருச்சுற்று மண்டபத்தின் தூணில் வல்லபை விநாயகர் சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது. இந்த வல்லபை விநாயகரை வணங்கிய பின்னரே இரண்டாம் திருச்சுற்றைச் சுற்றுகின்றனர். இத்திருச்சுற்று மண்டபத்தின் வடமேற்கில் ஆதிபராசக்தியின் சிற்பம் தூணில் உள்ளது.

இறைவி சந்நிதி அர்த்த மண்டபத்தின் வாயிலின் மேலே இரண்டு புறமும் சங்க நிதி, பதும நிதி ஆகியன செதுக்கப்பட்டுள்ளன.

இறைவி இரண்டு கைகள் கொண்டு சதுர பீடத்தின் மேல் இருக்கும் தாமரை பீடத்தில் நின்ற கோலத்தில் இருக்கிறாள். வலது கையில் செண்டும் இடது கையில் ‘லம்ப அத்த’ முத்திரையுடன் இறைவியின் சிலை வடிக்கப்பட்டுள்ளது. இறைவியின் பெயரான குரவங்கமழ் குழலம்மை என்பது வாசனையைக் குறிக்கும் வண்ணம் உள்ளது. இறைவியின் மேல் எந்த வாசனையுள்ள மலர்களைச் சூட்டி பின்னர் சிறிது நேரம் கழித்து எடுத்தால் மலர்களில் அதன் வாசனை இருப்பதில்லை. இறைவியின் சிலை மலர்களில் உள்ள வாசனையை உறிஞ்சும் தன்மையுடையதாய் உள்ளது.[1]

இறைவனின் லிங்கத் திருமேனியின் ஆவுடை ஒன்றேகால் அடி உயரமும் அதிலிருந்து லிங்கத்தின் பாணம் ஒன்றேமுக்கால் அடி உயரமும் கொண்டது. ஆவுடை சதுரமாக உள்ளது.

**கட்டிடக்கலைச் செய்திகள்:**

இறைவன் சந்நிதி முதல் திருச்சுற்று, இறைவி சந்நிதி முதல் திருச்சுற்று ஆகியனவற்றைச் சுற்றியிருக்கும் மண்டபம் பின்னாளில் கட்டப்பட்டுள்ளது. இறைவன் சந்நிதி, இறைவி சந்நிதியின் விமானங்கள் இரண்டுமே இந்திர விமானம் என்றே அழைக்கப்படுகின்றன.

**திருவேடகம்:**

திருவேடகம் திருக்கோயிலில் கலைநயம் மிக்க சிற்பங்கள் காணப்படுகின்றன.

**சிற்பச் செய்திகள்:**

திருக்கோயிலுக்கு வெளியே வைகையாற்றுக்கு இறங்கும் படிகளில் திருஞானசம்பந்தர் செய்திட்ட புனல் வாதம் செதுக்கப்பட்டுள்ளது. வைகையாற்றின் ஓட்டத்தில் எதிர்த்து வந்த ஏட்டின் நான்கு புறமும் மீன்கள் தாங்கி நிறுத்த, அதை விநாயகர் தன் துதிக்கையால் எடுத்துத் தருகிறார். அப்பொழுது இறைவன், இறைவி இடபத்தில் தோன்றி விநாயகருக்கும் திருஞானசம்பந்தருக்கும் காட்சி கொடுப்பதாய் இச்சிற்பம் அமைந்துள்ளது (படம்-1). இதற்கு எதிரே சப்த மாதர் உள்ளனர். இச்சிற்பத்தைத் தவிர 'புனல் வாதம்' நடந்ததற்கான புறச் சான்றுகள் திருக்கோயிலில் இல்லை என்பதை கள ஆய்வின் பொழுது சிவாச்சாரியார் பா.பரசுராம பட்டர் என்பவரிடம் நேர்காணல் செய்ததன் வழி அறியமுடிகிறது.

இறைவி சந்நிதியில் அமைந்திருக்கும் சண்டிகேசுவரி சந்நிதியின் இருபுறம் இருக்கும் தூண்களில் மங்கையர்க்கரசியார் (படம்-2), கூன் பாண்டியன் (படம்-3), நின்றசீர் நெடுமாற நாயனார் (படம்-4), குலச்சிறையார் (படம்-5) ஆகியோர் செதுக்கப்பட்டுள்ளதை இவ் ஆய்வில் கண்டறிந்து வெளிப்படுத்தப்பட்டுள்ளது. இச்சிற்பங்கள் ஏடு எதிரேறியதைக் குறிப்பிடவில்லையாகிலும் ஏட்டில் 'வேந்தனும் ஓங்குக' என்று எழுதியதற்கேற்ப பாண்டியனின் கூன் நிமிர்ந்ததற்கான சான்றாக அமைந்துள்ளன.

இறைவி சந்நிதி வெளி மண்டபத்தின் தூண்களில் கங்காளநாதர், கால பைரவர், கருப்பர், வேணுகோபாலன், அனுமன், தெட்சிணாமூர்த்தி ஆகிய தெய்வ

வடிவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. தயிர் விற்கும் பெண், ‘அன்னக்கரண்டி’ உடன் பெண் ஆகிய சிற்பங்களும் தூண்களில் உள்ளன.

இறைவன் சந்நிதி வெளி மண்டபத்தின் தூண்களில் அனுமன், மானுக்கு உணவிடும் இறைவன், கருப்பர் ஆகிய சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. திருட்டிச் சிற்பமாகப் பல்லி போன்ற ஊர்வன தூணில் உள்ளது.

இறைவி சந்நிதி மகா மண்டபத்தில் இறைவன் பன்றிகளுக்குத் தாயாகி பாலூட்டியது, இறைவனின் விறகு விற்ற திருவிளையாடல், மாணிக்கவாசகருக்குத் தீட்சை அளித்தது, நாரைக்கு முக்தி கொடுத்தது, கரிக்குருவிக்கு உபதேசம் செய்தது ஆகிய இறைவனின் திருவிளையாடல் சிற்பங்கள் தூண்களில் உள்ளன. இடபத்தில் இறைவன், இறைவி, அனுமன், திருநாவுக்கரசர், கைலாய மலையில் இறைவன் அருள் செய்தல், இறைவன் தீட்சை வழங்குதல், மயில் வாகனத்தில் முருகன் ஆகிய சிற்பங்கள் தூண்களை அலங்கரிக்கின்றன.

கோட்டத்தில் அமைக்கப்பெறும் நர்த்தன விநாயகர் கோட்டத்தின் அருகேயிருக்கும் தூணில் வடிக்கப்பட்டுள்ளது. ஆதிசேடன் தன் இணையுடன் சிவ பூசை செய்வது, கண்ணப்ப நாயனார், யோக நிலையில் இருக்கும் முனிவர்கள், அகத்தியர் ஆகிய சிற்பங்கள் தூண்களில் உள்ளன.

நுழைவு வாயில் அருகேயிருக்கும் தூணில் கணவன் மனைவி வரவேற்பது போன்ற சிற்பம் உள்ளது. இதில் மனைவி கை கூப்பி வரவேற்கிறாள். கணவன் வலது கையை மார்பில் வைத்து மரியாதை (Salute) செய்கின்றார். வியாபாரம் செய்யும் பெண் ஒருத்தி தன் இடது கையால் இடுப்பிலிருக்கும் கைகளினால் பின்னப்பட்ட கூடையைத் தாங்கி உள்ள சிற்பம் காணப்படுகிறது. ஊதலைக் கையில் வைத்து வாசிக்கும் தன் பிள்ளையை வலதுகையால் அணைத்துக் கொண்டே வியாபாரம் செய்கின்றாள். மருத நில மக்கள் தங்கள் வயலில் விளைந்த கரும்பு, நெல் முதலிய தானியங்களை பண்டைமாற்று வாணிபம் செய்து வாழ்ந்து வந்ததை தமிழ் இலக்கிய நூல்களின் மூலம் அறியலாம். இதைக் குறிப்பிடும் வண்ணம் இச்சிற்பம் அமைந்துள்ளது.

மனிதன் தன் இடக்கையில் துண்டை உதறி வலக்கையால் மீசையை முறுக்குவது, யாளியுடன் மனிதர்கள் அமர்ந்திருப்பது, யாளி போன்ற வால் வைத்த மிருகம் கொடியில் தொங்குவது, யாளி அமர்ந்திருப்பது, சரபேசுவரர் ஆகிய சிற்பங்கள் தூண்களில் உள்ளன.

இறைவி சந்நிதி உள்திருச்சுற்றில் செவி சாய்த்த விநாயகர், கோதண்டராமன், தெண்டாயுதபாணி, காமதேனு ஆகிய சிற்பங்களும் முனிவர்கள் யோக நிலையில் இருப்பது போன்ற சிற்பங்களும் தூண்களில் இடம்பெற்றுள்ளன. இம்முனிவர்களுடன் பதஞ்சலி, வியாக்ர பாதர், அகத்தியர் ஆகியோரும் உள்ளனர். மேல் சால்வையுடன் (Shawl/Scarf) நடனப் பெண்கள், பொறி உருண்டை விற்கும் வியாபாரி, தன் தோளில் இருபுறமும் பொருட்களை வைத்திருக்கும் வியாபாரி ஆகிய சிற்பங்கள் தூண்களில் உள்ளன.

வெள்ளை யானை சாபந் தீர்ந்து இறைவனைப் பூசித்த திருவிளையாடற் காட்சி, வைதீக வழிபாட்டு முறைகளில் இடம்பெறும் கலசம், யாளி போன்ற மிருகம் பாம்புடன் சண்டையிடுவது, கண்ணாடிப் பிம்பம் (Mirror Image) போல் அமைந்திருக்கும் பறவை, கையில் துணியை வைத்து வித்தை செய்யும் மனிதன், யாளி யானையுடன் சண்டையிடுதல், ஆண்-பெண் சேர்க்கையைக் குறிக்கும் சிற்பம் ஆகியன தூண்களில் இடம்பெற்றுள்ளன.

இறைவன் சந்நிதி மகா மண்டபத்தில் அனுமன், புல்லாங்குழல் ஊதும் திருமால், இடபாரூடராக இறைவன், தெண்டாயுதபாணி, கங்காளநாதர், நடராசர், தெட்சிணாமூர்த்தி, மகாலெட்சுமி, சுப்பிரமணியர் ஆகிய தெய்வ வடிவங்கள் தூண்களில் வடிக்கப்பட்டுள்ளன.

கன்னிமூல விநாயகர் இத்திருக்கோயிலில் இல்லை. எனவே இறைவன் சந்நிதி உள்திருச்சுற்றின் தென்மேற்குப் பகுதியில் உள்ள தூணில் விநாயகர் அமைந்துள்ளார். இந்தத் தூணில் விநாயகரைச் சமைத்தால் இதற்கு இணையான வடமேற்கு தூணில் முருகர் இடம் பெறுவார். ஆனால் இதற்கு எதிரில் வள்ளி தெய்வானை சண்முகர் சந்நிதி அமைந்துள்ளதால் அவ்விடத்தில் யாளி சிற்பத்தை வைத்து வடக்கு நோக்கி தெண்டாயுதபாணியை வைத்துள்ளனர். இன்று குடிமைப் பொறியியல் துறையில் கூறப்படும் திட்டம் (Estimating and Planning) என்பதை அன்றே உபயோகப்படுத்தியுள்ளனர். மகா மண்டபத்தின் தூண்களை பூத கணங்கள் தாங்கியிருப்பது போன்று நிறுத்தியுள்ளனர்.

**திருக்கொடுங்குன்றம்:**

கலைநுட்பம் நிறைந்த சிற்பங்கள் திருக்கொடுங்குன்றம் திருக்கோயிலில் காணக் கிடைக்கின்றன.

**சிற்பச் செய்திகள்:**

துரை ராசா மண்டபத்தின் தூண்களில் விநாயகர், கருப்பர், பூத கணம், பெண் தீபம் ஏற்றுதல், மனிதன் குதிரையில் செல்லுதல், யாளி அமர்ந்திருத்தல், வானரம் உணவு உண்பது ஆகிய சிற்பங்கள் உள்ளன. துரை ராசா மண்டபத்தின் மையப்பகுதியின் மேற்கூரையை பன்னிரெண்டு ராசிகளுக்கு உரிய குறியீடுகள் அலங்கரிக்கின்றன.

இறைவன் சந்நிதி திருச்சுற்றின் தூண்களில் விநாயகர், அமர்ந்த நிலையில் விநாயகர், வேணுகோபாலன், சிவலிங்கம், இறைவன் திருக்கயிலாயக் காட்சி, இறைவி, அனுமன், மூஞ்சூர் மீதூறும் விநாயகர், காமதேனு சிவலிங்கத்திற்குப் பால் சொரிதல், மயில் வாகனத்துடன் நின்ற கோலத்தில் முருகன், அறையும் கோலத்தில் அனுமன், நடராசரின் ஊர்த்துவ தாண்டவம், நந்தி, பூத கணம், பசு லிங்கத்திற்குப் பால் சொரிதல் ஆகியன வடிக்கப்பட்டுள்ளன.

முனிவர், வலது கையில் ருத்திராட்சமாலையும் இடது கையில் கமண்டலமும் தரித்து முனிவர் தவம் செய்தல் ஆகிய சிற்பங்களும் யானையின் பின்னால் அழிந்து விட்ட மிருகம் (Extincted Species) துதிக்கையை இழுத்து சண்டையிடுதல், யாளி அமர்ந்திருத்தல், இரட்டை மீன்கள், அன்னம், நாய், வானரம் வளைவான பின்பகுதிக்கு ஏற்ப தன் உடம்பையும் வளைத்து உட்கார்ந்து காலை நீட்டி நிதானமாக உணவை ருசித்து உண்பது, யாளி மேல் மனிதன் அமர்ந்திருத்தல் ஆகியனவும் தூண்களை அலங்கரிக்கின்றன.

இடுப்பு வரை மனிதனின் உருவமும் அதற்குக் கீழே அன்னத்தின் உருவமும் கொண்டவன், ஆண், பெண்ணின் இடது மார்பைத் தடவிக் கொண்டு அவள் மயங்கியிருக்கும் நிலையில் அவள் அறியாமல் தலையில் உள்ள உணவுப் பொருளை எடுத்தல், பெண் அபிநயம் செய்ய ஆண் தன் காலை பின்னால் இருந்து வளைத்து அவள் மார்பைத் தடவுதல், நடுவே மனிதத் தலையைச் சுற்றி நான்கு யாளிகள், மனிதனை மிதித்துக் கொண்டு ஓடும் மதம் பிடித்த யானையை பாகன் அங்குசத்தால் அடக்குதல் ஆகியன தூண்களில் இடம் பெற்றுள்ளன.

நடுவே நிர்வாணமாய் இருக்கும் பெண்ணின் இரண்டு கால்களில் இருபுறமும் பெண்கள் நிற்பது போன்ற சிற்பம் உள்ளது. கைகளைக் கொண்டு மறைத்துப் பார்த்தால் இரண்டு கால்கள் மூன்று பெண்களுக்கும் பொதுவாக அமைந்திருப்பதைக்

காணலாம். நடுவில் நிர்வாணமாய் இருக்கும் பெண்ணின் பிறப்புறுப்பைக் கண்ட மனிதன் ஆனந்தக் கூத்தாடுவது போன்று அமைக்கப்பட்ட சிற்பம் கலை நயம் வாய்ந்தது.

இறைவன் சந்நிதி திருச்சுற்றின் மேற்கு, வடக்குப் பகுதிகள் சந்திக்கும் இடத்தில் உள்ள தூண்களில் சாளரங்களின் உள்ளே கல்லுருண்டைகளைக் காணலாம். இவ்வாறு இரண்டு தூண்களில் மூன்று கல்லுருண்டைகள் உள்ளன (படம்-6). இவைகளை சாளரத்தின் வழியே கையை விட்டு உருட்டலாம். ஆனால் வெளியே எடுக்க இயலாது. இதே போன்று வடக்குப் பகுதியின் தூண் ஒன்றின் மீதிருக்கும் யாளியின் வாயில் ஒரு கல்லுருண்டை உள்ளது (படம்-7). கற்சங்கிலியும் இப்பகுதியில் காணப்படுகிறது.

இறைவி சந்நிதி திருச்சுற்றில் விநாயகர், சிவலிங்கம், நாகர், வேடன் அம்பு எய்தல், யானை, யானைத் தலை, ஆடு, அன்னம், பாறை மேல் வானரம் அமர்ந்து உண்ணுதல் ஆகிய சிற்பங்கள் தூண்களை அலங்கரிக்கின்றன.

இறைவி இரண்டு கரங்களுடன் பத்ம பீடத்தில் நின்ற கோலத்தில் வலது கையில் மலரை ஏந்தி இடது கையை தாழ்த்தியும் உள்ளாள்.

இறைவனின் ஆவுடை 2 அடி உயரம், ஆவுடையிலிருந்து பாணம் 1 அடி உயரமும் உடையது. இறைவன் பிரதிட்டை செய்யப்பட்டுள்ளார்.

வடுக பைரவர் சந்நிதி முன் மண்டபத்தின் தூண்களில் கருப்பர், சந்நாசிக் கருப்பர், பசு லிங்கத்திற்குப் பால் சொரிதல் ஆகிய சிற்பங்கள் உள்ளன.

லெட்சுமி மண்டபத்தில் நாமம் இட்ட அனுமன் பாலம் கட்ட பாறையை தலைமேல் தூக்கி வருதல், வேணுகோபாலன், இறைவி, பத்மாசனம் இட்டு முனிவர் தவம் செய்தல், நாகங்கள், பசு லிங்கத்திற்குப் பால் சொரிதல், எலும்பும் தோலுமாக வயதான பெண், அன்னம், ஆமை, யாளி, யாளி யானையுடன் சண்டையிடுதல், யானை ஆகிய சிற்பங்கள் தூண்களில் காணக்கிடைக்கின்றன.

லெட்சுமி மண்டபத்திலிருந்து தேவசபா மண்டபம் செல்லும் இரு புற படிகளின் சுவரில் சங்க நிதி, பதும நிதி வடிக்கப்பட்டுள்ளன.

தேவசபா மண்டபத்தின் மேற்கூரையில் அட்டைகளைச் செதுக்கி, அவைகளுக்கு நடுவே இறைவன் - இறைவி திருமணத்திற்கு வருகை புரிந்த

தேவர்களின் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. நுண்ணிய வேலைப்பாடுகள் உடையது இந்த மேற்கூரை.

மங்கைபாகர் – தேனம்மை பாறையைக் குடைந்து உருவாக்கப்பெற்றது ஆகும். பீடத்தில் அமர்ந்த நிலையில் இச்சிற்பம் குடையப்பட்டுள்ளது.

**திருப்புத்தூர்:**

திருப்புத்தூர் திருக்கோயில் சிற்பச் செறிவும் கட்டிடக்கலை சிறப்பும் பெற்று அமைந்துள்ளது.

**சிற்பச் செய்திகள்:**

திருநாள் மண்டபத்தில் பெண் மரத்தில் சாய்ந்து நிற்பது, இறைவி, கண்ணன் புல்லாங்குழல் இசைக்க அதைக் கேட்டு ஆநிரைகள் மெய் மறந்து நிற்பது, யாளி ஆகிய சிற்பங்கள் காணப்படுகின்றன.

இறைவி சந்நிதி மகா மண்டபத்தில் அகத்தியர் சிவலிங்கப் பிரதிட்டை செய்தல், விநாயகர், தெண்டாயுதபாணி, சிவலிங்கம், பசு லிங்கத்திற்குப் பால் சொரிதல், ராகு கேது, துவார பாலகிகள், யானை, மான், சிங்கம், கொக்கு, கொக்கு வாயில் மீனைக் கவ்வியிருத்தல், யாளி அமர்ந்திருத்தல், யாளி ஆகியவற்றுடன் அழிந்துவிட்ட மிருகங்கள் தனித்தும் யாளி, யானை போன்றவற்றுடன் இணைந்தும் வடிக்கப்பெற்றுள்ளன.

உள் திருச்சுற்றில் முனிவர் தவம் இயற்றுதல், பூத கணம், அறையும் நிலையில் அனுமன், ஔவையார் ஆகிய சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன.

குறிப்பிடும் வண்ணம் காவடி எடுத்தல் சிற்பம் உள்ளது. ஆய்வுக்காலத்திலும் மக்கள் பழநி என்றழைக்கப்படும் திருச்சீரலைவாய்க்கு காவடி எடுக்கும் வழக்கத்தைக் கொண்டுள்ளது குறிப்பிடத்தக்கது. மக்கள் கொண்டிருந்த பக்தி மார்க்கத்தினையே சிற்பமாகச் செதுக்கியுள்ளனர்.

கருடர், யானையின் தலை, யானை தன் துதிக்கையால் வாழை மரத்தை ஒடிப்பது, கிளி, குதிரை, யானை, நாய், மயில் வாயில் பாம்பைக் கவ்வியிருத்தல், யாளி அமர்ந்திருத்தல், யாளி ஆகியவற்றுடன் அழிந்துவிட்ட மிருகங்கள் ஆகியனவும் உள் திருச்சுற்றில் காணக்கிடைக்கின்றன. இவைகளுடன் வைதீக முறையில் பயன்படுத்தப்பெறும் கும்பம் இடம்பெற்றுள்ளது.

இறைவி இரண்டு கைகள் கொண்டு பத்ம பீடத்தில் நின்ற நிலையில் உள்ளாள். வலது கையில் நீலோற்பவமும் இடது கையை தாழ்த்தியும் இறைவியின் திருவுருவ அமைப்பு உள்ளது.

நந்தி மண்டபத்தில் கருப்பர், பசு லிங்கத்திற்குப் பால் சொரிதல், லிங்கம், அனுமன், பூத கணம், பாம்பை மயில் கொத்த வருதல், அன்னம், பாறை மேல் அமர்ந்து உணவு உண்ணும் வானரம் ஆகிய சிற்பங்கள் காணப்படுகின்றன.

யோக பைரவர் சந்நிதி மாமண்டபத்தில் அதைக் கட்டிய பெரிய மருது, சின்ன மருதுவின் சிலை தூணின் பக்கத்தில் செதுக்கப்பட்டுள்து. விநாயகர், கருப்பர், லிங்கம், வானரம், பசு லிங்கத்திற்குப் பால் சொரிதல், யாளி ஆகிய சிற்பங்கள் உள்ளன. முன் மண்டபத்தில் மகாலெட்சுமி, பசு லிங்கத்திற்குப் பால் சொரிதல், யாளி ஆகியன காணப்படுகின்றன.

யோக பைரவர் யோக நிலையில் இரண்டு கைகளுடன் உள்ளார். ‘பத்மாசனம்’ இட்டு, வலது கை விரல்களை மடக்கி மூடி வலது தொடை மீதும் இடது கையை தொடை மீது ஊன்றிய படியும் இரண்டு கால்களின் பெருவிரல்கள் தரையில் ஊன்றிய வண்ணமும் உள்ளார்.

இறைவன் சந்நிதி திருச்சுற்று மண்டபத்தின் கிழக்குப் பகுதியில் நர்த்தன விநாயகர், மயில் மீதூறும் முருகர், வானரம் லிங்கத்திற்கு பூசை செய்தல், வியாக்ர பாதர் லிங்கத்திற்கு பூசை செய்தல், பசு லிங்கத்திற்குப் பால் சொரிதல், சங்க நிதி, பதும நிதி ஆகியனவும் மேற்குப் பகுதியில் விநாயகர், மயில் மீதூறும் முருகர், வியாக்ர பாதர் ஆகிய சிற்பங்களும் வடிக்கப்பெற்றுள்ளன.

சபையில் விநாயகர், மயில் மீதூறும் முருகர், நர்த்தன விநாயகர், இறைவன் திருக்கயிலாயக் காட்சி, பிரம்மனும் திருமாலும் அடிமுடி காண இயலாதவாறு இறைவன் லிங்கோத்பவராய் நின்றது, கங்காளநாதர், இராவணன் கயிலை மலையை தூக்க முயன்ற பொழுது இறைவன் தன் பெருவிரலால் அழுத்துவது, லெட்சுமி நாராயணர், லெட்சுமி நரசிம்மர், வேணுகோபாலன், சங்க நிதி, பதும நிதி ஆகிய சிற்பங்கள் தூண்களை அலங்கரிக்கின்றன. நரசிம்மர் இரணியணின் குடலைக் கிழிக்கும் சிற்பம் நுணுக்கமாகச் செதுக்கப்பட்டுள்ளது. சபையின் தூண்கள் நுண்ணிய வேலைப்பாடுகள் கொண்டவை. தூண்களிலுள்ள சிறு தூண்கள் ‘இசைத் தூண்கள்’ என்று கூறப்படுகின்றன (படம்-8).

இறைவன் சுயம்பு அன்று. பிரதிட்டை செய்யப்பட்டதாகும்.[2] ஆவுடை சதுரமானதாகவும் 3½ அடி உயரமும் கொண்டுள்ளது. ஆவுடையிலிருந்து பாணத்தின் உயரம் 1½ அடி ஆகும்.

**கட்டிடக்கலைச் செய்திகள்:**

'திருத்தளி' என்பது திருக்கோயிலின் பெயர். திருத்தளியில் உறையும் இறைவன் என்ற பொருளில் 'திருத்தளியான்' என்று திருநாவுக்கரசர் திருப்புத்தூர் தேவாரத்தில் பாடியுள்ளார். பின்னர் அதுவே இறைவனின் பெயராக வழங்கப்பட்டு வருகிறது. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் காலத்திற்கு முன்னர் ஆதி திருத்தளிநாதர் திருக்கோயில் இருக்கும் இடத்தில் இந்த திருக்கோயில் இருந்துள்ளது.

சோழ நாட்டிலிருந்து பாண்டிய நாட்டை அடைய திருக்கொடுங்குன்றம் வழியே செல்வது இடர்பாடாய் இருந்துள்ளது. எனவே எளிமையான வழியாக திருப்புத்தூரை அடைந்து திருஆலவாய் உள்ளிட்ட பாண்டிய நாட்டின் பகுதிகளை அடைந்துள்ளனர். இக்காரணத்தினால்தான் திருநாவுக்கரசர், சுந்தரர், சேரமான் பெருமாள் நாயனார் சோழ நாட்டிலிருந்து திருப்புத்தூர் வழியாக பாண்டிய நாட்டை அடைந்துள்ளனர்.

அந்தணர் குலத்தில் தோன்றிய திருஞானசம்பந்தர் தான் பிறந்த குலத்தின் இயல்பினால் நான்மறைகளை ஓதுவிக்கும் இடங்களில் தமிழ் நெறியை நிறுத்தினார். இதனாற்றான் சோழ நாட்டிலிருந்து திருக்கொடுங்குன்றம் வழியாகத் திருஆலவாய் சென்றடைந்தார்.

சோழ நாட்டிற்கும் பாண்டிய நாட்டிற்கும் இணைப்புப் பாலமாய் இருந்த திருப்புத்தூர் ஊராக உருவாக்கப்பட்டுள்ளது. ஊர்களை அமைக்கும் பொழுது நடுவில் திருக்கோயிலை மையப் புள்ளியாக அமைத்து அதைச் சுற்றி வீதிகளை வகுப்பது வழக்கம். இப்பாணியை தற்காலத்தும் திருஆலவாய் முதலிய திருத்தலங்களில் காணலாம். எனவே ஊரின் மையமாக இருக்க வேண்டி, ஆதி திருத்தளிநாதர் திருக்கோயிலில் இருந்து தற்காலத்து உள்ள இடத்தில் இத்திருக்கோயில் கட்டப்பெற்றுள்ளது. அரிசிலாற்றங்கரையில் தோன்றிய புத்தூர் அரிசிற்கரைபுத்தூர் என்று வழங்குவது போல் புதிதாய் உருவாக்கிய ஊர் – புத்தூர் என்று 'திரு' என்ற அடைமொழியுடன் திருப்புத்தூராக அழைக்கப்பட்டுள்ளது.

சுயம்பு லிங்கத்தின் பாணம் பல அடிகள் நிலத்தின் உள்ளே நீண்டிருக்கும். எனவே சுயம்பு லிங்கத்தை இடமாற்றி திருக்கோயிலாக அமைக்கும் வாய்ப்பு இல்லை. திருத்தளிநாதர் திருக்கோயில் இறைவன் சுயம்புவாக இல்லாதது இதை மேலும் உறுதிப்படுத்துகிறது. திருத்தளி திருக்கோயிலை அமைக்கும் பொழுது கற்றளியாக அமைத்துள்ளனர். கோட்டம், அர்த்த மண்டபம் மட்டுமல்லாது விமானமும் கல்லிலேயே அமைக்கப்பட்டுள்ளது (படம்-9). மண்ணாலும் சுடு செங்கற்களாலும் அமைக்கப்பட்ட திருக்கோயில்கள் இருந்த பொழுது கற்றளியாக உருவாக்கப்பட்டதால் இதன் பெருமை பெருகிற்று. இதையே திருஞானசம்பந்தர் திருப்புத்தூர் தேவாரத்தில், **"ஓங்கு கோயில்"** (1:26:3:3) என்றும், **"ஊறல் வாழ்க்கை யுடையா ரவர்போலும்"** (1:26:4:3) என்பவனாக திருப்புத்தூரையும் திருத்தளியில் உள்ள இறைவனையும் குறிப்பிடுகிறார்.

கோட்டத்தைச் சுற்றி நர்த்தன விநாயகர், தெட்சிணாமூர்த்தி, லிங்கோத்பவர், பிரம்மா, துர்க்கை முதலியவற்றை நிறுவும் காலத்திற்கு முன்னரே திருத்தளி கட்டப்பெற்றுள்ளது. ஆய்வுக்காலத்தில் காணும் தெட்சிணாமூர்த்தி சந்நிதி (படம்-10), லிங்கோத்பவர், விட்ணு துர்க்கை சந்நிதி ஆகியன பின்னாளில் செருகப்பட்டவையே. இவை பழமையானதன்று.

திருத்தளியைக் கட்டி அதைச் சுற்றி வீதிகள் வகுத்த பொழுது தேரோட்டம் நடைபெறுவதற்கும் வீதிகள் அமைத்திருக்கின்றனர். இதை, திருநாவுக்கரசர் திருப்புத்தூர் தேவாரத்தில், **"தேராரும் நெடுவீதித் திருப்புத்தூரில்"** (6:76:2:4) என்ற அடியில் குறிப்பிட்டுள்ளார்.

இதனால் திருப்புத்தூர் திட்டமிடப்பட்டு, வகுக்கப்பட்டு கட்டமைக்கப்பட்டுள்ளதை அறிய முடிகின்றது. திருத்தளியும் பின்னர் திருச்சுற்றுகள் வைத்து ஒன்றன் பின் ஒன்றாகத் திருப்பணி செய்யப்பட்டுள்ளது. ஆகம விதிப்படி திருக்கோயிலை ஒட்டி வேறு கட்டிடங்கள் ஏற்படுத்தக் கூடாது. எனவே திருக்கோயிலின் வெளி மதிற்சுவரை ஒட்டி சிறிது இடைவெளி விடப்பட்டிருக்கும். இது மாட வீதி என்றும் அழைக்கப்படும்.

திருப்புத்தூர் திருத்தளியின் மூன்றாம் திருச்சுற்றின் வெளியே மதிற்சுவரை ஒட்டி இந்த இடைவெளி விடப்பட்டுள்ளது. இருநூறு வருடங்களுக்கு முன்னர் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் காலத்திற்கு முன்னர் வகுக்கப்பட்ட ரத வீதியைச் சுற்றி கோட்டை கட்டப்பட்டுள்ளது. கோட்டையைச் சுற்றி அகழியும் ஏற்படுத்தப்பட்டுள்ளது. ஆய்வுக் காலத்தில் 'அகிழ்மனைத் தெரு' என்ற வீதி உள்ளது.

அகழிக்கு அருகே இருந்த மனையே பின்னர் அகிழ்மனைத் தெரு என்று மருவியுள்ளது. ஆய்வுக் காலத்திலும் கோட்டைச் சுவரின் எஞ்சிய பாகங்கள் இத்தெருவிலும் கோட்டையின் தெற்குப் பகுதியிலும் காணப்படுகின்றன (படம்-11,12).

கோட்டையை ஏற்படுத்தி அதன் காவல் தெய்வங்களாக கிழக்கு வாயிலில் கருப்பரும், தெற்கு வாயிலில் சப்த மாதரும் மேற்கில் அனுமனும், வடக்கில் வடக்கு வாசல் செல்வியும் நிறுவப்பட்டுள்ளனர். ஆய்வுக் காலத்தில் இக்காவல் தெய்வங்கள் முறையே கோட்டைக் கருப்பர் திருக்கோயில், பூமாயி அம்மன் திருக்கோயில், மேலக்கோட்டை வீர ஆஞ்சநேயர் திருக்கோயில், அங்காளம்மன் திருக்கோயில் எனத் தனித் திருக்கோயில்களாக விளங்குகின்றன. கோட்டைக் கருப்பர் திருக்கோயிலின் பின்புறம் ஆய்வுக் காலத்திலும் உயரமான கோட்டை சுவரின் எஞ்சிய பகுதியைக் காணலாம் (படம்-13).

சப்த மாதர்களுக்கு திருத்தளியின் வைகாசி விசாகப் பெருந்திருவிழாவிற்கு முன்னர் சித்திரை மாதம் பஞ்சமி திதியிலிருந்து பத்து நாட்கள் ‘பூச்சொரிதல்’ விழா நடைபெற்றுள்ளது. இதற்குத் தேவையான இறைவியின் செப்புத் திருமேனி திருத்தளியிலிருந்தே கொண்டு செல்லப்பட்டது. கோட்டைக்கு வெளியே அகழியைத் தாண்டி காட்டுப்பகுதியில் சப்த மாதர் இருந்ததால் பாதுகாப்புக்காக இறைவியின் செப்புத் திருமேனி இரவில் திருத்தளிக்கு கொண்டு செல்லப்படும். இது ஐதீகமாக ஆய்வுக் காலம் வரையிலும் நடைபெறுகிறது. பின்னர் வசதிகள் பெருக சப்த மாதர் தனித் திருக்கோயிலாக கட்டப்பட்டனர். சப்த மாதாரில் நடுவில் இருக்கும் ‘வைட்ணவி’, பூச்சொரிதல் என்னும் பூ மாரி பொழியும் திருவிழாவால் ‘பூமாரி’ என்றும் பின்னர் ‘பூமாயி’ என்றும் பெயர் பெற்று முதன்மை தெய்வமாய் வணங்கப்பட்டுள்ளாள் என்பது ஆய்வில் கண்டறியப்பட்ட முடிவாகும்.

கோட்டையின் கிழக்கு வாயில் நேரே திருத்தளியின் தெற்கு மாட வீதி இருந்துள்ளது. இதன் வழியே போக்குவரத்து பெருகப் பெருக சாலையாக உருவெடுத்துள்ளது. ஆய்வுக்காலத்தில் மேற்கு மாட வீதி, வடக்கு மாட வீதி பெயர் இல்லாத வீதிகளாக இருப்பதை கள ஆய்வில் காண முடிகிறது. கோட்டை கட்டப்பட்ட பிறகும் கோட்டைச் சுவரை ஒட்டிய வீதியிலேயே தேரோட்டம் நடைபெற்றுள்ளது. தேர் அச்சு முறிந்து திரும்பக் கட்டிய பகுதி ஆய்வுக்காலத்தில் ‘அச்சுக்கட்டுத் தெரு’

என்று அழைக்கப்படுகிறது. பின்னர் மாற்றம் அடைந்து ஆய்வுக்காலத்தில் உள்ள நான்கு ரத வீதிகளின் வழியே தேரோட்டம் நிகழ்த்தப் பெறுகிறது.

ஆதி திருத்தளிநாதர் திருக்கோயில் இடத்தில் இத்திருக்கோயில் இருந்த பொழுது தோன்றிய குளம் திருத்தளியின் தீர்த்தமாகக் குறிப்பிடப்பட்ட சீதளி தீர்த்தம் ஆகும். பின்னர் அங்கிருந்து திருத்தளியாக அமைக்கப்பட்ட பிறகு, இது வடகிழக்கில் அமைந்திருந்ததால் திருத்தளியின் தீர்த்தமாக இக்குளம் வழங்கப்பட்டுள்ளது. இப்பெயர் மருவி சீதேவி என்றும் அழைக்கப்படுகிறது. திருத்தளி கட்டப்பட்டு அதன் எதிரே குளம் எடுக்கப்பட்டுள்ளது. இது சிவகங்கை தீர்த்தம் ஆகும். சிவகங்கையே திருத்தளியின் முறையான குளமும் தீர்த்தமும் ஆகும். இதனாற்றான், தோராயமாக ஐம்பது வருடங்களுக்கு முன்னர் வரை சிவகங்கையிலேயே தீர்த்தவாரி, தெப்பம் நடைபெற்றுள்ளன.

திருநாவுக்கரசர் காலத்திற்குப் பின்னர் ஆடல்வல்லான் சந்நிதியும் சபையும் கட்டப்பட்டிருக்க வேண்டும். தல வரலாற்றின் படி திருப்புத்தூரில் இறைவன் ‘கௌரி தாண்டவம்’ ஆடியதாகக் கூறப்படுகிறது. ஆடல்வல்லானும் கௌரி தாண்டவம் இயற்றுவதாகவே அண்மையில் தோன்றிய தல வரலாறுகளில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால், தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான் தன் வேங்கடம் முதல் குமரி வரை (பாகம்-4) நூலில் ஆடல்வல்லான் ஆனந்த தாண்டவக் கோலத்தில் இருப்பதாகவே குறிப்பிடுகிறார்.[3]

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் தேவாரங்களில் யோக பைரவரைப் பற்றி குறிப்புகள் இல்லை. எனவே இவர்களின் காலத்திற்குப் பின்னர் யோக பைரவர் சந்நிதி அமைக்கப்பட்டுள்ளது.

ஆகம விதிப்படி கொடிமரத்திற்கு உள்ளடங்கியே இறைவன் சந்நிதி, இறைவி சந்நிதி அமைக்கப்படும். எனவே ஆய்வுக்காலத்தில் இருக்கும் திருநாகேசுவரர் சந்நிதியே இறைவி சந்நிதியாக இருந்துள்ளது. இதனை உறுதிப்படுத்தும் வண்ணம் திருநாகேசுவரர் சந்நிதி வாயிலில் சிம்ம இலச்சினை ஆய்வில் கண்டறியப்பட்டுள்ளது. (படம்-14). இறைவி சந்நிதி தனியாகக் கட்டப்பட்டதும் திருநாகேசுவரர் சந்நிதியில் லிங்கம் பிரதிட்டை செய்யப்பட்டுள்ளது. பின்னாளில் லிங்கம் திருநாகேசுவரர் என்று அழைக்கப்பட்டுள்ளது.

மூன்றாம் திருச்சுற்றில் புதிதாக கட்டப்பெற்ற இறைவி சந்நிதி 08.02.1901 இல் குடமுழுக்கு செய்யப்பட்டுள்ளது.[4]

யோக பைரவர் சந்நிதியின் அமைப்பை திருநாகேசுவரர் சந்நிதியின் அமைப்புடன் ஒப்பு நோக்கினால் இரண்டும் ஒரே காலத்தில் கட்டப்பட்டுள்ளதை அறியலாம்.

சபை, ஆடல்வல்லான் சந்நிதி மிக உயரம் கொண்டது. இதன் அடிப்பகுதி ஒரு நபர் நிற்கும் வண்ணம் வடிவமைக்கப்பட்டுள்ளது. 30 வருடங்களுக்கு முன்னர் இந்த நிலவறையே பொக்கிச அறையாக பயன்பட்டுள்ளது.[5]

இத்திருக்கோயிலில் பழமையான ஓவியங்கள் காணப்படவில்லை.

**திருப்புனவாயில்:**

திருப்புனவாயில் திருக்கோயிலில் சிற்பங்களும், ஓவியங்களும் நிறைந்து காணப்படுகின்றன.

**சிற்பச் செய்திகள்:**

இராசகோபுரத்தின் இடப்புறம், வல்லபையை இடதுபுறம் மடியில் ஏந்தியவாறு இடம்புரியாக வல்லபை விநாயகர் அமைந்துள்ளார். வலதுபுறம் வலக்கையில் தண்டத்தை ஏந்தி தெண்டாயுதபாணி சிலை அமைக்கப்பட்டுள்ளது. மாட வாயிலைக் கடந்ததும் இடப்பக்கம் சந்திரனும் வலப்பக்கம் சூரியனும் சந்நிதி கொண்டுள்ளனர். சைவத் திருக்கோயில்களில் இடப்புறம் சூரியனும் வலப்புறம் சந்திரனும் அமைக்கப்படும். இத்திருக்கோயிலில் இம்முறை மாற்றி நிறுவப்பட்டுள்ளது. ஆங்கில மாதங்களான மே, சூனில் சூரியன் நேராக கிழக்கில் உதிக்காமல் சிறிது தள்ளி வடக்கிற்கும் கிழக்கிற்கும் நடுவே உதிக்கும்.[6] இவ் ஆங்கில மாதத்தை ஒட்டி தமிழுக்கு வைகாசி மாதம் அமையும். இத்திருக்கோயிலில் வைகாசி மாதத்தின் சில நாட்கள் சூரியனின் ஒளி இறைவனின் மேல் விழும். இது சூரியன் சிவ பூசை செய்யும் ஐதீகமாக கருதப்படுகிறது. இதனை உணர்த்தவே மரபை மாற்றி வைகாசி மாதத்தில் சூரியன் உதிக்கும் திசைக்கு நேராக சூரியன் சந்நிதி அமைக்கப்பட்டுள்ளது என்பது ஆய்வில் கண்டறியப்பட்டுள்ளது.

திருச்சுற்றின் தெற்குப் பகுதியில் உள்ள பஞ்சவிநாயகர் சந்நிதியில் ஐந்து விநாயகர் சிலைகள் உள்ளன. இதில் நான்கு சிலைகள் நான்கு யுகங்களுக்கானது. ஒன்று திருக்கோயிலின் விநாயகர் ஆகும். இதன் பின்னால் உள்ள தலவிருட்சமான

மகிழ மரம் திருக்கோயில் விநாயகருக்கும் விருட்சமாக விளங்குகின்றது. இவ்விநாயகர் சிலைகள் ஆங்காங்கே சிதிலப்பட்டு உள்ளன. இதனருகே சதுர்முகலிங்கத்தின் பாணத்தில் நான்கு புறமும் இறைவன் முகங்கள் இருக்கின்றன. நான்கு முகங்களோடு பாணத்தையும் சேர்த்து ஐந்தாகக் கொண்டு இறைவனின் ஐந்தொழில்களான படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகியனவற்றைக் குறிப்பதாக அமைகின்றது. இதற்கடுத்துள்ள கபில முனிவர் புதல்வர்களின் சிலைகள், இவர்கள் இங்கு வந்து பூசை செய்துள்ளதை உணர்த்துகின்றது. கோட்டத்தில் தெற்கில் நர்த்தன விநாயகர் சிலை உள்ளது. இதன் அருகே தெட்சிணாமூர்த்தியின் சிலை அமையப்பெற்றுள்ளது. இந்த தெட்சிணாமூர்த்தி ‘யோக வியாக்கியான தெட்சிணாமூர்த்தி’ என்று அழைக்கப்படுகின்றார். பின்னால் சடைக்கிரீடம் சிறியதாக குருந்தமரமின்றி அமைந்துள்ளது. நான்கு சீடர்களான சனகர், சனாதனர், சனந்தனர், சனற்குமார் ஆகியோர் இல்லாமல் யோக வடிவில் இத்திருவுருவம் வடிக்கப்பெற்றுள்ளது.

‘ஆகண்டலன்’ என்ற சொல்லுக்கு ‘இந்திரன்’ என்று பொருள். இந்திரன் வந்து இறைவனை வழிபட்டு இவ்விநாயகரை பிரதிட்டை செய்துள்ளதால் ‘ஆகண்டல விநாயகர்’ என்ற பெயர் ஏற்பட்டுள்ளது. இறைவன் சந்தியின் கோட்டத்தின் மேல்புறம் மகாவிட்ணுவின் சிலையும் அனுமனின் சிலையும் உள்ளன. இறைவனின் அடியையும் முடியையும் திருமாலும் பிரம்மனும் காணாது நின்றதை லிங்கோத்பவர் சிலை விளக்கும். ஆனால் இங்கு லிங்கோத்பவருக்கு பதிலாக மகாவிட்ணு, அனுமனின் சிலைகள் அமைந்திருப்பது, இத்திருக்கோயில் இறைவன் அடிமுடி தேடிய காலத்திற்கு முன் தோன்றியதைக் குறிப்பதாக அமைந்திருக்கின்றது. மேற்கு மதிற்சுவரின் வாயிலின் அருகே அகத்தியர் சந்நிதி உள்ளது. இதில் பொதுவாக லிங்கம் பிரதிட்டை செய்யப்படும். ஆனால் இங்கு பலிபீடம் பிரதிட்டை செய்யப்பட்டு அகத்திய முனிவராக மக்களால் வழிபடப்படுகின்றது.

வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் சந்நிதியில் சுப்பிரமணியர் மயில் வாகனத்துடன் நின்ற கோலத்தில் வள்ளி தெய்வானையுடன் அமைக்கப்பட்டுள்ளார். இறைவன் சந்நிதியின் கோட்டத்தின் தெற்கே பிரம்மா இருக்கின்றார். இறைவியே காளி வடிவத்தில் குடவரைக் காளியாக அமைந்திருப்பதால் கோட்டத்தில் துர்க்கை

அமைக்கப்படவில்லை. இறைவி சந்நிதியின் மகா மண்டபத்தின் மேற் தூண்களில் பொறிக்கப்பட்டுள்ள மகர மீனின் உருவம் பாண்டியர்களின் திருப்பணி என்பதை தெள்ளிதின் விளக்கும்.

இறைவி இருக்கும் பீடம் சதுரமாகவும் இறைவியின் திருப்பாதங்களைத் தாங்குமிடம் அரைவட்ட வடிவிலும் தாமரை பீடமாக அமையப்பெற்றுள்ளது. இறைவி நான்கு கரங்களுடன் வடிக்கப் பெற்றுள்ளாள். வலக்கை ஒன்றில் அங்குசமும் இடக்கை ஒன்றில் பாசமும் ஏந்தியுள்ளாள். மற்றொரு வலக்கரம் 'வரத அத்த' முத்திரையுடனும் இடது கரம் 'கிடி அத்த' முத்திரையுடனும் உள்ளாள். கிடி அத்தம் என்பது நடுவிரல், மோதிர விரல், சுண்டு விரல் திருப்பாதங்களை நோக்கியிருக்கும். இறைவியின் திருப்பாதங்களை அடைவதே மானிடப்பிறப்பின் கொள்கை என்பதைக் குறிக்கும்.

இறைவன் சந்நிதியின் வசந்த மண்டபத்தில் வலது பக்கத்தின் முதல் தூணில் அனுமன் தன் இடது கையில் சஞ்சீவி மலையை வைத்திருக்கும் புடைப்புச் சிற்பம் திருட்டிக்காக உள்ளது. உள்ளே இருக்கும் இடப்பக்கம் தூணில் நர்த்தன விநாயகரின் சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது.

மகா மண்டபத்தின் தென் மேற்கு மூலையில் இருக்கும் சோமாசுகந்தர் செப்புத் திருமேனி பார்ப்பதற்கு எடை குறைவானது போலவே தோற்றமளிக்கும். ஆனால் அதை பத்து நபர்கள் சேர்ந்து மட்டுமே தூக்க முடியும்.[7]

அர்த்த மண்டபத்தின் வலப்புறம் 'போக சக்தி' என்று அழைக்கப்படும் மனோன்மணித் தாயாரின் செப்புத் திருமேனி உள்ளது. இத்திருக்கோயிலில் அர்த்த மண்டபத்தில் போக சக்தியான மனோன்மணித் தாயார் அமைந்திருப்பதால் இம்மண்டபம் 'போக மண்டபம்' என்றும் வழங்கப்படுகின்றது. கருவறையில் சுயம்புவாக இறைவன் இருக்கிறார். சுயம்புவாகத் தோன்றிய லிங்க பாணத்தின் மீது சதுர வடிவிலான ஆவுடை சாற்றப்பட்டுள்ளது.

உலகின் மிகவுயர்ந்த லிங்கம் கங்கைகொண்ட சோழபுரத்தில் உள்ளது. இதன் பாணத்தின் உயரம் 13.5 அடி. ஆவுடையின் சுற்றளவு 60 அடி. இரண்டாவது உயர்ந்த லிங்கம் தஞ்சாவூர் பெருவுடையார் திருக்கோயில் லிங்கம். லிங்க பாணத்தின் உயரம் 12.5 அடி, ஆவுடையின் சுற்றளவு 55 அடி. திருப்புனவாயில் இறைவனின் லிங்க பாணத்தின் உயரம் 9 அடியாக இருந்தாலும் ஆவுடையின் சுற்றளவு 82.5 அடியாகும்.[8]

உலகத்திலுள்ள லிங்கங்களில் மிகப் பெரிய ஆவுடை கொண்டது திருப்புனவாயில் திருக்கோயிலேயாகும். இதனால் ஒரு சிவாச்சாரியாரால் மட்டும் இறைவனுக்கு ஆடை சாற்ற இயலாது. ஒருவர் பிடித்துக் கொள்ள இன்னொருவர் சாற்ற வேண்டும். பாணத்திற்கு மூன்று முழ வேட்டியும் ஆவுடைக்கு முப்பது முழ வேட்டியும் சிறப்பாக நெய்து அணிவிக்கின்றனர். இதை வைத்தே இப்பகுதி மக்களால் 'மூன்று முழமும் ஒரு சுற்று. முப்பது முழமும் ஒரு சுற்று' என்ற சொல்லடை கூறப்பட்டு வருகின்றது.

இறைவன் சந்நிதியின் கோட்டத்தின் மேற்புறம் லிங்கோத்பவர் சிற்பம் இல்லையாகினும் ஆகண்டல விநாயகர் சந்நிதி, வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் சந்நிதி, இறைவி சந்நிதி ஆகியனவற்றின் கோட்டத்தின் மேற்புறம் திருமால், பிரம்மாவின் புடைப்புச் சிற்பங்களும், வடபுறம் கோமுகைக்கு மேலே முனிவர்கள், முனிபத்தினிகளின் புடைப்புச் சிற்பங்களும் உள்ளன.

**ஓவியச் செய்திகள்:**

இறைவி சந்நிதியின் மகா மண்டபம் ஓவியச் செறிவு மிக்கது. ஆனால் பல ஓவியங்கள் அழிந்து போயிருப்பதால் அதிலுள்ள செய்திகளை முழுதும் அறியமுடியவில்லை. ஒரு தூணில் வரிசையாக லிங்கங்கள் இருப்பது போன்ற ஓவியம், மேற்கூரையில் வருணன் பூசை செய்யும் ஓவியம் ஆகியன சிதையாமல் உள்ளன.

வாயில் நடைபாதையின் மேற்கூரையில் இரண்டு காளைகள் வரையப்பட்டுள்ளன. ஒன்றில் ஒரு ஆணும் பெண்ணும் காளையின் மேல் அமர்ந்த கோலத்தில் உள்ளனர். மற்றொரு காளையின் மேல் உள்ள உருவம் சிதிலமடைந்ததால் புலப்படவில்லை. எனினும் முதல் காளையில் இறைவன் - பிரியாவிடை என்றவாறும் இரண்டாவது காளையில் இறைவியும் இடபாரூடராக தரிசனம் தந்து அமர்ந்திருக்கின்றனர் என்பது ஆய்வின் முடிவாகும்.

இறைவி சந்நிதியின் மகா மண்டப ஓவியங்களைப் போல் அல்லாது வசந்த மண்டபத்தைப் பெற்றிருப்பதால் இறைவன் சந்நிதி மகா மண்டபத்தின் ஓவியங்கள் நல்ல முறையில் உள்ளன.

இம்மண்டபத்தின் தூண்களில் புலி வேடம் எடுத்த வியாக்ரன் என்ற அசுரனின் புலி ஓவியம் வரையப்பட்டுள்ளது. இந்திரனின் ஐராவதம் வழிபட்டது என்பதைக் குறிப்பிடும் வண்ணம் வெள்ளையானை ஓவியம் உள்ளது. மருத நிலத்திற்கான காட்டுப் பன்றி, காட்டு யானை, குழந்தையுடன் வேடன் வேடத்தி ஆகிய ஓவியங்களும்

இருக்கின்றன. முனிவர்கள் தவமியற்றுவது போன்ற ஓவியங்களும் ஆங்காங்கே தூண்களில் வரையப்பட்டுள்ளன. நடராசர் சந்நிதியின் பின்புறம் உள்ள ஓவியத்தின் நடுவே எந்திரமும், இடதுபுறம் நந்தியும் வலதுபுறம் நாரதரும் வரையப்பட்டுள்ளனர். இதற்கு அருகில் கங்காளநாதர் ஓவியம் உள்ளது.

மேற்கூரையில் மகாவிட்ணு, பிரம்மா, பார்வதி, யமன், சூரியன், சந்திரன், உருத்திரன், ஐராவதம், வாசுகி, வசிட்டாதிரிசிகள், அகத்தியர், திரிபுராள், சவுந்தரபாண்டியன் (படம்-15), வாயுதேவர் ஆகியோர் பூசை செய்யும் ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன.

இறைவன் இறைவி சந்நிதியில் உள்ள ஓவியங்கள் மூலிகைகளால் வரையப்பட்ட பழமையான ஓவியங்கள் என்பது புலப்படுகின்றது. இவ்வோவியங்களை வரைந்தவர் 'ஏந்தவயல்' என்ற ஊரைச் சேர்ந்த 'ஆண்டியப்ப பக்தர்' என்பதை மட்டும் அங்கு வரையப்பட்டுள்ள அவரின் ஓவியத்தை வைத்து அறிய முடிகின்றது.

**கட்டிடக்கலைச் செய்திகள்:**

இறைவன் சந்நிதியின் விமானம் இராசகோபுரத்தை விட உயர்ந்து காணப்படுகிறது. இது சோழர்கால கோயிற் கட்டடக்கலையைப் போல் அமைந்துள்ளது.

இத்திருக்கோயிலில் வந்து வழிபட்டால் பாண்டிப் பதினான்கு திருத்தலங்களையும் வழிபட்ட பயன் கிடைக்கும் என்ற நம்பிக்கை, இங்கு இருக்கும் இறைவனையும் சேர்த்து பதினான்கு திருத்தலங்களின் இறைவன்-இறைவி சிலைகள் இருந்ததை வைத்தே தோன்றியிருக்கின்றது.

சைவத் திருக்கோயில்களில் பஞ்சபூத லிங்கங்கள், பஞ்சபூத திருத்தலங்களின் லிங்கங்கள் போன்றன திருச்சுற்றுகளிலேயே அமைக்கப்படும். எனவே இந்த பதிமூன்று லிங்கங்களும், இறைவி, நந்தி வாகனத்துடன் திருச்சுற்றுகளிலேயே இருந்துள்ளது.

காசி விசுவநாதர் விசாலாட்சி சந்நிதியும் திருச்சுற்றில் அமைக்கப்படுவதே மரபு. ஆனால் இங்கு ஆகண்டல விநாயகர் சந்நிதியின் முன்பகுதியில் காசி விசுவநாதர் விசாலாட்சி சிலைகள் உள்ளன.

இத்திருக்கோயிலில் சுந்தரபாண்டியன் என்ற மன்னனால் பாண்டிப் பதினான்கு திருத்தலங்களில் திருப்புனவாயில் நீங்கலாக பதிமூன்று லிங்கங்கள் பிரதிட்டை செய்யப்பட்டுள்ளன. அவன் தினமும் இங்கே வந்து வழிபடுவான். இதற்கு ஒரு சுரங்கப்பாதை ஆகண்டல விநாயகர் சந்நிதியின் முன்பகுதியில் உள்ளது (படம்-16).

இச்சுரங்கப் பாதையின் வரைபடமும் இச்சந்நிதியின் முன்மண்டபத்தூணில் பொறிக்கப்பட்டுள்ளது (படம்-17). இம்மன்னன் தன் கடைசி காலத்தை இங்கேயே கழித்தான் என்று கூறப்படுகிறது. இதற்குச் சான்றாக இவன் பெயரால் சுந்தரபாண்டிய பட்டனம் என்ற ஊர் அருகேயுள்ளது. ஆனால் பாண்டிய மன்னர்களில் பலர் சுந்தரபாண்டியன் என்ற பெயரைத் தாங்கியிருப்பதால் இவன் எந்த சுந்தரபாண்டியன் என்பது ஆய்வுக்குரியது. பின்னர் நடந்த படையெடுப்புகளால் இத்திருக்கோயிலின் வடமேற்குப் பகுதி தாக்கத்திற்கு உள்ளாகியுள்ளது. இதை ஆகண்டல விநாயகர் சந்நிதி, வள்ளி, தெய்வானை, சுப்பிமணியர் சந்நிதியின் முன்மண்டபங்களோடு ஒப்பிட்டுப்பார்த்தால் அறியலாம்.

**திருவாடானை:**

திருவாடானை திருக்கோயில் கலைநயம் மிக்க எண்ணற்ற சிற்பங்களைக் கொண்டுள்ளது.

**சிற்பச் செய்திகள்:**

இராசகோபுரத்தின் கிழக்குப் பகுதி நிலை வாயில்களில் இருபுறமும் ஒன்பது விதமான துவார பாலகர்கள் இடம் பெற்றுள்ளனர். இராசகோபுரத்தின் தெற்கில் ஒன்பது விதமான தெட்சிணாமூர்த்தி அமைக்கப் பெற்றுள்ளன. இதே போல் வடக்கிலும் ஒன்பது விதமான பிரம்மாவின் சிலைகளைக் காணமுடிகின்றது. இது போன்ற ஒன்பது துவார பாலகர்கள், தெட்சிணாமூர்த்தி. பிரம்மா போன்ற அமைப்பு தமிழ்நாட்டுத் திருக்கோயில்களின் இராசகோபுரங்களில் அமைக்கும் மரபு இல்லை.

நீண்ட மணி மண்டபத்தை உடையது இத்திருக்கோயில். இராசகோபுர வாயிலில் நின்று மணி மண்டபத்தை நோக்கினால் கட்டிடக்கலையின் நேர்த்தியைக் காணலாம். மணி மண்டபத்தில் நடனப் பெண்கள், முனிவர்களின் உருவங்கள் தனித்தும் பிற உருவங்களுக்கு அருகிலும் தூண்களில் இறைந்தும் காணப்படுகின்றன. ஆடை வடிவமைப்புக் கலைஞர்கள் (Fashion Designers) இச்சிற்பங்களை அடிப்படையாகக் கொண்டு பல ஆடைகளை வடிவமைத்துள்ளனர். பரதம், நாடகம், போன்ற கலைகளின் பொழுது அணியும் ஆடைகளையும் இங்குள்ள சிற்பங்களைக் கொண்டு உருவாக்கியுள்ளனர்.[9] அர்த்தநாரீசுவரர், முருகன், இறைவன் மானுக்கு உணவளித்தது, வள்ளி தெய்வானையுடன் மயில் வாகனத்தில் முருகன், மயில் வாகனத்துடன் முருகன், ‘கதை’ தாங்கிய அனுமன், சக்கரம், சங்கை ஏந்திய

திருமால், கால பைரவர் போன்ற தெய்வங்களுடன் திருநாவுக்கரசர், ஔவையார் போன்றோரின் சிற்பங்கள் தூண்களில் வடிக்கப்பட்டுள்ளன. பதஞ்சலி முனிவர், வியாக்ர பாதர் ஆகியோரின் சிற்பங்களுடன் ‘சின்முத்திரையுடன்’ முனிவர்களின் சிற்பங்களும் தூண்களில் செதுக்கப்பட்டுள்ளன.

அழிந்துவிட்ட மிருகங்களின் (Extinct Animals) சிற்பங்கள் அதிகம் மணி மண்டபத்தூண்களில் உள்ளன. இறக்கைகள் கொண்டுள்ள மிருகங்கள், யாளி, யானை மீது நின்று சண்டை செய்யும் யாளி, யாளி போன்று விசித்திரமான தோற்றம் கொண்ட மிருகம், யாளி போன்ற மிருகம் பாறை மேல் அமர்ந்திருப்பது போன்ற சிற்பங்கள் அதிகம் உள்ளன. யானை மரத்தை தன் துதிக்கையால் முறிப்பது, மான் தன் இரு முன்னங்கால்களைத் தூக்கியிருப்பது, குதிரை, சிங்கம், அன்னம், பாம்பை வாயில் கவ்வியிருக்கும் மயில், மீனைக் கவ்வியிருக்கும் கொக்கு, கீழே நத்தை ஊற அருகே பறவை பாம்பைக் கவ்வியிருப்பது, நீர்நிலை சார்ந்த பொருளை வாயில் கவ்வியிருக்கும் பறவை போன்ற சிற்பங்கள் தூண்களில் உள்ளன.

புல்லாங்குழல் இசைக்கும் கண்ணன், நடராசர், வேணுகோபாலன், வியாக்ர பாதர், நடனப் பெண் போன்ற சிற்பங்களுடன் திருட்டிக்காக பாம்பு, உடும்பு, பல்லி போன்ற ஊர்வன வடிக்கப்பட்டுள்ளன. காயமுற்ற பறவையை ஒரு பாறை மேலிருந்து குரங்கு தன் இரு முன்னங்கால்களைக் கொண்டு தூக்கி தன் மேல் அணைத்தவாறு இருக்கும் சிற்பம் உள்ளது. திருட்டிக்காக வானரம் அமைக்கப்படும். ஆனால் இங்குள்ள குரங்கின் மூலம், உயிரினங்களுக்குள் இருக்கும் அன்பை வெளிப்படுத்துமாறு அமைந்துள்ளது.

தன் இருகைகளையும் முன்னால் சேர்த்து அபிநயம் செய்யும் பெண், தன் இடது கை கீழிருக்க வலது கையால் அபிநயம் செய்யும் பெண், வலது கையில் பூச்செண்டு கொண்டிருக்கும் பெண், தலையில் ருத்ராட்சம் அணிந்து இடுப்பில் துண்டை முறுக்கிக் கட்டியிருக்கும் மனிதன், மூன்று கால்கள் கொண்ட மனிதன், இசைக்கருவி வாசிக்கும் மனிதன் ஆகிய சிற்பங்கள் தூண்களை அலங்கரிக்கின்றன. சில தூண்களில் பூச்செடிகள் தொட்டிகளில் இருப்பது போன்ற சிற்பங்கள் உள்ளன.

பாறை, மணல், பொருட்கள் மீது பூமியின் அழுத்தத்தினால் உண்டாவது. ஒரு பகுதியில் இரண்டு வகையான பாறைகள் சேர்ந்திருந்தால் அப்பாறையைக் கொண்டு சிற்பம் செய்வதோ தூணாகச் சமைப்பதோ சிற்பக்கலையில் தவிர்க்கப்படும். ஏனெனில்

அவ்விடத்தில் உளி பட்டால் பாறை பிளப்பதற்கு வாய்ப்புகள் உள்ளன. ஆனால் மணி மண்டபத்தின் ஒரு பெரிய தூண் இவ்வாறான பாறையில் உருவாக்கப்பட்டுள்ளது.

இறைவி சந்நிதி வாயிலில் உள்ள தூண்களில் பறவை வாயில் மீனை கவ்வியிருப்பது, யாளி போன்ற மிருகம் பாறையில் அமர்ந்திருப்பது போன்ற சிற்பங்கள் காணக்கிடைக்கின்றன. பள்ளியறை மண்டபத்தில் தெட்சிணாமூர்த்தி, நடராசர், தெண்டாயுதபாணி, கோதண்டராமர், சக்கரம், சங்கேந்திய திருமால், கதை ஆயுதத்துடன் அனுமன், இடும்பன், அருச்சுனன் ஆகிய சிற்பங்கள் தூண்களில் இடம்பெற்றுள்ளன. சிவபூசை செய்யும் முனிவர், ஆமை வடிவமுடைய முனிவர், வலது கையில் ருத்திராட்சை மாலையும் இடது கையில் சின் முத்திரையுடன் முனிவர் போன்றோரும் உள்ளனர். தலையில் கழையுடன் கூத்தாடி, இடுப்பில் கூடையும் வலது கையில் குறுவாளும் உடைய பெண் ஆகியோருடன் யாளி போன்று விசித்திரமான தோற்றம் கொண்ட மிருகங்கள் தூண்களில் அங்கம் வகிக்கின்றன. வைதீக முறையில் வைக்கப்படும் மாவிலை, தேங்காய் உடைய கலசம் தூணில் உள்ளது.

இறைவி பத்ம பீடத்தில் நின்ற கோலத்தில் நான்கு கரங்களுடன் அமைந்துள்ளாள். இறைவியின் உருவம் 'மனோன்மணி' வடிவமாக அமைந்துள்ளது. மனோன்மணி என்பதை மன+உன்மணி என்று பிரித்து விளக்கம் தரப்படுகிறது. மனிதர்கள் சூரியனின் ஆற்றலால் மனத்தைப் பெறுகிறார்கள். மனம் உருவமற்றது. மனம் ஆன்மாவினுடைய பரிணாமத்தின் இரண்டாவது நிலை. இந்த மனம் சக்தி பெறுவது 'பிராணன்' எனப்படும் பிராண வாயுவால். இறைவி பிராண வடிவாக இருந்து மனத்தை சக்தி பெறச் செய்கின்றாள். மனம், பிராணன் இணைந்து புத்தியை உருவாக்குகின்றது. புத்தி ஆன்மாவின் மூன்றாவது நிலை. புத்தி என்பது நெருப்பு. அஃதாவது வெப்பத்தின் ஆற்றல். மனிதனின் உடலில் உள்ள வெப்பமே அவனின் புத்தியின் தன்மையை மாற்றுகிறது. மனம், நெருப்பாகிய புத்தி இவற்றுடன் தண்ணீர் வடிவமான சித்தம் இணைவது ஆன்மாவின் நான்காம் நிலை. இது சிந்தனை என்றும் வழங்கப்படுகிறது. தெளிவடைந்த சிந்தனையின் மூலம் பிராண சக்தி என்னும் குண்டலிணியை உடம்பாகிய சந்திர கலையின் மூலாதாரத்திலிருந்து ஆராதனை செய்து சுழுமுனையில் ஏற்றும் பொழுது 'சாயுச்யம்' என்னும் சிவப்பதம் கிடைக்கிறது. இது ஞானம் என்று அழைக்கப்படும். இந்த ஞானம் மனிதனின் மூன்றாவது கண்ணாக

அமைந்துள்ளது. இறைவி மனித இதயத்தைக் குறிக்கும் தாமரை மொட்டை இடது கையில் தலைகீழாகவும், விரிந்தும் விரியாமலும் இருக்கும் நீலோற்பவ மலரை வலது கையிலும் ஏந்தியுள்ளாள். மூன்றாவது கண்ணான ஞானத்தை தன் சடையான சந்திர கலையின் நடுவில் கொண்டிருக்கிறாள். மனிதன் ஞானத்தை அடைய 'வரத அத்தம்', 'அபய அத்தம்' துணைபுரிகின்றன.[10]

இடுப்புக் கச்சை மட்டும் அணிந்த தெண்டாயுதபாணி, அலங்காரத்துடன் தெண்டாயுதபாணி, கோதண்டராமர், மானுக்கு உணவிடும் இறைவன், புல்லாங்குழல் இசைக்கும் கண்ணன், யோக நரசிம்மர், அருச்சுனன், இடும்பன் ஆகிய சிற்பங்களுடன் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், மாணிக்கவாசகர் ஆகியோரின் சிற்பங்கள் இறைவன் சந்நிதி மகா மண்டபத்தில் உள்ளன. மற்றைய சிற்பங்களை விட முனிவர்களின் சிற்பங்களே இறைவன் சந்நிதி மகா மண்டபத்தில் அதிகம் உள்ளன. ஒவ்வொரு முனிவரும் ஒரு வடிவத்துடன் செதுக்கப்பட்டுள்ளனர்.

இறைவன் சந்நிதி ஸ்நபன மண்டபத்தின் தூண் ஒன்றில் சேதுபதி மன்னர்களின் முன்னோரும் அவரின் மனைவியும் இருப்பதை அறிய முடிகின்றது.[11]

யாளி, யாளியும் யானையும் சண்டையிடுவது, அமர்ந்த, நின்ற நிலையில் யாளி போன்ற மிருகம், அழிந்துவிட்ட மிருகங்களின் சிற்பங்கள், யானை மரத்தைத் தும்பிக்கையால் ஒடிப்பது, அன்னம், கலசம் போன்றனவும் இங்கே காணக் கிடக்கின்றன.

அகத்தியர் பிரதிட்டை செய்த அகத்திய விநாயகர் அருகே சூரியன் வந்து வணங்கியதைக் குறிப்பிடுமாறு தேசசுசண்டரின் சிலை அமைக்கப்பட்டுள்ளது. தேசசுசண்டருக்கு அருகே வருணன், மார்க்கண்டேயர் பிரதிட்டை செய்த வருண விநாயகர், மார்க்கண்டேய விநாயகர் ஆகியன அமைந்துள்ளன. செல்வம் அல்லது தனத்திற்கான கடவுள் குபேரன் ஆவான். குபேரனுக்கு தனாதிபதி, தனாகர்சணன் என்ற பெயர்களும் வழங்கப்படுகின்றன. குபேரன் வந்து வழிபட்டமையை குறிப்பிடும் வண்ணம் தனீசுவரர், தனீசுவரி ஆகிய சிலைகள் அமைக்கப்பெற்றுள்ளன. இறைவன் சந்நிதி மேற்குத் திருச்சுற்று மண்டபத்தில் அருச்சுன லிங்கம், வருண லிங்கம், பிருகு லிங்கம் ஆகியன முறையே அருச்சுனன், வருணன், பிருகு முனிவர் ஆகியோரால் பிரதிட்டை செய்யப்பட்டுள்ளன.

கலியுகத்தில், இத்திருத்தலம் பசுக்கள் தானாக பால் சொரிந்த பொழுது அறியப்பட்டுள்ளதைக் குறிப்பிடும் வண்ணம் வில்வமூலர் சந்நிதி, ஸ்நபன மண்டபத்திற்குச் செல்லும் இருபுற படிகளுக்கிடையில் பசு தானாக பால் சொரியும் சிற்பம் ஆகியன செதுக்கப்பட்டுள்ளன

**ஓவியச் செய்திகள்:**

இறைவி சந்நிதியின் பள்ளியறை மண்டபத்தில் வரையப்பட்டுள்ள ஓவியங்கள் சிதிலமடைந்துள்ளதால் அவைகளில் உள்ள செய்திகளை அறிய முடியவில்லை.

இறைவன் சந்நிதி மகா மண்டபத்தில் விநாயகர், வள்ளி தெய்வானை முருகர், நடராசர் திருநடனம், 'ஸ்ரீ சக்கரம்' ஆகியன வரையப்பட்டுள்ளன. 'சிவ தீட்சை' பெறும் அடியார்கள் பயன்படுத்தும் லிங்கக் கட்டம் தீட்டப்பட்டுள்ளன. திருக்கோயில் வரலாற்றை உணர்த்தும் வண்ணம் சூரியன் சிவபூசை செய்தல், பாசுபதத்திற்காக அருச்சுனன் தவமியற்றுதல் ஆகிய ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன.

**திருக்கானப்பேர்:**

திருக்கானப்பேர் திருக்கோயில் சிற்பச் செழுமையுடன் விளங்குகின்றது.

**சிற்பச் செய்திகள்:**

சௌந்தரநாயகி பத்ம பீடத்தில் நின்ற நிலையில் நான்கு கைகள் கொண்டுள்ளாள். அபயம், வரத முத்திரைகளுடன் சூலமும் மலரையும் தாங்கி துர்க்கையின் அம்சமாக வடிக்கப்பெற்றுள்ளாள்.

ஆடி வீதியின் கிழக்குப் பகுதியிலும் தெற்குப் பகுதியில் சிறிதளவு திருச்சுற்று மண்டபம் அமைக்கப்பெற்றுள்ளது. இம்மண்டபத்தின் தூண்களில் இறைவன் காளைக்குத் தன் கையால் உணவிடுதல், நின்ற கோலத்தில் கசலெட்சுமி, உணவுப் பொருளை இடதுகையில் மேலே தூக்கிக் காட்டி வலது கையால் புல்லாங்குழல் இசைத்துக் கொண்டு ஆநிரைகளை ஏங்கவிடும் கண்ணன், மயில் மீது ஏறி அம்பை கரும்பு வில்லில் வைத்து நாணேற்றும் முருகர், அமர்ந்த நிலையில் இறைவியுடன் இறைவன், மூஞ்சூர் மீதூறும் விநாயகர், மூஞ்சூர் மீது நின்ற நிலையில் விநாயகர், மயில் மீதூறும் முருகர், கையில் சிவலிங்கத்தை ஏந்தியிருக்கும் அனுமன், வலதுகையில் வில்லுடன் நின்ற கோலத்தில் இறைவன், முயலகன் மீது நின்றாடும் நடராசர், அர்த்தநாரீசுவரர், தெட்சிணாமூர்த்தி, பிரம்மனுக்கும் திருமாலுக்கும் இறைவன்

லிங்கோத்பவராகக் காட்சி கொடுத்தல், காமதேனு, நந்தி தேவர், ஆகிய இறைத் திருவுருவங்கள் வடிக்கப்பெற்றுள்ளன.

யானையுடன் யாளி பின்னால் இருந்து சண்டையிடுதல், யாளி யானையை கவிழ்த்து அதன் மீது ஏறி சண்டையிடுதல், யாளி, யானை, யானையுடன் சிங்கம் சண்டையிடுதல், பாம்பை அலகில் கொத்தி இருக்கும் கொக்கு, சிங்கத்துடன் இறக்கை கொண்ட அழிந்துவிட்ட மிருகம் சண்டையிடுதல், பாறை மேல் அமர்ந்திருக்கும் யாளி, ஆமை, மீன், நீர் நாய், மான், மீனை அலகில் கொத்தியிருக்கும் கொக்கு, ஆடு ஆகிய உயிரினங்களுடன் அழிந்துவிட்ட மிருகங்கள் தனித்தும் யாளி உள்ளிட்டவற்றுடனும் அதிகம் ஆடி வீதியின் தூண்களில் காணக் கிடைக்கின்றன.

ஆடி வீதியிலிருந்து மடப்பள்ளி செல்லும் வழியில் அமைந்த தூண் ஒன்றில் தாய் ஒருத்தி அழும் தன் பெண் பிள்ளையைக் கன்னத்தில் வருடித் தேற்றும் சிற்பம், ஆண் தன் இடக்கையைப் பெண்ணின் பிறப்புறுப்பில் வைத்து வலக்கையால் அவளை முத்தமிடச் செல்லும் பொழுது பெண் விளையாட்டாய் ஆணின் கையை தடுக்கும் சிற்பம் ஆகிய இரண்டும் கலைநயத்துடன் செதுக்கப்பட்டுள்ளன.

யாக சாலை அருகே இரண்டு சிறுவர்கள் கால்களை முன்னும் பின்னும் வைத்து நடனமாடுவது போன்ற சிற்பமும் குறிப்பிடத்தக்கதாகும்.

சொர்ணவல்லி சந்நிதியின் முன் மண்டபத்தில் திருக்கானப்பேர் திருத்தலத்தின் வரலாற்றைக் குறிக்கும் வகையில் ஐராவதம் இறைவனைப் பூசித்த காட்சி சிற்பமாக இடம் பெற்றுள்ளது. இடபத்தின் மேல் இறைவன்-இறைவி, விநாயகர் ஆகிய இறை உருவங்களுடன் பசு லிங்கத்திற்குப் பால் சொரிதல், சுக்ரீவன் வாலியுடன் சண்டையிடுதல் ஆகிய சிற்பங்களும் உள்ளன.

முனிவர்களின் பல்வேறு யோக நிலைகள், இரண்டு மனிதர்கள் வட்டமாக வளையம் போல் கை கோர்த்து சுற்றி வளைந்து ஆடுதல், ஆண் பெண்ணுடன் புணரும் சிற்பங்கள் காணப்படுகின்றன.

பெண்ணின் கருவில் ஒட்டியுள்ள இரட்டைக் குழந்தைகளின் சிற்பம் குறிப்பிடத்தகுந்த ஒன்றாகும். தற்காலத்தைய நவீன கருவிகளைக் கொண்டு பார்ப்பதை (Scan) சிற்பமாக வடித்து வைத்துள்ளனர் (படம்-18).

சொர்ணவல்லி சந்நிதி மகா மண்டபத்தில் திருமால் புல்லாங்குழல் இசைக்க அதில் ஆநிரைகள் மெய் மறந்திருத்தல், விநாயகர், தெண்டாயுதபாணி, கையில்

சஞ்சீவி மலையைத் தாங்கியிருக்கும் அனுமன், நந்தி தேவர், பசு லிங்கத்தின் மீது பால் சொரிதல் ஆகிய இறை வடிவங்கள் தூண்களில் அமையப் பெற்றுள்ளன.

வியாக்ர பாதர், சீடருடன் முனிவர், தவ நிலையில் முனிவர் ஆகியனவும் தூண்களில் இடம்பெற்றுள்ளன. யானை முகமும் குதிரையின் கால்களும் கொண்ட பெண் முனிவரின் சிற்பம் குறிப்பிடத்தகுந்தது.

யானை, அன்னம், யாளி, யாளி போன்ற மிருகம் யானையுடன் சண்டையிடுதல், பாறையின் மேல் அமர்ந்திருக்கும் யாளி, யாளியுடன் சண்டையிடும் குதிரை, ஆகியவற்றுடன் அழிந்துவிட்ட மிருகங்கள் அதிகம் தூண்களில் காணப்படுகின்றன.

சொர்ணவல்லி பால திரிபுரசுந்தரியின் அம்சமாக வலது கையில் அபயம் காட்டி இடது கையில் நீலோற்பவ மலரை ஏந்தி இரண்டு கைகளுடன் பத்ம பீடத்தில் நின்ற நிலையில் உள்ளாள்.

சுந்தரேசுவரர் - மீனாட்சி சந்நிதியின் மகா மண்டபத்தின் வாயில் அருகே வரகுண பாண்டியனின் சுதை சிற்பம் அமைக்கப்பெற்றுள்ளது.

மீனாட்சி வலதுகையில் அபயம் காட்டி இடதுகையில் மலரை ஏந்தி பத்ம பீடத்தில் நின்ற நிலையில் அமைந்துள்ளாள்.

சுந்தரேசுவரரின் ஆவுடை சதுரமானதாக அமைந்துள்ளது. ஆவுடையுடன் பாணத்தின் உயரம் 5 அடி ஆகும்.

சொர்ண காளீசுவரர் சந்நிதியின் மகா மண்டபத்தில் விநாயகர், வேணுகோபாலன், இறைவன் மாணிக்கவாசகருக்கு குருந்த மரத்தடியில் தீட்சை அளித்தல், நந்தி தேவர், வியாக்ர பாதர், பசு லிங்கத்திற்குப் பால் சொரிதல் ஆகிய உருவங்கள் தூண்களில் உள்ளன.

யாளி, பாம்பைக் கொத்தியிருக்கும் மயில், யானை, ஆடு, அன்னம், குதிரையுடன் யாளி சண்டையிடுதல், இறக்கைகள் கொண்ட குதிரை, இறக்கைகள் கொண்ட குதிரை யானையுடன் சண்டையிடுதல், யாளி யானையுடன் சண்டையிடுதல், பாறை மேல் அமர்ந்திருக்கும் சிங்கம், மனிதன் குதிரையில் ஏறி சிங்கத்துடன் சண்டையிடுதல் ஆகிய சிற்பங்களும் மகா மண்டபத் தூண்களில் காணக் கிடைக்கின்றன.

சொர்ண காளீசுவரரின் கோட்டம் கடப்பா கல்லைக் கொண்டு கட்டப்பட்டு மெருகூட்டப்பட்டுள்ளது. சொர்ண காளீசுவரர் சுயம்பு ஆவார். ஆவுடையுடன் பாணத்தின்

உயரம் 2 அடி ஆகும். திருக்கானப்பேர் திருத்தலம் முன்னர் மந்தாரை வனமாய் இருந்துள்ளது. அவ்வனத்தை அழிக்கும் பொழுது சொர்ண காளீசுவரர் கிடைத்துள்ளார். மந்தாரை வனத்தை அழிக்கும் பொழுது ஏற்பட்ட கோடாரித் தடம் சொர்ண காளீசுவரரின் பாணத்தின் மேற்பகுதியில் உள்ளது.[12]

சோமேசுவரர் சந்நிதி மகா மண்டபத்தில் விநாயகர், மூஞ்சூர் மீதூறும் விநாயகர், மயில் மீதூறும் முருகர், சுப்பிரமணியர், தெண்டாயுதபாணி, நர்த்தன விநாயகர், பத்ரகாளி, நாகாபரணம் சூடிய லிங்கம், மான், மழுவேந்திய இறைவன், நரியைப் பரியாக்க இறைவன் அருளல், காளை மீது வீரபத்திரர், சிவலிங்க பூசை செய்யும் இறைவி, மார்க்கண்டேயருக்கு பாசக் கயிறை வீசிய எமனை இறைவன் உதைத்தல், நந்தி, நந்தி தேவர், வியாக்ர பாதர், காமதேனு, போரில் அறையும் வானரம், திருநாவுக்கரசர் ஆகிய சிற்பங்கள் தூண்களில் இடங் கொண்டுள்ளன.

பாகன் தன் அங்குசத்தைக் கொண்டு யானையை அடக்குதல், தேவ மகளிர் யாழ் மீட்டுதல், இடுப்பில் உள்ள கூடையில் தானியங்கள் கொண்டு செல்லும் பெண்ணை கிளிகள் சூழ்ந்து கொண்டு கொஞ்சி விளையாடி தானியங்களை உண்ணுதல், இரண்டு மனிதர்கள் வட்டமாக வளையம் போல் கை கோர்த்து சுற்றி வளைந்து ஆடுதல், சிறிய நாற்காலியில் அமர்ந்து கண்ணாடி முன்னிலையில் தன்னை அலங்கரித்துக் கொள்ளும் பெண், கையில் கிளியையும் பூச்செண்டையும் ஏந்தி நடனமிடும் பெண், மான், அன்னம், ஆடு, யானையின் தலை மேல் அமர்ந்திருக்கும் யாளி, இரண்டு யானைகள் ஒன்றின் மீது மற்றொன்று ஏறி நின்று சண்டையிடுதல் ஆகிய சிற்பங்கள் கலை நயத்துடன் வடிக்கப் பெற்றுள்ளன.

சோமேசுவரர் சந்நிதி மகா மண்டபத்தின் ஒரு தூணில் மேல் உள்ள யாளியின் வாயில் உள்ள கற் சங்கிலி சிற்பக் கலையின் நுணுக்கத்திற்கு எடுத்துக் காட்டாய் அமைந்துள்ளது (படம்-19).

சோமேசுவரரின் ஆவுடையுடன் பாணத்தின் உயரம் 5 அடி ஆகும்.

திருக்கானப்பேர் திருத்தலத்தில் பழமையான ஓவியங்கள் காணப்படவில்லை.

**திருப்பூவணம்:**

திருப்பூவணம் திருக்கோயில் கலை நுண்மை வாய்ந்த சிற்பங்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது.

**சிற்பச் செய்திகள்:**

நந்தி மண்டபத்தின் தூண்களில் விநாயகர், சிவலிங்கம், இறைவனின் திருக்கயிலாயக் காட்சி, மயில் மீதூறும் முருகன், பைரவர், கண்ணன், கருப்பர் ஆகிய இறைத் திருவுருவங்களுடன் முனிவர், வேடன் அம்பு விடுதல், ஆண் பெண் உடலுறவு நிலை (Sex Position), இரண்டு வானரங்கள் விளையாடுவது, மனிதன் புலியுடன் சண்டையிடுதல் ஆகிய சிற்பங்களும் இடம்பெற்றுள்ளன.

உற்சவ மண்டபத்தில் பத்ரகாளி, பாரிசாதப் பூவின் நடுவே சிவலிங்கம் ஆகியன தூண்களில் உள்ளன.

பைரவர், இறைவனின் திருக்கயிலாயக் காட்சி, முனிவரின் சிற்பங்கள் ஆறுகால் மண்டபத்தில் காணக்கிடைக்கின்றன.

இறைவன் சந்நிதி மகா மண்டபத்தில் நின்ற கோலத்தில் விநாயகர், இறைவன் கரிக்குருவிக்கு உபதேசித்தல், யானை மேல் அமர்ந்திருக்கும் முருகன், நரசிம்மர், கங்காளநாதர், அனுமன், முனிவர் ஆகிய சிற்பங்கள் உள்ளன. இவற்றுடன் அன்னம், யாளி அமர்ந்திருத்தல், யாளி யானையுடன் சண்டையிடுதல் ஆகிய சிற்பங்களும் தூண்களில் இடம்பெற்றுள்ளன. திருப்பூவணத் திருத்தலத்தில் தல வரலாற்றில் குறிப்பிடப்பெறும் பொன்னனையாள் இறைவன் கன்னத்தில் கிள்ளும் சிற்பம் மகா மண்டபத்தூணில் அமைந்துள்ளது.

இறைவன் சுயம்பு ஆவான். இறைவனை ‘உளிபடாத திருமேனி’ என்று குறிப்பிடுகின்றனர். இறைவனின் ஆவுடை 4½ அடி, ஆவுடையுடன் பாணம் 6 அடி உயரம் உடையன. பாணத்தின் நடுவே ‘திரிசூல’ முத்திரையும் பின்னால் சடையும் உள்ளது. கள ஆய்வின் பொழுது சிவாச்சாரியாரின் தீப ஒளியில் இவ்விரண்டும் பதிவு செய்யப்பட்டுள்ளது. பாணம் சடையுடன் திகழ்வதால் ஆவுடை இரண்டு பகுதிகளாகச் செய்யப்பட்டு பின்னர் பொருத்திச் சேர்க்கப்பட்டுள்ளது.

இறைவன் விமானமான பாசுகர விமானத்தைச் சுற்றி நான்கு புறமும் நான்கு கலசங்களும் நடுவில் உள்ள சூரிய ரதத்தில் ஒரு கலசமும் அமைந்திருப்பது சிறப்பாகக் கருதப்படுகிறது. (படம்-20)

இறைவி சந்நிதியில் உள்ள திருநாள் மண்டபத்தில் விநாயகர், முருகர், நரசிம்மர், லெட்சுமி நரசிம்மர், தெட்சிணாமூர்த்தி, அனுமன் தோளில் ராமன், இறைவன்

மானுக்கு உணவிடல், வேணுகோபாலன், கருடசேவை, ராகு-கேது, திருஞானசம்பந்தர் ஆகிய இறை வடிவங்களுடன் யாளி, ஆமை ஆகிய சிற்பங்களும் தூண்களில் உள்ளன.

இறைவி சந்நிதி மகா மண்டபத்தில் விநாயகர், பிரம்மனும் திருமாலும் அடிமுடி காணமுடியாதவாறு இறைவன் ஓங்கி நிற்றல், மயில் மீதூறும் முருகர், தெண்டாயுதபாணி, யானை மேல் முருகர், பாறையைத் தூக்கிய நிலையில் அனுமன், பசு லிங்கத்திற்குப் பால் சொரிதல், சிவ கணம், சர தேவர், பாவை விளக்கு ஏந்தியிருத்தல் ஆகியனவற்றுடன் காளை, யாளி அமர்ந்திருத்தல், இரட்டைக் கிளி, உடும்பு ஆகிய சிற்பங்களைக் காணமுடிகின்றது.

இறைவி இரண்டு கைகள் கொண்டு நின்ற கோலத்தில் வலது கையில் நீலோற்பவ மலரை ஏந்தி இடது கையை தாழ்த்திய நிலையில் உள்ளாள்.

**கட்டிடக்கலைச் செய்திகள்:**

ஆய்வுக் காலத்தில் முருகன் திருக்கோயிலாக உள்ளது, முன்னர் இறைவி திருக்கோயிலாக இருந்துள்ளது. பின்னர் இறைவிக்கு இத்திருக்கோயிலுக்குள் ஆய்வில் குறிப்பிட்டுள்ள சந்நிதி கட்டப்பெற்று 1900இல் குடமுழுக்கு செய்யப்பட்டுள்ளது.

இக்குடமுழுக்கின் பொழுதே மணிகர்ணிகை தீர்த்தம் ஆய்வில் குறிப்பிட்டுள்ள இடத்தில் ‘தீர்த்தப் பிரதிட்டை’ செய்யப்பெற்றுள்ளது.

இறைவனுக்குக் காட்டப்பெறும் தீபத்தை வைகையாற்றின் மறுகரையில் உள்ள ஆடித் தபசு மண்டபத்தினின்று கண்ணுற்றதை சிவாச்சாரியார்களிடத்தும் மக்களிடத்தும் கள ஆய்வில் அறிய முடிகின்றது.

**திருச்சுழியல்:**

திருச்சுழியல் திருக்கோயிலில் கலைச்செறிவு வாய்ந்த சிற்பங்களும் ஓவியங்களும் நிறைந்து காணப்படுகின்றன.

**சிற்பச் செய்திகள்:**

திருக்கோயிலின் வெளிமண்டபத்தின் நுழைவுப்பகுதியில் இருக்கும் இருபக்க தூண்களிலும் வானரத்தின் சிற்பம், அனுமன் சஞ்சீவி மலையைத் தூக்கிச் செல்லும் காட்சி திருட்டிச் சிற்பமாக அமைந்துள்ளது. தூண்களில் மீனாட்சித் திருக்கல்யாணம், நடராசர் முயலகனைக் காலின்கீழ் மிதித்து நடனமாடுவதை பதஞ்சலி முனிவரும் வியாக்ர பாதரும் காண்பது, இடையில் குறுவாளுடன் போர்க்கோலத்தில் அனுமன்,

தவ நிலையில் முனிவர் ஆகிய சிற்பங்கள் வடிக்கப்பட்டுள்ளன. தற்காலத்தில் ஒருவர் மீது ஒருவராக ஏறி நின்று செய்யப்படும் சாகசக் காட்சியான மனிதப் பிரமிடுகள் (Human Pyramid) போன்ற சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது. ஆண் பெண் காம நிலைகளைக் காட்டும் சிற்பங்கள் (Sex positions) அதிமாக உள்ளன. ஒரு பெண் குனியும் பொழுது இரு பெண்கள் நின்று கொண்டு கைகளைத் தட்டி விளையாடுவதைப் போன்ற சிற்பம் கலைநயம் மிக்கது.

வெளித்திருச்சுற்றில் வானரம் பாறையின் மீது ஏறி அமர்ந்து கல்லைக் கையில் வைத்திருக்கும் ராமாயணக் காட்சி, நாற்றிசை இடபம், யானையின் முதுகில் யாளி ஏறி நின்று அதன் துதிக்கையை இழுத்து சண்டை செய்வது, இரண்டு வீரர்கள் மல்யுத்தம் செய்வது, நடராசர் முயலகனை மிதித்து நடனம் புரிதல், திருமால் புல்லாங்குழல் ஊதுவது, அனுமன் பாறையைத் தலையில் தூக்கி நிற்பது, நின்ற கோலத்தில் விநாயகர் ஆகிய சிற்பங்கள் வடிக்கப்பட்டுள்ளன.

திருட்டி கழிவதற்காக இறைவி சந்நிதி நடைபாதையின் மேலே வானரம், ஆமையின் சிற்பங்கள் உள்ளன.

ஒரு தூணில் முனிவர் கூர்மையான பாறையின் முனைப்பகுதியில் இருக்கும் பலகையின் மேலே தன் இரு கால்களையும் அகல விரித்து பலகை ஆடாமல் சமன் செய்து தவம் செய்கின்றார் (படம்-21). தற்காலத்தின் நெம்புகோல் விதியைக் (Lever Principle) குறிக்கும் வண்ணம் இச்சிற்பம் உள்ளது. ஆர்க்கிமெடஸ் (Archimedes) (படம்-22) என்பவர் இவ்விதியின் முன்னோடி என்று இயற்பியல் குறிக்கின்றது. இவர் தாங்குநிலை அல்லது நெம்பு மையம் (fulcrum or pivot point) மேல் இருக்கும் பலகையின் இருபுறம் இருக்கும் மாறுபட்ட எடையை நெம்பு மையத்தை மாற்றுவதன் மூலம் சமன் செய்யலாம் என்பதற்கான விதியையும் சூத்திரத்தையும் உருவாக்கினார் (படம்-23).[13] இவரின் இந்த நெம்புகோல் விதியை அடிப்படையாகக் கொண்டு எகிப்து பிரமிடுகள் கட்டப்பட்டதாக கூறப்படுகின்றது.[14] நெம்புகோல் விதியைக் குறிக்கும் வண்ணம் இச்சிற்பம் விளங்குகின்றது. இதன் மூலம் நெம்புகோல் விதியை ஆர்க்கிமெடஸிற்கு முன்னரே தமிழர்கள் கையாண்டிருப்பதை அறிய முடிகின்றது.

பாறையின் மேல் யாளி அமர்ந்திருப்பது, பாறையின் மேல் அனுமன் அமர்ந்திருப்பது, கருடர் வலது காலை தரையில் மடக்கி இடது காலை மடக்கி

தரையில் ஊன்றியிருப்பது, யோக நரசிம்மர், விநாயகரின் வாகனமான மூஞ்சூர், வளர்பிறை தேய்பிறை உடைய நிலா, பாறையைக் கையில் பிடித்திருக்கும் வானரம் ஆகிய சிற்பங்கள் தூண்களில் செதுக்கப்பட்டுள்ளன. மனிதன் மகுடி ஊதும் பொழுது கட்டுண்ட பாம்பு அந்த மகுடியின் மீதே ஏறியதால் பயந்து பின்னால் தாவும் மனிதனின் சிற்பம் நகையைத் தரக்கூடியது. பூதகன் ஒருவன் வயிற்றைக் கத்தியால் கிழித்து குடலை உருவிச் சாப்பிடும் சிற்பம் தூணில் செதுக்கப்பட்டுள்ளது. யாளியும் யானையும் சண்டையிடுவது, நரசிம்மர், யானையின் மீது முருகன் வருதல், மீனாட்சித் திருக்கல்யாணம், பத்ரகாளி மகிசனை வதம் செய்வது, வேணுகோபாலன், இறைவனின் ஊர்த்துவ தாண்டவம், வீரபத்திரர் தக்கனை வதைத்தல், வானரம், கருப்பர், இருவர் மல்யுத்தம் (Fighting shots) செய்வது ஆகிய சிற்பங்கள் தூண்களை அலங்கரிக்கின்றன. இம்மண்டபத்தைக் கட்டிய சிற்பியின் முகம் ஒரு தூணில் செதுக்கப்பட்டுள்ளது.

தெண்டாயுதபானி சுவாமி சந்நிதித் தூண்களில் பூதகன் யாளியின் பின்னிரண்டு கால்களைப் பிடித்து சுழற்றி வீசுவது, வியாக்ர பாதர் சிவபூசை செய்தல் ஆகிய சிற்பங்கள் உள்ளன. இச்சந்நிதியைச் சுற்றியுள்ள மண்டபங்களை கட்டிய சிற்பியின் முகம் வடிக்கப்பட்டுள்ளது. திருட்டி கழிவதற்காகத் தற்காலத்தில் கட்டப்படும் திருட்டி பொம்மைகளின் வடிவம் போல் தூணில் திருட்டி முகச் சிற்பம் உள்ளது. மற்றொரு தூணின் மேற்புறம் குரங்கு மேலிருந்து தூண் வழியாக இறங்கி வருதல் போன்றே திருட்டிச் சிற்பம் அமைந்துள்ளது.

இறைவி சந்நிதியின் தாசி மண்டபத்தின் முதலில் இருக்கும் இருபக்க தூண்களில் திருட்டிக்காக வானரம் உள்ளது. ஆமை, கருப்பர், பெண் விநாயகர் சிவபூசை செய்தல், ரதி, ரதியை நோக்கி அம்புவிடும் கோலத்தில் மன்மதன் ஆகியன வடிக்கப்பட்டுள்ளன. இதில் ரதியின் சிற்பம் வானமகள் என்றழைக்கப்படும் தேவதை (Angel) போல் இறக்கைகளுடன் உள்ளது. நாற்றிசை வானரத்தின் சிற்பம், யாளி, இரண்டு இடங்களில் திருட்டி முகச் சிற்பம், மகர மீன் ஆகிய சிற்பங்கள் தூண்களில் உள்ளன. தூண்களுடன் சேர்த்து இம்மண்டபத்திற்குப் பொருள் நல்கிய தாசிகளின் உருவம் நிறுவப்பட்டுள்ளன. இம்மண்டபத்தைக் கட்டிய சிற்பியின் முகமும் தூணில் செதுக்கப்பட்டுள்ளது.

ஸ்நபன மண்டபத்தின் தூண்களில் அனுமன் கையில் பாறையைத் தாங்கியிருப்பது, மகர மீன் ஆகியன உள்ளன. மகா மண்டபத்தின் தூண்களில் கண்ணப்ப நாயனார், அனுமன் கைகளில் சஞ்சீவி மலையைத் தாங்கியிருப்பது, யாளி யானையின் தலையை வாயால் கவ்வுவது, யாளி யானையின் பின்னாலிருந்து தும்பிக்கையை இழுத்து சண்டையிடுவது, ஆண் பெண் காம நிலை சிற்பங்கள் ஆகியன செதுக்கப்பட்டுள்ளன.

இறைவி தாமரைப் பீடத்தின் மேல் நின்ற கோலத்தில் அபய அத்தம், வரத அத்த முத்திரையுடன் வலதுகையில் நீலோற்பவமலரைத் தாங்கியுள்ளாள். இடுப்பு, கழுத்து, இடக்கால் சற்று சாய்ந்து 'திரிபங்கி லட்சண' அமைப்பில் இறைவியின் திருவுருவம் அமைந்துள்ளது.

இறைவன் சந்நிதி ஸ்நபன மண்டபத்தில் நடராசர் முயலகனின் மீது நடனம் செய்வது, நரசிம்மர், தாருகாவனத்தில் இறைவன் யானையின் தோலைப் போர்த்தியது, அனுமன் சஞ்சீவி மலையைத் தூக்கிக் கொண்டு பறப்பது, யாளி, வீரபத்திரர், இறைவன் யானையின் வாயைப் பிளப்பது, மார்க்கண்டேயனுக்காகக் கூற்றுவனைக் காலால் உதைத்தது ஆகிய சிற்பங்கள் தூண்களில் உள்ளன. இறைவி சந்நிதியில் இருப்பதைப் போல இங்கும் கண்ணப்ப நாயனாரின் சிற்பம் உள்ளது.

ஒரு தலை இரண்டு உடம்புகளோடு குரங்கு ஆந்தைச் சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது. இடதுபக்க உடம்பை மட்டும் மறைத்துப் பார்த்தால் குரங்கு போலவும் வலதுபக்க உடம்பை மட்டும் மறைத்துப் பார்த்தால் ஆந்தை போலவும் தோற்றமளிக்கும் குரங்கு ஆந்தைச் சிற்பம் உள்ளது. யானை பிளிறுவதைப் போன்று யாளி செய்யும் சிற்பம் கவனத்திற்குரியது. பெண் தன்பிறப்புறுப்பின் வழியாக பிள்ளையை ஈன்றெடுக்கும் சிற்பம் திருச்சுற்று மண்டபத்தூணில் உள்ளது.

மகா மண்டபத்தில் அமைந்திருக்கும் நடராசர் சிவகாமி சந்நிதியில் உள்ள பதஞ்சலி, வியாக்ர பாதர், நடராசர், சிவகாமியின் சிலைகள் கல்லில் செய்யப்படாமல் தசபாசாணத்தில் செய்யப்பட்டுள்ளன. எனவே இவைகளுக்கு அபிசேகம் செய்யப்படுவதில்லை. சந்தனாதித் தைலம் மட்டுமே சாற்றப்படுகின்றது.

மகா மண்டபத்தின் தூணில் முனிவர் தன் தவ வலிமையால் தரையிலிருந்து மேலே எழும்புவது போன்ற சிற்பம் காணப்படுகிறது.

**ஓவியச் செய்திகள்:**

இறைவன் சந்நிதி திருச்சுற்றின் தூண்களில் உள்ள சிற்பங்களின் மேலே, மேற்கூரை, ஸ்நபன மண்டபம், பள்ளியறை வெளிச்சுவரின் மேற்பகுதிகளில் ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. சிற்பம் இல்லாத இடத்தில் வேறு ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. அனுமன் சஞ்சீவி மலையைத் தூக்குதல், கருப்பர், இரட்டை அன்னம் ஆகிய சிற்பங்களின் மேல் எழிலுற ஓவியம் தீட்டப்பட்டுள்ளது. ஆண் சுய இன்பம் (Masturbation) செய்யும் சிற்பத்தின் மேல் வரையப்பட்டுள்ள ஓவியம், ஓவிய சிற்பக் கலையின் கலவையாக விளங்குகின்றது.

தற்காலத்தில் கணினி, செல்லிடப்பேசியில் பயன்படுத்தப்பெறும் உணர்ச்சிக் குறிப்பான்கள் (Emojis/Smileys) போன்ற ஓவியம் தூண்களில் தீட்டப்பட்டுள்ளன (படம்-24,25). காளை, எலி, பெருச்சாளி, ஆடு, மான், பூதகி, பூதகன், ஆண் வித்தை புரிதல் (Gymnastic) ஆகிய ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. ஸ்நபன மண்டபத்தின் மேற்பகுதியின் நடுவே வரையப்பட்டுள்ள ஓவியங்கள் சிதிலமடைந்துள்ளதால் என்னவென்று அறிய இயலவில்லை. இருபுறமும் கந்தருவர்கள் இசைக்கருவி மீட்டும் ஓவியங்கள் மட்டும் சிதையாமல் உள்ளன. பள்ளியறை வெளிச்சுவரின் மேலே உள்ள ஓவியங்கள் முன்னர் இத்திருக்கோயிலில் இருந்த இறைவன் விமானம், இறைவி விமானம், இராசகோபுரத்தைக் குறிக்கின்றன. இந்த ஓவியங்களைத் தீட்டிய ஓவியரின் முகம் வரையப்பட்டுள்ளது.

**கட்டிடக்கலைச் செய்திகள்:**

தரைகளிலும் தூண்களின் முனைகளிலும் பள்ளங்கள் விளக்கு ஏற்றுவதற்கு அமைக்கப்பட்டுள்ளன. இத்திருக்கோயில் மிகச் சிறப்பான வடிகால் அமைப்பைக் கொண்டுள்ளது. தண்ணீர் விழும் பகுதிகளை அடிப்படையாகக் கொண்டு வடிகால் அமைப்பு கட்டப்பட்டுள்ளது. வெளித்திருச்சுற்றில் உள்ள கொடிமரம், பலிபீடம், நந்தி ஆகியனவற்றை மட்டும் சுற்றி பள்ளமாக தரை அமைக்கப்பட்டு இதன் அடியில் நீர் கடத்தப்பட்டு வெளித்திருச்சுற்றின் வடக்குப் பகுதியில் இருக்கும் இறைவன் சந்நிதி கோமுகைத் தீர்த்தத் தொட்டியில் சேர்க்கப்படுகின்றது. இவ்வழித்தடத்தினோடு வெளித்திருச்சுற்றின் வலதுபுற கிழக்குப்பகுதிகளில் விழும் நீருக்கான வழித்தடம் சேர்க்கப்படுகின்றது.

கிழக்குப் பகுதியின் இடதுபுறத்தில் உள்ள பகுதிகளில் விழும் நீர் அனைத்தும் இறைவன் சந்நிதி, இறைவி சந்நிதிகளின் நடுவில் உள்ள வெளித்திருச்சுற்றின் பகுதிகளில் சேர்க்கப்படுகின்றது. வெளித்திருச்சுற்றின் தரை சமதளமாக இல்லாமல் நடுவில் உள்ளே குவிந்த அமைப்புடன் உள்ளதால் தரையில் விழும் நீர் அனைத்தும் நடுப்பகுதிக்கு வந்து விடுகின்றன.

இறைவி சந்நிதியின் பலிபீடம், கொடிமரம், நந்தி ஆகியனவற்றைச் சுற்றியுள்ள பள்ளமான தரைப் பகுதியில் உள்ள நீர் அடியில் உள்ள வழிதடத்தின் மூலம் இறைவி சந்நிதியின் கோமுகையின் வழியே வெளித்திருச்சுற்றுக்குக் கடத்தப்படுகின்றது. இப்பாதையின் வழியாகவே தாசி மண்டபத்தில் விழும் நீரும் செல்கின்றது. மகா மண்டபத்தின் முற்பகுதியில் விழும் நீர் இருபுறமும் உள்ள கோமுகைகளின் வழியே தாசி மண்டபத்தில் விழுந்து பின்னர் வெளித்திருச்சுற்றை அடைகின்றது.

இறைவி சந்நிதியின் ஆச்சார்ய மண்டபம், கருவறையைச் சுற்றி அகழி அமைப்பு காணப்படுகின்றது. இப்பகுதியில் மேற்கூரையின் சாளரங்களின் வழியே வரும் நீர் செல்கின்றது. இதோடு இறைவி சந்நிதி திருச்சுற்றில் விழும் நீரும் சேர்ந்து கோமுகையை அடைகின்றது. இங்கிருந்து கருவறையிலிருந்து கோமுகையில் வரும் நீர், அனைத்தும் வெளித்திருச்சுற்றில் உள்ள தீர்த்தத் தொட்டியை அடைகின்றன. இறைவி சந்நிதி திருச்சுற்றில் உள்ள விநாயகர் சந்நிதி, வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் சந்நிதி ஆகிய பகுதிகளில் விழும் நீர் பின்புறமாக வெளித்திருச்சுற்றை அடைகின்றது.

இறைவன் சந்நிதி, இறைவி சந்நிதி மேற்கூரையின் மேல் விழும் நீர் அனைத்தும் இருபுறமும் உள்ள பல கோமுகைகளின் வழியே வெளித்திருச்சுற்றை அடைகின்றன. இவை அனைத்தும் இறைவன் சந்நிதி கோமுகைத் தீர்த்தத்தொட்டியை அடைகின்றன.

இறைவன் சந்நிதியின் திருச்சுற்று மண்டபத்தின் கிழக்கு, தெற்குப் பகுதியில் விழும் நீர் இறைவன் சந்நிதி, இறைவி சந்நிதியின் நடுவேயுள்ள வெளித்திருச்சுற்றை அடைகின்றது. வடக்குப் பகுதியில் விழும் நீர் வெளித்திருச்சுற்றின் வடக்குப் பகுதியில் விழுகின்றது. திருச்சுற்று மண்டபத்தின் மேற்குப் பகுதியில் விழும் நீர் பின்புறமாக வெளித்திருச்சுற்றை அடைகின்றது. இறைவியைப் போல் இறைவனுக்கும் கருவறை,

அர்த்த மண்டபம், ஆச்சார்ய மண்டபத்தைச் சுற்றி அகழி அமைப்பு உள்ளது. இதில் விமானம், மேற்கூரையின் மேல் விழும் நீர் இருபுறமும் வட்டக்கற்குழாயின் வழியாக கீழே வருகின்றது (படம்-26). இவை அனைத்துடனும் கருவறையிலிருந்து கோமுகையின் வழியாக வரும் நீருடன் சேர்ந்து இறைவன் சந்நிதி திருச்சுற்றில் உள்ள வழிதடத்தின் வழியாக இறைவன் சந்நிதி கோமுகைத் தீர்த்தத் தொட்டியை அடைகின்றது. இங்கு வடக்கு மதிற்சுவரைக் கடந்து கிழக்கு நோக்கி கவ்வைக் கடல் தீர்த்தத்தில் கலக்கின்றது. இவ்வாறு சேமிக்கப்படும் நீர் இறைவன் திருச்சுற்றில் உள்ள கிணற்றின் மூலம் பயன்பாட்டிற்கு உபயோகப்படுத்தப்படுகின்றது.

திருச்சுற்றுகளில் இருக்கும் தண்ணீர் வடிகால் வழி அனைத்தும் தரையின் அடியில் செல்கின்றது. அடைப்புகளை நீக்க ஆங்காங்கு கைப்பிடி வைத்த சதுரக்கல் மூடிகள் உள்ளன.

**திருக்குற்றாலம்:**

திருக்குற்றாலம் திருக்கோயில் கலைநயம் வாய்ந்த சிற்பங்களுடன் சித்திர சபையையும் கொண்டு விளங்குகின்றது.

**சிற்பச் செய்திகள்:**

திருக்குற்றாலத் திருக்கோயில் முன்னர் வைணவ திருக்கோயிலாக இருந்ததைக் குறிக்கும் வண்ணம் கிழக்கு வாயில் கோபுரத்தின் இருபக்கம் கருடர், அனுமனின் திருவுருவங்கள் அமைந்துள்ளன.

கிழக்கு வாயிலைக் கடந்து திரிகூட மண்டபம் செல்லும் நடைபாதையின் மேற்கூறை பந்தல் அமைப்புடன் விளங்குகிறது (படம்-27). திரிகூட மண்டபத்தின் தூண்களில், தலையில் பாறை ஏந்திய அனுமன், அன்னம், நடனப் பெண்கள், திருட்டிக்காக வானரம் ஆகியனவற்றுடன் வேலைப்பாடுகள் அதிகம் காணக்கிடக்கின்றன.

கொடிமரத்தின் தெற்குப் பகுதியில் உள்ள தூண்களில் பிட்சாடனர், வேணுகோபாலன், ஆதிசேடனுடன் திருமால், முயலகன் மேல் நடனமாடும் நடராசர், பசு லிங்கத்திற்குப் பால் சொரிதல் ஆகியன வடிக்கப்பட்டுள்ளன.

நிறைமாத கர்ப்பிணிப் பெண் தன் பிரசவம் எவ்வாறு நடக்குமோ என்ற கவலையுடன் தலையில் கைவைத்து அமர்ந்திருக்கும் சிற்பம் தூணில் காணக்கிடைக்கிறது.

காலிலிருந்து இடுப்பு வரை ஒரு உடம்பாகவும் அதன் மேலே மூன்று முனிவர்களின் உடல்கள் தெரிவது போல் சிற்பம் கலை நயத்துடன் வடிவமைக்கப் பெற்றுள்ளது. முனிவர் தன் தவ வலிமையால் தரையிலிருந்து மேலே எழும்புவது போன்ற சிற்பம் தூணில் உள்ளது (படம்-28). இதே போன்ற சிற்பம் திருச்சுழியல் திருத்தலத்திலும் காணக்கிடைக்கிறது.

கொடிமரத்தின் வடக்குப் பகுதியில், இறைவன் வாத்தியக் கருவியை வாசிப்பது போன்று செதுக்கப்பட்டுள்ள சிற்பம் குறிப்பிடத்தக்கது. யோக நரசிம்மர், கையில் பழத்துடன் அனுமன், தவ நிலையில் முனிவர் ஆகிய சிற்பங்கள் தூண்களை அலங்கரிக்கின்றன. மேலே குறிப்பிட்ட கொடிமரத்தின் தெற்குப் பகுதியில் காணப்படுவதைப் போன்ற தவத்தால் தரையிலிருந்து மேல் எழும்பும் முனிவரின் சிற்பம் இங்கும் காணப்படுகிறது. இதே போன்ற சிற்பம் திருச்சுழியல் திருத்தலத்திலும் காணக்கிடைக்கிறது.

புவியீர்ப்பு விசைக்கு (Gravity) எதிரான விசையைக் கொடுத்தால் மட்டுமே ஒரு பொருளை நிலத்தின் மேலே தன்னியலாக எழும்பச் செய்து நிறுத்த முடியும். புவியீர்ப்பின் விசையைக் கண்டறிந்தது சர் ஐசக் நியூட்டன். புவியீர்ப்பு விசையைப் பற்றி பல ஆய்வுகள் மேற்கொண்டு சூத்திரங்களைத் தந்தவர் ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் ஆவார்.[15] முனிவர்கள் தங்கள் தவ வலிமையால் நிலத்தைவிட்டு மேலே எழும்பி நிற்பது போன்ற சிற்பங்களின் மூலம் புவியீர்ப்பு விசையைப் பற்றிய தமிழர்களின் அறிவு வெளிப்படுகின்றது.

இறைவி சந்நிதியில் வீரபத்திரர், தெண்டாயுதபாணி, முயலகன் மேல் நடனமிடும் நடராசர், சுப்பிரமணியர், விநாயகர், கருப்பர், வேணுகோபாலன், கோதண்டராமர் ஆகிய தெய்வங்களின் சிற்பங்கள் தூண்களில் உள்ளன. அனுமன் சஞ்சீவி மலையை வலது கையில் ஏந்தியிருப்பது, அனுமன் மலையைத் தூக்கி பறக்கத் தொடங்கும் சிற்பம் ஆகிய ராமாயணக் காட்சிகளும் தூண்களில் உள்ளன.

மாணிக்கவாசகர், மான், அன்னம், யானை, கொடிமரத்தில் மூஞ்சூர் ஏறுதல், மனிதன் மகுடி ஊத பாம்பு அதைக் கேட்டு வயப்படுதல் ஆகிய சிற்பங்களும் இடம் பெற்றுள்ளன. இறைவி சந்நிதியின் தூண்களில் அமைந்துள்ள இரண்டு சிற்பங்கள் குறிப்பிடத்தகுந்தது ஆகும். இத்திருக்கோயிலின் வரலாற்றைக் குறிப்பிடுவது போல் அகத்தியர் சிவலிங்க பிரதிட்டை செய்தல், அகத்தியர் தவம் செய்தல் ஆகிய இரண்டு

சிற்பங்கள் அமைந்துள்ளன. கையில் பூச்செண்டுடன் இரண்டு உருவங்கள் ஒரு தூணில் வடிக்கப்பட்டுள்ளது. சரியான வகையில் மறைத்து வைத்து பார்த்தால் இது நான்கு திசைகளில் நான்கு உருவங்களாகத் தெரியும்படி சிற்ப நயத்துடன் செதுக்கப்பட்டுள்ளது.

இறைவி வலது கையில் நீலோற்பவ மலரையும் இடது கையை தாழ்த்தியும் பத்ம பீடத்தில் நின்ற நிலையில் காட்சி தருகிறாள்.

ஆட்கொண்டார் குறடில் உள்ள துவார பாலகர்களான உய்யக்கொண்டார், ஆட்கொண்டாரின் சிலைகள் இத்திருத்தல வரலாற்றைக் குறிப்பிடும் வண்ணம் வடிவமைக்கப்பட்டுள்ளது. திருமால் திருக்கோயிலாக இருந்த பொழுது, ‘அகத்தியர் வந்தாரா?’ என்று கேட்பது போன்று உய்யக்கொண்டார் சிலையும், ‘வரவில்லையே!’ என்று கூறுவது போன்று ஆட்கொண்டாரின் சிலையும் அமைந்துள்ளது.

இறைவன் சந்நிதி மகா மண்டபத்தில் சுப்பிரமணியர், யாளி போன்ற சிற்பங்களுடன் குறிப்பிடத் தகுந்தவாறு முனிவர் ஒருவர் இளங்கன்றை இரு கையில் ஏந்தி அன்புடன் அரவணைப்பது போன்ற சிற்பம் வடிக்கப்பெற்றுள்ளது. இறைவனிடம் சரணடைந்தவர்களை இவ்வாறு அன்புடன் இறைவன் காப்பான் என்பதை உணர்த்தும் வண்ணம் இச்சிற்பம் அமைந்துள்ளது.

இறைவன் சுயம்பு ஆவார். ஆவுடை 2½ அடி உயரமும் அதிலிருந்து பாணம் 1 அடி உயரமும் கொண்டது. இறைவனின் பாணத்தின் மேற்குப் பகுதியில் ஐந்து விரல்கள் பதிந்தது போல ஒரு தடம் உள்ளது. இது அகத்தியர் தன் கையை வைத்து அழுத்தி திருமாலை இறைவனாக மாற்றியதால் ஏற்பட்ட தடம் என்று கூறப்படுகிறது.[16]

வடக்கு வாயில் கதவுகள் இறைவனின் திருவிளையாடல்கள், திருமாலின் உருவங்கள் ஆகிய சிற்பங்களைத் தாங்கி நிற்கின்றன.

திருக்குற்றாலத் திருக்கோயிலில் உள்ள திருவிழா வாகனங்களில் ‘தந்தப் பல்லக்கு’ குறிப்பிடத்தக்கதாகும். விநாயகர், சுப்பிரமணியர், தனித்தனி இடப வாகனத்தில் இறைவன், இறைவி, நடராசர், காளி, வேணுகோபாலன், துவார பாலகர்கள் ஆகிய உருவங்கள் தந்தத்தில் செய்யப்பட்டு பல்லக்கில் பதிக்கப்பெற்றிருக்கின்றன. நடராசர், சிவகாமி, வியாக்ர பாதர், பைரவர், வீரபத்திரர்,

அன்னம், யாளி, கிளி, குரங்கு, யானை ஆகிய தந்தத்தால் இழைக்கப்பட்ட திருவுருவங்களும் இத்தந்தப் பல்லக்கை அலங்கரிக்கின்றன.[17]

**ஓவியச் செய்திகள்:**

திருக்கோயிலில் பழமையான ஓவியங்கள் காணப்படவில்லையென்றாலும் திருக்கோயிலின் வடக்கில் சித்திரங்களின் கலைக் கூடமாக 'சித்திர சபை' அமைக்கப் பெற்றுள்ளது. பஞ்ச சபைகளுள் ஒன்றாக அமைந்திருக்கும் இந்த சித்திர சபை முழுவதும் இயற்கை மூலிகைகளைக் கொண்டு வரையப்பட்டுள்ளது.[18]

முன் மண்டபம், திருச்சுற்று, கருவறை ஆகிய அமைப்புடன் சித்திர சபை உள்ளது. திருச்சுற்றை சுற்றியிருக்கும் சுவர், சுவர்-1 என்றும் நடராசர் ஓவியத்தைச் சுற்றியிருக்கும் சுவர், சுவர்-2 என்றும் இவ் ஆய்வேட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.

சுவர்-1 இன் வெளிப்பகுதியில் துவார பாலகர், நடராசரின் ஊர்த்துவ தாண்டவம், காளி, நந்தி தேவர், சூரபத்மன் வதம், கசமுகாசுரன் வதம், சிங்கமுகாசுரன் வதம், பாண்டவர்கள் சூதாடல், கரும்பு வில்லுடன் மன்மதன், ரதி, குறவன், குறத்தி ஆகிய ஓவியங்கள் உள்ளன.

சுவர்-1 இன் உட்பகுதியில் தேவர்கள், முனிவர்கள், பிரம்மா, திருமால் ஆகியோர் சுற்றியிருக்க நடராசர் திரிபுர தாண்டவம் ஆடுதல், மீனாட்சித் திருக்கல்யாணம், பராசக்தி பீடம், இறைவியின் உமா தேவி வடிவம், வீரபத்திரர், கலைமகள், மன்மதன், திருவாலவாய் இறைவியான மீனாட்சியின் திருவிளையாடல்கள், மகா கணபதி, ஏரம்ப கணபதியின் பதினைந்து வடிவங்கள், முருகனின் பதினாறு வடிவங்கள், மகா கணபதி, அர்த்தநாரீசுவரர், மோகினி ஆகிய ஓவியங்கள் தீட்டப்பெற்றுள்ளன. இவைகளுடன் அகத்தியர் திருமாலை 'குறுக! குறுக!' என தலையில் வைத்து திருக்குற்றாலநாதராக மாற்றிய ஓவியம் வரையப்பட்டுள்ளது.

சுவர்-2 இன் வெளிப்பகுதியில் இலஞ்சிக் குமாரர், பைரவர், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், மகிசாசுரமர்த்தினி, துர்க்கை, வாலி வதம், வீரபத்திரர், கசேந்திர மோட்சம், மீனாட்சித் திருக்கல்யாணம், கரும்பு வில்லுடன் மன்மதன், அறுபத்துமூன்று நாயன்மார்கள், நடராசர் கால் மாறி ஆடுதல், நரசிம்மர் இரணியனை வதஞ் செய்தல், ராமர் பட்டாபிசேகம், அனந்த சயனத்தில் பத்மநாபர் ஆகிய ஓவியங்கள் உள்ளன.

கருவறையாக அமைந்திருக்கும் மைய பகுதியின் வடக்குச் சுவரில் நடராசர் தெற்கு நோக்கி வரையப்பட்டுள்ளார். மையப்பகுதியில் உள்ள எண்ணற்ற மரச்சிற்பங்களின் மீதும் மூலிகை ஓவியங்கள் தீட்டப்பெற்றுள்ளன.

**திருநெல்வேலி:**

சிற்பக் கலை நுண்மையில் இத்திருக்கோயிலின் சிற்பங்கள் சிறந்து காணப்படுகின்றன.

**இறைவி திருக்கோயில்:**

இறைவி திருக்கோயிலின் இராசகோபுரத்திற்கு முன்னால் உள்ள கூரை மண்டபம் மரச் சிற்பங்களால் நிறைந்துள்ளது. ஊஞ்சல் மண்டபத்தின் நடுவே அமைந்திருக்கும் இரண்டு வரிசை தூண்களும் சிற்பச் செறிவு மிக்கன. யாளி போன்ற சிற்பங்களைத் தாங்கி நிற்கின்றன தூண்கள். வெளித் திருச்சுற்றின் வடக்கே கோசாலையின் அருகே இருக்கும் மண்டபத்தின் மேற்கூரையில் மனிதன் மகுடி ஊத பாம்பும் வானரமும் அருகேயிருக்குமாறு சிற்பம் உள்ளது. திருக்கோயிலின் திருட்டி கழிவதற்காக இந்த சிற்பம் அமைக்கப்பட்டுள்ளது. இறைவன் சந்நிதி மணிமண்டபத்தில் இசைத்தூண்கள் அமைந்திருப்பது போல் இறைவி சந்நிதியின் மணிமண்டபத்தில் அமையாமல் நந்தி மண்டபத்தைத் தாண்டியிருக்கும் முன் மண்டபத்திலேயே இரண்டு இசைத்தூண்கள் உள்ளன. இரு தூண்களிலும் பதினாறு சிறு தூண்கள் இசைத்தூண்களாய் அமைந்துள்ளன. இம்மண்டபத்தின் ஒரு தூணில் கர்ப்பிணிப் பெண்ணின் சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது. குழந்தைகள் இல்லாத கணவன் மனைவி இங்கு வந்து ஒரு மணி நேரம் அர்த்த மண்டபத்தில் அமர்ந்து இறைவி நோக்கி பார்வையைப் பொருத்தியிருந்தால் குழந்தைப்பேறு கிடைக்கும். இவ்வாறு பலன் பெற்றவர்கள் உண்டு என்பதை கள ஆய்வில் அறியமுடிகின்றது.[19] இதைக் குறிப்பாக உணர்த்தவே கர்ப்பிணிப் பெணின் சிற்பம் அமைந்திருக்கின்றது என்பது ஆய்வின் வழிக் கண்டறியப்பட்டது.

முதல் திருச்சுற்றில் கோமுகை வடக்கு நோக்கி உள்ளது. இறைவிக்கு அபிசேகம் செய்யும் பொழுது கோமுகையிலிருந்து வரும் நீர் சிறிது கூட முதல் திருச்சுற்றில் இறங்காதவாறு அதற்கென பாதை மேடாக வகுக்கப்பட்டு நீர் வெளியேற்றப்படுகின்றது. கோட்டத்தில் பசு சிவலிங்கத்திற்கு பால் சொரிதல், வானரம் சிவபூசை செய்தல் ஆகிய சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

மகா மண்டபத்தின் உள்ளே இடதுபுறம் நடராசர் புடைப்புச் சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது. கருவறையில் இறைவி இரண்டு கரங்களோடு விளங்குகிறாள். வலது கையில் கிளியுடன் கூடிய செண்டு வைத்திருக்கிறாள் என்பார் தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான்.[20] ஆனால் அர்த்த மண்டபம் வரை சென்று ஆய்வு செய்ததில் இறைவி கையில் கிளி காணப்படவில்லை. இறைவி வலக்கையில் நீலோற்பவ மலரை ஏந்தி இடக்கையைத் தாழ்த்தி இருக்கிறாள்.

சங்கிலி மண்டபத்திற்கும் பொற்றாமரைத் தீர்த்தத்திற்கும் இடையே அமைந்துள்ள சந்நிதியில் பொற்றாமரை விநாயகர் வல்லபையை மடியில் வைத்து பதினொரு கரங்களுடன் அமர்ந்திருக்கிறார். சங்கிலி மண்டபத்தில் யாளி மிருகங்களும், சுக்ரீவன், வாலி போன்ற இராமாயணக் கதாபாத்திரங்களின் சிலைகள் தூண்களாய் அமைந்துள்ளன.

சங்கிலி மண்டபத்தின் மேற்கே வசந்த மண்டபமும் கிழக்கே பொற்றாமரைத் தீர்த்தமும் அமைந்துள்ளன. கிழக்கிலிருந்து மேற்காக வரும் காற்று பொற்றாமரைத் தீர்த்தத்தினால் மேலும் ஈரப்பதம் பெற்று சங்கிலி மண்டபத்தின் வழியாக வசந்த மண்டபத்தை அடைகின்ற பொழுது குளிர்ச்சியாக வீசுவதால் வசந்த மண்டபம் என்ற பெயர் ஏற்பட்டிருக்கின்றது. வசந்த மண்டபத்தின் முன் மண்டபம் கூம்பு வடிவான மேற்கூரையுடன் அமையப் பெற்றுள்ளது.

**இறைவன் திருக்கோயில்:**

கலைநயம் மிக்க மரச்சிற்பங்கள் நிறைந்தது இராசகோபுரத்தின் முன் கூரை மண்டபம். இராசகோபுரத்தைத் தாண்டியிருக்கும் நந்தி மண்டபத்தின் தூண்களில் உள்ள சிலைகள் சிறப்பு வாய்ந்தன. இடப்பக்கம் பூதகி கையில் குழந்தையை தாலாட்டும் சிற்பம் கலைநயம் மிக்கது. மற்றொரு தூணில் ஒரு பெண் இரண்டு பிள்ளைகளை வைத்திருக்கிறாள். ஒரு பிள்ளையை தன் இடப்பக்கம் தோள்மேல் அமர்த்தி இடக்கையால் சோறு கிண்ணத்தைக் காட்டுகிறாள். பிள்ளை தன் விரலால் சோறு எடுத்து உண்கின்றது. இதனால் வயதில் மூத்த மற்றொரு பிள்ளையை சமாளிக்க அதன் கையில் வாயில் வைத்து வாசிக்கும் இசைக்கருவி ஒன்றை தந்து நிற்கும் சிலை தாய்மையின் உயர்ந்த பண்பை விளக்குமாறு செதுக்கப்பட்டுள்ளது.

நால்வர் சந்நிதித் தூணில் அனுமன் சஞ்சீவி மலையைத் தூக்கியிருக்கும் சிற்பம் உள்ளது. வலப்புறம் இருக்கும் திங்கள் மண்டபத்தில் தூண்களில் விளங்கும்

அருச்சுனன்-அல்லி, பவளக்கொடியின் சிற்பங்கள் ஒரு கதையை மையமாக வைத்து செதுக்கப்படடுள்ளன. அருச்சுனன் மனைவியான அல்லிக்கு மூக்கு அழகாய் இருக்கும். இதனால் ஆத்திரம் கொண்ட மற்றொரு மனைவியான பவளக்கொடி அல்லியின் மூக்கை அறுத்து விடுவாள். அல்லி-அருச்சுனனோடு இருக்கும் சிற்பமும் அல்லியின் மூக்கை கையில் வைத்துக் கொண்டிருக்கும் பவளக்கொடியின் சிற்பமும் இதனை விளக்கி நிற்கும்.

நந்தி 10 அடி உயரம் 13 அடி நீளம் 5 அடி அகலம் கொண்டு சுதையால் ஆனது. இந்த நந்தி தஞ்சாவூர் பெருவுடையார் திருக்கோயில் நந்தியை நினைவுப்படுத்தும். சீபலித் திருச்சுற்றின் கிழக்குத் திருச்சுற்றின் தூண்களில் வானரம் தலைமேல் கல்லைத் தூக்கிக் கொண்டு நிற்கும் சிற்பமும், பூதகி இரு கைகளிலும் கயிற்றை வைத்துக் கொண்டு குதித்து கால்கள் வழியே சுற்றும் விளையாட்டை நிகழ்த்தும் சிற்பமும் நோக்குதற்குரியது. இப்பூதகி ஆடை அணியாமல் செதுக்கப்பட்டுள்ளாள். இருப்பினும் கைகள் கயிற்றை சுற்றும் பொழுது பிறப்புறப்பை மறைக்கும் தருவாயில் பூதகி இருப்பதுபோல் இச்சிற்பம் வடிவமைக்கப்பட்டுள்ளது (படம்-29).

தெற்குத் திருச்சுற்றின் தெட்சிணாமூர்த்தி சந்நிதியின் முன் மண்டபம் மர வேலைப்பாடுகளால் ஆனது. தெற்கு கோபுரத்தின் நிலைத்தூணில் நாற்றிசை வானரத்தின் சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது. கைகளை மறைத்து வைத்து சரியான முறையில் பார்த்தால் ஒரே சிற்பத்தில் நான்கு திசைகளிலும் தலை வைத்திருக்கும் நான்கு வானரங்கள் தெரியும். இச்சிற்பம் திருக்கோயிலின் திருட்டி கழிவதற்காக வடிக்கப்பட்டுள்ளது.

ஆறுமுகநாயினார் சந்நிதியின் தூண்களில் நரசிம்மர், ராமாயணப் போர்களக் காட்சிகள் சிற்பங்களாய் செதுக்கப்பட்டுள்ளன. குறிப்பாக அனுமன் இலக்குவனைத் தோள் மீது தூக்கிக் கொண்டு போர் செய்யும் காட்சி தூண்களில் அமைந்துள்ளது.

ஆறுமுகநாயினார் சந்நிதி முன் மண்டபத்தை அடுத்துள்ள பகுதியின் நடுவே ‘தாளச்சக்கரம்’ அமைந்துள்ளது (படம்-30). இச்சக்கரம் எதைக் குறிக்கின்றது, இதிலுள்ள செய்திகள் என்ன, தாளத்தின் எந்த அளவைகள் இதில் உள்ளன போன்றன ஆய்வுக்குரியது.

இதன் அருகேயுள்ள தூண்களில் மன்மதன், ஒரே கல்லில் இரண்டு ரதிகள் ஆகியோரின் சிலைகள் இருக்கின்றன. இதில் மன்மதன் கையில் உள்ள கரும்பைத் தட்டிப்பார்த்தால் உண்மைக் கரும்பைத் தட்டும் பொழுது ஏற்படும் சத்தம் வருகின்றது. கருவறையில் உள்ள ஆறுமுகநாயினார் என்னும் முருகனின் ஆறு முகங்களையும் பார்க்கலாம். இச்சிலை ஒரே கல்லாலானது. இதன் திருவாட்சியின் முன்புறம் சூரியனாகவும் பின்புறம் சந்திரனாகவும் கலை நயத்துடன் அமைந்திருக்கின்றது.

வடக்குத் திருச்சுற்று நடைபாதையின் எதிரில், திங்கள் மண்டபத்தின் வெளியே கர்ப்பிணிப் பெண்ணின் இரண்டு சிற்பங்கள் உள்ளன. ஒன்று கர்ப்பமாய் இருப்பதின் வலியை நினைத்து தலையில் கைவைத்து சோகமாய் அமர்ந்திருக்கும் சிற்பம். அதன் கீழேயுள்ள கர்ப்பிணிப் பெண்ணின் சிற்பம் அதே சோகத்தோடு, சுற்றியிருப்பவர்கள் ஆடிப்பாடும் பொழுது நம்மால் இயலவில்லையே என்ற சோகமும் சேர்ந்து தலையில் கைவைத்து அமர்ந்திருக்குமாறு செதுக்கப்பட்டுள்ளது. கர்ப்பிணிப் பெண்கள் இச்சிற்பங்களின் வயிற்றில் நல்லெண்ணெய் தடவினால் பிரசவம் சுகமாக அமையும் என்பது நம்பிக்கை.[21]

நந்தி மண்டபத்திலிருந்து தாமிரசபை திருச்சுற்று நுழைவு மண்டபத்தில் உள்ள நான்கு சிற்பத் தூண்கள் குறிப்பிடத் தகுந்தன. முதலாவது சோவி மாலை அணிந்த பகடைராசா சிலை, இரண்டாவது வீரபத்திரர் சிலை (படம்-31) ஆகியன தூண்களாய் அமைந்துள்ளன. உயிருள்ள மனிதனைப் போல கால்கள், நகங்கள், விலா எலும்புகள், கை, கால் மூட்டுப் பகுதிகள் உயிரோட்டமாய் ஒரே கல்லில் வடிக்கப் பெற்றுள்ளன.

மூன்றாவதாக உள்ள அருச்சுனன் தூண் சிற்பத்தின் கையில் நாகம் உள்ளது (படம்-32). இந்நாகத்தை பின்னால் இருந்து மயில் கொத்திக் கொண்டு போக வருகின்றது. முன்புறம் இருந்து பார்த்தால் மயில் கொத்த வருவதைக் காணமுடியாது. பின்புறமிருந்து மயில் கொத்த வருவதால் பின்புறமாக இருந்துதான் இதைக் காணுமாறு வடிக்கப்பட்டுள்ளது (படம்-33).

நான்காவதாக கோபத்துடன் போர் புரியும் கர்ணனின் சிற்பத் தூண் அமைந்துள்ளது (படம்-32). கோபத்துடன் போர் புரிதலால் அவன் தேர்ச்சக்கரங்கள் மண்ணில் புதையுண்டது போல் அமைந்துள்ளன. இதனை மூன்றாவதாக அமைந்திருக்கும் சிற்பத்தின் தேர்ச்சக்கரங்களின் அளவையோடு பொருத்திப் பார்த்தால் அறியலாம்.

இவ் வாயிலைக் கடந்தால் தாமிரசபை திருச்சுற்றின் கிழக்குப் பகுதியாகும். வெளியே நந்தி மண்டபத்தில் அமைந்துள்ள கொடிமரம் இரட்டைக் கருவறைகளுக்குப் பொதுவாய் நடுவே அமைந்துள்ளது. உள்ளே இருக்கும் சிறிய கொடிமரம் முதன்மை இறைவனான நெல்லையப்பர் கருவறைக்கு எதிரே அமைந்துள்ளது. இதே போல் மகா மண்டபத்தின் வாயிலும், அர்த்த மண்டபத்தின் வாயிலும் இறைவன் கருவறையின் எதிரே அமையப்பெற்றுள்ளன. வாயில்கள் இறைவன் கருவறை நோக்கி அமைந்துள்ளனவேயன்றி இரட்டைக் கருவறைகள் கொண்ட சந்நிதி தாமிரசபையின் திருச்சுற்றுக்கு நடுவே அமைந்துள்ளது நோக்குதற்குரியது.

தாமிரசபை திருச்சுற்றில் அமைந்துள்ள பொல்லாப் பிள்ளையார் சந்நிதியின் எதிர்புற சுவற்றின் நடுவே சாளரம் உள்ளது. இது 'பிள்ளைத்தொண்டு' என்று அழைக்கப்படுகின்றது (படம்-34). இச்சாளரத்தில் ஒன்பது வாயில்கள் உள்ளன. குழந்தைப்பேறு இல்லாத பெண்கள் இச்சாளரத்தின் வழியாக உள்ளே சென்று பொல்லாப் பிள்ளையாரை வணங்கி வாயிலின் வழியே வந்தால், கருப்பை நரம்புகள் சீராகி பிள்ளைபேறு கிட்டும். இவ்வாறு பல பெண்கள் செய்து தாய்மைப்பேறு அடைந்திருக்கின்றார்கள்.[22]

மேற்குப் பகுதியில் உள்ள தாமிரசபை பந்தல் மண்டபம் கூம்பு வடிவில் அமைந்துள்ளது (படம்-35). இதில் உள்ள இருபது தூண்களை யானை தாங்கி நிற்பது போல் அமைக்கப்பட்டுள்ளன. தாமிரசபையின் முன்னால் அமைந்த இடப்புறத் தூணில் மகாவிட்ணு கையில் படகத்தை வைத்து இசைக்கின்றார். வலப்புறம் கையில் பூச்செண்டுடன் மகாலெட்சுமி சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது. இதற்கடுத்த தூண்களில் இடப்புறம் பிரம்மா தாளம் போடுவது போலவும் வலப்புறம் சரசுவதி வீணையிசைப்பது போலவும் சிற்பங்கள் அமைந்துள்ளன. தாமிரசபையிலிருந்து மூன்றாவது தூண்களில் ரவி நாகசுரம் இசைப்பது, சசி கையில் தாளம் கொண்டுள்ளது போன்று அமைக்கப் பெற்றுள்ளன.

நான்காவது இடப்பக்க தூணில் வியாக்ர பாதரும் வலப்பக்க தூணில் பதஞ்சலியும் செதுக்கப்பட்டிருக்கிறார்கள். தாமிரசபையில் இறைவன் ஆடுவது முனி தாண்டவம் என்பதால் தூண்களில், முனிவர்கள் நடனத்தைக் காண்பது போல சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

தாமிரசபையின் பீடம் கல்லாலும் நாற்புறங்கள், மேற்கூரை போன்றன மரத்தாலும் செய்யப்பட்டவை. மேற்கூரையின் வெளியே தாமிரத் தகடுகள் பொருத்தப்பட்டுள்ளன. தாமிரசபை திருச்சுற்றில் தாமிரசபை பகுதி ஆகாய வெளியில் அமைந்துள்ளது. தாமிரசபையின் நேர் பின்னே சந்தன சபாபதி சந்நிதி உள்ளது. தாமிரசபை பந்தல் மண்டபத்திலிருந்து நோக்கினால் சந்தன சபாபதியைத் தாமிர சபையின் வாயில்களின் மூலம் காணலாம்.

சந்தன சபாபதி தாமிர சபையின் மூலவர் ஆவர். மூலவரை சபையின் உள்ளே எழுந்தருளச் செய்ய இயலாது. எனவே நேர்க்கோடில் பார்த்தால் சந்தன சபாபதி தாமிரசபையின் உள்ளேயிருப்பதைப் போலத் தோற்றம் கொடுக்கும்.

தாமிரசபையின் மேலே உள்ள தாமிரத் தகடுகள் வான்வெளியில் உள்ள மின்னாற்றல்களை வாங்கி உள்ளே அனுப்புகின்றது.

தாமிரம் என்றும் வழங்கப்படும் செம்பின் மூலக்கூறு வாய்ப்பாடு Cu ஆகும். இதன் அணு எண் 29. இது மின்னாற்றல்களைக் கடத்தும் திறன் அதிகமாகக் கொண்ட உலோகமாகும்.[23] மின்னாற்றல்கள் என்பது மின்சாரம் (Current), மின்அலை (Electric Field), மின்காந்த அலைகள் (Electromagnetic Waves) ஆகியனவற்றைக் ஒருங்கே குறிக்கும். வான் வெளியில் உள்ள மின்னாற்றல்களை தாமிரத் தகடுகள் கடத்தி உள்ளே பாய்ச்சுகின்றன. இதனை ஒருமுகமாக தாமிரசபை பந்தல் மண்டபத்திலிருந்து உணரலாம். தாமிரசபை பந்தல் மண்டபம் அலைவழிகாட்டியாகவும் (Waveguide) இருபக்க சுவர்கள் கடத்திச் சுவர்களாகவும் (Conducting Walls) செயல்படுகின்றது. இது கள ஆய்வின் பொழுது கண்டறியப்பட்டது.

சந்தன சபாபதி சந்நிதி வாயிலின் இருபுறமும் சாளரங்கள் உள்ளன. இவை இரண்டும் ஒரே மாதிரியானவை அல்ல. இடப்பக்கம் இருக்கும் சாளரத்தில் துளைகள் அதிகமாக உள்ளன. இச்சாளரத்தின் நேரே சந்நிதி உள்ளே மேற்கூரை இல்லை.

மின் ஆற்றல்களை தாமிரசபையிலிருந்து இச்சாளரம் வாங்கி உள்ளே அனுப்புகின்றது. அதே போல் ஆகாய வெளியில் உள்ள ஆற்றல்களை உள்ளே பாய்ச்சவும் இச்சாளரம் துணைபுரிகின்றது. இவ்வாறு பெறப்படும் மின் ஆற்றல்கள் திருக்கோயில் உள்ளே கடத்தப்பட்டு (Propagate) கருவறையினின்று வெளிப்படுகின்றது.

தாமிரசபை பந்தல் மண்டபத்தின் இடப்புறம் இரண்டு பகுதிகளாக அமைந்துள்ள வள்ளி, தெய்வானை சுப்பிரமணியர் சந்நிதியின் இரண்டு வாயிற் சுவர்களின் இருபுறமும் சாளரங்கள் உள்ளன. இச்சாளரங்களின் வழியே நேரே பார்த்தால் சந்நிதியின் இரண்டாம் பகுதியின் சுவர் மட்டுமே தெரியும். இடப்பக்கம் உள்ள சாளரத்தின் வழியே இரண்டாம் பகுதி வாயிலின் வழியே பார்த்தால் தெய்வானையையும் வலப்பக்கம் சாளரத்தின் வழியே இதே முறையில் பார்த்தால் வள்ளியையும் காணலாம். வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் ஒரே நேரான பீடத்தில் மேல் அமைக்கப்படாமல் வள்ளி, தெய்வானை அமைந்துள்ள பீடம் சிறிது திரும்பியுள்ளது. ஆகையால் சாளரத்தின் வழியே முழுமையாக வள்ளி தெய்வானையைக் காணலாம். இக்கட்டிடக் கலையின் நுணுக்கம் கள ஆய்வின் பொழுது கண்டறியப்பட்டது.

இறைவி திருக்கோயிலில் அமைந்துள்ளதைப் போல இங்கும் அபிசேக நீர் தாமிரசபை திருச்சுற்றின் உள்ளே வராமல் வெளியே செல்லும்படி அமைக்கப்பட்டுள்ளது.

தாமிரசபை திருச்சுற்றின் வடகிழக்கு மூலையில் உள்ள பெரிய சபாபதி என்னும் நடராசர் செப்புத் திருமேனி இத்திருக்கோயிலில் உள்ள செப்புத் திருமேனிகளில் மிகப் பெரியதாகும். ஒரு முறை இச்செப்புத் திருமேனியை எழுந்தருளச் செய்த பொழுது தீ விபத்து ஏற்பட்டதால் அதன் பின்னர் எழுந்தருளல் நடைபெறவில்லை என்பதை அறியமுடிகின்றது.[24]

இறைவன் சந்நிதியின் மணிமண்டபம் இருபுறம் படிகளைக் கொண்டது. இடதுபுறம் படிகளுக்கு மேல் சுந்தரர், சேரமான் பெருமாள் நாயனார் திருக்கைலாயம் செல்லும் காட்சி புடைப்புச் சிற்பமாய் அமைந்துள்ளது. இராவணன் கயிலைமலையைப் பெயர்த்து எடுக்கும் பொழுது இறைவி பயந்து இறைவனை தழுவிக் கொண்ட புடைப்புச் சிற்பம் வலப்புறம் படிகளுக்கு அருகே உள்ளது. இம்மணிமண்டபத்தில் பத்து இசைத்தூண்கள் உள்ளன. இதில் ச,ரி,க,ம,ப,த,நி,ச என்ற சரளி வரிசை, செண்டை மேளம், மிருதங்கம், தபேலா, கடம் ஆகிய இசைகளை கள ஆய்வின்பொழுது ஒலிப்பிக் கேட்க முடிந்தது.

கருவறை வாயிலின் இடப்பக்கம் துவார பாலகர் அருகே உள்ள விநாயகருக்கு இரண்டு தந்தங்களும் உடைந்துள்ளன. ஒரு தந்தம் மகாபாரதம் எழுதவும் மற்றொன்று கசமுகாசுரன் என்ற அரக்கனை அழிக்கவும் உடைக்கப்பட்டுள்ளன.[25]

சிவலோகத் திருச்சுற்றில் மேற்குப் பகுதியில் சுவேத கேதுவிற்கு இறைவன் எமபயம் தீர்த்ததை உணர்த்தும் புடைப்புச் சிற்பம் உள்ளது.

இரட்டைக் கருவறையில் இறைவன் நெல்லையப்பரும் நெல்லைக் கோவிந்தரும் இருக்கின்றார்கள். நெல்லையப்பர் சுயம்புவாக இருப்பதால் நல்லெண்ணெய் அபிசேகம் கிடையாது. நெல்லையப்பர் பாணத்தில் வெட்டுப்பட்டது போல் அடையாளம் உள்ளது. இதை அடிப்படையாக வைத்தே கோடலியால் வெட்டுப்பட்டவர் என்ற புராணச் செய்தி சொல்லப்படுகின்றது. ஆனால் இந்த அடையாளம் இயற்கையாக உருவானது. பால் அபிசேகம் செய்யும் பொழுது நெல்லையப்பர் பாணத்தில் இறைவி காந்திமதியின் உருவம் தெரிகின்றது. 24.06.2017, 25.06.2017 ஆகிய இரு நாட்கள் கள ஆய்வின் பொழுது காலசந்தி பூசையில் கலந்து கொண்டு கவனிக்கப்பட்டது.

நெல்லைக் கோவிந்தர் பிரம்மா, லெட்சுமி, சீதேவி, பூதேவி போன்ற கடவுளர்கள் இல்லாமல் தனியே சயனக் கோலத்தில் சிவபூசை செய்யும் கோலத்தில் அமைந்துள்ளார். வலதுகையின் கீழே சிவலிங்கம் உள்ளது. அருகே இருக்கும் நெல்லைக் கோவிந்தர் செப்புத் திருமேனியின் இதயத்தில் சிவச்சின்னம் பொறிக்கப்பட்டு, இறைவியை இறைவனுக்கு மணமுடிக்கும் வேளையில் தமையனாய் இருந்து தாரை வார்க்கும் விதமாக கைகளில் தாரை வார்க்கும் கலசத்தோடு இருக்கிறார்.

## தொகுப்புரை

- jpUf;Nfhapy; J}z;fspy; tpehafH> Rg;gpukzpaH> mDkd;> eluhrH> igutH> fUg;gH> fq;fhsehjH> NtZNfhghyd;> Nahf eurpk;kH> rptypq;fk;> gR ypq;fj;jpw;Fg; ghy; nrhhpjy; cs;spl;l ,iwj; jpUTUtq;fs; mjpfk; fhzg;gLfpd;wd.
- efuj;jhH jpUg;gzpfspy; KUfhpd; njz;lhAjghzp rpw;gk; ,lk;ngw;wpUg;gJ Fwpg;gplj; jFe;j xd;whFk;.
- jpUQhdrk;ge;jH> jpUehTf;furH> fz;zg;g ehadhH Mfpa rpw;gq;fSld; khzpf;fthrfUf;Fj; jpUtb jPl;ir toq;Fjy; tbf;fg;ngw;Ws;sd.
- khd;> rpq;fk;> ahid> Fuq;F> Fjpiu> eha;> nfhf;F> md;dk;> kapy;> fpsp Mfpa caphpdq;fSk; J}z;fspy; cs;sd. ,tw;Wld; ahsp> mope;J tpl;l kpUfq;fSk; J}z;fspy; cs;sd.
- ,iwtpapd; jpUTUtk; gj;k gPlj;jpd; kPJ epd;w Nfhyj;jpy; ,uz;L my;yJ ehd;F iffSld; tbf;fg;ngw;Ws;sd.
- ,iwtDf;F ghzk;> MTil mikg;G fhzg;gLfpd;wJ.
- jpUf;nfhLq;Fd;wj;jpy; ifyhaj;jpy; cs;s kq;ifghfH – Njdk;ik kl;Lk; File;J tbf;fg;gl;Ls;sJ. ,iwtd; - ,iwtp gPlj;jpy; mkHe;j epiyapy; cUtj;NjhL tpsq;Ffpd;whHfs;.
- jpUg;Gdthapy;> jpUthlhid> jpUr;Ropay;> jpUf;Fw;whyk; Mfpa jpUf;Nfhapy;fspy; goikahd Xtpaq;;fs; jPl;lg; ngw;Ws;sd.

## சான்றெண் விளக்கம்

1. கள ஆய்வின் பொழுது நேர்காணல் – கோ.சுவாமிநாதன், சிவாச்சாரியார், நாள்: 17.09.2017, நேரம்: காலை 10.15 மணி

2. மேலது – க.சந்திரசேகர குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 16.11.2018, நேரம்: மாலை 06.20 மணி

3. பாஸ்கரத் தொண்டைமான்.தொ.மு., வேங்கடம் முதல் குமரி வரை (பாகம்-4), ப.63

4. கதிரேசச் செட்டியார்.மு, நாட்க்கோட்டை நகரத்தார் வரலாறு, 1953, ப.243

5. கள ஆய்வின் பொழுது நேர்காணல் – க.சந்திரசேகர குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 16.11.2018, நேரம்: மாலை 06.30 மணி

6. http://solar-center.stanford.edu/AO/sunrise.html

7. கள ஆய்வின் பொழுது நேர்காணல் – க.நடராஜ சிவம், சிவாச்சாரியார், நாள்: 21.06.2017, நேரம்: காலை 10.30 மணி

8. http://temple.dinamalar.com/New.php?id=254

9. கள ஆய்வின் பொழுது நேர்காணல் – ஸ்வர்ண.சந்திரசேகர குருக்கள், நாள்: 27.01.2018, நேரம்: காலை 11.10 மணி

10. மேலது

11. மேலது – வை.ரவி குருக்கள், நாள்: 04.02.2018, நேரம்: காலை 09.30 மணி

12. மேலது – மு.சுவாமிநாத குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 11.06.2018, நேரம்: காலை 11.30 மணி

13. http://archimedespalimpsest.org/about/history/archimedes.php

14. i) Godley, A. D. ed. (1920), Herodotus, The Histories. Harvard University Press, Book 2, Chapter 125.

    ii) Hussey-Pailos, Robert Scott (2005), Construction of the Top of the Egyptian Pyramids: An Experimental Test of a Levering Device, University of Florida, Retrieved 23rd December 2016.

15. https://web.stanford.edu/~buzzt/gravity.html

16. களஆய்வின் பொழுது நேர்காணல் – ச.கணேச குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 21.06.2018, நேரம்: மாலை 07.00 மணி

17. ஷண்முகநயினார்.ஏ.சி., திருக்குற்றாலத் தலவரலாறு, 1986, ப.76

18. தினத்தந்தி, திருநெல்வேலிப் பதிப்பு, நாள்: 26.06.2007, ப.16

19. களஆய்வின் பொழுது நேர்காணல் - ச.விசாலாட்சி, பக்தர், நாள்: 24.06.2017, நேரம்: காலை 08.30 மணி

20. பாஸ்கரத் தொண்டைமான்.தொ.மு., வேங்கடம் முதல் குமரி வரை, பாகம் - 4, ப.219

21. களஆய்வின் பொழுது நேர்காணல் - எஸ்.வேலுச்சாமி, கோயில் காப்பாளர், நாள்: 25.06.2017, நேரம்: காலை 10.20 மணி

22. மேலது

23. Sedha.R.S., A Textbook of Applied Electronics, p.17

24. களஆய்வின் பொழுது நேர்காணல் - எஸ்.வேலுச்சாமி, கோயில் காப்பாளர், நாள்: 25.06.2017, நேரம்: காலை 10.50 மணி

25. மேலது

## பூசைகள், திருவிழாக்கள், தற்காலத்திய மாற்றங்கள்

திருக்கோயில்களில் நிகழ்த்தப்பெறுகின்ற நாள் வழிபாடுகள், வார வழிபாடுகள், திங்கள் வழிபாடுகளின் பொழுது நடைபெறுகின்ற பூசைகள், வழிபாட்டு முறைகள் ஆகியவை ஆய்ந்து விளக்கப்பட்டுள்ளன. திருவிழாக்களின் பொழுது செய்யப்படுகின்ற நிகழ்முறைகள், திருவீதிப் புறப்பாட்டிற்குப் பயன்படுத்தப்படுகின்ற வாகனங்கள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. ஆய்வுக் காலத்தில் திருக்கோயில்களின் வழிபாட்டு முறை மாற்றங்கள், திருக்கோயில் அமைப்பு முறை மாற்றங்கள் புதியதாய் தோற்றம் பெற்றுள்ள மரபுகள் போன்றவை ஆய்ந்து தெளிவுபடுத்தப்பட்டுள்ளன. திருக்கோயில்கள் மக்களை ஒன்றிணைத்து சமூகவியல் ஒற்றுமையை ஏற்படுத்தியுள்ளமை ஆய்வின் வழி கண்டறிந்து வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

**திருவாப்பனூர்:**

காலை 8.30 மணி முதல் 9.30 மணி வரை காலசந்தி, காலை 10.30 மணி முதல் 11 மணி வரை உச்சிக்காலம், மாலை 5.30 மணி முதல் 6.30 மணி வரை சாயரட்சை, இரவு 8.15 மணி முதல் 9 மணி வரை அர்த்தசாமம் ஆகிய நாள் வழிபாடுகள் இத்திருக்கோயிலில் நடைபெறுகின்றன.

**திருவிழாக்கள்:**

**சித்திரை** மாதம் முதல் நாள் வருடப்பிறப்பு அன்று இறைவனுக்கும் இறைவிக்கும் சிறப்பு வழிபாடுகள் நடத்தப் பெறுகின்றன.

**வைகாசி** மாதம் சைவத் திருக்கோயில்களில் நடத்தப்பெறும் பெருந்திருவிழா இத்திருக்கோயிலில் நடத்தப்பெறுவது இல்லை.

**ஆனி** மாதம் உத்திர நட்சத்திரத்தன்று 'ஆனித் திருமஞ்சன' உற்சவம் நடைபெறுகின்றது. அன்று காலை நடராசர் – சிவகாமி திருவீதிப் புறப்பாடும் மாலை பஞ்சமூர்த்திகளின் திருவீதிப் புறப்பாடும் நடைபெறுகின்றன.

**ஆடி** மாதம் பூர நட்சத்திரத்தில் இறைவிக்கு 'ஆடிப்பூர உற்சவம்' நிகழ்கின்றது. காலை சிறப்பு வழிபாடுகளும் மாலை இறைவிக்கு திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது.

**ஆவணி** மாதம் விநாயகர் சதுர்த்தி அன்று விநாயகர் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகின்றது.

**புரட்டாசி** மாதம் நவராத்திரி உற்சவமும் பத்தாம் நாளான விசயதசமி அன்று அம்பு எய்தல் நிகழ்ச்சியும் நடைபெறுகிறது.

**ஐப்பசி** மாதம் கந்த சஷ்டி விழா ஆறு நாட்கள் சிறப்பாக நடைபெறுகின்றது.

**கார்த்திகை** மாதம் வரும் திங்கட்கிழமைகளில் இறைவன், இறைவிக்குச் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன. கார்த்திகை மாதம் திருக்கார்த்திகை உற்சவம் சிறப்பாக நடைபெறுகிறது. அன்று முருகன் திருத்தலம் முழுதும் சுற்றி வருகிறார்.

**மார்கழி** மாதம் சதய நட்சத்திரம் முதல் திருவாதிரை நட்சத்திரம் வரை இறைவிக்கு எண்ணெய்க்காப்பு உற்சவம் நடைபெறுகிறது. திருவாதிரை நட்சத்திரத்தன்று ஆருத்ரா தரிசனமும் இரவு நடராசர்-சிவகாமி திருவீதிப் புறப்பாடும் நடைபெறுகின்றது.

**மாசி** மாதம் ‘மாசிப் பெருந்திருவிழா’ முப்பது வருடங்களுக்கு முன்னர் பத்து நாட்கள் நடைபெற்றுள்ளது.

**பங்குனி** மாதம் உத்திர நட்சத்திரத்தன்று திருஆலவாய் திருக்கோயிலின் இறைவன், இறைவி ஒரு நாள் மட்டும் இத்திருத்தலத்தில் எழுந்தருளிக் காட்சி தருகிறார்கள்.

இவைகளைத் தவிர, மாதாந்திர உற்சவங்களும் நடைபெறுகின்றன. சதுர்த்தி அன்று வரம்தரும் விநாயகருக்கு சிறப்பு பூசைகள் நடைபெறுகின்றன. உற்சவர் திருக்கோயில் வலம் வருதல் நடைபெறுவதில்லை. கார்த்திகை அன்று வள்ளி, தெய்வானை, சண்முகருக்கும் தெண்டபாணிக்கும் சிறப்பு பூசைகள் நடைபெற்று, உற்சவர் திருக்கோயில் இரண்டாம் திருச்சுற்று சுற்றி வருதல் நடைபெறுகின்றது. தேய்பிறை அட்டமி அன்று பைரவருக்குச் சிறப்பு வழிபாடுகள் நிகழ்கின்றன. பிரதோசத்தின் அன்று இறைவன், நந்திக்குச் சிறப்பு பூசைகள் செய்து இரண்டாம் திருச்சுற்று சுற்றிவருதல் நடைபெறுகிறது. செவ்வாய், வெள்ளி ஆகிய நாட்களில் இராகுகாலத்தில் பைரவருக்கு அருச்சனைகள் சிறப்பாக செய்யப்படுகின்றன. பள்ளியறைக்கு இறைவி செல்லும் பொழுது மணமுள்ள மலர்களைச் சாற்றுகின்றனர். மறுநாள், அந்த மலர்களை வாங்கிச் சென்று பெண்கள் சூடிக் கொண்டால் திருமணப்பேறு, குழந்தைப்பேறு முதலியன கிட்டும் என்ற நம்பிக்கை உள்ளது.

செவ்வாய்க் கிழமையன்று வள்ளி, தெய்வானை, சண்முகருக்கு செவ்வரளிப்பூ மாலை சாற்றி, தேங்காயை உடைத்துப் பாதத்தில் வைத்து செவ்வாழை, மாதுளம்

பழம் ஆகிய பழங்களைச் படைத்து வேண்டினால் வேண்டியது உறுதியாக நிறைவேறும் என்ற நம்பிக்கை உள்ளது. இச்சந்நிதியில் தேங்காய் விடலை போடும் வழக்கமும் காணப்படுகிறது.

**தற்காலத்திய மாற்றங்கள்:**

சுந்தரவிநாயகர் சந்நிதி, காசிவிசுவநாதர் சந்நிதி, வள்ளி, தெய்வானை சண்முகர் சந்நிதிகளின் தடுப்புச் சுவர்கள் தற்காலத்திய திருப்பணிகளாகும். இறைவன் சந்நிதி முதல் திருச்சுற்று, இறைவி சந்நிதி முதல் திருச்சுற்று ஆகியனவற்றின் சுற்றுச்சுவர் தற்காலத்தில் கட்டப்பட்டதாகும். மடப்பள்ளி அருகேயிருக்கும் அறை தற்காலத்தில் அமைக்கப்பட்டதாகும். இத்திருக்கோயிலுக்கு ஐந்து திருச்சுற்றுகள் சொல்லப்பட்டாலும் தற்காலத்து மூன்று திருச்சுற்றுகளுக்கு உள்ளேயே திருக்கோயில் அமைந்துள்ளது. நான்காம் திருச்சுற்றான மாட வீதியில் குடியிருப்புகள் தோன்றி அக்ரகாரத் தெருக்கள் என்று வழங்கப்படுகின்றன. ஐந்தாம் திருச்சுற்று தற்பொழுது பேருந்துகளின் வழித்தடமாக மாறியுள்ளது. தலவிருட்சமான கொன்றை திருக்கோயிலில் காணப்படவில்லை. மக்கள் அரச மரத்தையும் வேப்ப மரத்தையும் சுற்றி வந்து வழிபடுகின்றனர்.

நாள் வழிபாடுகளில் தற்காலத்து திருவனந்தலும் அதிகாலை நடைபெறுகின்றது. ‘மாசிப் பெருந்திருவிழா’ மீண்டும் நடத்துவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இதற்காக இடப தீர்த்தத்தினை தூய்மைப்படுத்தும் பணிகளும் நடைபெறுகின்றன.

**திருவேடகம்:**

திருவனந்தல் காலை 7 மணி, விளா பூசை காலை 8.30 மணி, காலசந்தி 9.30 மணி, உச்சிக்காலம் பகல் 12 மணி, சாயரட்சை 6.30 மணி, அர்த்தசாமம் 8.15 மணி என ஆறு காலங்களில் நாள் வழிபாடுகள் நடைபெறுகின்றன.

பள்ளியறை பூசைக்கு இறைவனின் ‘திருவடி நிலைகள்’ கொண்டு செல்லப்படுகின்றன. இறைவி பள்ளியறையிலேயே இருக்கின்றாள். திருவனந்தலின் பொழுது இறைவியைப் பள்ளியறையினின்று சந்நிதிக்குக் கொண்டு செல்லும் வழக்கம் காணப்படவில்லை. திருவடி நிலைகளை மட்டுமே இறைவன் சந்நிதியில் சேர்க்கின்றனர்.

இறைவன் சந்நிதி மகா மண்டபத்தில் இடதுபக்க இரண்டாவது தூணில் மேற்கு நோக்கியிருக்கும் அனுமன் வளர்ந்து கொண்டேயிருப்பதாக ஐதீகம் உள்ளது. எனவே இவருக்கும் ஆறு காலத்திலும் வழிபாடுகள் செய்யப்படுகிறது. கால பைரவருக்கு அர்த்தசாமத்தில் அபிசேகம் நடைபெறுகின்றது.

**திருவிழாக்கள்:**

திருவேடகத் திருக்கோயிலில் திருவிழாக்கள் 'ஏக தின உற்சவமாக' ஒரே நாளில் நடைபெறுகின்றன. பிரம்மோற்சவம் நடைபெறுவது இல்லை. இறைவன், இறைவிக்குத் திருக்கல்யாணம் செய்யப்பெறுவதில்லை. சுப்பிரமணியருக்கும் தெய்வானைக்கும் மட்டும் திருக்கல்யாணம் நடைபெறுகிறது.

இறைவனுக்கு 'சர தேவர்' இத்திருக்கோயிலில் உள்ளது. திரிசூல வடிவில் இருக்கும் இந்த செப்புத் திருமேனிக்கு அபிசேகம், அலங்காரம் செய்யப்படுகின்றன. இதனைத் 'தீர்த்தம்' என்று வழங்குகின்றனர்.

**சித்திரை** மாதம் வருடப்பிறப்பன்று காலை கொடிமரத்திற்கு அபிசேகம் நடந்து அலங்காரம் செய்யப்படுகின்றது. பூப்பந்தலால் அலங்கரிக்கப்பட்ட கம்பத்தடி மண்டபத்தில் 'பஞ்சாங்கம்' வாசிக்கப்படுகின்றது. பௌர்ணமி அன்று காலை பஞ்சமூர்த்திகள் திருவீதிப் புறப்பாடு நடைபெற்று, வைகையாற்றில் தீர்த்தம் நடைபெறுகின்றது. அன்று இரவும் பஞ்சமூர்த்திகள் திருவீதிப் புறப்பாடு நிகழ்கின்றது.

**வைகாசி** மாதம் விசாகத்தினன்று காலை வள்ளி, தெய்வானை, சண்முகருக்கு பால்குடம் எடுத்தல் நிகழ்கின்றது. காலையும் இரவும் பஞ்சமூர்த்திகள் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது. இதில் காலை மட்டும் தீர்த்தம் நடைபெறுகின்றது.

**ஆனி** மாதம் 'ஆனித் திருமஞ்சனம்' நடராசர், சிவகாமிக்கு செய்யப்படுகின்றது.

**ஆடி** மாதம் பூர நட்சத்திரத்தன்று இறைவி பூப்படைந்த நிகழ்ச்சி கொண்டாடப்படுகின்றது. அன்று இறைவிக்கு வளையல்களைக் கொண்டு அலங்காரம் செய்யப்பட்டுப் பின்னர் வளையல்கள் சுமங்கலிப் பெண்களுக்கு வழங்கப்படுகின்றன.

**ஆவணி** மாதம் விநாயகர் சதுர்த்தி அன்று குடவரை விநாயகருக்கு அபிசேகம், வழிபாடுகள் நடைபெறுகின்றன. பௌர்ணமி அன்று 'திருப்பாசுர ஏடு எதிரேறிய திருவிழா' நடைபெறுகின்றது. காலையில் அறுபத்துமூன்று நாயன்மார்களுக்கு அபிசேகம் செய்யப்பட்டு வழிபாடுகள் நடைபெறுகின்றன. மாலை திருஞானசம்பந்தர்,

விநாயகர், குலச்சிறையார் ஆகிய மூவருக்கும் நடைபெறும் திருவீதிப் புறப்பாட்டின் பொழுது வைகையாற்றில் எழுந்தருளி 'ஏடு எதிரேறிய நிகழ்ச்சி' நிகழ்த்தப் பெறுகின்றது.

**புரட்டாசி** மாதம் நவராத்திரி ஒன்பது நாட்கள் நடைபெறுகின்றது. பத்தாம் நாள் விசயதசமி அன்று காலை இறைவன் திருவேடகத்திற்கு அருகேயிருக்கும் 'தச்சம்பத்து' என்ற ஊரில் திருக்கோயிலுக்குச் சொந்தமான நந்தவனத்திற்கு எழுந்தருளுகின்றார். இது 'தச்சம்பத்து நந்தவனம் திருக்கண்' என்று வழங்கப்படுகின்றது. இதில் நந்தவனத்தை இறைவன் பார்வையிடுவதாய் ஐதீகம் உள்ளது.[1] மாலை அபிசேகம், அலங்காரம் செய்யப்பட்டு வழிபாடுகள் நடைபெறுகின்றன. இரவு பத்து திசைகளில் அம்பு எய்தல் நிகழ்த்தப் பெறுகின்றது. நவராத்திரித் திருவிழாவில் இறைவி, திருக்கோயிலிலேயே அலங்கரித்து எழுந்தருளல் செய்யப்படுகிறாள். இறைவிக்குத் திருவீதிப் புறப்பாடு கிடையாது. அம்பு எய்தலுக்கு இறைவனின் 'சந்திர சேகரர் செப்புத் திருமேனி' கொண்டு செல்லப்படுகின்றது.

**ஐப்பசி** மாதம் காப்புக் கட்டுதலுடன் தொடங்கும் கந்த சஷ்டி திருவிழாவின் ஆறாம் நாள் சுப்பிரமணியர், வீரபாகு, விநாயகர் திருக்கோயில் எதிரே புறப்பாடு செய்யப்பெற்று சூரசம்காரம் நடைபெறுகின்றது. சூரசம்காரத்தின் பொழுது முருகன் செய்த திருவிளையாடல்களை சிவாச்சாரியார் 'லீலைகள் சொல்லுதல்' என்ற பெயரில் மக்களுக்கு கூறுகின்றார்.[2] சூரசம்காரம் நடந்தால் விசப்பூச்சிகள் அனைத்தும் தொலையும் என்ற நம்பிக்கை அப்பகுதியில் நிலவுவதால் சுற்றிலும் உள்ள மக்கள் அனைவரும் நிகழ்ச்சிக்கு வந்து கலந்து கொள்கின்றனர்.[3] மறுதினம் ஏழாம் நாள் திருக்கல்யாணம் செய்யப்படுகின்றது. பௌர்ணமி அன்று மாலை இறைவனுக்கு அன்னாபிசேகம் நடக்கின்றது. அபிசேகம் செய்யப்பட்ட அன்னம் பக்தர்களுக்குப் பிரசாதமாக வழங்கும் வழக்கம் இத்திருக்கோயிலில் இல்லை. அபிசேகம் செய்த அன்னம் முழுவதும் வைகையாற்றில் சேர்க்கப்படுகின்றது.

**கார்த்திகை** மாதம் இறைவனுக்கு முதல், மூன்றாவது திங்கட்கிழமைகளில் 108 சங்காபிசேகமும் இரண்டு, நான்காவது திங்கட்கிழமைகளில் 1008 சங்காபிசேகமும் நடைபெறுகின்றன. கார்த்திகைத் தீபத் திருநாளன்று இறைவன், இறைவிக்கு முதலில் தீபம் ஏற்றப்படுகின்றது. இதனை 'பொறி தீபம்' என்று வழங்குகின்றனர். பொறி தீபம்

ஏற்றியதும் திருக்கோயில் முழுவதும் லட்ச தீபங்கள் ஏற்றப்படுகின்றன. பின்னர் இறைவன், இறைவி திருக்கோயிலுக்கு வெளியே புறப்பாடு ஆகின்றனர். அங்கு இறைவனுக்கும் இறைவிக்கும் தனித்தனி சொக்கர்ப்பனைகள் ஏற்றப்படுகின்றன. பின்னர் அங்கிருந்து பஞ்சமூர்த்திகள் புறப்பாடு நடைபெறுகின்றது.

**மார்கழி** மாதம் முழுவதும் காலை 4.30 மணிக்குத் 'தனுர் மாத பூசை' நடைபெறுகின்றது. திருவாதிரை பத்து நாட்கள் காப்புக் கட்டுதலோடு தொடங்குகின்றது. முதல் ஒன்பது நாட்கள் மாணிக்கவாசகர் ஆடி வீதிப் புறப்பாடு நிகழ்த்தப்பெறுகின்றது. அப்பொழுது ஆடி வீதியின் எட்டு திசைகளிலும் திருவாசகம் ஓதப்பெறுகின்றது. பத்தாம் நாள் 'ஆருத்ரா தரிசனத்தின்' காலை நடராசர், சிவகாமி, மாணிக்கவாசகர் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகின்றது. 'அட்டமி வலம்வருதல்' அன்று பஞ்சமூர்த்திகள் காலை திருவீதிப் புறப்பாடு செய்யப்பெற்று மாலை திருக்கோயில் வந்தடைவர். அன்றைய தினம் 'எறும்புக்கு அரிசி போடுதல்' நிகழ்ச்சி நடைபெறுகிறது. அனுமன் செயந்தி அன்று இறைவன் சந்நிதி மகா மண்டபத்தின் தூணிலிருக்கும் அனுமனுக்கு அபிசேகம், வழிபாடுகள் நடைபெறுகின்றன.

**தை** மாதம் பூச நட்சத்திரத்தன்று வள்ளி, தெய்வானை, சண்முகருக்கு அபிசேகம், வழிபாடுகள் நடைபெறுகின்றன. இரவு வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகின்றது.

**மாசி** மாதம் மக நட்சத்திரத்தன்று வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகின்றது.

**பங்குனி** மாதம் உத்திரத்தன்று காலை பஞ்சமூர்த்திகள் திருவீதிப் புறப்பாட்டின் பொழுது வைகையாற்றுக்கு எழுந்தருளி தீர்த்தம் நடைபெறுகின்றது. மாலை பஞ்சமூர்த்திகள் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகின்றது.

திருவிழாக்களின் பொழுது இறைவனுக்குக் குறிப்பிட்ட வாகனம் பயன்படுத்தப்படுவது இல்லை. இறைவனைத் தூக்க வருபவர்களின் எண்ணிக்கையைப் பொறுத்து வாகனங்கள் பயன்படுத்தப்படுகின்றன. மேற்கண்ட திருவிழாக்களின் பொழுது நடைபெறும் பஞ்சமூர்த்திகள் திருவீதிப் புறப்பாடுகளில் வைகாசி விசாகத்தன்று வள்ளி, தெய்வானை, சண்முகர் இடம் பெறுகின்றார்.

தை, மாசி மாதங்களில் சில நாட்கள் சூரியனின் ஒளி இறைவன், இறைவியின் மீது விழுகின்றது. இது சூரியன் பூசை செய்யும் ஐதீகமாகக் கருதப்படுகிறது.[4]

மாதாந்திர பிரதோசத்தின் பொழுது ‘பிரதோச நாயகர்’ ஆடி வீதி புறப்பாடு நடைபெறுகின்றது.

சதுர்த்தி அன்று இரவு குடவரை விநாயகருக்கு வழிபாடுகள் நடைபெறுகின்றன. கார்த்திகை அன்று காலை வள்ளி, தெய்வானை, சண்முகருக்கு வழிபாடுகள் நடத்தப்பெறுகின்றன. திருக்கோயில் சார்பாக சஷ்டி நடைபெறுவதில்லை. பைரவருக்கு அட்டமி அன்று பகலில் வழிபாடுகள் செய்யப்படுகின்றன.

இறைவி சந்நிதி உள் திருச்சுற்றில் தன் செவியைக் காட்டியவாறு அமைக்கப்பட்டிருக்கும் ‘செவி சாய்த்த விநாயகர்’ முன்பு வைத்த பிராத்தனைகள் நடக்கும் என்ற நம்பிக்கை உள்ளது.[5]

ஆதி சேடன் வந்து இறைவன், இறைவியை வணங்கியதால் திருமணத் தடை உள்ளவர்கள் இறைவனுக்கும் இறைவிக்கும் அருச்சனை செய்து இறைவி அணிந்த மாலையை வாங்கிச் செல்கின்றனர். மாலையை வாங்கிச் சென்ற நாற்பத்தி எட்டு நாட்களுக்குள் திருமணம் கை கூடுகின்றது. திருமணம் முடிந்ததும் அந்த மாலையை திருக்கோயிலில் சேர்த்து வழிபடுகின்றனர்.[6]

இறைவனின் பெயரான ‘பத்ரிகா பரமேசுவரர்’ என்பதற்கேற்ப அப்பகுதி மக்கள் தங்கள் இல்லங்களில் நடக்கும் திருமணப் பத்திரிக்கைகளை குலதெய்வத்திடம் வைத்து வணங்கிய பின்னர் இறைவனிடம் வைத்து வழிபடுகின்றனர்.[7]

திருக்கோயிலின் பின்புறம் உள்ள மொட்டை மண்டபத்தில் முனீசுவரர் இருப்பதாய் ஐதீகம் உள்ளது. திருக்கோயிலில் பூசை செய்யும் சிவாச்சாரியார்கள் தங்கள் குடும்பங்களில் குழந்தை பிறந்த முப்பதாவது நாள் முனீசுவரரை வழிபடுகின்றனர்.[8]

**திருக்கொடுங்குன்றம்:**

திருக்கொடுங்குன்றத் திருக்கோயிலில் ஆறு காலங்களில் நாள் வழிபாடுகள் நடைபெறுகின்றன. காலை 6 மணி முதல் 6.30 மணி வரை திருவனந்தல், காலை 8 மணி முதல் 8.30 மணி வரை விளா பூசை, காலை 9 மணி முதல் 9.30 மணி வரை காலசந்தி, காலை 11.30 மணி முதல் நண்பகல் 12 மணி வரை உச்சிக்காலம்,

மாலை 5.30 மணி முதல் 6 மணி வரை சாயரட்சை, இரவு 8 மணி முதல் 8.30 மணி வரை அர்த்தசாமம் ஆகிய நாள் வழிபாடுகள் நடைபெறுகின்றன.

திருவனந்தலுக்குப் பால், காலசந்திக்கு வெண்பொங்கல், சம்பா சாதம், பச்சரிசி தோசை, உச்சிக்காலத்திற்குப் புளியோதரை, வடை, சாயரட்சைக்கு சுத்தான்னம், அர்த்தசாமத்திற்கு புளியோதரை, சம்பா சாதம் ஆகியன படைக்கப்படுகின்றன.

மங்கைபாகர் - தேனம்மைக்கு அர்த்தசாமத்தில் தேனும் திணைமாவும் படையல்களாக உள்ளன.

கைலாயத்தில் இருக்கும் மங்கைபாகர் – தேனம்மை திருமணக் கோலத்தில் இருப்பதால் வெள்ளை நிறத் துணி, மலர்களே சாற்றப்படுகிறது. மங்கைபாகர் – தேனம்மைக்கு அபிசேகங்கள் கிடையாது. தைலம் மட்டுமே சாற்றப்படுகிறது. உடையவருக்கு மட்டும் அபிசேகங்கள் உண்டு. பள்ளியறை பூசைக்கு 'பள்ளியறைச் சொக்கநாதர்' எழுந்தருள்கிறார்.

**திருவிழாக்கள்:**

**சித்திரை** மாதம் முதல் நாள் இறைவன், இறைவிக்கு அபிசேகம், வழிபாடுகள் நடைபெறுகின்றன.

சித்திரைத் திருவிழா என்றழைக்கப்படும் 'சித்திரை பிரம்மோற்சவம்' இத்திருக்கோயிலின் பெரிய திருவிழா ஆகும். பத்து நாட்கள் நடைபெறும் சித்திரைத் திருவிழா சித்ரா பௌர்ணமி அன்று தீர்த்தவாரியுடன் நிறைவுபெறுகிறது.

திருக்கொடுங்குன்றத்தின் காவல் தெய்வங்களாக அங்காள பரமேசுவரி, ஐயனார், பிடாரி ஆகியன விளங்குகின்றன. எனவே சித்திரைத் திருவிழா தொடங்குவதற்கு முன்னர் மாசியில் அங்காள பரமேசுவரிக்கும், பங்குனியில் ஐயனார், பிடாரிக்கும் திருவிழாக்கள் எடுக்கப்படுகின்றன.

திருவிழா நடைபெறும் பத்து நாட்களும் இரவு பஞ்சமூர்த்திகள் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது. விநாயகர் மூஞ்சூர் வாகனத்திலும், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் மயில் வாகனத்திலும், சண்டிகேசுவரர் இடப வாகனத்திலும் திருவீதிப் புறப்பாட்டில் இடம் பெறுகின்றனர். காலை, மாலை என இரு வேளைகளிலும் சர தேவர், திருப்பலி நாதரைக் கொண்டு ரத வீதியில் பலி போடுதல் செய்யப்படுகிறது.

சித்திரைத் திருவிழாவின் முதல் நாள் காலை பல்லக்கில் கொடி, சர தேவர், திருப்பலி நாதர் ஆகியோர் திருவீதிப் புறப்பாடு செய்யப்பெற்று கொடியேற்றம் நடைபெறுகிறது. அன்று மாலை யாக சாலை வளர்க்கப்பட்டு, கலச பூசை செய்யப்பட்டு இறைவன், இறைவி, சிவாச்சாரியாருக்குக் காப்புக் கட்டுதல் நடைபெறுகிறது. அதன் பின் இறைவன், இறைவி கேடகத்தில் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகின்றனர்.

இரண்டாம் நாள் இறைவன் நந்தி வாகனத்திலும் இறைவி அன்ன வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகின்றனர். மூன்றாம் நாள் இறைவன், இறைவி கேடகத்தில் திருவீதிப் புறப்பாட்டிற்கு எழுந்தருளுகின்றனர். நான்காம் நாள் பூத வாகனம் இறைவனுக்கும் சிம்ம வாகனம் இறைவிக்கும் திருவீதிப் புறப்பாட்டில் பயன்படுத்தப்படுகின்றன. ஐந்தாம் நாள் காலை இறைவி துரை ராசா மண்டபத்தில் தவக் கோலத்தில் வீற்றிருப்பாள். இறைவன் தரிசனம் கிடைத்தவுடன் அன்று மாலை திருக்கல்யாணம் நடைபெற்றதும் இறைவன் யானை வாகனத்திலும் இறைவி பூப்பல்லக்கிலும் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகின்றனர்.

ஆறாம் நாளின் திருவீதிப் புறப்பாடு, மறுநாள் அதிகாலை நடைபெறுகிறது. இறைவன், இறைவி இடப வாகனத்தில் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகின்றனர்.

ஏழாம் நாள் காலை வள்ளல் பாரி முல்லைக்குத் தேர் கொடுத்தல் நிகழ்த்தப் பெறுகிறது. அன்று சேட வாகனத்தில் இறைவனும் பல்லக்கில் இறைவியும் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர்.

எட்டாம் நாள் காலை நடராசர், சிவகாமி ஆகியோருக்கு அபிசேகம், வழிபாடுகள் நிறைவுற்றதும் இருவரும் திருவீதிப் புறப்பாட்டிற்கு எழுந்தருள்கின்றனர். அன்று இரவு இறைவன் பெரிய குதிரை வாகனத்திலும் இறைவி சின்ன குதிரை வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர்.

ஒன்பதாம் நாள் அதிகாலை புண்யாகவாசனம், ரதம் எழுந்தருளல் செய்யப்பெற்று தேரோட்டம் நடைபெறுகிறது. அன்று இரவு சப்பரத்தில் இறைவன், இறைவி தேர்த்தடம் பார்த்தல் நடைபெறுகிறது.

பத்தாம் நாள் காலை திருப்பலி நாதர், சர தேவரைக் கொண்டு தேனாடித் தீர்த்தத்தில் தீர்த்தவாரி நடைபெறுகிறது.

காலை இறைவன் சப்தாவர்ணத்திலும் இறைவி கேடகத்திலும் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறார்கள். பின்பு மாலை அருகில் உள்ள ஊர்களில் மஞ்சுவிரட்டு நடைபெறும் பழக்கம் இருந்ததை அறிய முடிகிறது.

பத்தாம் நாள் இரவு பஞ்சமூர்த்திகள் பூக்களால் அலங்கரிக்கப்படுவர். மறுநாள் காலை தீப வழிபாடு முடிந்ததும் இறைவன், இறைவிக்கு இடப வாகனத்தில் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது.

பஞ்சமூர்த்திகள் திருக்கோயில் அடைந்ததும் 'திருக்கண்' எனப்படும் திருட்டி களைதல் செய்யப்படுகிறது. இதன் பின் 'மௌன பலி' போடப்படுகிறது. பின்னர் கொடியிறக்கம், காப்புக் களைதல் ஆகியன நடைபெறுகிறது.

சித்திரை மாதம் முதல் வெள்ளிக்கிழமை அன்று 'செயந்தன் பூசை' கொண்டாடப்படுகிறது. அன்று வடுக பைரவருக்கு அபிசேகம், வழிபாடுகள் நிகழ்கின்றன.

**ஆவணி** மாதம் விநாயகர் சதுர்த்தி அன்று மகா கணபதிக்கு அபிசேகம், வழிபாடுகள் நடைபெறுகின்றன. மகா கணபதிக்கு மோதகம், சர்க்கரைப் பொங்கல் படைக்கப்படுகின்றன.

**ஐப்பசி** மாதம் நவராத்திரியின் ஒன்பது நாட்கள் இறைவியை எழுந்தருளச் செய்து தினமும் ஒரு அலங்காரம் செய்யப்படுகிறது. மாலையில் இறைவிக்கு 'கல்ப பூசையும்' துர்க்கைக்கு வழிபாடுகளும் நடைபெறுகின்றன. விசயதசமி அன்று திருக்கொடுங்குன்றத்தில் இருக்கும் மகர நோன்பு பொட்டலில் அம்பு விடுதல் நிகழ்கின்றது.

கந்த சஷ்டியின் பொழுது ஆறு நாட்களும் வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியருக்கு அபிசேகம், வழிபாடுகள் நடைபெறுகின்றன.

ஐப்பசி பௌர்ணமி அன்று இறைவனுக்கு அன்னாபிசேகம் நிகழ்கின்றது.

**கார்த்திகை** மாதம் திங்கட்கிழமைகளில் 'சோமவார பூசை' நடைபெற்று சங்காபிசேகம் செய்யப்படுகிறது. கார்த்திகை தீபத் திருநாள் அன்று மாலை, பூலோகத்திலும் பாதாளத்தில் தேனாடித் தீர்த்தத்தின் அருகிலும் என இரண்டு சொக்கர்பனைகள் வைக்கப்படுகிறது. வெள்ளைத் துணியில் நெற் பொறிகளைக் கட்டி அதை முடித்து பொறிப் பந்து செய்யப்படுகிறது. அதை அகல் சிட்டியில்

நல்லெண்ணெய் ஊற்றி வைக்கின்றனர். இறைவன், இறைவிக்கு பொறி, அப்பம் படைக்கப்பட்டு தீப வழிபாடு செய்யப்படுகிறது. முதலில் பூலோகத்திலும் பின்பு பாதாளத்திலும் பொறிப் பந்தைக் கொண்டு சொக்கர்பனைகள் ஏற்றப்படுகிறது. அதிலிருந்து ரட்சையை சந்திரசேகரருக்கு இட்ட பின் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது.

கார்த்திகை மாதம் வளர்பிறை சஷ்டி அன்று சம்பக சஷ்டி கொண்டாடப்படுகிறது. காலை யாகம் வளர்க்கப்படுகிறது. காலையும் மாலையும் அபிசேகம், வழிபாடுகள் செய்யப்படுகின்றன.

**மாசி** மாதம் மகா சிவராத்திரி அன்று இரவு நான்கு காலங்களாக இறைவனுக்கு அபிசேகத்துடன் வழிபாடுகள் நிகழ்த்தப்பெறுகின்றன.

மாதம்தோறும் சதுர்த்தி அன்று மகா கணபதிக்கு அபிசேகம், வழிபாடுகள் நடக்கின்றன.

அட்டமி அன்று வடுக பைரவருக்கு அபிசேகம், வழிபாடுகள் நடக்கின்றன. பிரதோசத்தினன்று இறைவன் சந்நிதி திருச்சுற்றில் சுற்றி வருதல் செய்யப்படுகிறது.

மங்கைபாகர் - தேனம்மை கல்யாணக் கோலத்தில் அமைந்திருப்பதால் திருமணப்பேறு கிடைக்க வேண்டுதல்கள் செய்யப்படுகின்றன. அப்பகுதி மக்கள் தங்கள் திருமண அழைப்பிதழ்களை முதலில் மங்கைபாகர் - தேனம்மையிடம் வைத்து வணங்கும் பழக்கமும் காணப்படுகிறது. மோட்ச தீபம் ஏற்றும் வழக்கமும் இங்கு உள்ளது.

இசுலாம் மதத்தைச் சார்ந்தவர்கள் இத்திருக்கோயிலில் தீபம் ஏற்றுவதையும் வழிபாடு செய்வதையும் கள ஆய்வில் காண முடிகின்றது.

**தற்காலத்திய மாற்றங்கள்:**

ஆய்வுக் காலத்தில் குடமுழுக்கிற்காகத் திருக்கோயில் ‘பாலாலயம்’ செய்யப்பட்டுள்ளது.

பௌர்ணமி அன்று கிரிவலம் சுற்றுவதையும் காண முடிகின்றது.

**திருப்புத்தூர்:**

திருப்புத்தூர் திருக்கோயிலில் காலை 6.30 மணி முதல் 7 மணி வரை திருவனந்தல், காலை 8.30 மணி முதல் 9 மணி வரை காலசந்தி, மதியம் 12 மணி முதல் 12.30 மணி வரை உச்சிக்காலம், மாலை 5 மணி முதல் 5.30 மணி வரை

சாயரட்சை, 8 மணி முதல் 8.30 மணி வரை அர்த்தசாமம் என ஐந்து காலங்களில் நாள் வழிபாடுகள் நடைபெறுகின்றன.

திருவனந்தலுக்குப் பால், பழம், தாம்பூலம், காலசந்திக்கு சுத்தான்னம், உச்சிக்காலத்திற்கு புளியோதரை, சாயரட்சைக்கு சுத்தான்னம், அர்த்தசாமத்திற்கு சம்பா சாதம் ஆகியன படைக்கப்படுகின்றன.

திருவனந்தலுக்குப் பிறகு விளா பூசை நடைபெற்றுள்ளது. விளா பூசைக்கு வெண்பொங்கல் படைக்கப்பட்டுள்ளது. காலசந்திக்கு தோசை, அப்பம், வெண்பொங்கல், சாயரட்சைக்கு சுண்டல், அர்த்தசாமத்திற்கு சம்பா சாதத்துடன் சுத்தான்னம், வடை ஆகியன படைக்கப்பட்டுள்ளதை அறிய முடிகின்றது.[9]

பள்ளியறைப் பூசைக்கு ‘பள்ளியறை சொக்கநாதர்’ பயன்படுத்தப்படுகிறார். பள்ளியறைப் பூசைக்குரிய திருவடி நிலைகளும் முக்காலியும் திருக்கோயிலில் உள்ளன. பள்ளியறை சொக்கநாதரை, பள்ளியறை முன் எழுந்தருளல் செய்து கமலம் விரித்து அதில் திருவடி நிலைகளை முக்காலி மேல் வைத்து பால், பன்னீர், தேன், மலர்களால் ‘பாத பூசை’ செய்து பின்பு பள்ளியறை சொக்கநாதரை பள்ளியறைக்குள் எழுந்தருளல் செய்துள்ளதை அறிய முடிகிறது.[10]

**திருவிழாக்கள்:**

**சித்திரை** மாதம் முதல் நாள் வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியருக்கு ‘பால்குடம் எடுத்தல்’ நடைபெறுகிறது. திருப்புத்தூரின் கிழக்கு காவல் தெய்வமான கோட்டைக் கருப்பர் திருக்கோயிலிலிருந்து பால்குடங்கள் புறப்பட்டு சாம்பான் ஊருணி, காரைக்குடி சாலை, கீழ ரத வீதி, தெற்கு ரத வீதி, மேற்கு ரத வீதி, வடக்கு ரத வீதி வழியாக திருக்கோயிலை அடைந்து மூன்றாம் திருச்சுற்று சுற்றி வந்து வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் சந்நிதியை அடைகின்றது. பின்னர் பால்குடங்களில் உள்ள பால், அபிசேகம் செய்யப்பெற்று அலங்காரம், வழிபாடுகள் நடைபெறுகின்றன.

பால்குடம் எடுத்தலில் பங்கு கொள்பவர்கள் நாட்களை ஒற்றை இலக்க அடிப்படையில் கொண்டு, இச்சந்நிதி முன்பு காப்புக் கட்டி விரதம் மேற்கொள்வதைக் காண முடிகிறது.

சித்திரை மாதம் வரும் முதல் வெள்ளிக்கிழமை அன்று ‘செயந்தன் பூசை’ கொண்டாடப்படுகிறது. இந்திரனின் மகன் செயந்தன் யோக பைரவரிடம் சாப

விமோசனம் பெற்றதைக் குறிக்கும் வண்ணம் இது நடத்தப்படுகிறது. காலை முதல் நண்பகல் வரை யாகம் செய்யப்பட்டு, யோக பைரவருக்கு அபிசேகம் மற்றும் அலங்காரம் முடிந்ததும் வழிபாடுகள் நடைபெறுகின்றன. இரவு குதிரை வாகனத்தில் யோக பைரவர் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறார்.

யோக பைரவருக்கே உரிய வாகனமாக குதிரை உள்ளதால் திருப்புத்தூர் திருத்தலத்தில் ‘குதிரை வண்டிகள்’ கிடையாது. வீட்டு விசேடங்களின் பொழுதும் மக்கள் குதிரையையோ, குதிரை வண்டியையோ பயன்படுத்துவது இல்லை. இதை ஐதீகமாகத் திருப்புத்தூர் மக்கள் பின்பற்றுவதை நேர்காணலில் அறிய முடிகிறது.[11] செயந்தன் பூசை அன்று மட்டுமே யோக பைரவருக்கு திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது.

‘சித்ரா பௌர்ணமி’ அன்று சாயரட்சைக்குப் பிறகு இறைவிக்கு அபிசேகம் செய்யப்பட்டு வழிபாடுகள் நடக்கின்றன. இறைவிக்குப் படைக்கப்பட்ட ‘பாசிப்பருப்பு பாயாசம்’ பக்தர்களுக்குப் பிரசாதமாக வழங்கப்படுகிறது.

**வைகாசி** மாதம் ‘வைகாசி விசாகப் பெருந்திருவிழா’ பத்து நாட்கள் நடத்தப்படுகிறது. இத்திருவிழா தொடங்குவதற்கு முன்னர், ‘மிருத்சங்கிரகணம்’ சடங்கிற்காக பாலிகைகளில் இடப்படும் மண்ணை சர தேவரைக் கொண்டு சிவாச்சாரியார்கள் எடுத்து வருகிறார்கள். மிருத்சங்கிரகணம் முடிந்ததும் சாந்தி, அனுக்ஞை, விக்னேசுவர பூசை முதலியன யாகம் வளர்க்கப்பட்டு கலசங்களை நிறுவி செய்யப்படுகின்றன.

திருவிழாவின் முதல் நாள் கொடியேற்றத்தன்று காலை சர தேவரை விநாயகருடன் பல்லக்கில் எழுந்தருளச் செய்து கொடி, கொடிக்கயிறு, கலசம், தருப்பைப் புற்கள் ஆகியவற்றுடன் முதல் திருச்சுற்று, திருவீதி வலம் வரும் சடங்கு நடைபெறுகிறது. கொடியேற்றம் செய்யும் முன்னர் கொடிமரம் அருகில் சர தேவரை எழுந்தருளச் செய்து அபிசேகம் செய்யப்படுகிறது. இதன் பின்னர் கொடியேற்றம் நடைபெறுகிறது.

முதல் நாள் இறைவன் சூரிய பிரபையிலும் இறைவி சந்திர பிரபையிலும் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். இரண்டாம் நாள் இறைவனுக்குப் பெரிய வெள்ளிக் கேடகமும் இறைவிக்கு சிறிய வெள்ளிக் கேடகமும் பயன்படுத்தப்படுகின்றன. மூன்றாம்

நாள் திருவீதிப் புறப்பாட்டில் இறைவனுக்குப் பூத வாகனமும் இறைவிக்கு அன்ன வாகனமும் உள்ளன. நான்காம் நாள் காலை இறைவனுக்கு ‘மந்திர நீர் முழுக்காட்டு’ என்னும் வழிபாடு நடைபெற்று, இறைவனுக்குக் கலச தீர்த்தத்தினால் அபிசேகம் செய்யப்படுகிறது. நான்காம் நாள் இறைவன் பெரிய வெள்ளிக் கேடகத்திலும் இறைவி சிறிய வெள்ளிக் கேடகத்திலும் திருவீதிப் புறப்பாடு கண்டு தெற்கு ரத வீதியில் உள்ள மண்டகப்படியினருடைய மண்டபத்திற்கு எழுந்தருளுகின்றனர். சோடசோபசாரம், மண்டகப்படி தீப வழிபாடு முடிந்து அங்கிருந்து திருவீதிப் புறப்பாடு தொடர்கின்றது. ஐந்தாம் நாள் காலை இறைவி தவத்திற்கு எழுந்தருளல், இறைவன் காட்சி கொடுத்தல், திருக்கல்யாணம் ஆகியன நிகழ்த்தப்பெறுகிறது. அன்று இறைவன் யானை வாகனத்திலும் இறைவி பூப்பல்லக்கிலும் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர்.

ஆறாம் நாள் காரைக்குடி சாலையில் அமைந்துள்ள மண்டகப்படியினருடைய இடத்திற்கு எழுந்தருளல் செய்யப்பெற்று, அங்கு சோடசோபசாரம், மண்டகப்படி தீப வழிபாடு நடைபெற்று இறைவனுக்கு பெரிய வெள்ளி இடபத்திலும் இறைவிக்கு சிறிய வெள்ளி இடபத்திலும் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறது. ஏழாம் நாள் இறைவன் கைலாய வாகனத்திலும் இறைவி சிம்ம வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். எட்டாம் நாள் காலை நடராசருக்குத் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறது. அன்று இரவு இறைவன், இறைவி குதிரை வாகனத்தில் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறார்கள். ஒன்பதாம் நாள் அதிகாலை திருத்தேர் எழுந்தருளலும் மாலை தேரோட்டமும் நடைபெறுகிறது. தேரோட்டம் முடிந்ததும் ‘தேர்த்தடம் பார்த்தல்’ நிகழ்த்தப்பெறுகிறது.

பத்தாம் நாள் காலை கலச தீர்த்தத்தினால் இறைவனுக்கு அபிசேகம் நடைபெற்று பின்னர் சர தேவர், பிரதோச நாயகர், இறைவன், இறைவி ஆகியோருக்கு ‘மஞ்சள் நீராட்டு விழா’ நடைபெறுகிறது. பாலிகைகள் கரைக்கப்பட்டு, சர தேவர், பிரதோச நாயகர் ஆகியோர் வெள்ளி இடப வாகனத்தில் சீதளி தீர்த்தத்தில் எழுந்தருளல் செய்யப்படுகின்றனர். சர தேவருக்கு அபிசேகம் செய்து ‘தீர்த்தவாரி’ நடைபெறுகிறது. அன்று இரவு ‘தெப்பம்’ நிகழ்த்தப்பெறுகிறது. வைகாசி விசாகப் பெருந்திருவிழாவின் பத்து நாட்களிலும் இரவு திருவீதிப் புறப்பாட்டில் பஞ்ச மூர்த்திகள் இடம்பெறுகின்றனர்.

30 வருடங்களுக்கு முன்னர் காலை, இரவு என இரு வேளைகளிலும் திருவீதிப் புறப்பாடு நடைபெற்றுள்ளது. நான்காம் நாள் காலை ‘பிட்டுக்கு மண் சுமந்தது’, நான்காம் நாள் மாலை ‘அப்பர் கரையேறியது’ ஆகியன நிகழ்த்தப்பெற்றுள்ளது. ஆதி திருத்தளிநாதர் திருக்கோயிலுக்கு திருநாவுக்கரசர் எழுந்தருளல் செய்யப்பெற்று அபிசேகம், வழிபாடு நடைபெற்றதும் ஓர் ஓடத்தில் திருநாவுக்கரசரை ஆதி திருத்தளிநாதர் திருக்கோயிலுக்கு எதிரே உள்ள சீதளி தீர்த்தத்தின் படித்துறை வழியாக இறக்கி சீதளி மண்டபத்தின் படித்துறை வழியாக ஏற்றி திருக்கோயிலின் முதலாம் திருச்சுற்றில் உள்ள வருண லிங்கத்திற்கு எதிரே எழுந்தருளல் செய்யப்படுவர். பின்னர் ‘தருமிக்குப் பொற்கிழி வழங்குதல்’ நிகழ்த்தப் பெற்றுள்ளதை அறிய முடிகின்றது.[12]

**ஆனி** மாதம் ‘ஆனித் திருமஞ்சனம்’ சாயரட்சைக்குப் பிறகு நிகழ்த்தப்படுகிறது. நடராசரை ஆடல்வல்லான் சந்நிதியின் சபையில் எழுந்தருளல் செய்து அபிசேகம் நடைபெறுகிறது. ஆடல்வல்லான், சிவகாமி, நந்திதேவருக்கு அலங்காரம் செய்து வழிபாடுகள் நடைபெறுகின்றன.

**ஆடி** மாதம் ‘பதினெட்டாம் பெருக்கு’ அன்று இறைவன், இறைவிக்கு அபிசேகமும் வழிபாடுகளும் நடைபெறுகின்றன. ‘ஆடிப் பூரம்’ அன்று சாயரட்சைக்குப் பிறகு இறைவிக்கு அபிசேகம் செய்யப்பெற்று, வளையல்களால் அலங்காரம் நடைபெறுகிறது. இறைவிக்குச் சாற்றப்பட்ட வளையல்கள் குங்குமத்துடன் பிரசாதமாக வழங்கப்படுகிறது.

**ஆவணி** மாதம் ‘விநாயகர் சதுர்த்தி’ அன்று உச்சிக்காலத்தில் வன்னி மரத்தடி விநாயகருக்கு அபிசேகமும் வழிபாடும் நடைபெறுகின்றன. மாலை மூஞ்சூர் வாகனத்தில் விநாயகர் திருவீதிப் புறப்பாடு கண்டருள்கின்றார்.

**புரட்டாசி** மாதம் சனிக்கிழமைகளுக்குத் தனி கட்டளைகள் கிடையாது.

**ஐப்பசி** மாதம் நவராத்திரியின் பொழுது திருநாள் மண்டபத்தில் கொலு வைக்கப்படுகிறது. சாயரட்சை முடிந்து இறைவிக்கு அபிசேகம், சிறப்பு அலங்காரம் செய்யப்படுகிறது. திருநாள் மண்டபத்தில் எழுந்தருளல் செய்யப்பட்டிருக்கும் இறைவியின் உற்சவருக்கு நாள்தோறும் வெவ்வேறு அலங்காரம் செய்து,

சோடசோபசாரம் நிகழ்த்தப்பெற்று தீப வழிபாடு நடக்கிறது. விசயதசமி அன்று கீழ ரத வீதியில் நான்கு திசைகளில் ‘அம்பு போடுதல்’ நிகழ்த்தப்பெறுகிறது.

‘கந்த சஷ்டி விழா’ ஆறு நாட்கள் நடைபெறுகிறது. மாலையில் வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியருக்கு அபிசேகம், வழிபாடு முடிந்ததும் திருநாள் மண்டபத்தில் எழுந்தருளியுள்ள உற்சவருக்கு சிறப்பு அலங்காரத்தில் சோடசோபசாரத்தைத் தொடர்ந்து தீப வழிபாடு செய்யப்படுகிறது. கந்த சஷ்டி விழாவின் ஐந்தாம் நாள் ‘சண்முகார்ச்சனை’ நிகழ்த்தப்படுகிறது. அன்று மாலை கீழ ரத வீதியில் ‘சூரசம்காரம்’ நடைபெறுகிறது. சூரசம்காரம் முடிந்ததும் சுப்பிரமணியர் திருவீதி வலம் வந்து திருக்கோயில் அடைகிறார். ஆறாம் நாள் காலை சுப்பிரமணியருக்கும் தெய்வானைக்கும் திருக்கல்யாணம் செய்யப்படுகிறது. இத்திருக்கோயிலில் வள்ளிக்கு திருக்கல்யாணம் நடைபெறுவதில்லை.

‘அன்னாபிசேகம்’ பௌர்ணமி அன்று உச்சிக்காலத்தில் இறைவனுக்கு செய்யப்படுகிறது. முதலில் அபிசேகப் பொருட்களைக் கொண்டு அபிசேகம் செய்து, பின்னர் அன்னத்தால் அபிசேகம் நடைபெறுகிறது. அபிசேகம் செய்யப்பட்ட அன்னத்தைக் கொண்டு இறைவன் அலங்கரிக்கப்படுகிறான். தீப வழிபாடு முடிந்ததும் அபிசேகம் செய்யப்பட்ட அன்னத்தில் சிறிதளவு சீதளி தீர்த்தத்தில் கரைக்கப்படுகிறது. மீதம் உள்ளவை தயிர் சாதமாகவும் புளியோதரையாகவும் செய்யப்பட்டு பக்தர்களுக்குப் பிரசாதமாக வழங்கப்படுகிறது.

**கார்த்திகை** மாதம் வரும் திங்கட்கிழமைகளில் நூற்றியெட்டு சங்காபிசேகம் இறைவனுக்குச் செய்யப்படுகிறது. கார்த்திகைத் தீபத் திருநாள் அன்று இறைவன், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியருக்கு அபிசேகம், வழிபாடுகள் நடைபெறுகின்றன. திருவீதிப் புறப்பாட்டின் பொழுது பருத்தி விதையை வெள்ளைத் துணியில் சுற்றி பந்து போல் கட்டப்படுகிறது. இது ‘பருத்திப் பந்து’ என்று அழைக்கப்படுகிறது. பருத்திப் பந்து, தீவெட்டிகள் ஆகியன திருவீதிப் புறப்பாட்டின் பொழுது இறைவன் முன் வைத்து வழிபடப்படுகின்றன. எண்ணெயில் தோய்த்த பருத்திப் பந்தை ஏற்றி அதைக் கொண்டு உற்சவ விநாயகர், இறைவன், இறைவி, திருநாள் மண்டபத்தின் எதிரே எழுந்தருளியிருக்கும் இறைவனின் சந்திரசேகரர் உற்சவருக்கு தீப வழிபாடு காட்டப்படுகிறது.

பின்னர் பருத்திப் பந்தை வைத்து சொக்கர்பனை ஏற்றப்படுகிறது. எரிந்த சொக்கர்பனையில் இருந்து ரட்சை சந்திரசேகரருக்கு சாற்றப்பெற்று திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது. கார்த்திகை தீபத் திருநாள் அன்று மயில் வாகனத்தில் சுப்பிரமணியர் திருக்கோயில் சுற்றி வருகிறார்.

இத்திருக்கோயிலுக்கே உரிய சிறப்பாக ‘சம்பக சஷ்டி விழா’ நடத்தப்பெறுகிறது. கார்த்திகை மாதம் வளர்பிறை பிரதமை திதி அன்று தொடங்கி சஷ்டி திதி அன்று இவ்விழா நிறைவடைகிறது. சம்பகாசுர வதத்தை நினைவு கூறும் வண்ணம் நடத்தப்பெறும் இவ்விழாவின் ஆறு நாட்களிலும் காலை, மாலை என இரு வேளைகளிலும் யாகம், அபிசேகம், வழிபாடுகள் நடைபெறுகின்றன. 20 வருடங்களுக்கு மேலாக சம்பக சஷ்டி விழா கொண்டாடப்படுகிறது.

**மார்கழி** மாதம் வைகுண்ட ஏகாதசி அன்று காலை 4.30 மணிக்கு யோக நாராயணர், தாயார், சக்கரத்தாழ்வார், பிரம்ம ரிசி ஆகியோருக்கு அபிசேகம், வழிபாடுகள் செய்யப்படுகின்றன. மூன்றாம் திருச்சுற்றின் வடக்குப் பகுதியில் உள்ள சொர்க்கவாசல் திறக்கப்பட்டு சீதேவி, பூதேவி, யோக நாராயணர் சந்நிதித் தெரு வழியாக கொண்டு செல்லப்பட்டு திருவீதிப் புறப்பாடு கண்டருளுவர். இத்திருக்கோயிலில் வைகுண்ட ஏகாதசி நிறைவடைந்ததும் கீழ ரத வீதியில் அமைந்துள்ள சீதேவி, பூதேவி உடனாய திருநின்ற நாராயணப் பெருமாள் திருக்கோயிலில் சொர்க்க வாசல் திறக்கப்படுவது ஐதீகமாய் உள்ளது.

‘ஆருத்ரா தரிசனம்’ அன்று காலை 4.30 மணிக்கு திருநாள் மண்டபத்தில் எழுந்தருளல் செய்யப்பட்டுள்ள நடராசர், சிவகாமிக்கு அபிசேகம், அலங்காரம், சோடசோபசாரம், தீப வழிபாடு நடக்கின்றன. இதனையடுத்து ஆடல்வல்லான், சிவகாமி, நந்திதேவர் ஆகியோருக்கு தீப வழபாடு செய்யப்படுகிறது. பின்னர் நடராசர், சிவகாமி திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர்.

ஐம்பது வருடங்களுக்கு முன்னர் ஆருத்ரா தரிசனம் அன்று அதிகாலை நடராசர், சிவகாமி சிவகங்கை தீர்த்தத்தின் அருகே அமைந்துள்ள ‘திருவாதிரை மண்டபத்திற்கு’ எழுந்தருளல் செய்யப்பட்டு அபிசேகம், வழிபாடுகள், திருவீதிப் புறப்பாடு ஆகியன நடைபெற்றுள்ளதை அறிய முடிகின்றது.[13]

**தை** மாதம் பூசத்தினன்று சாயரட்சைக்குப் பிறகு வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியருக்கு அபிசேகம், வழிபாடுகள் நடைபெற்றதும் சுப்பிரமணியர் திருக்கோயிலைச் சுற்றி வருகிறார்.

தை பூசத்தின் பொழுது பாத யாத்திரைக்குப் பக்தர்கள் செல்வதால் அன்று திருவீதிப் புறப்பாடு நிகழ்த்தப்பெறுவது இல்லை. தை பூசத்திற்கு முதலில் வரும் மாதாந்திர சஷ்டி அன்று வெள்ளிக் கேடகத்தில் வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியருக்கு திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறது.

**மாசி** மாதம் மக நட்சத்திரத்தன்று காலசந்திக்குப் பிறகு இறைவன், இறைவிக்கு அபிசேகமும், வழிபாடுகளும் நடைபெறுகின்றன.

**பங்குனி** மாதம் உத்திர நட்சத்திரத்தன்று சாயரட்சைக்குப் பிறகு வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியருக்கு அபிசேகம், வழிபாடுகள் நிறைவடைந்ததும் சுப்பிரமணியர் திருவீதி வலம் வருவதைக் காண முடிகிறது.

மாதம் தோறும் சில விழாக்கள் இத்திருக்கோயிலில் நடைபெறுகின்றன. சங்கடகர சதுர்த்தி, சுக்ல சதுர்த்தி என இரண்டு சதுர்த்திகளும் கொண்டாடப்படுகின்றன. சாயரட்சைக்குப் பிறகு வன்னி மரத்தடி விநாயகருக்கு அபிசேகம், வழிபாடுகள் செய்யப்படுகின்றன. பின்னர் விநாயகர் மூஞ்சூர் வாகனத்தில் திருக்கோயிலைச் சுற்றி வருகிறார்.

கார்த்திகை, சஷ்டி அன்று சாயரட்சைக்குப் பிறகு வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியருக்கு அபிசேகம், வழிபாடுகள் முடிந்ததும் சுப்பிரமணியர் திருக்கோயில் சுற்றி வருதல் செய்யப்படுகிறது.

யோக பைரவருக்கு வளர்பிறை, தேய்பிறை அட்டமி சிறப்பாக நடைபெறுகிறது. தேய்பிறை அட்டமி அன்று யாகம் வளர்க்கப்பட்டு உச்சிக்காலத்தில் அபிசேகமும் வழிபாடுகளும் நடைபெறுகின்றன. வளர்பிறை அட்டமி அன்று அபிசேகம், வழிபாடுகள் செய்யப்படுகின்றன.

பிரதோசத்தின் அன்று அபிசேகம், வழிபாடுகள் முடிந்ததும் வெள்ளி இடப வாகனத்தில் திருக்கோயில் சுற்றி வருதலும் பக்தர்களால் 'சோம சூத்திர வலம்வருதலும்' செய்யப்படுகிறது.

பௌர்ணமி அன்று சாயரட்சைக்குப் பிறகு இறைவிக்கு அபிசேகம், வழிபாடுகள் செய்யப்பட்டு பாசிப் பருப்பு பாயாசம் படைக்கப்பட்டு பக்தர்களுக்கு வழங்கப்படுகிறது.

வேண்டுதல்கள் நிறைவேற வன்னி மரத்தடி விநாயகருக்கு முழுத்தேங்காயால் ஆன மாலை சாற்றப்படுகிறது. குழந்தைப்பேறு, தொலைந்த பொருட்களைத் திரும்பப் பெறல், திருமணப்பேறு போன்றனவற்றுக்கு யோக பைரவரிடம் வேண்டுதல்கள் செய்யப்படுகின்றன. யோக பைரவருக்கு தொட்டில் கட்டுதல், புணுகு சாற்றுதல், நாய், குதிரை பொம்மை சமர்ப்பித்தல், வடை மாலை போடுதல் ஆகிய வழக்கங்களும் காணப்படுகின்றன. பிள்ளைகளுக்கு யோக பைரவரின் பெயரை வைப்பதும், முடி காணிக்கை செலுத்துவதையும் காணமுடிகின்றது.

**தற்காலத்திய மாற்றங்கள்:**

விசயதசமி அன்று சந்நிதித் தெருவில் நடைபெற்று வந்த அம்பு எய்தல் 2018ஆம் ஆண்டிலிருந்து கீழ ரத வீதியில் நடைபெறுகிறது.

2014ஆம் ஆண்டிலிருந்து கந்த சஷ்டி விழாவில் திருக்கல்யாணம் வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் சந்நிதி முன்பு நிகழ்த்தப்பெறுகிறது. இதற்கு முன்பு திருக்கல்யாணம் திருநாள் மண்டபத்தின் எதிரே நடைபெற்றது.

**திருப்புனவாயில்:**

இத்திருக்கோயிலில் ஆறு வேளைகளில் நாள் வழிபாடுகள் நடைபெறுகின்றன. காலை 6 மணிக்கு திருவனந்தல், காலை 6.30 மணிக்கு விளா பூசை, காலை 9 மணிக்கு காலசந்தி, காலை 11.30 மணிக்கு உச்சிக்காலம், மாலை 5.30 மணிக்கு சாயரட்சை, இரவு 8.30 மணிக்கு அர்த்தசாமம் ஆகியன நடைபெறுகின்றன.

பள்ளியறைக்கு இறைவனின் திருவடி நிலைகள் எடுத்துச்செல்லப்படுகின்றது.

**திருவிழாக்கள்:**

நட்சத்திரத்தின் அடிப்படையில் இத்திருக்கோயிலில் திருவிழாக்கள் கொண்டாடப்படுகின்றன.

**சித்திரை** மாதம் முதல் நாள் வருடப்பிறப்பு அன்று இறைவன், இறைவிக்கு அபிசேகம் செய்து தீப வழிபாடு நிகழ்கின்றது.

**வைகாசி** மாதம் 'வைகாசிப் பெருந்திருவிழா' பதினோரு நாட்கள் கொண்டாடப்படுகின்றது. திருவிழா தொடங்குவதற்கு முன்தினம் மாலை அனுக்ஞை, விக்னேசுவர பூசை, சாந்தி, மிருத்சங்கிரகணம் ஆகியன நடைபெறுகின்றன.

முதல் நாள் காலை கொடியேற்றம் செய்து அன்று இரவு கற்பக விருட்ச வாகனத்தில் இறைவன், இறைவி திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். இரண்டாம் நாள்

காலை கற்பக விருட்ச வாகனத்திலும் இரவு கேடகத்திலும் திருவீதிப் புறப்பாடு நிகழ்கின்றது. மூன்றாம் நாள் காலை கேடகத்திலும் இரவு பூத வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகின்றது. நான்காம் நாள் காலை பூத வாகனத்தில் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது. அன்று இரவு கேடகத்தில் இறைவன், இறைவிக்கு திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறது. ஐந்தாம் நாள் காலை இடப வாகனத்தில் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது. அன்று மாலை இறைவன், இறைவி திருக்கல்யாணம் நடைபெறுகிறது. இரவு யானை வாகனத்தில் இறைவன், இறைவி திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். ஆறாம் நாள் காலை கேடகத்திலும் இரவு இடப வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறது. ஏழாம் நாள் காலை கேடகத்திலும், இரவு இறைவன் கைலாய பருவத வாகனத்திலும் இறைவி சிம்ம வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு நிகழ்கின்றது. எட்டாம் நாள் மாலை பாரி வேட்டையும் இரவு குதிரை வாகனத்தில் இறைவனும், சிம்ம வாகனத்தில் இறைவியும் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். ஒன்பதாம் நாள் காலை சூரிய உதயத்திற்கு முன் பிரம்ம முகூர்த்தத்தில் இறைவன், இறைவி தேரில் எழுந்தருள்கின்றனர். காலையில் தேரோட்டம் நடைபெற்று அன்று இரவு கேடகத்தில் இறைவன் இறைவி திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். பத்தாம் நாள் காலை சப்தாவர்ணத்தில் இறைவன், இறைவி திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகின்றனர். பதினோறாம் நாள் இரவு சிவகங்கை தீர்த்தத்தில் தெப்பம் நடைபெறுகிறது. பதினோரு நாட்களும் பஞ்சமூர்த்திகளாக திருவீதிப் புறப்பாடு நடைபெறுகின்றது. இத்திருக்கோயிலில் இறைவன், இறைவி, சண்டிகேசுவரர் ஆகிய மூவருக்கும் தனித்தனி வெள்ளி இடப வாகனம் உள்ளன.

**ஆனி** மாதம் நடராசருக்கு ‘ஆனித் திருமஞ்சனம்’ நடைபெற்று திருவீதிப் புறப்பாடு நிகழ்கின்றது.

**ஆடி** மாதம் அமாவாசையன்று இரவு இறைவன், இறைவி திருவீதிப் புறப்பாடு நிகழ்கின்றது.

**ஆவணி** மாதம் விநாயகர் சதுர்த்தி விழா நடைபெறுகின்றது. ஆகண்டல விநாயகருக்கு சிறப்பு அபிசேகம், தீப வழிபாடு நடைபெறுகின்றன. கோகுலாட்டமி அன்று கோட்ட மகாவிட்ணுவிற்கு அபிசேகம் செய்யப்பட்டு தீப வழிபாடு நிகழ்த்தப்பெறுகின்றது.

**புரட்டாசி** மாதம் நவராத்திரியில் இறைவி பெரியநாயகிக்கு ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு அலங்காரங்கள் செய்யப்பட்டு சிறப்பாக கொண்டாடப்படுகின்றன.

**ஐப்பசி** மாதம் ஆறு நாட்கள் முருகனுக்கு கந்த சஷ்டி விழா நடைபெறுகின்றது. சுவாதி நட்சத்திரத்தில் இறைவனுக்கு அன்னாபிசேகம் செய்யப்படுகிறது.

**கார்த்திகை** மாதம் திங்கட்கிழமைகளில் 1008 சங்குகள் வைத்து இறைவனுக்கு சிறப்பு அபிசேகம் நடைபெறுகின்றது. கார்த்திகை நட்சத்திரத்தன்று கார்த்திகை தீபத் திருநாள் அன்று சொக்கர்பனை ஏற்றப்படுகிறது.

**மார்கழி** மாதத்தில் மாணிக்கவாசகருக்கு பத்து நாட்கள் விழாவும் திருவாதிரையன்று நடராசருக்கு சிறப்பு அபிசேகங்கள் செய்யப்பெற்று பின்னர் தீப வழிபாடு நிகழ்த்தப்பெறுகின்றது. அன்று இரவு நடராசர் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறார். வைகுண்ட ஏகாதசியன்று கோட்டத்தில் இருக்கும் மகாவிட்ணுவிற்கு சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன.

**தை** மாதம் மகர சங்கராந்தி, பூச நட்சத்திரம், அமாவாசை ஆகியன சிறப்பாகக் கொண்டாடப்பெறுகின்றன. தைபூசம் அன்று வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியருக்கு சிறப்பு அபிசேகம், தீப வழிபாடு நிகழ்த்தப்பெறுகின்றன. தை அமாவாசையன்று இறைவன், இறைவிக்கு அபிசேகம், தீப வழிபாடுகள் செய்யப்பட்டு திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது.

**மாசி** மாதம் மகா சிவராத்திரியில் நான்கு காலங்களாக அபிசேகங்கள் செய்யப்படுகின்றன. முதற்கால வேளையில் மட்டும் 108 சங்குகள் வைத்து இறைவனுக்கு அபிசேகம் நடைபெறுகிறது.

**பங்குனி** உத்திரத்தில் வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியருக்கு அபிசேகங்கள் நிகழ்த்தப்பெறுகின்றன.

இத்திருத்தல மக்கள் முதன்மையாக இறைவி திருக்கோயிலின் மொட்டைக் கோபுரத்தில் வீற்றிருக்கும் குடவரைக் காளியை வணங்குகின்றனர். தங்கள் இல்லங்களில் நடக்கும் விசேடங்களாயினும் திருக்கோயிலில் நடக்கும் திருவிழாக்களாயினும் முதலில் குடவரைக் காளிக்கு ‘காளியம்மன் சிறப்பு’ என்ற வழிபாட்டை நிகழ்த்திய பின்னரே தொடங்குகின்றனர். திருவிழாக்களின் பொழுதும் தனிநபர் வழிபாட்டின் பொழுதும் குடவரைக் காளிக்கு சைவப் பொருட்களையே

படைக்கின்றனர். கிழக்கு ரத வீதியில் இக்குடவரைக் காளியின் வடிவாய்க் கருதப்படுகின்ற குடவரைக் காளியம்மனுக்கே அசைவப் பொருட்கள் படைக்கப்படுகின்றன.[14]

குழந்தைப்பேறு இல்லாதவர்கள் குடவரைக் காளியை வணங்கிக் குழந்தைப்பேறு கிட்டியதும் தொட்டில், வளையல், மஞ்சளினால் செய்த தாலி ஆகியனவற்றைக் கட்டி வழிபடுகின்றனர். இதே போல் திருமணத்தடை நீங்கவும் வழிபாடுகள் நடத்தப்பெறுகின்றன. இத்திருத்தலத்திற்குள் இறைவனுடைய அனுமதியின்றி யமனும் அவனுடைய தூதர்களும் நுழைய மாட்டார்கள் என்று நம்பப்படுகின்றது. எனவே இத்திருக்கோயிலில் நடக்கும் எந்த பூசைகள், வழிபாடுகள், திருவிழாக்களுக்கும் இராகு காலம், எமகண்டம் பார்க்கப்படுவதில்லை. ஞாயிற்றுக்கிழமை 4.30 மணி முதல் 6 மணி வரையான இராகு கால வழிபாடுகளும், இராகு-கேது பெயர்ச்சி ஆகியனவும் நிகழ்த்தப்பெறுவதில்லை.[15]

அகத்தியர் இங்கு தவ நிலையில் முனீசுவரராக வழிபடப்படுகின்றார். இவர் திங்கட்கிழமை மட்டும் தவ நிலையில் இருந்து கலைவதால் அன்றொரு நாள் மட்டுமே பூசைகள் செய்யப்படுகின்றன.[16]

மேற்கூறிய திருவிழாக்களைத் தவிர மாதாந்திர வழிபாடுகளான சதுர்த்தி ஆகண்டல விநாயகருக்கும், சஷ்டி, கார்த்திகை வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியருக்கும், வளர்பிறை, தேய்பிறை அட்டமிகள் பைரவருக்கும், பிரதோசம், செவ்வாய், வெள்ளி வழிபாடுகள் குடவரைக் காளிக்கும் பௌர்ணமி பூசை இறைவிக்கும் நடைபெறுகின்றன.

**தற்காலத்திய மாற்றங்கள்:**

திருக்கோயிலுக்கு வழங்கப்படும் பத்து தீர்த்தங்களில் தற்காலத்து எஞ்சியுள்ளவை ஏழு மட்டுமே. திருக்கோயிலுக்கு அருகாமையில் இருக்கும் சூரிய தீர்த்தமும் சந்திர தீர்த்தமும் தற்பொழுது காணப்படவில்லை. திருப்புனவாயிலுக்கு அருகேயிருக்கும் ஊரான கல்யாணபுரத்திலிருக்கும் கல்யாண தீர்த்தமும் அதன் அருகேயுள்ள திருக்கோயிலும் ஆற்று வெள்ளத்தால் அழிந்து போயுள்ளன. தற்காலத்து அங்கே திருக்கோயில் கட்டுவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இராசகோபுரத்திற்கு முன்னால் உள்ள மேற்கூரை, நந்தி இருக்கும் பகுதியின்

மேற்கூரை, இறைவி சந்நிதிக்கு முன்னர் இருக்கும் மேற்கூரை ஆகியன தற்காலத்திய திருப்பணிகள் ஆகும்.

திருச்சுற்றின் தெற்குப் பகுதியில் உள்ள அறுபத்துமூன்று நாயன்மார்கள் உள்ளிட்ட சிலைகள் உள்ள சந்நிதி 2015ஆம் ஆண்டு நடந்த குடமுழுக்கின் பொழுது கட்டப்பட்டுள்ளது. பஞ்சவிநாயகர் சந்நிதி, சதுர்முகலிங்க சந்நிதி, நவகிரக சந்நிதி ஆகியனவற்றின் ஓட்டிலான மேற்கூரை தற்காலத்திய திருப்பணிகளாகும். வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் சந்நிதியின் முன் மண்டபம் தற்காலத்தில் கட்டப்பட்டதாகும்.

தனியாரால் திருக்கோயிலுக்கு வெளியேயிருக்கும் அன்னதானக் கூடத்தில் 2016ஆம் ஆண்டிலிருந்து பக்தர்களுக்கு அன்னதானம் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது.

**திருவாடானை:**

திருவாடானை திருக்கோயிலில் பூசை செய்யும் சிவாச்சாரியார்கள் பதினெட்டு தலைமுறைகளுக்கும் மேலாக இந்தப் பணியைச் செய்து வருவதை அறிய முடிகின்றது.[17]

காலை 6 மணி முதல் 7 மணிக்குள் திருவனந்தல், விளா பூசை, காலை 10 மணி முதல் 10.30 மணிக்குள் காலசந்தி, காலை 11.30 மணி முதல் நண்பகல் 12.00 மணி வரை உச்சிக்காலம், மாலை 4 மணி முதல் 5 மணிக்குள் சாயரட்சை, இரவு 7.45 மணி முதல் 08.15 மணிக்குள் அர்த்தசாமம் என ஆறு காலங்களில் நாள் வழிபாடுகள் செய்யப்படுகின்றன.

நாள் வழிபாடுகளின் பொழுது தனித்துவமான பிரசாதங்கள் படைக்கப்படுகின்றன. காலை பள்ளியறைக்குச் சக்கரை கலந்த அவல், பால், காலை அபிசேகத்திற்கு சுத்தான்னம், திருவனந்தல், விளா பூசை முடிந்ததும் வெண்பொங்கல், தோசை, காலசந்திக்கு வெண்பொங்கல், உச்சிக்காலத்திற்கு சுத்தான்னம், வெஞ்சனம், பருப்பு ஆகியன படைக்கப்படுகின்றன. இறைவனுக்கு சாயரட்சையில் புளியோதரை படைக்கப்படுகின்றது. இறைவிக்கு ‘திரிசதி’ எனப்படும் குங்குமத்தாலான 308 அருச்சனைகள் நிறைவுற்றதும் புளியோதரை, பாசிப்பருப்பு பாயாசம், கடலைப் பருப்பு சுண்டல் படைக்கப்படுகின்றன. அரிசி மாவை இடித்து அப்பம், உளுத்தம் பருப்பு வடை, மிளகு சாதம் எனப்படும் சம்பா சாதம் அர்த்தசாமத்திற்கான படையல் ஆகும்.

பள்ளியறை பூசைக்கு பால், ஏலம், கிராம்பு ஆகியன சேர்க்கப்பட்ட 'விசேட தாம்பூலம்' படைக்கப்படுகின்றன.

**திருவிழாக்கள்:**

**சித்திரை** மாதம் முதல் நாள் இறைவன், இறைவிக்கு அபிசேகம் நடைபெறுகின்றது. அன்று கொடிமரம் சிறப்பாக அலங்கரிக்கப்பட்டு அங்கே பஞ்சாங்கம் படித்தல் நடைபெறுகிறது. திருவாடானை திருத்தலத்தில் இருக்கும் இத்திருக்கோயிலைச் சார்ந்த மாரியம்மன் திருக்கோயிலில் பக்தர்களால் பால்குடம் எடுக்கப்படுகிறது. சித்ரா பௌர்ணமி அன்று இறைவிக்கு 1008 திருவிளக்கு பூசை, அபிசேகம் நிகழ்த்தப்படுகிறது.

**வைகாசி** மாதம் இத்திருக்கோயிலில் இறைவனுக்கான பெரிய திருவிழா நடைபெறுகிறது. இது 'வைகாசி விசாகப் பெருவிழா' என்று வழங்கப்படுகின்றது. பத்து நாட்கள் நடைபெறும் இத்திருவிழா அனுக்ஞை, விக்னேசுவர பூசை, சாந்தியுடன் தொடங்குகிறது. திருவிழாவின் முதல் நாள் கொடியேற்றம் செய்யப்படுகிறது. அன்று இரவு இந்திர விமானத்தில் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகின்றது. இரண்டாம் நாள் காலை கேடகத்திலும் இரவு பல்லக்கிலும் திருவீதிப் புறப்பாடு நிகழ்கின்றது. மூன்றாம் நாள் முதல் ஏழாம் நாள் வரை காலை பல்லக்கில் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகின்றது. மூன்றாம் நாள் பூத வாகனம், நான்காம் நாள் கையிலாய வாகனம், ஐந்தாம் நாள் யானை வாகனம், ஆறாம் நாள் வெள்ளி இடப வாகனம், ஏழாம் நாள் இந்திர விமானம் ஆகிய வாகனங்கள் இரவு திருவீதிப் புறப்பாட்டில் பயன்படுத்தப்படுகின்றன. எட்டாம் நாள் காலை கேடகத்திலும் இரவு குதிரை வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது. ஒன்பதாம் நாள் காலை இறைவன், இறைவி 'மகாரதம் எழுந்தருளல்' செய்யப்பெற்று மாலையில் தேரோட்டம் நடைபெறுகின்றது. பத்தாம் நாள் விசாக நட்சத்திரத்தன்று காலை வருண தீர்த்தத்தில் தீர்த்தவாரியும் இரவு 10 மணிக்கு விசேட அபிசேகம், தீபாராதனைகள் செய்யப்பட்டு வெள்ளி இடப வாகனத்தில் திருவீதிப் புறப்பாடும் செய்யப்படுகிறது. பத்தாம் நாள் தவிர ஏனைய நாட்களில் 10 மணிக்குள்ளாக 'சேர்க்கை சேர்தல்' செய்யப்படுகின்றது. பத்து நாட்களும் பஞ்சமூர்த்திகள் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர்.

**ஆனி** மாதம் ‘ஆனித் திருமஞ்சனம்’ அன்று காலை நடராசர், சிவகாமி, மாணிக்கவாசகருக்கு அபிசேகம் செய்யப்பட்டு இறைவன் சந்நிதி மகா மண்டபத்தில் எழுந்தருளல் முடிந்ததும் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகின்றது. காலை 07.00 மணி முதல் திருவாசகம் முற்றோதல், 27 நட்சத்திரத்திற்கு உரிய மரக் கன்றுகள் நடப்படுகின்றன.

**ஆடி** மாதத்தில் இறைவிக்குப் பெரிய திருவிழாவான ‘ஆடிப்பூரப் பெருவிழா’ ஒன்பது நாட்கள் நடைபெறுகிறது. திருவிழா தொடங்குவதற்கு முன்தினம் காலை அனுக்ஞை, விக்னேசுவர பூசையும் இரவு 6.30 மணியிலிருந்து 7.30 மணிக்குள் சாந்தி செய்யப்படுகிறது.

திருவிழாவின் முதல் நாள் காலை கொடியேற்றம் நடைபெறுகிறது. இரவு கேடகத்தில் திருவீதிப் புறப்பாடு நிகழ்கின்றது. இரண்டாம் நாள் காலை கேடகத்திலும் இரவு பல்லக்கிலும் திருவீதிப் புறப்பாடு நிகழ்கின்றது. மூன்றாம் நாள் காலை பல்லக்கிலும் இரவு காமதேனு வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது. நான்காம் நாள் காலை பல்லக்கு, இரவு அன்ன வாகனம் ஆகியவற்றில் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறது. ஐந்தாம் நாள் காலை பல்லக்கும் இரவு கிளி வாகனமும் திருவீதிப் புறப்பாட்டிற்கு பயன்படுத்தப்படுகின்றன. ஆறாம் நாள் காலை சிவ பூசை அலங்காரத்தில் பல்லக்கிலும் இரவு வெள்ளி இடப வாகனத்தில் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகின்றன. ஏழாம் நாள் காலை ‘வெண்ணெய்த் தாழி சேவை’ அலங்காரத்தில் பல்லக்கிலும் இரவு ‘கமலக் கேடகம்’ என்னும் தனித்துவமான வாகனத்தில் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகின்றது. எட்டாம் நாள் காலை பல்லக்கும் இரவு குதிரை வாகனமும் திருவீதிப் புறப்பாட்டின் பொழுது பயன்படுத்தப்படுகின்றன. ஒன்பதாம் நாள் பூர நட்சத்திரத்தில் காலை இறைவி ‘மகாரதம் எழுந்தருளல்’, மாலை தேரோட்டம் நடைபெறுகின்றன. தேரோட்டத்தின் பொழுது இறைவி அதற்குரிய தேரிலும் விநாயகர் சப்பரத்திலும் வருவர். பத்தாம் நாள் தீர்த்தவாரியைத் தொடர்ந்து யாக சாலையில் உள்ள கும்பங்களைக் கொண்டு யாக கும்பாபிசேகம் நடைபெறுகின்றது. இரவு ‘திக்கு விசயம்’ முதல் சுற்றில் நடைபெறுகிறது. இரண்டாவது சுற்றில் இறைவன் இடப வாகனத்தில் காட்சியளித்தல், மாலை மாற்றுதல் நிகழ்த்தப்பெறுகிறது. பதினோறாம் நாள் காலை இறைவி ‘தபசு’ செய்தல் நிகழ்கின்றது. அப்பொழுது இறைவன் இடப

வாகனத்தில் காட்சி கொடுத்து மாலை மாற்றுதல் செய்யப்படுகிறது. இரவு சயன கோலத்தில் பூப்பல்லக்கில் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது. பன்னிரெண்டாம் நாள் திருக்கல்யாணம் நிகழ்த்தப்பெற்று மாலை மாற்றுதல் செய்யப்படுகிறது. ஆடிப்பூரப் பெருவிழாவில் மூன்று முறை மாலை மாற்றுதல் நிகழ்கின்றது. திருக்கல்யாணத்தினன்று மட்டுமே இரவில் பஞ்சமூர்த்திகள் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது. ஏனைய நாட்களில் இறைவி மட்டுமே திருவீதிப் புறப்பாட்டிற்கு எழுந்தருளுகிறாள். பதிமூன்று, பதினான்காம் நாள் இரவு ஊஞ்சல் உற்சவம் கொண்டாடப்படுகிறது. பதினைந்தாம் நாள் இரவு மஞ்சள் விளையாட்டு நிறைவடைந்தும் பல்லக்கில் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது. ஆடிப்பூரப் பெருவிழா பதினைந்து நாட்கள் நடப்பினும் ஒன்பதாவது நாளான பூர நட்சத்திரத்தினன்று நடைபெறும் தேரோட்டத்துடன் திருவிழா நிறைவு பெறுவதாய் ஐதீகம் உள்ளது.

ஆடி மாதம் சுவாதி நட்சத்திரத்தில் ‘சுந்தரர் திருக்கையிலாயக் காட்சி காண்பது’ சிறப்பாக நடைபெறுகின்றது. ஆடி மாதம் சுவாதி நட்சத்திரத்திலிருந்து மூன்று நாட்களுக்கு முன்னர் காப்புக் கட்டுதலோடு இந்த விழா தொடங்குகிறது. அன்றைய தினம் கைலாச விநாயகர் சந்நிதியில் ஔவையாரின் மரச் சிற்பத்தை எழுந்தருளல் செய்து விநாயகர் அகவல் ஓதப்படுகின்றது. இதற்கென ஔவையாரின் மரச் சிற்பம் திருக்கோயிலில் உள்ளது. அதே சமயம் சுந்தரர் தீபாராதனை முடிந்து ‘நொடித்தப் பத்து’ பாடப்பெற்று இராசகோபுரம் வழியாக வந்து மணி மண்டபத்தின் நடுவே அமைக்கப்பட்டிருக்கும் ‘திருக்கையிலாயம்’ அடையும் முன்னரே சிவாச்சாரியார்கள் ஔவையாரின் மரச் சிற்பத்தை இறைவன் அருகில் கொண்டு வந்து எழுந்தருளல் செய்கின்றனர். சுந்தரருக்கு முன்னே ஔவையார் விநாயகர் அகவல் ஓதி விநாயகரின் அருளால் அவரது தும்பிக்கையின் மூலம் திருக்கையிலாயம் சேர்வதாய்ப் புராணம் பின்பற்றப்படுகின்றது. இறைவன் முருகர், பிரியாவிடையுடன் ஏகாசனப் பீடத்தில் இருக்கும் சோமாசுகந்தர் செப்புத் திருமேனியைப் பிரித்து அதனுடன் இறைவி சிநேகவல்லியின் செப்புத் திருமேனி இணைக்கப்பட்டு சுந்தரருக்குத் திருக்கைலாயக் காட்சி கொடுத்தல் செய்யப்படுகிறது. சோமாசுகந்தர் செப்புத் திருமேனியின் ஏகாசனப் பீடம் அன்று மட்டுமே பிரிக்கப்படுகின்றது. சுந்தரர் திருக்கைலாயக் காட்சி காணும் திருவிழா சிவாச்சாரியார்களின் குடும்ப விழாவாக ஏற்று நடத்தப்படுகின்றது. அன்று

அன்னதானம் நடக்கிறது. ஓதுவார்கள், சிவாச்சாரியார்களுக்கு மரியாதை செய்யப்படுகின்றது.

வைகாசி விசாகப் பெருவிழா, ஆடிப்பூரப் பெருவிழா ஆகிய இரண்டு திருவிழாக்களிலும் நடைபெறும் கொடியேற்றத்தில் நந்தியின் படமே இடம்பெறுகின்றது. கொடியேற்றம் தொடங்குவதற்கு முன் வைகாசி விசாகப் பெருவிழாவில் சர தேவரும் ஆடிப்பூரப் பெருவிழாவில் சர தேவியும் பின்னால் நந்திக் கொடியும் பல்லக்கில் சுக்ர வார வீதியில் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறார்கள். இதை 'கொடித்தடை' என்று அழைக்கின்றனர்.[18] கொடித்தடை செய்யப்பட்டதும் மக்கள் யாரும் வெளியூர் செல்லக்கூடாது என்றும் அவ்வாறு செல்ல நேர்ந்தால் இரவுக்குள் இல்லம் திரும்ப வேண்டும் என்றும் ஐதீகம் பின்பற்றப்படுகிறது.

ஆடி மாதம் பதினெட்டாம் நாள் இறைவிக்குச் சந்தன அலங்காரம் செய்யப்பெற்று 108 சுமங்கலிகளைக் கொண்டு 'மாங்கல்ய சரடு' என்னும் 'தாலிக் கயிறு' வைத்து வழிபாடுகள் செய்யப்படுகின்றன.

**ஆவணி** மாதம் விநாயகர் சதுர்த்தி அன்று கன்னிமூல கணபதிக்கு அபிசேகம், சந்தனத்தால் அலங்காரம் செய்வித்து '1008 சகசுரநாம அருச்சனை' நிகழ்த்தப்படுகின்றது. அன்று பிரதோச வீதியில் சுற்றி வருதல் செய்யப்படுகிறது.

**புரட்டாசி** மாதம் சனிக்கிழமைகளில் சீதேவி, பூதேவி, வரதராசருக்கு அபிசேகம் நடைபெறுகின்றது. நவராத்திரியில் இறைவிக்கு லட்சார்ச்சனை செய்யப்படுகிறது. இறைவி ஒன்பது நாட்கள் ஒன்பது விதமான அலங்காரத்தில் காட்சி தருகிறாள். விசயதசமி அன்று அம்பு எய்தல் இத்திருக்கோயிலில் நடைபெறுவது இல்லை.

**ஐப்பசி** மாதம் 'கந்த சஷ்டி விழா' காப்புக் கட்டுதலுடன் தொடங்குகின்றது. கந்த சஷ்டி விழாவில் வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியருக்கு சந்தன அலங்காரம், 1008 சகசுரநாம அருச்சனை ஆகியனவும் கைலாச விநாயகர் சந்நிதியிலிருந்து காவடி, பால்குடம் எடுக்கப்படுகின்றன. ரத வீதியில் சூரசம்காரம் நடைபெற்று மறுநாள் திருக்கல்யாணத்துடன் கந்த சஷ்டி விழா நிறைவடைகின்றது.

**கார்த்திகை** மாதம் நான்கு திங்கட்கிழமைகள் வந்தால் முதல் மூன்றில் 108 சங்காபிசேகமும் நான்காவதில் 1008 சங்காபிசேகமும் செய்யப்படுகின்றது. ஐந்து திங்கட்கிழமைகளைக் கொண்டிருப்பின் முதல் நான்கில் 108 சங்காபிசேகமும்

ஐந்தாவது திங்கட்கிழமையில் 1008 சங்காபிசேகமும் செய்யப்படுகின்றது. கார்த்திகைத் தீபத் திருநாள் அன்று வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியருக்கு காலை சிறப்பு அபிசேகம் செய்யப்படுகிறது. மாலை இறைவன், இறைவி, வள்ளி, தெய்வானை சுப்பிரமணியர் ஆகியோர் திருக்கோயிலுக்கு சொக்கர்ப்பனை அருகே எழுந்தருளுகிறார்கள். பின்பு சிவாச்சாரியார்கள் இறைவனிடமிருந்து தீபத்தை சொக்கர்ப்பனையில் ஏற்றியவுடன் திருக்கோயிலைச் சுற்றி அகல் விளக்குகள் ஏற்றப்படுகிறது.

**மார்கழி** மாதம் வைகுண்ட ஏகாதசி அன்று சீதேவி, பூதேவி, வரதராசருக்கு அபிசேகம் முடிந்து சந்தன அலங்காரம் செய்யப்பெறுகிறது. ஆருத்ரா தரிசனத்தின் பத்து நாட்களுக்கு முன்னர் காப்புக் கட்டுதல் நடைபெறுகிறது. பத்து நாட்களும் மாணிக்கவாசகருக்கு சிறப்பு பூசைகள், வழிபாடுகள் செய்யப்படுகின்றது. பத்தாம் நாளான ‘ஆருத்ரா தரிசனம்’ அன்று காலை 04.30 மணி முதல் 05.30 மணிக்குள் நடராசர், சிவகாமி, மாணிக்கவாசகருக்கு அபிசேகம் நடைபெறுகிறது. பின்னர் மூவரும் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகின்றனர்.

**தை** மாதம் பூச நட்சத்திரத்தன்று வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியருக்கு அபிசேகமும் வழிபாடும் நடைபெறுகிறது. வெள்ளிக்கிழமை கசலட்சுமிக்கு 1008 சகசுரநாம அருச்சனை செய்யப்படுகின்றது.

**மாசி** மாதம் மகா சிவராத்திரியின் பொழுது 108 கலசங்கள் வைத்து நான்கு காலங்களாக இறைவனுக்கு அபிசேகம் செய்து வழிபடப்படுகின்றது. இரவு முழுவதும் லட்சார்ச்சனை செய்யப்படுகின்றது.

**பங்குனி** மாதம் உத்திரத்தன்று வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியருக்கு அபிசேகம் நிகழ்த்தப்பெறுகின்றது. மாதம் தோறும் வளர்பிறை, தேய்பிறை விநாயகர் சதுர்த்தி கொண்டாடப்படுகின்றன. சதுர்த்தி திதி காலையில் இருக்கும் தினத்தில் கன்னிமூல விநாயகருக்கு அபிசேகம் செய்யப்பட்டு வழிபாடுகள் நடைபெறுகின்றன. இதேபோல் காலையில் கார்த்திகை நட்சத்திரம், சஷ்டி திதி வரும் நாட்களில் வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியருக்கு அபிசேகம், வழிபாடுகள் நடைபெறுகின்றன.

பைரவருக்கு வளர்பிறை, தேய்பிறை அட்டமி அபிசேகம் காலையில் நடைபெறுகின்றன. பௌர்ணமியின் பொழுது சாயரட்சைக்குப் பின் இறைவிக்கு அபிசேகம் செய்யப்பட்டு வழிபாடுகள் நடைபெறுகின்றன. மாதம் தோறும் சிவராத்திரி

அன்று இரவு 07.30 மணிக்கு இறைவனுக்கு அபிசேகம் செய்யப்பட்டு வழிபாடுகள் நடைபெற்றதும் பள்ளியறை பூசைகள் தொடங்குகின்றன.

பிரதோசத்தினன்று மட்டும் பிரதோச வீதியில் சுற்றி வருதல் செய்யப்படுகிறது. இவைகளைத் தவிர வெள்ளிக்கிழமை தோறும் மாலை 05.30 மணிக்கு வார வழிபாடும் ஆங்கில மாதத்தின் கடைசி சனிக்கிழமை அல்லது ஞாயிற்றுக்கிழமை உழவாரப் பணியும் நிகழ்த்தப்படுகின்றன.

**தற்காலத்திய மாற்றங்கள்:**

“தீர்த்தம் என்பது ஆன்மிகம் சார்ந்தது மட்டுமல்ல இது மனித வாழ்வியலோடு தொடர்புடையதுமாகும். அதனால் தான் நீர் நிலைகளைப் புனிதமாக ‘தீர்த்தம்’ என்று வழங்கினார்கள். சூரியன் பூசை செய்ய வரும் பொழுது மணிமுத்தா நதியிலிருந்து தண்ணீர் எடுக்காமல் தானே ஒரு தீர்த்தத்தை உருவாக்கி பூசை செய்துள்ளான். சூரியனுக்குப் பின்னர் வந்த வாருணி, காமதேனு, அகத்தியர் போன்றவர்களும் சூரியனைப் பின்பற்றி தீர்த்தங்களை உருவாக்கி மக்களுக்காக விட்டுச் சென்றுள்ளனர். மனிதர்கள் நீர்நிலைகளின் அருமை தெரியாமல் அவைகளைப் பராமரிக்கத் தவறியதால் தீர்த்தங்கள் வறண்டு காணப்படுகின்றன. எனவே தீர்த்தங்களை முறையாகப் பாதுகாத்து நாம் அடுத்த தலைமுறைக்கு விட்டுச் செல்ல வேண்டும்” என்ற கோரிக்கையை திருவாடானை திருக்கோயிலில் பூசை செய்யும் ஸ்வர்ண.சந்திரசேகர குருக்கள், 27.01.2018 அன்று மேற்கொண்ட நேர்காணலில் பதிவு செய்துள்ளார்.

இராசகோபுரத்தின் முன் பகுதியில் வாகனம் நிறுத்துதல் தடை செய்யப்பட்டுள்ளது (No parking). தார் சாலையிலிருந்து இராசகோபுரம் வரையிலான பகுதியில் ‘பேவர் ப்ளாக்’ (Paver Block) கற்கள் பதிக்கப்பட்டுள்ளன.

மணி மண்டபத்தின் இடதுபுறம் உவர்நீர் சுத்திகரிக்கும் நிலையம் நிறுவப்பட்டுள்ளது. மடப்பள்ளியின் முற்பகுதியில் இரும்புத் தகர வண்ணக் கூரைகள் வேயப்பட்டுள்ளன.

மணி மண்டபத்தைத் தாண்டி இறைவன் சந்நிதி வாயிலில் அமைந்திருக்கும் சொர்ண விநாயகருக்கும் பால தெண்டாயுதபாணிக்கும் முன்னர் முறையே மாதாந்திர சதுர்த்தி, கார்த்திகையின் பொழுது அபிசேகம், வழிபாடுகள் நடைபெற்றுள்ளன.

ஆய்வுக் காலத்தில் கன்னிமூல விநாயகருக்கும், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியருக்கும் மேற்குறிப்பிட்ட விழாக்கள் நடத்தப்படுகின்றன.

**திருக்கானப்பேர்:**

திருக்கானப்பேர் திருக்கோயிலில் ஆறு காலங்களில் நாள் வழிபாடுகள் செய்யப்படுகின்றன. காலை 6 மணிக்குத் திருவனந்தல், காலை 7.15 மணிக்கு விளா பூசை, காலை 8 மணிக்கு காலசந்தி, மதியம் 12 மணிக்கு உச்சிக்காலம், மாலை 5 மணிக்கு சாயரட்சை, 7.45 மணிக்கு அர்த்தசாமம் என வழிபாடுகள் நடக்கின்றன.

காலசந்திக்கு தயிர் சாதம், தோசை, வெண்பொங்கல் படைக்கப்படுகின்றன. உச்சிக்காலத்திற்கும் சாயரட்சைக்கும் புளியோதரை, அர்த்தசாமத்திற்கு சம்பா சாதம், சுண்டல், பால் ஆகியன படைக்கப்படுகின்றன.

காரண ஆகமத்தில் அமைந்த இத்திருக்கோயிலில் சூரியன், வரம்தரும் விநாயகர், துவார பாலகர், மகாலெட்சுமி, இறைவன், இறைவி என்ற வரிசையில் திருவனந்தல் பூசை நடைபெறுகிறது. உச்சிக்காலத்தில் இறைவி இறைவனுக்குப் பூசை செய்வதாய் ஐதீகம் இத்திருக்கோயிலில் உள்ளது. எனவே சொர்ணவல்லிக்கு பூசை செய்து பின்னர் சொர்ண காளீசுவரருக்கும், மீனாட்சிக்கு பூசை செய்து பின்னர் சுந்தரேசுவரருக்கும், சௌந்தரநாயகிக்கு பூசை செய்து பின்னர் சோமேசுவரருக்கும் உச்சிக்காலம் நடைபெறுகிறது.

பள்ளியறை பூசை முதலில் சுந்தரேசுவரர் மீனாட்சிக்கும் இரண்டாவதாக சொர்ண காளீசுவரர் சொர்ணவல்லிக்கும் கடைசியாக சோமேசுவரர் சௌந்தரநாயகிக்கும் நடைபெறுகிறது. பள்ளியறை பூசைக்கு திருவடி நிலைகள் பயன்படுத்தப்படுகின்றன. சுந்தரருக்கு இறைவன் பூச்செண்டு கொடுத்து ஆட்கொண்ட காரணத்தினால், அர்த்தசாம பூசையின் பொழுது சொர்ண காளீசுவரருக்கு பூச்செண்டு சாற்றப்படுகிறது. மறுநாள் காலை திருவனந்தலின் பொழுது பள்ளியறையிலிருந்து சொர்ண காளீசுவரரை எழுந்தருளல் செய்ததும் அப்பூச்செண்டு சுந்தரருக்குச் சாற்றப்படுகிறது.

**திருவிழாக்கள்:**

திருக்கானப்பேர் திருக்கோயில் திருவிழாக்களில் ‘சர தேவர்’ குறிப்பிடத்தகுந்தவாறு பயன்படுத்தப்படுகிறார். திருவிழாவின் பொழுது காலை, மாலை சர தேவரையும் திருப்பலி தேவரையும் பல்லக்கில் புறப்பாடு செய்து ‘தீட்டுக்

கழித்தல்’, ‘பலி போடுதல்’ ஆகிய முறைகள் செய்யப்படுகின்றன. தீர்த்தவாரியின் பொழுதும் சர தேவர் பயன்படுத்தப்படுகிறார்.

**சித்திரை** மாதம் வருடப்பிறப்பு அன்று இறைவன், இறைவிக்கு அபிசேகம் செய்யப்பட்டு வழிபாடுகள் முடிந்ததும் திருக்கோயில் சிவாச்சாரியார்களால் ‘பஞ்சாங்கம் வாசித்தல்’ நடைபெறுகிறது.

**வைகாசி** மாதம் வைகாசி விசாகப் பெருந்திருவிழா எனப்படும் ‘வைகாசி விசாக பிரம்மோத்சவம்’ சோமேசுவரர் – சௌந்தரநாயகிக்கு பத்து நாட்கள் நடைபெறுகிறது. திருவிழா தொடங்குவதற்கு முன்னர் மாலையில் அனுக்ஞை, விக்னேசுவர பூசை, சாந்தி ஆகியன செய்யப்படுகின்றன.

திருவிழாவின் முதல்நாள் காலை கொடியேற்றம் செய்யப்பட்டு இறைவன் வெள்ளி இடப வாகனத்திலும் இறைவி காமதேனு வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறார்கள். இரண்டாம் நாள், மூன்றாம் நாள் காலை இறைவன் வெள்ளி இடபத்திலும், இறைவி கேடகத்திலும், மாலை இறைவன் வெள்ளி இடபத்திலும், இறைவி கிளி வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். நான்காம் நாள் இறைவிக்கு தபசுக் காட்சியும் கதிர் குளித்தல் என்னும் நிகழ்ச்சியும் செய்யப்பெறுகிறது. இறைவி, இறைவனைக் காண தவக் கோலத்தில் எழுந்தருளியிருப்பாள். பின்னர் இறைவன் இடப வாகனத்தில் திருக்கோயில் வாயிலில் காட்சியளித்ததும், இறைவியை யானை மடு தீர்த்தத்தில் எழுந்தருளச் செய்வர். அங்கு இறைவிக்கு நல்லெண்ணெய், சிகைக்காய் முதலியவற்றால் அபிமானம் செய்து, அருகில் உள்ள வேதாந்த மடத்தில் எழுந்தருளல் நடக்கிறது. வேதாந்த மடத்தில் இறைவிக்கு அபிசேகம் நிகழ்த்தி அலங்காரங்கள் செய்து மணமகள் கோலத்தில் இருக்கச் செய்வர். பின்னர் புட்பப் பல்லக்கில் இறைவி திருவீதிப் புறப்பாடு கண்டு திருக்கோயிலில் எழுந்தருளுவாள். ஐந்தாம் நாள் மாலை திருக்கல்யாணம் நடைபெற்று இறைவன் வெள்ளி இடப வாகனத்திலும் இறைவி யானை வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறார்கள். ஆறாம் நாள் காலை ‘சமணர்கள் கழுவேற்றம்’ நிகழ்த்தப்பெற்று காலை, மாலை ஆகிய இரு வேளைகளிலும் இறைவன் வெள்ளி இடபத்திலும் இறைவி கேடகத்திலும் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். ஏழாம் நாள் ‘பொய்ப்பிள்ளை மெய்ப்பிள்ளை ஆதல்’ நிகழ்ச்சி நடத்தப்பெறுகிறது. ஏழாம் நாள்

அன்று காலை, மாலை என இரண்டு வேளைகளிலும் இறைவனுக்கு வெள்ளி இடப வாகனமும் இறைவிக்கு சிம்ம வாகனமும் திருவீதிப் புறப்பாட்டில் பயன்படுத்தப்படுகின்றன. எட்டாம் நாள் காலை, இறைவன் வெள்ளி இடப வாகனத்திலும் இறைவி கேடகத்திலும் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகின்றனர். அன்று மாலை இறைவன் வெள்ளி இடபத்திலும் இறைவி குதிரையிலும் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். ஒன்பதாம் நாள் அதிகாலை இறைவன், இறைவி தேரில் எழுந்தருள்கின்றனர். மாலை தேரோட்டம் நடைபெற்று அதன் பின்னர் 'தேர்த்தடம் பார்த்தல்' நிகழ்ச்சியும் நடைபெறுகிறது. பத்தாம் நாள் காலை தீர்த்தவாரியும் தெப்பமும் நடைபெறுகின்றன. மாலை சப்தாவர்ணத்தில் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறது.

வைகாசி விசாகப் பெருந்திருவிழாவின் ஐந்தாம் நாளிலிருந்து பத்தாம் நாள் வரை மட்டுமே பஞ்சமூர்த்திகளாக திருவீதிப் புறப்பாடு நடைபெறுகின்றது. திருக்கானப்பேர் திருத்தலத்தில் இறைவனின் திருவீதிப் புறப்பாட்டிற்கு 'வெள்ளி இடப வாகனம்' மட்டுமே பயன்படுத்தப்படுகிறது.

**ஆவணி** மாதம் விநாயகர் சதுர்த்தி அன்று நிருதி விநாயகருக்கு காலை அபிசேகமும் அதைத் தொடர்ந்து வழிபாடுகளும் நடைபெறுகின்றன. இத்திருக்கோயிலில் பூசை செய்யும் சிவாச்சாரியார்களின் குலதெய்வமாக நிருதி விநாயகர் விளங்குவதால் இதை இவர்களே ஏற்று செய்து வருகின்றனர்.

**ஐப்பசி** மாதம் நவராத்திரி பத்து நாட்கள் சிறப்பாக நடைபெறுகின்றது. மூன்று இறைவியின் செப்புத் திருமேனிகளுக்கு அலங்காரங்கள் செய்து சொர்ண காளீசுவரர் சந்நிதிக்கு எதிரே எழுந்தருளல் செய்யப்படுகிறார்கள். இதைத் தொடர்ந்து வழிபாடுகள் நடைபெறுகின்றன. நவராத்திரியில் கொலு வைக்கப்படுகிறது. பத்தாம் நாள் விசயதசமி அன்று திருக்கோயிலில் இருந்து 2 கிலோமீட்டர் தொலைவில் மதுரை-தொண்டி சாலையில் அமைந்திருக்கும் நாலுகால் மண்டபத்தில் அம்பு எய்தல் நான்கு திசைகளில் நடைபெறுகிறது.

கந்த சஷ்டி விழா ஆறு நாட்கள் நடைபெறுகிறது. சந்நிதித் தெருவில் சூரசம்காரம் நடத்தப்பெறுகிறது.

ஐப்பசி மாதம் அன்னாபிசேகம் சோமேசுவரர், சொர்ண காளீசுவரர், சுந்தரேசுவரர் என மூன்று இறைவனுக்கும் செய்யப்படுகிறது.

**கார்த்திகை** மாதம் சங்காபிசேகம் மூன்று இறைவனுக்கும் நடைபெறுகிறது. கடைசி சங்காபிசேகம் சொர்ண காளீசுவரருக்கு மட்டும் 1008 செய்யப்படுகிறது. ஏனைய சங்காபிசேகங்கள் அனைத்தும் 108 சங்கில் வைத்து நிகழ்த்தப்படுகிறது. கார்த்திகைத் தீபத் திருநாள் அன்று மாலை ஆடி வீதியில் உள்ள வள்ளி, தெய்வானை, சண்முகருக்கு அபிசேகம், வழிபாடுகள் நடக்கின்றன. இதைத் தொடர்ந்து திருக்கோயில் முழுவதும் தீபங்கள் ஏற்றப்படுகின்றன.

**மார்கழி** மாதம் ‘ஆருத்ரா தரிசனம்’ அன்று காலை மூன்று இறைவனுக்குரிய நடராசர் எழுந்தருளல் செய்யப்பட்டு வழிபாடுகள் நடைபெறுகின்றன. பின்னர் சொர்ண காளீசுவரரின் நடராசர் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறார்.

**மாசி** மாதம் மகா சிவராத்திரி அன்று நான்கு காலங்களில் மூன்று இறைவனுக்கும் அபிசேகங்களும் வழிபாடுகளும் நடைபெறுகின்றன.

மாதம் தோறும் வரும் சங்கடகர சதுர்த்தி, சுக்ல சதுர்த்தி அன்று மாலை நிருதி விநாயகருக்கு அபிசேகம், வழிபாடுகள் நடைபெறுகின்றன.

கார்த்திகை, சஷ்டி அன்று மாலை வள்ளி, தெய்வானை, சண்முகருக்கு அபிசேகமும் வழிபாடும் செய்யப்படுகின்றன.

வளர்பிறை அட்டமி, தேய்பிறை அட்டமி இரண்டிற்கும் இத்திருக்கோயிலில் பூசைகள் உண்டு. பைரவருக்கு 7 மணிக்குத் தொடங்கும் பூசை 8.30 மணி வரை நடைபெறுகிறது.

பிரதோசத்தின் அன்று மூன்று இறைவனுக்கும் நந்திக்கும் அபிசேகமும் வழிபாடுகளும் நடைபெறுகின்றன. இதைத் தொடர்ந்து ஆடி வீதியில் சொர்ண காளீசுவரரின் ‘பிரதோச நாயகர்’ சுற்றி வருதல் நிகழ்த்தப்படுகின்றது.

**திருப்பூவணம்:**

திருப்பூவணத் திருக்கோயிலில் ஆறு காலங்களில் நாள் வழிபாடுகள் நடைபெறுகின்றன. திருவனந்தல் காலை 7.00 மணி முதல் 7.20 மணி வரை, காலசந்தி காலை 8.00 மணி முதல் 8.30 மணி வரை, திரிகால சந்தி 11.00 மணி முதல் 11.20 மணி வரை, உச்சிக்காலம் 12.00 மணி முதல் 12.30 மணி வரை,

சாயரட்சை 4.00 மணி முதல் 4.30 மணி வரை, அர்த்தசாமம் 8 மணி முதல் 8.30 மணி வரை என பூசைகள் செய்யப்படுகின்றன.

திருவனந்தலுக்கு அப்பம், முறுக்கு, நெல்பொறி, பால், காலசந்திக்கு அன்று அரைத்த மாவில் செய்யப்பட்ட தோசை, வெண்பொங்கல், திரிகால சந்திக்கு சுத்தான்னம், உச்சிக்காலத்திற்கு கலவைசாதம், சாயரட்சைக்கு சுத்தான்னம், அர்த்தசாமத்திற்கு தோசை, கலவைசாதம், பால் ஆகிய பிரசாதங்கள் படைக்கப்பட்டுள்ளதை அறிய முடிகின்றது.

ஆய்வுக் காலத்தில் திருவனந்தலுக்கு பால், பழம், காலசந்தி, திரிகால சந்திக்கு சுத்தான்னம், உச்சிக்காலத்திற்கு கலவைசாதம், சுத்தான்னம், சாயரட்சைக்கு சுத்தான்னம், அர்த்தசாமத்திறந்கு கலவைசாதம், பால் ஆகியன படைக்கப்படுகின்றன.

பள்ளியறை பூசைக்குப் பயன்படுத்தப்பெறும் திருவடி நிலைகள் 'பாதச் சொக்கர்' என்று அழைக்கப்படுகிறது.

**திருவிழாக்கள்:**

**சித்திரை** மாதம் முதல் நாள் அன்று இறைவன், இறைவிக்கு அபிசேகம், வழிபாடுகள் நடைபெறுகின்றன.

**வைகாசி** மாதம் விசாகத்தினன்று முருகன் திருக்கோயிலில் உள்ள வள்ளி, தெய்வானை, சண்முகருக்கு காலையில் பால் குடம் எடுக்கின்றனர். மாலை அபிசேகம் செய்யப்பெற்று மயில் வானத்தில் ரத வீதியில் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது.

**ஆடி** மாதம் பூர நட்சத்திரத்தன்று ஆடிப்பூரத் திருவிழா பத்து நாட்கள் நடைபெறுகிறது. இத்திருவிழா தொடங்குவதற்கு முந்தைய நாள் யாகசாலை வளர்க்கப்பட்டு பின்பு அனுக்ஞை, விக்னேசுவர பூசை ஆகியன நிகழ்த்தப்பெறுகின்றது. சிவாச்சாரியார், இறைவி, சர தேவர், விநாயகர் ஆகியோருக்குக் காப்புக் கட்டுதல் செய்யப்படுகிறது.

ஆடிப்பூரத் திருவிழாவின் பத்து நாட்களும் காலை, மாலை என இருவேளைகளில் யாகசாலை வளர்க்கப்பெற்று இறைவி, விநாயகர், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர், சண்டிகேசுவரர் ஆகியோர் நான்காம் திருச்சுற்றில் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர்.

பத்தாம் நாள் இவ் இறை திருவுருவங்கள் உற்சவ சந்நிதிக்கு எழுந்தருளல் செய்யப்பெற்று அபிசேகம், வழிபாடுகள் நடைபெறுகின்றன. பின்னர் 'கண்ணூஞ்சல்

வைபவம்' நிகழ்கின்றது. தீர்த்தவாரி முடிந்ததும் விநாயகர், வள்ளி தெய்வானை சுப்பிரமணியர், இறைவி, சிவாச்சாரியார் என்ற முறையில் காப்புக் களைதல் செய்யப்பட்டு ஆடிப்பூரத் திருவிழா நிறைவுபெறுகிறது.

**ஆவணி** மாதம் விநாயகர் சதுர்த்தி அன்று திருக்கோயிலில் உள்ள எல்லா விநாயகருக்கும் அபிசேகம் செய்யப்படுகிறது. வரம்தரும் விநாயகருக்கு பதினொரு பொருட்களால் அபிசேகம் நடந்ததும் சக்கரைப் பொங்கல், கொழுக்கட்டை படைக்கப்படுகிறது.

**ஐப்பசி** மாதம் நவராத்திரி ஒன்பது நாட்கள் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது. நவராத்திரி துவங்குவதற்கு முன் இறைவிக்கு காப்புக்கட்டுதல் செய்யப்படுகிறது. ஒன்பது நாட்களும் ஒவ்வொரு அலங்காரத்தில் இறைவி திருநாள் மண்டபத்தில் சப்தாவர்ணம் சப்பரத்தில் கொலு வீற்றிருக்கிறாள். மாலை சாயரட்சை பூசையில் முதலில் மூலவர் இறைவிக்கு அபிசேகம் செய்யப்பெற்று 'கல்ப பூசை' நடக்கிறது. பின்னர் மூலவர் இறைவி, கொலு வீற்றிருக்கும் உற்சவர் இறைவி, இறைவன் சந்நிதியில் இருக்கும் துர்க்கை என்ற வரிசையில் தீப வழிபாடு செய்யப்படுகிறது. விசயதசமி அன்று சந்நிதித் தெருவில் உள்ள ஐயப்பன் திருக்கோயில் அருகே பத்து திசைகளில் அம்பு எய்தல் நடைபெறுகிறது.

முருகன் திருக்கோயிலில் கந்தர் சஷ்டி விழா காலை அபிசேகம், மாலை சிறப்பு அபிசேகம், சண்முகார்ச்சனை என்ற முறையில் கொண்டாடப்படுகிறது. சூரசம்காரம் இத்திருக்கோயிலில் நடைபெறுவது இல்லை.

ஐப்பசி மாதம் பௌர்ணமி அன்று இறைவனுக்கு அன்னாபிசேகம் நிகழ்த்தப்படுகிறது. அபிசேகம் முடிந்ததும் அன்னத்தைச் சாற்றி இறைவன் அலங்கரிக்கப்படுகிறான். பின்னர் தீப வழிபாடு முடிந்ததும் அலங்காரம் கலைக்கப்பட்டு மீண்டும் அபிசேகம் நடைபெறுகிறது. அபிசேகம் செய்யப்பெற்ற அன்னத்தை திருக்கோயிலில் பணி செய்யும் பர்சாரகர் கூடையில் வைத்து தலையில் சுமந்து கொண்டு வைகையாற்றில் கரைக்கின்றார்.

அன்னாபிசேகத்திற்கு 80 படியிலிருந்து 120 படி வரை சாதம் பயன்படுத்தப்படுகிறது.

**கார்த்திகை** மாதம் திங்கட்கிழமைகளில் 108 அல்லது 1008 என்ற கணக்கில் இறைவனுக்கு சங்காபிசேகம் செய்யப்படுகிறது.

கார்த்திகை தீபத் திருநாளின் முதல் நாள் பரணி தீபம் என்று அழைக்கப்படுகிறது. அன்று மாலை இறைவன் முன்பு 27 நட்சத்திரங்களுக்குத் தோத்திரங்கள் கூறிப் பூசை நடைபெற்றுப் பரணி தீபம் ஏற்றப்படுகிறது. இறைவன் சந்நிதியில் பரணி தீபம் ஏற்றியவுடன் முறையே இறைவி, வரம்தரும் விநாயகர், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் ஆகியோர் திருமுன்பில் பரணி தீபம் ஏற்றப்படுகிறது. பரணி தீபம் மறுநாள் மாலை வரை தொடர்ந்து எரியும் அளவிலானதாகவும் போதுமான அளவு நல்லெண்ணெய் ஊற்றப்பட்டிருக்கும். மறுநாள் கார்த்திகை தீபத் திருநாள் அன்று மாலை விக்னேசுவர பூசையும் புண்யாகவாசனமும் நடத்தப்பட்டு திருக்கோயில் முழுவதும் தீபங்கள் ஏற்றப்படுகிறது. இறைவன், இறைவி இடப வாகனத்தில் பஞ்சமூர்த்திகளாக எழுந்தருளுவர். திருக்கோயிலுக்கு எதிரே வைகையாற்றின் கரையில் இறைவன், இறைவிக்கு என இரண்டு சொக்கர்ப்பனைகள் அமைக்கப்படுகிறது. சொக்கர்ப்பனைகள் அருகே பஞ்சமூர்த்திகள் எழுந்தருளியதும் முதல் நாள் ஏற்றிய பரணி தீபங்களினால் தீப வழிபாடு செய்யப்பெற்று இரண்டு சொக்கர்ப்பனைகளுக்குள் அவை வைக்கப்படுகிறது. ‘அக்னி லிங்கம்’ ஆக பாவிக்கப்படும் சொக்கர்ப்பனைகளுக்கு பூசைகள் செய்யப்படுகிறது. பின்னர் அத்தீபங்களில் உள்ள திரியைக் கொண்டு சிவாச்சாரியார்கள் சொக்கர்ப்பனைகளை ஏற்றுவர். முழுதும் எரிந்த சொக்கர்ப்பனைகளிலிருந்து ‘ரட்சை’ இறைவனுக்கும் இறைவிக்கும் சாற்றப்பட்டு ரத வீதியில் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது.

எரிந்த சொக்கர்ப்பனைகளினின்று கம்புகள், சாம்பல் உள்ளிட்டவற்றை மக்கள் எடுத்துச் சென்று தங்கள் விளைநிலங்களில் போடுகின்றனர். இவ்வாறு செய்வதால் நிலங்களில் விளைச்சல் அதிகமாகும் என்ற நம்பிக்கை காணப்படுகிறது.[19]

**மார்கழி** மாதம் வைகுண்ட ஏகாதசி அன்று அதிகாலை இறைவன் சந்நிதி மகா மண்டபத்தில் இருக்கும் சயனப் பெருமாளுக்கு அபிசேகம், வழிபாடுகள் நடைபெறுகிறது. பின்னர் ஆடி வீதியில் உள்ள தெற்கு வாயில் கதவுகளுக்குப் பூசை செய்யப்படுகிறது.

திருக்கோயிலில் சிவாச்சாரியார்கள் முறை வைத்து பூசை செய்வது போல இத்திருக்கோயிலை பாதுகாக்கும் மெய்க்காவலர்களுக்கும் முறை கடைபிடிக்கப்படுகிறது. வைகுண்ட ஏகாதசி நடைபெறும் ஆண்டில் முறையுள்ள

மெய்க்காவலருக்கு பரிவட்டம் கட்டி, மரியாதை செய்து பின்பு தெற்கு வாயில் திறக்கப்படுகிறது.[20]

ஆருத்ரா தரிசனத்திற்கு மாணிக்கவாசகருக்கு பத்து நாட்கள் முன்பு 'காப்புக் கட்டுதல்' செய்யப்படுகிறது. முதல் நாள் மாலை உற்சவர் சந்நிதியில் பஞ்சமூர்த்திகளுடன் மாணிக்கவாசகரையும் எழுந்தருளல் செய்து அபிசேகம் நடைபெறுகிறது. பின்னர் 'கண்ணூஞ்சல்' பாடி, மாணிக்கவாசகரை நடராசர் சந்நிதிக்கு எழுந்தருளல் செய்கின்றனர். மூலவர் நடராசர், சிவகாமி ஆகியோருக்கு தைலாபிசேகமும் உற்சவாதிகளுக்கு பதினொரு பொருட்களால் சிறப்பு அபிசேகமும் நடைபெற்று வழிபாடுகள் செய்யப்படுகின்றன. ஆருத்ரா தரிசனத்தின் அன்று அதிகாலை மாணிக்கவாசகர் இறைவன் சந்நிதி முன்பு கொண்டு வரப்பெற்று, இறைவன் சந்நிதி திரையை விலக்கி மாணிக்கவாசகர் தீப தரிசனம் செய்யுமாறு நடத்துகின்றனர். தரிசனம் முடிந்ததும் திருநீறு, ரட்சை ஆகிய பிரசாதங்கள் வழங்கப்பட்டு நடராசர், சிவகாமி ரத வீதியில் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர்.

அட்டமி வலம்வருதல் ரத வீதியில் நடத்தப்பெறுகிறது. இதற்குப் பயன்படுத்தப்படும் சப்பரத்தை 'அட்டமிச் சப்பரம்' என்று அழைக்கின்றனர்.

**தை** மாதம் பூசத்தினன்று முருகன் திருக்கோயிலில் பால்குடம் எடுக்கின்றனர். காலையும் மாலையும் அபிசேகம் நடைபெறுகின்றது.

**மாசி** மாதம் மகத்தினன்று இறைவன், இறைவிக்கு அபிசேகம், வழிபாடுகள் நடைபெறுகின்றன. மகா சிவராத்திரி அன்று நான்கு காலங்களாக இறைவனுக்கு அபிசேகம், வழிபாடுகள் நடைபெறுகின்றன. ஒவ்வொரு காலத்திற்கும் திருக்கோயிலில் பூசைமுறை உள்ள ஒவ்வொரு சிவாச்சாரியார்கள் பூசைகளைச் செய்கின்றனர்.

**பங்குனி** மாதம் 'பங்குனித் திருவிழா' கார்த்திகை நட்சத்திரத்தில் தொடங்கி பதினொரு நாட்கள் நடைபெறுகிறது.

திருப்பூவணத் திருக்கோயிலுக்கு காவல் தெய்வமாக முத்து மாரியம்மன் திருக்கோயில் விளங்குகின்றது. எனவே பங்குனித் திருவிழா தடையில்லாமல் நடைபெற வேண்டி முத்து மாரியம்மனுக்கு முதலில் பத்து நாட்கள் திருவிழா நடத்தப்படுகிறது.

பங்குனித் திருவிழா தொடங்குவதற்கு முந்தைய நாள் மாலை அனுக்ஞை, விக்னேசுவர பூசை, சாந்தி, மிருத்சங்கிரகணம், அங்குரார்பணம் ஆகியன நடைபெறுகிறது.

யாக சாலை அமைக்கப்பட்டு கலசங்கள் நிறுவப்பட்டு யாகம் வளர்க்கப்படுகிறது. பின்பு வரம்தரும் விநாயகர், இறைவன், இறைவி, உற்சவர், தெட்சிணாமூர்த்தி, சண்டிகேசுவரர், நந்தி ஆகியோருக்குக் கலச நீரினால் அபிசேகம் செய்யப்படுகிறது.

சிவாச்சாரியார்களுக்குக் காப்புக் கட்டுதல் முடிந்த பிறகு இறைவன், இறைவி, விநாயகர், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர், சர தேவர், சண்டிகேசுவரர், பிரதோச நாயகர் ஆகியோருக்குக் காப்புக் கட்டுதல் செய்யப்படுகிறது.

மிருத்சங்கிரகணத்தின் பொழுது பூமி பூசை செய்யப்பட்டு பின்பு மணி மேல் உள்ள நந்தியின் கொம்பைக் கொண்டோ அல்லது சர தேவரைக் கொண்டோ அங்குரார்பணத்திற்குத் தேவையான மண் சேகரிக்கப்பட்டு பாலிகைகள் இடப்படுகின்றன. காலை, மாலை என இருவேளைகளிலும் யாகம் வளர்க்கப்பட்டு பின்னர் சர தேவர், திருப்பலி நாதரைக் கொண்டு நான்காம் திருச்சுற்றில் பலி போடுதல் செய்யப்படுகிறது. காலை காலசந்திக்கு முன்பும் மாலை சாயரட்சைக்குப் பிறகும் பலி போடுதல் நடைபெறுகிறது.

ரத வீதியில் நடைபெறும் பங்குனித் திருவிழாவின் திருவீதிப் புறப்பாடுகள் அனைத்திலும் பஞ்சமூர்த்திகள் இடம்பெறுகின்றனர்.

பங்குனித் திருவிழாவின் முதல் நாளில் இருந்து ஏழாம் நாள் வரையிலும் பின்பு பத்தாம் நாள் அன்றும் காலை திருவீதிப் புறப்பாடு ‘படிச்சட்டம்’ என்றழைக்கப்படும் சப்பரத்தில் நடைபெறுகிறது.

முதல் நாள் காலை கொடியேற்றத்தைத் தொடர்ந்து திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறது. மாலை இறைவன் சிம்ம வாகனத்திலும் இறைவி சிம்மாசனத்திலும் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். இரண்டாம் நாள் மாலை இறைவனுக்கு கற்பக விருட்சம் இறைவிக்கு காமதேனு ஆகியன திருவீதிப் புறப்பாட்டிற்குரிய வாகனங்களாக உள்ளன. மூன்றாம் நாள் இறைவன் பூத வாகனத்திலும் இறைவி அன்ன வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகின்றனர். நான்காம் நாள் இறைவன் கைலாய வாகனத்திலும் இறைவி கமல வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு

காண்கின்றனர். ஐந்தாம் நாள் மாலை இறைவன் குதிரை வாகனத்திலும் இறைவி சின்ன யானை வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர்.

ஆறாம் நாள் மாலை திருப்பூவணத்திற்கு அருகில் இருக்கும் மடப்புரத்தில் இறைவன், இறைவி எழுந்தருள்கின்றனர். பின்னர் இடப வாகனத்தில் இருக்கும் இறைவன், இறைவிக்கு 'பூச்சர அலங்காரம்' செய்யப்பெற்று, 'கழுவேற்ற லீலை' நிகழ்த்தப்பெறுகிறது. பின்பு திருவீதிப் புறப்பாடு செய்யப்பெற்று சேர்க்கை சேர்கின்றனர்.

ஏழாம் நாள் மாலை கங்காளநாதர் புறப்பாடு நடைபெற்று இறைவன் நந்திகேசுவர வாகனத்திலும் இறைவி கிளி வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகின்றனர்.

எட்டாம் நாள் காலை இறைவன், இறைவி உற்சவ சந்நிதியில் எழுந்தருளல் செய்யப்பெற்று அபிசேகம், வழிபாடுகள் முடிவுற்றதும் திருக்கல்யாணம் நடைபெறுகிறது. பின்னர் 'கண்ணூஞ்சல் வைபவம்' செய்யப்படுகிறது. எட்டாம் நாள் காலை நடராசர், சிவகாமிக்கு திருவீதிப் புறப்பாடும் மாலை இறைவன், இறைவிக்கு திருவீதிப் புறப்பாடும் நிகழ்கின்றது. அன்று மாலை இறைவனுக்கு பெரிய யானையும் இறைவிக்கு புட்பப் பல்லக்கும் வாகனங்களாக அமைகின்றன.

ஒன்பதாம் நாள் அதிகாலை திருத்தேர் எழுந்தருளல் செய்யப்பெற்று காலையில் தேரோட்டம் நடைபெறுகிறது. மாலை இறைவன் சப்தாவர்ணத்திலும் இறைவி சப்பரத்திலும் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர்.

பத்தாம் நாள் உத்திர நட்சத்திரத்தன்று காலை சர தேவரைக் கொண்டு தீர்த்தவாரி நடைபெறுகிறது. இரவு இறைவன், இறைவி இடப வாகனத்தில் திருவீதிப் புறப்பாடு கண்டருளுவர்.

பதினொறாம் நாள் உற்சவ சாந்தி, பைரவர் பூசை செய்யப்படுகிறது. பின்னர் இறைவன், இறைவி, விநாயகர், வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர், சண்டிகேசுவரர், பிரதோச நாயகர் ஆகியோருக்கு காப்புக் களைதல் நடைபெறுகிறது.

கடைசியில் சிவாச்சாரியார் சர தேவரைக் கையில் ஏந்திக் கொள்ள இருவருக்கும் அபிசேகம் நடைபெற்று காப்புக் களையப்படுகிறது.

பங்குனித் திருவிழாவின் பொழுது இறைவனுக்கு 'பாவாடை சாதம்' அல்லது 'பாவாடை அன்னம்' படைக்கப்படுகிறது. வாழை இலையில் சாதம், அவித்த

கத்திரிக்காய், வாழைக்காய் ஆகியனவற்றைப் பரப்பி சாயரட்சை பூசையின் பொழுது படைக்கப்படுகிறது.

சதுர்த்தி அன்று முருகன் திருக்கோயிலுக்கு அருகேயிருக்கும் ஆதி விநாயகருக்கு அபிசேகம், வழிபாடுகள் நடைபெறுகின்றன.

கார்த்திகையில் முருகன் திருக்கோயிலில் அபிசேகம், வழிபாடுகள் நடத்தப்பெறுகின்றன.

தேய்பிறை அட்டமியில் பைரவருக்கு அபிசேகம், வழிபாடுகள் செய்யப்படுகின்றன. பிரதோசத்தினன்று அபிசேகம், வழிபாடுகள் நிறைவடைந்ததும் இரண்டாம் திருச்சுற்றில் ‘பிரதோச நாயகர்’ சுற்றி வருகிறார்.

பௌர்ணமி அன்று இறைவிக்கு அபிசேகம், வழிபாடுகள் நடைபெறுகின்றன.

சஷ்டி, சிவராத்திரிக்கு திருக்கோயிலில் கட்டளைகள் கிடையாது.

மாதாந்திர திருவிழாக்கள் அனைத்தும் சாயரட்சைக்குப் பிறகு நடைபெறுகின்றன.

திருப்பூவணத் திருக்கோயிலில் ‘மோட்ச தீபம்’ ஏற்றும் வழக்கத்தைக் காண முடிகின்றது. இறைவன் சந்நிதி கருவறையில் இறைவனுக்குப் பின்னால் மோட்ச தீபம் உள்ளது. இதில் தீபம் ஏற்றுவதால் இறந்தவர்களுக்கு மறுபிறவி கிடையாது என்பதும், எடுக்கும் மறுபிறவியில் மலராகத் தோன்றி இறைவன் பூசைக்குப் பயன்படுவதாகவும் ஐதீகம் உள்ளது.

இறைவிக்கு தாமரையும் நீலோற்பவமும் உகந்ததாகக் கருதப்படுகிறது. எனவே வேண்டுதல்கள் நிறைவேற இதனை இறைவிக்கு சமர்ப்பிக்கின்றனர்.

குழந்தைப்பேறு, திருமணப்பேறு, பெண்களின் கருப்பை சம்மந்தப்பட்ட நோய்கள் நீங்க இறைவிக்கு செவ்வாய், வெள்ளி, பௌர்ணமி ஆகிய நாட்களில் அபிசேகத்திற்கு மஞ்சளும் திருவடிகளில் சாற்ற மருதாணியும் அரைத்துத் தருவதை அறிய முடிகின்றது.

**தற்காலத்திய மாற்றங்கள்:**

அடியவர்களுக்கு பொன்னனையாள் செய்து வந்த அன்னதானம் பின்னர் திருமலை நாயக்கர் காலம் வரையிலும் தொடர்ந்ததை அடிப்படையாகக் கொண்டு 17.04.2008 அன்று தொடங்கி ஒவ்வொரு வருடமும் சித்திரை மாதம் வளர்பிறை

பிரதோச நாளில் அன்னதானம் நடத்தப்பெறுகிறது. ஆய்வுக் காலத்திலும் இவ் அன்னதானத் திட்டம் நடைபெற்றதை கள ஆய்வில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**திருச்சுழியல்:**

திருச்சுழியல் திருக்கோயிலில் தினமும் ஆறு காலங்களில் நாள் வழிபாடுகள் நடைபெறுகின்றன. காலை 6 மணிக்குத் திருவனந்தல், காலை 7.30 மணிக்கு விளா பூசை, காலை 8.30 மணிக்கு காலசந்தி, பகல் 12 மணிக்கு உச்சிக்காலம், மாலை 5.30 மணிக்கு சாயரட்சை, 8.30 மணிக்கு அர்த்தசாமம் ஆகிய வழிபாடுகள் நடைபெறுகின்றன.

**திருவிழாக்கள்:**

இத்திருக்கோயிலின் திருவிழாக்கள் 'பாதாதிகேசம்' என்ற அடிப்படையில் நடத்தப்படுகின்றன. தமிழ் மாதங்கள் பன்னிரெண்டில் முதலில் கிராம தேவதைகள் என்று அழைக்கப்படும் காவல் தெய்வங்களுக்குத் திருவிழாக்கள் நடைபெறுகின்றன. திருச்சுழியல் திருத்தலத்தில் அமைந்திருக்கும் மாரியம்மன், அங்காள ஈசுவரி, சுழிச்சியம்மன் ஆகியனவற்றுக்கு திருவிழா நடைபெறுகின்றன. இக்காவல் தெய்வங்கள் இறைவனுக்கு கட்டுப்பட்டதால் சிம்ம வாகனம் இல்லாமல் நந்தி வாகனத்துடன் விளங்குகின்றன. இத்திருக்கோயில்களில் குங்குமத்திற்கு பதிலாக திருநீறே முதல் பிரசாதமாக வழங்கப்படுகின்றது. திருவிழாவின் பொழுது 'கிராம சாந்தி' நடைபெறுகின்றது. தெய்வங்களுக்கு சாதம் வடித்துக் கொட்டி, வடுக பூசை எனப்படும் பைரவர் பூசை செய்யப்பட்டு பின்பு பிரம்மச்சாரி பூசை செய்யப்பட்டு பின்னர் திருவிழா நடைபெறுகின்றது. இத்தெய்வங்களுக்கு இவ்வகையான பூசைகள் செய்வதன் மூலம் ஊர் செழிப்பாக இருக்கும் என்பது நம்பிக்கையாகத் திகழ்கின்றது.

கிராம தேவதைகளையடுத்து இறைவிக்குத் திருவிழாவும் பின்னர் கடைசியில் இறைவனுக்குமாக திருவிழாக்கள் நிகழ்கின்றன. திருக்கோயிலில் திருவிழாக் காலங்களில் நடக்கும் இரண்டு பூசைகள் முதன்மையாக உள்ளன. திருவிழாக்கள் தொடங்கும் பொழுதும் முக்கிய நிகழ்ச்சிகளின் பொழுதும் ஸ்நபன பூசை நடைபெறுகின்றது. இறைவன், இறைவி சந்நிதிகளில் இதற்கென உள்ள ஸ்நபன மண்டபத்தில் இரண்டு கலசங்களை வைத்து பூசை செய்யப்படுகின்றன. தீர்த்தம் என்ற பூசையும் சிறப்பாகச் செய்யப்படுகின்றது. பத்து நாட்களுக்கு முன்னர் 'பாலிகை' என்று அழைக்கப்படும் மண் கலையத்தில் நவதானியங்களை இடுகின்றனர். பத்தாம் நாள்

தீர்த்தம் அன்று இரண்டு வேளைகள் யாக சாலை பூசைகள் நடத்தப்பெறுகிறது. பின்னர் இறைவன் இறைவிக்கு உரிய சர தேவரைக் கொண்டு 'மூர்த்தி யாகம்' என்ற சடங்கு செய்யப்படுகிறது. இதைத் தொடர்ந்து சர தேவருக்கு தீர்த்தவாரி செய்யப்பெற்று பாலிகைகளில் உள்ள முளைத்த நவதானியங்கள் எதிரேயுள்ள ஆற்றங்கரையில் கொண்டு சேர்க்கப்படுகிறது. இவை அனைத்தும் 'தீர்த்தம்' என்று வழங்கப்படுகின்றது.

**சித்திரை** மாதம் வருடப்பிறப்பன்று பஞ்சாங்கம் வாசித்தல் நடைபெறுகின்றது.

**வைகாசி** மாதம் விசாக நட்சத்திரத்தன்று பக்தர்கள் பால்குடம் எடுத்து வருதல் நிகழ்கின்றது.

**ஆனி** மாதம் நடராசர், சிவகாமி உற்சவர்களுக்கு 'ஆனித் திருமஞ்சனம்' செய்யப்படுகின்றது.

**ஆடி** மாதம் இறைவிக்கு 'ஆடித்தபசு' திருவிழா சிறப்பாக பத்து நாட்கள் நடைபெறுகின்றது. திருவிழா தொடங்குவதற்கு முதல் நாள் இரவு 7 மணிக்கு மேல் அனுக்ஞை, சாந்தி செய்யப்படுகின்றன. திருவிழாவின் முதல் நாள் காலை கொடியேற்றம் செய்யப்பட்டு அன்றிரவு இறைவி கிளி வாகனத்தில் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது. இரண்டாம் நாள் காலை பல்லக்கிலும் இரவு குதிரை வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு நிகழ்கின்றது. மூன்றாம் நாள் காலை பல்லக்கிலும் இரவு சிம்ம வாகனத்திலும், நான்காம் நாள் திருவீதிப் புறப்பாடு காலை பல்லக்கிலும் இரவு அன்ன வாகனத்திலும் நிகழ்கின்றன. ஐந்தாம் நாள் காலை பல்லக்கு இரவு காமதேனு வாகனத்தில், ஆறாம்நாள் காலை பல்லக்கு, இரவு வெள்ளி இடப வாகனத்தில், ஏழாம் நாள் காலை பல்லக்கு, இரவு சேட வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடுகள் நடைபெறுகின்றன. எட்டாம் நாள் காலை பல்லக்கில் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகின்றது. அன்று மாலை 6 மணிக்கு மேல் மாலை மாற்றுதல் நிகழ்ச்சி செய்யப்படுகின்றது. மாலை மாற்றுதல் நடைபெற்று முடிந்ததும் பல்லக்கில் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகின்றது. ஒன்பதாம் நாள் காலை திருத்தேர் வடம் பிடித்தல் நடைபெறும். இரவு கேடயத்தில் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது. பத்தாம் நாள் உத்திராடம் நட்சத்திரத்தன்று காலை ஆற்றங்கரையில் தீர்த்தம், மாலை 6 மணிக்கு மேல் இறைவன் வெள்ளி இடப வாகனத்தில் ஆற்றுக்கு எழுந்தருளி இறைவிக்கு

காட்சி கொடுத்தல் நடைபெறுகின்றன. இதனைத் தொடர்ந்து இறைவன் இறைவி வெள்ளி இடப வாகனத்தில் திருவீதிப் புறப்பாடுடன் ஆடித்தபசுத் திருவிழா நடைபெறுகின்றது.

**ஆவணி** மாதம் விநாயகர் சதுர்த்தியன்று மகா மண்டபத்தில் இருக்கும் வரம்தரும் விநாயகர், அண்ட பகிரண்ட விநாயகர் ஆகியனவற்றுக்கு அபிசேகம் செய்யப்பட்டு வழிபாடுகள் நடைபெறுகிறது. இரவு விநாயகர் இடப வாகத்தில் திருவீதிப் புறப்பாடு.

**புரட்டாசி** மாதம் நவராத்திரி சிறப்பாகக் கொண்டாடப்பட்டு பத்தாம் நாள் விசயதசமி அன்று ஆற்றங்கரையில் அம்புவிடுதல் நடைபெறுகின்றது. இத்திருக்கோயிலில் கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, ஆகாயம் என ஐந்து திசைகள் அம்பு விடுதலுக்கு வைத்துள்ளனர். புரட்டாசி சனிக்கிழமைகளில் லெட்சுமி, சுழிகைக் கோவிந்தர், பூமாதேவிக்கு வழிபாடுகள் நடைபெறுகின்றன.

**ஐப்பசி** மாதம் கந்தர் சஷ்டி, இறைவனுக்கு அன்னாபிசேகம் நிகழ்த்தப்பெறுகின்றன.

**கார்த்திகை** மாதம் திங்கட்கிழமைகளில் 108 சங்காபிசேகம் இறைவனுக்கு நடைபெறுகின்றது. கார்த்திகைத் தீபத் திருநாள் அன்று வள்ளி, தெய்வானை, முருகர் உற்சவர்களுக்கும் இறைவன் சந்நிதி திருச்சுற்றில் உள்ள வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியருக்கும் சிறப்பு அபிசேகங்கள் செய்யப்படுகின்றன. பின்னர் ‘பால தீபம்’ என்று அழைக்கப்படும் முதல் விளக்கு இச்சந்நிதி, இறைவன், இறைவி, சண்டிகேசுவரர் சந்நிதிகளிலும், வரம்தரும் விநாயகருக்கும் ஏற்றப்படுகின்றது. பின்னர் யாகம் வளர்க்கப்பட்டு அதில் உள்ள நெருப்பை தீவெட்டியில் பிடித்து பனை ஓலைகளில் ஏற்றப்படுகின்றது. எரிந்து சாம்பலான பனை ஓலைகளிலிருந்து சிறிதளவு எடுத்து இறைவனுக்கு சாற்றுகின்றனர். இந்தச் சாம்பல் ‘கருக்கு’ என்று அழைக்கப்படுகின்றது. பின்னர் இறைவனுக்கு தீப வழிபாடு செய்யப்பட்டு திருக்கோயில் முழுவதும் தீபங்கள் ஏற்றப்படுகின்றன.

**மார்கழி** மாதம் ஆருத்ரா தரிசனம் சிறப்பாக நடைபெறுகின்றது. காலையில் நடராசர், சிவகாமி உற்சவருக்கு சிறப்பு அபிசேகம் செய்யப்பட்டு திருவீதிப் புறப்பாடு நடைபெறுகின்றது. இரவு பஞ்சமூர்த்திகள் திருவீதிப் புறப்பாடு நிகழ்கின்றது.

**தை** மாதம் பூச நட்சத்திரத்தன்று தெண்டாயுதபாணி சுவாமிக்கு வழிபாடுகள் செய்யப்படுகின்றன.

**மாசி** மாதம் மக நட்சத்திரத்தன்று பூமாதேவி இத்திருக்கோயில் வந்து வழிபடுவதாக ஐதீகம உள்ளது. அன்று ஸ்நபன பூசை, சர தேவர் பூசை, தீர்த்தவாரி, தீர்த்தம் ஆகியன நடைபெற்று மூல மந்திர சபம் செய்யப்படுகின்றது.

வருடத்தின் திருவிழாக்கள், **பங்குனி** மாதம் இறைவனுக்கு நடைபெறும் 'பங்குனிப் பெருந்திருவிழாவில்' நிறைவு பெறுகின்றன. பத்து நாட்கள் நடைபெறும் இத்திருவிழா துவங்குவதற்கு முதல்நாள் இரவு அனுக்ஞை, சாந்தி செய்யப்படுகிறது. திருவிழாவின் முதலாவது நாள் காலை கொடியேற்றம் செய்யப்பட்டு அன்றிரவு இறைவன் நந்தீசுவரர் வாகனத்திலும், இறைவி கிளி வாகனத்தில் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறது. இரண்டாம் நாள் இறைவன், இறைவி காலை கேடயத்திலும் இரவு குதிரை வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். மூன்றாம் நாள் காலை, இரவு இருவேளைகளிலும் இறைவன் இறைவி கேடயத்தில் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது. நான்காம் நாள் காலை கேடயத்திலும், இரவு இறைவன் பூத வாகனத்திலும் இறைவி அன்ன வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு கண்டருளுவர். ஐந்தாம் நாள் திருவீதிப் புறப்பாடு காலை கேடயத்திலும், இரவு இறைவனுக்கு கற்பகவிருட்சத்திலும் இறைவிக்கு காமதேனு வாகனத்திலும் நடைபெறுகிறது. ஆறாம் நாள் காலை திருஞானசம்பந்தருக்கு திருமுலைப்பால் ஊட்டுதல் நிகழ்ச்சி நடைபெறுகிறது. அன்று இரவு சமணர்களுக்கு இறைவன், இறைவி வெள்ளி இடப வாகனத்தில் காட்சி கொடுத்தல் நடைபெறுகிறது. ஏழாம் நாள் காலை கேடயத்திலும் இரவு கைலாயபருவத வாகனத்தில் இறைவனும், சேட வாகனத்தில் இறைவியும் திருவீதிப் புறப்பாடு கண்டருளுவர். எட்டாம் நாள் கேடயத்தில் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது. அன்று மாலை 'கன்னி ஊஞ்சல்' என்ற ஊஞ்சல் நிகழ்ச்சி நடத்தப்பெற்று பின்னர் இறைவன் இறைவி திருக்கல்யாணம் நடைபெறுகிறது. அன்று இரவு இறைவன் யானை வாகனத்திலும் இறைவி புட்ப வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது. ஒன்பதாம் நாள் காலை தேரோட்டமும், பத்தாம் நாள் உத்திர நட்சத்திரத்தன்று காலை தீர்த்தமும், இரவு வெள்ளி இடப வாகனத்தில் இறைவன், இறைவி திருவீதிப் புறப்பாடும் நடைபெறுகின்றன.

மாதாந்திர நிகழ்ச்சிகளும் திருக்கோயிலில் நடைபெறுகின்றன. சதுர்த்தி அன்று அண்ட பகிரண்ட விநாயகருக்கு அபிசேகம் செய்யப்படுகின்றது. கார்த்திகை அன்று வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியருக்கு அபிசேகம் நடைபெறுகின்றது. தேய்பிறை அட்டமி அன்று பைரவருக்கு சிறப்பாக வழிபாடுகள் நிகழ்கின்றன. மாதாந்திர நிகழ்ச்சிகளில் பிரதோசத்தினன்று மட்டும் இறைவன் இறைவி திருச்சுற்று சுற்றி வருதல் நடைபெறுகின்றது.

பௌர்ணமி அன்று இறைவி சந்நிதி ஸ்ரீ சக்ரத்திற்கு விசேட பூசைகள் நடந்துள்ளன. இரவு 9 மணியிலிருந்து 10.30 மணிக்குள் யாகம் வளர்க்கப்பட்டு பின்னர் ஸ்ரீ சக்ரத்தின் கீழே பட்டுத் துணி விரிக்கப்பட்டு, மேலே தூவப்படும் பூக்களை ஒன்றாகச் சேர்த்து இறைவிக்குச் சாற்றி வழிபட்டுள்ளனர். அன்று பால் பாயாசம், அப்பம், சக்கரைப் பொங்கல் ஆகியன படைக்கப்பட்டுள்ளன. சனீசுவரர் மட்டும் தனியாக இறைவன் சந்நிதி திருச்சுற்றில் அமைந்திருப்பது விசேடமாகக் கருதப்படுவதால் சனிக்கிழமைகளிலும் சனிப்பெயர்ச்சிகளின் பொழுதும் மக்களால் அதிகம் வணங்கப்படுகின்றது. இறந்து முப்பது நாட்கள் கழிந்த பின் இத்திருக்கோயிலில் மோட்ச தீபம் ஏற்றும் வழக்கமும் இப்பகுதி மக்களிடம் காணப்படுகின்றது.

**தற்காலத்திய மாற்றங்கள்:**

இறைவனுக்கு மட்டும் தேர் உள்ளது. இறைவிக்கு சகடையின் மேல் சட்டங்களைக் கொண்டு தேர் போல செய்கின்றனர். இது ‘சட்டத்தேர்’ என்று வழங்கப்படுகின்றது. விநாயகர், வள்ளி, தெய்வானை, முருகர், சண்டிகேசுவரர் ஆகியனவற்றை ஒன்றாக ஒரே சப்பரத்தில் வைத்து தேர் நடைபெறுகின்றது.

வெளித்திருச்சுற்றில் இறைவன் சந்நிதி வடகிழக்கு மதிற்சுவரை ஒட்டியுள்ள வில்வ மரத்தில் பின்னமான தெட்சிணாமூர்த்தி சிலை வைக்கப்பட்டுள்ளது. மக்கள் இதன் முன் சிறு கற்களை அடுக்கி வைத்து வழிபடுகின்றனர். இவ்வாறு செய்தால் புதிய வீடு கட்ட முடியும் என்ற நம்பிக்கையைக் கொண்டுள்ளனர். ஆனால் 01.10.2017 அன்று மேற்கொண்ட கள ஆய்வின் பொழுது க.ஹாலாஸ்யம் சிவாச்சாரியாரிடம் இதைப்பற்றி நேர்காணலில் வினவிய பொழுது இந்த வழிபாட்டை மக்கள் கடந்த ஆறு மாதங்களாகச் செய்து வருகிறார்கள் என்று பதிவு செய்துள்ளார்.

**திருக்குற்றாலம்:**

திருக்குற்றாலத் திருக்கோயிலில் மகுடாகமத்தின்படி முதலில் விநாயகருக்கு வழிபாடும், பின்னர் நடராசர் பெருமானுக்கு வழிபாடும் நடைபெறுகின்றது. இதற்குப் பின்னரே இறைவனுக்கும் இறைவிக்கும் வழிபாடு நடத்தப்பெறுகின்றது.

திருக்குற்றாலத் திருக்கோயிலில் எட்டு காலங்களில் நாள் வழிபாடுகள் நடைபெறுகின்றன. காலை 6 மணிக்குத் திருவனந்தல், காலை 7 மணிக்கு உதய மார்த்தாண்டம், காலை 8 மணிக்கு விளா பூசை, காலை 9 மணிக்கு சிறுகால சந்தி, காலை 10 மணிக்கு ஸ்நபன பூசையுடன் காலசந்தி, நண்பகல் 12 மணிக்கு உச்சிக்காலம், மாலை 6 மணிக்கு சாயரட்சை, இரவு 8 மணிக்கு அர்த்தசாமம் என நாள் வழிபாடுகள் செய்யப்படுகின்றன. அர்த்தசாமம் முடிந்ததும் ஏகாந்த சேவை நடைபெற்றதை அறிய முடிகின்றது.[21] பள்ளியறை பூசையில் இறைவனுக்குத் திருவடி நிலைகளும் இறைவிக்குத் ‘திரிகோணகரம்’ பயன்படுத்தப்படுகின்றன. பீடத்தின் மேல் முக்கோணம் வடிக்கப்பட்டிருக்கும். இதன் மேலே இறைவியின் உருவம் பொறிக்கப்பட்டிருக்கும். இதனையே திரிகோணகரம் என்று அழைக்கின்றனர்.[22]

திருவனந்தலுக்குப் பொறி, உதய மார்த்தாண்டத்திற்கு சுத்தான்னம், விளா பூசைக்கு தோசை குளசல், சிறுகால சந்திக்கு புளியோதரை, காலசந்திக்கு பொங்கல், வடை, கத்திரிக்காய் சிறுபருப்பு பொறியல், உச்சிக்காலத்திற்கு பாயசத்துடன் சுத்தான்னம், சாயரட்சைக்கு சர்க்கரைப் பொங்கல், சுத்தான்னம், அர்த்தசாமத்திற்கு மிளகு சாதம் எனப்படும் சம்பா சாதம், அப்பம், தேன்குழல் ஆகியன நிவேதிக்கப்படுகிறது.

இத்திருக்கோயில் குளிர்ச்சியான இடத்தில் அமைந்திருப்பதால் இறைவனுக்கு அபிசேகத்தின் பொழுது தைலம் வைக்கப்படுகிறது. இத்தைலம் மகரப்பூ, சடாமஞ்சி, சாதிக்காய், சாதிபத்திரி, வால்மிளகு, விளாமிச்சை உள்ளிட்ட ஐம்பதுக்கும் மேற்பட்ட மூலிகைகளை சந்தனக் கட்டை, பால், நல்லெண்ணெய் முதலானவற்றோடு மூன்று மாதம் அணையாமல் அடுப்பில் வைத்து காய்ச்சித் தயாரிக்கப்படுகிறது.[23] ‘சந்தனாதி தைலம்’ என்று அழைக்கப்படும் இத்தைலம் இறைவனுக்கு சாற்றப்பட்டதும் பிரசாதமாக வழங்கப்படுகிறது. இத்தைலத்தை தலையில் தேய்த்தால் தீராத தலைவலி, மூளை வளர்ச்சிக் கோளாறு, மூளை பாதிப்புகள் போன்றன நீங்கும் என்ற

நம்பிக்கை நிலவுகின்றது.[24] அர்த்தசாமத்திற்கு சுக்கு, கடுக்காய், கருப்பட்டியால் செய்த கசாயம் இறைவனுக்கு நிவேதிக்கப்படுகிறது.

**திருவிழாக்கள்:**

திருக்குற்றாலத் திருக்கோயில் சங்கு வடிவத்தில் அமைந்திருப்பதால் வடக்கு வாயில் சங்கின் துவாரமாகக் கருதப்படுகின்றது. எனவே அனைத்து திருவீதிப் புறப்பாடுகளும் வடக்கு வாயில் வழியே வந்து நடைபெறுகிறது. இத்திருக்கோயிலிலும் சர தேவர் திருவிழா காலங்களில் முக்கிய இடம் பெறுகிறார். திருவீதிப் புறப்பாடு நடைபெறும் நாட்களில் காலையில் முதலில் திருப்பலி நாதர், சர தேவர் திருவீதி சுற்றிவருகிறார்கள். மிருத்சங்கிரகணத்திற்காக மண்ணை எடுத்து வருவதற்காக சிவாச்சாரியார்களுடன் சர தேவரும் புறப்பாடு செய்யப்படுகிறார். மேலும் ‘நாள் கதிர்’ என அறுவடை காலங்களில் செய்யப்படும் கதிர் அறுத்தல், தீர்த்தவாரி ஆகியனவற்றிலும் சர தேவர் பயன்படுத்தப்படுகிறார்.

சித்திரை விசுத்திருவிழா, ஐப்பசி விசுத்திருவிழா, திருவாதிரைத் திருவிழா ஆகிய திருவிழா காலங்களிலும், ஆடி அமாவாசை, உத்தராயண காலத் தொடக்கம், தட்சிணாயன காலத் தொடக்கம் ஆகியனவற்றின் பொழுதும் தீர்த்தவாரி நடைபெறுகிறது.

கிரகண முடிவு, அமாவாசை அன்றும் தீர்த்தவாரி நடைபெற்றுள்ளதை அறிய முடிகின்றது.[25]

‘விசு’ என்பது மாதப் பிறப்பைக் குறிக்கும். இத்திருக்கோயிலில் சித்திரை, ஐப்பசி மாதப் பிறப்புகளை பத்து நாட்கள் விசுத்திருவிழாவாகக் கொண்டாடுகின்றனர்.

**சித்திரை** மாதம் சித்திரை விசுத்திருவிழா சிறப்பாக நடைபெறுகிறது. சித்திரை மாதம் ஒன்றாம் தேதியை பத்தாவது திருநாளாகக் கொண்டு, பங்குனி மாதம் 22 அல்லது 23 ஆம் தேதியில் ‘சித்திரை விசுத்திருவிழா’ தொடங்குகிறது. இத்திருவிழாவின் பஞ்சமூர்த்தி புறப்பாட்டில், அருகே இலஞ்சி என்ற ஊரில் இருக்கும் திருக்கோயிலில் இருந்து வள்ளி, தெய்வானை, முருகன் இடம்பெறுகிறார். இலஞ்சி திருக்கோயிலின் முருகன் வரதராசக் குமாரர் ஆவார். இலஞ்சி முருகன் ‘திருவிலஞ்சிக் குமாரர்’ என்ற வழக்குப் பெயராலும் அழைக்கப்படுகிறார்.

சித்திரை விசுத்திருவிழாவின் முதல் நாள் அதிகாலை கொடியேற்றம் செய்யப்படுகிறது. அன்று மாலை, இறைவன் - இறைவி வெள்ளி ஏக சிம்மாசனத்தில் திருவீதிப் புறப்பாடு கண்டருளுவர். இந்த ஏகசிம்மாசனமே இரண்டாம் நாள் காலை, மாலையிலும் மூன்றாம் நாள் காலையிலும் திருவீதிப் புறப்பாட்டிற்குப் பயன்படுத்தப்படுகிறது. மூன்றாம் நாள் மாலை இறைவனுக்கு பூத வாகனம், இறைவிக்கு சிம்ம வாகனம் பயன்படுத்தப்படுகின்றன. நான்காம் நாள் காலை இறைவன் - இறைவி ஏக சிம்மாசனத்தில் திருவீதிப் புறப்பாடு கண்டருளுகின்றனர். நான்காம் நாள் மாலை பஞ்சமூர்த்திகளில் விநாயகர் வெள்ளி மூஞ்சூர் வாகனத்திலும், திருவிலஞ்சிக்குமாரர் வெள்ளி மயில் வாகனத்திலும் இறைவன், இறைவி வெள்ளி இடப வாகனத்திலும் திருவீதிப் புறப்பாட்டிற்கு எழுந்தருள்கின்றனர். ஐந்தாம் நாள் காலை தேரோட்டம் நடைபெறுகிறது.

ஐந்தாம் நாள் மாலை இறைவன் பூத வானத்திலும் இறைவி கிளி வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். ஆறாம் நாள் காலை இறைவன் - இறைவிக்கு ஏக சிம்மாசனத்தில் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறது. அன்று மாலை இறைவனுக்கு யானை வாகனமும் இறைவிக்கு அன்ன வாகனமும் பயன்படுத்தப்படுகின்றன. ஏழாம் நாள் காலை வெள்ளி ஏக சிம்மாசனத்தில் இறைவன் - இறைவி திருவீதிப் புறப்பாடு செய்யப்பெறுகின்றது. அதே வேளையில் நடராசர் திரிகூட மண்டபத்திற்கு எழுந்தருளல் செய்யப்பட்டு, ‘தாண்டவ தீபாராதனை’ நடைபெறுகிறது. இதே போல் மாலையும் நடராசர் புட்பப் பல்லக்கில் எழுந்தருளியதும் ‘வெள்ளை சாத்தி’, தாண்டவ தீபாராதனை நிகழ்த்தப் பெறுகிறது. நடராசர் எழுந்தருளல் திரிகூட மண்டபத்தில் நடைபெறுகிறது. மாலை இறைவன், இறைவி வெள்ளிச் சப்பரத்தில் திருவீதிப் புறப்பாடு காண்கின்றார்கள்.

எட்டாம் நாள் காலையில் வெள்ளிச் சப்பரத்தில் இறைவன், இறைவி திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். நடராசர் சித்திரை சபைக்கு எழுந்தருளல் செய்யப்பட்டு, ‘பச்சை சாத்தி’ முடிந்ததும் தாண்டவ தீபாராதனை நடைபெறுகிறது. அன்று மாலை இறைவன் பிட்சாடனர் வேடத்தில் பூங்கோயில் சப்பரத்தில் திருவீதிப் புறப்பாடு காண்கின்றார். ஒன்பதாம் நாள் காலை இறைவன், இறைவி வெள்ளிச் சப்பரத்திலும், மாலை இறைவன் பூத வாகனத்திலும், இறைவி காமதேனு வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு கண்டருள்கின்றனர். பத்தாம் நாள் காலை ‘விசுத் தீர்த்தவாரி’ முடிந்து இடப

வாகனக் காட்சி நிகழ்த்தப் பெறுகிறது. இதில் வள்ளி, தெய்வானை, திருவிலஞ்சிக் குமாரர் வெள்ளி மயில் வாகனத்தில் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறார். மாலை திருவீதிப் புறப்பாட்டுடன் சித்திரை விசுத்திருவிழா நிறைவடைகிறது. இத்திருவிழாவில் நான்காம் நாள் மாலை, ஐந்தாம் நாள் காலை, பத்தாம் நாள் காலையைத் தவிர மற்றைய நாள்களில் திருவிலஞ்சிக் குமாரருக்கு வெள்ளிச் சப்பரத்தில் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது.

'தாண்டவ தீபாராதனை' திருக்குற்றாலத் திருக்கோயிலுக்கு சிறப்பாக அமைந்த ஒன்றாகும். முதலில் பீட பூசை முடிந்த பின்பு 'ஐந்தடுக்கு புட்ப தீபம்' காட்டப்படுகிறது. இது தேவர்களுக்கு நடராசர் காட்சி கொடுப்பதாய் அமைகின்றது. இதன் பின்னர் நடராசருக்கு சிறு கிண்ணங்களில் அபிசேகத் திரவியங்களை வைத்து 'பாவனாபிசேகமும்', படையலும் நடைபெறுகிறது. ஏழடுக்குப் புட்ப தீபம், மகாசோடச உபசாரம் முடிந்ததும் தாண்டவ தீபாராதனை நடைபெறுகிறது. நடராசர் தாண்டவம் செய்வது போன்ற அபிநயத்துடன் புட்ப தீபம் நடராசர் முன் காட்டப்படுகிறது. இது 'நர்த்தன தீபாராதனை' என்றும் அழைக்கப்படுகிறது. தாண்டவம் புரிந்த நடராசரை தேவர்கள் இயற்கை நிலையில் வழிபட விரும்புவதாய் ஐதீகம். எனவே தாண்டவ தீபாராதனை முடிந்ததும் ஐந்தடுக்கு புட்ப தீபம் கொண்டு வழிபாடு செய்யப்படுகிறது. இம்முறைகள் அனைத்தும் ஒன்றாக 'தாண்டவ தீபாராதனை' என்று வழங்கப்படுகிறது.

திருவிழா முடிந்ததும் இறைவன் குற்றாலநாதர் தமது திருமகனார் வள்ளி, தெய்வானை, திருவிலஞ்சிக் குமாரருக்கு பட்டாடைகள் அளித்ததும், இவர்கள் இறைவன், இறைவியை வலம் வந்து பெற்றுக் கொள்வது நடைபெறுகின்றது.

சித்ரா பௌர்ணமி அன்று பராசக்தி பீடத்திற்கு சிறப்பு பூசைகளும் வழிபாடுகளும் நடைபெறுகின்றன.

**வைகாசி** மாதம் விசாக நட்சத்திரத்தன்று காலை, இறைவன் சந்நிதி வடமேற்கு மூலையில் இருக்கும் வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியருக்கு அபிசேகம் செய்து மாம்பழச் சாறு படைக்கப்படுகிறது.

**ஆனி** மாதம் நடராசருக்கு 'ஆனித் திருமஞ்சனம்' நடைபெறுகிறது. காலசந்தி முடிந்ததும் தொடங்கி, உச்சிக்காலத்தில் ஆனித் திருமஞ்சன பூசைகள் நிறைவடைகின்றன.

**ஆடி** மாதம் இறைவி குழல்வாய்மொழிக்கு ‘ஆடிப் பூரம்’ பாலிகை இடலில் தொடங்குகிறது. ஆடிப் பூரத்தினன்று காலை இறைவிக்கு அபிசேகம் நடைபெற்று வளையல்களால் அலங்காரம் செய்யப்படுகிறது. பின்னர் இறைவிக்குச் சாற்றப்பட்ட வளையல்கள் பக்தர்களுக்குப் பிரசாதமாகத் தரப்படுகிறது. அன்று பராசக்தி பீடத்திற்கு ‘புட்பாஞ்சலி’ நடைபெறுகிறது.

**ஆவணி** மாதம் விநாயகர் சதுர்த்தி அன்று சாயரட்சை முடிந்ததும் உற்சவர் விநாயகரை அம்பல விநாயகர் சந்நிதியில் எழுந்தருளல் செய்கின்றனர். பின்னர் ஸ்நபன பூசை செய்யப்பட்டு, அபிசேகம், வழிபாடுகள் நடைபெறுகின்றன. இரவு விநாயகர் திருவீதிப் புறப்பாடு கண்டருளுகிறார்.

**புரட்டாசி** மாதம் சனிக்கிழமைகளுக்கு திருக்கோயில் கட்டளைகளோ பிற கட்டளைகளோ இல்லை. நவராத்திரியின் பொழுது பத்து நாட்கள் பராசக்தி பீடத்திற்கு வழிபாடுகள் நடைபெறுகின்றன. விசயதசமி அன்று திருக்கோயிலின் வடகிழக்கு மூலையில் பதினெட்டாம்படி கருப்பர் சந்நிதி அருகில் ‘அம்பு எய்தல்’ நடைபெறுகிறது.

**ஐப்பசி** மாதம் ஒன்றாம் தேதியைப் பத்தாவது திருநாளாகக் கொண்டு புரட்டாசி மாதம் 22 அல்லது 23ஆம் தேதியில் ‘ஐப்பசி விசுத்திருவிழா’ தொடங்குகிறது. இத்திருவிழாவின் பஞ்சமூர்த்திகளில் திருக்குற்றாலத் திருக்கோயிலின் வள்ளி, தெய்வானை, முருகன் இடம்பெறுகிறார். பத்து நாட்கள் நடைபெறும் இத்திருவிழாவின் முதல் நாள் காலை கொடியேற்றம் செய்யப்படுகிறது. முதல் நாள் மாலை, இரண்டாம் நாள் காலை, மாலை, மூன்றாம் நாள் காலை வரை இறைவன் - இறைவி ஏக சிம்மாசனத்தில் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். மூன்றாம் நாள் மாலை இறைவன் பூத வாகனத்திலும் இறைவி சிம்ம வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகின்றனர். நான்காம் நாள் காலை இறைவன் - இறைவிக்கு ஏக சிம்மாசனத்தில் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது. நான்காம் நாள் மாலை விநாயகருக்கு வெள்ளி மூஞ்சூர் வாகனம், வள்ளி, தெய்வானை, முருகனுக்கு வெள்ளி மயில் வாகனம், இறைவனுக்கும் இறைவிக்கும் வெள்ளி இடப வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறது. ஐந்தாம் நாள் காலை தேரோட்டம் நடைபெறுகின்றது. நான்காம் நாள் மாலை, ஐந்தாம் நாள் காலையைத் தவிர மற்றைய திருவீதிப் புறப்பாடுகளில் வள்ளி, தெய்வானை, முருகனுக்கு மரச்சப்பரம்

பயன்படுத்தப்படுகிறது. ஐந்தாம் நாள் மாலை இறைவன் பூத வாகனத்திலும் இறைவி கிளி வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகின்றனர். ஆறாம் நாள் காலை இறைவன் - இறைவி ஏக சிம்மாசனத்திலும் மாலை இறைவன் யானை வாகனத்திலும், இறைவி அன்ன வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகின்றனர். ஏழாம் நாள், எட்டாம் நாள் காலை இறைவன் - இறைவி ஏக சிம்மாசனத்தில் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். ஏழாம் நாள் காலை நடராசர் திரிகூட மண்டபத்திற்கு எழுந்தருளல் செய்யப்பட்டு தாண்டவ தீபாராதனையும், மாலை வெள்ளை சாத்தி பின்னர் தாண்டவ தீபாராதனை முடிந்ததும் வெள்ளிச் சப்பரத்தில் இறைவன், இறைவி திருவீதிப் புறப்பாடு நிகழ்கின்றது. எட்டாம் நாள் காலை சித்திர சபையில் நடராசருக்குப் பச்சை சாத்தி, தாண்டவ தீபாரதனை நடைபெறுகிறது. எட்டாம் நாள் மாலை இறைவன் பிட்சாடனர் அலங்காரத்துடன் பூங்கோயில் சப்பரத்தில் திருவீதிப் புறப்பாடு நிகழ்கிறது. ஒன்பதாம் நாள் காலை இறைவன் - இறைவி ஏக சிம்மாசனத்திலும், மாலை இறைவன் பூத வாகனத்திலும், இறைவி காமதேனு வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறது. பத்தாம் நாள் காலை 'விசுத் தீர்த்தவாரி'யைத் தொடர்ந்து இடப வாகனக்காட்சி நடைபெறுகிறது. பத்தாம் நாள் மாலை பஞ் மூர்த்திகள் புறப்பாடுடன் ஐப்பசி விசுத்திருவிழா நிறைவடைகின்றது.

ஐப்பசி மாதம் 'கந்த சஷ்டி விழா' ஏழு நாட்கள் சிறப்பாக நடைபெறுகிறது. ஆறாம் நாள் மாலை கீழ ரத வீதியில் சூரசம்காரமும் ஏழாம் நாள் மாலையில் வள்ளி, தெய்வானை, முருகனுக்குத் திருக்கல்யாணமும் நிகழ்த்தப்பெறுகிறது. பௌர்ணமி அன்று இறைவனுக்கு அன்னாபிசேகம் நடைபெறுகிறது. அபிசேகம் செய்யப்பட்ட அன்னத்தை தயிர் சாதமாகக் கிளறி பக்தர்களுக்குப் பிரசாதமாக வழங்கப்படுகிறது. இம் மாதம் பூர நட்சத்திரத்தில் அகத்தியர் சந்நிதி எதிரே இறைவன், இறைவிக்கு திருக்கல்யாணம் நடத்தப்பெறுகிறது.

**கார்த்திகை** மாதம் அனைத்து திங்கட்கிழமைகளிலும் இறைவனுக்கு 108 சங்காபிசேகம் செய்யப்படுகிறது. கார்த்திகைத் தீபத் திருநாள் அன்று திருக்கோயிலின் வாயில், சித்திர சபையின் வாயில், கூத்தர் திருக்கோயிலின் வாயில் ஆகிய இடங்களில் 'சொக்கர்ப்பனை' கட்டப்படுகிறது. மாலை சாயரட்சை பூசை முடிந்ததும் இறைவன், இறைவி மர இடப வாகனத்தில் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். இறைவன், இறைவி சொக்கர்ப்பனை இருக்கும் இடத்திற்கு வந்தவுடன் அவை

ஏற்றப்படுகிறது. சொக்கர்ப்பனைகள் ஏற்றப்பட்டதும் திருக்கோயிலில் விளக்குகள் ஏற்றி வைக்கப்படுகிறது.

**மார்கழி** மாதம் ‘ஆருத்ரா தரிசனம்’ திருக்குற்றாலத் திருக்கோயிலில் பத்து நாட்கள் திருவாதிரைத் திருவிழாவாகக் கொண்டாடப்படுகிறது. முதல் நாள் அதிகாலையில் கொடியேற்றம் நடைபெற்றதும், திருநாவுக்கரசர் திருவீதிப் புறப்பாடும் திருக்கோயிலில் உழவாரப் பணியும் நடைபெறுகின்றன. முதல் நாள் மாலை, இரண்டாம் நாள் காலை, மாலை, மூன்றாம் நாள் காலை, நான்காம் நாள் காலை, ஆறாம் நாள் காலை, ஏழாம் நாள் காலை, மாலை, எட்டாம் நாள் காலை, ஒன்பதாம் நாள் காலை ஆகிய வேளைகளில் இறைவன், இறைவி வெள்ளிச் சப்பரத்தில் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். மூன்றாம் நாள் மாலை இறைவன் பூத வாகனத்திலும் இறைவி சிம்ம வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகின்றனர். நான்காம் நாள் காலை நடைபெறும் பஞ்சமூர்த்திகள் திருவீதிப் புறப்பாட்டில் இறைவன், இறைவி வெள்ளி இடப வாகனத்தில் வருகின்றனர். ஐந்தாம் நாள் காலை பஞ்சமூர்த்திகள், நடராசருக்கு தேரோட்டம் நடைபெறுகின்றது. நான்காம் நாள் மாலை, ஐந்தாம் நாள் காலை ஆகிய இருவேளைகளில் மட்டுமே திருவாதிரைத் திருவிழாவில் பஞ்சமூர்த்திகள் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது. ஐந்தாம் நாள் மாலை இறைவன் பூத வாகனத்திலும் இறைவி கிளி வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். ஆறாம் நாள் மாலை நடைபெறும் திருவீதிப் புறப்பாட்டில் இறைவனுக்கு யானை வாகனமும் இறைவிக்கு அன்ன வாகனமும் பயன்படுத்தப்படுகிறது. நடராசருக்கு ஏழாம் நாள் மாலையில் வெள்ளை சாத்தி, எட்டாம் நாள் காலையில் பச்சை சாத்தி நடைபெறுகிறது. எட்டாம் நாள் மாலை இறைவன், இறைவி பூங்கோயில் வாகனத்தில் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறது. ஒன்பதாம் நாள் மாலை பூத வாகனம் இறைவனுக்கும் காமதேனு வாகனம் இறைவிக்கும் திருவீதிப் புறப்பாட்டில் பயன்படுத்தப்படுகின்றன. பத்தாம் நாள் அதிகாலை நடராசருக்கு சித்திர சபையில் ஆருத்ரா தரிசனம், தாண்டவ தீபாராதனை முடிந்ததும் பின்னர், திரிகூட மண்டபத்திற்கு எழுந்தருளல் செய்யப்பட்டு ஆருத்ரா தரிசனம், தாண்டவ தீபாராதனை நடைபெறுகிறது. திருவாதிரைத் திருவிழாவின் பத்து நாட்களிலும் காலை, மாலையில் நடராசருக்குத் தாண்டவ தீபாராதனை நடைபெறுகிறது.

மார்கழி மாதம் வரும் வைகுண்ட ஏகாதசி, அனுமன் செயந்தி ஆகியனவற்றுக்குத் தனி கட்டளைகள் கிடையாது.

**தை** மாதம் மக நட்சத்திரத்தில் தெப்பத் திருநாள் நடைபெறுகிறது.

**மாசி** மாதம் மகா சிவராத்திரி அன்று நான்கு காலங்களிலும் அபிசேகம், சிறப்பு பூசைகள் நடைபெறுகின்றன. ஓவ்வொரு காலப் பூசை முடிந்ததும் சங்க வீதியில் சுற்றி வருதல் நிகழ்கின்றது. தைப்பூசம், மாசி மகத்திற்கும் தனி கட்டளைகள் கிடையாது.

**பங்குனி** மாதம் உத்திர நட்சத்திரத்தன்று காலை திரிகூட மண்டபத்தில் இருக்கும் சாசுதாவிற்கு ஸ்நபன பூசை செய்யப்பட்டு, அபிசேகம், வழிபாடுகள் நடைபெறுகின்றன. இந்நாளில் அருச்சுனன் விபூதி சம்புடம் கண்டெடுத்த நிகழ்ச்சியும் நிகழ்த்தப் பெறுகிறது.

திருக்குற்றாலத் திருக்கோயிலில் இருக்கும் தந்தப் பல்லக்கு சிறிது சிதலமடைந்த காரணத்தினால் அதைப் பாதுகாக்க வேண்டி திருவிழாக்களில் தந்தப் பல்லக்கு பயன்படுத்தப் பெறுவதில்லை.

மாதம் தோறும் சங்கடகர சதுர்த்தி அன்று வல்லபை விநாயகருக்கு மாலையில் அபிசேகம், வழிபாடுகள் நடக்கின்றன.

கார்த்திகை, சஷ்டி அன்று மாலையில் வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியருக்கு அபிசேகம், வழிபாடுகள் செய்யப்படுகின்றன.

தேய்பிறை அட்டமி அன்று சாயரட்சை முடிந்ததும் பைரவருக்கு கும்பம் வைத்து யாகம் வளர்க்கப்படுகிறது. இதைத் தொடர்ந்து அபிசேகம் செய்யப்பெற்று வழிபாடுகள் நடக்கின்றன.

மாதம் இருமுறை வரும் பிரதோசத்தின் பொழுது மட்டும் அபிசேகம், வழிபாடுகள் நிறைவடைந்ததும் சங்க வீதியில் சுற்றி வருதல் நிகழ்கின்றது.

பௌர்ணமி அன்று மாலை பராசக்தி பீடத்திற்கு அபிசேகம், வழிபாடுகள் செய்யப்படுகின்றன.

இவை தவிர முற்பிறவியில் செய்த பாவம், இறைவனை வழிபட்டால் நீங்கும் என்ற நம்பிக்கையும் காணப்படுகிறது. திருமணம் விரைவில் நடக்க மணக்கோலநாதர் சந்நிதியில் வழிபாடுகள் செய்யப்படுகின்றன. காணாமற் போன பொருட்கள் மீண்டும் கிடைக்க சோமலிங்கரை வழிபடுகின்றனர். பராசக்தி பீடத்திற்குப் பன்னீர் சமர்ப்பிக்கும் வழக்கமும் உள்ளது. பன்னீர் குளிர்ச்சியும் வாசனையும் கொண்டது. இதை பராசக்தி

பீடத்திற்குச் சமர்ப்பித்தால் இறைவி மனம் குளிர்ந்து நல்லது செய்வாள் என்ற ஐதீகம் நிலவுகிறது.

**திருநெல்வேலி:**

இறைவி, இறைவன் திருக்கோயில்களில் ஏழு நாள் வழிபாடுகள் நிகழ்த்தப்படுகின்றன. இறைவி திருக்கோயிலில் காலை 6 மணிக்குத் திருவனந்தல், 7 மணிக்கு விளா பூசை, 8 மணிக்கு சிறுகால சந்தி, 9 மணிக்கு காலசந்தி, பகல் 12.30 மணிக்கு உச்சிக்காலம், மாலை 5.30 மணிக்கு சாயரட்சை, இரவு 8.15 மணிக்கு அர்த்தசாம பூசைகள் நிகழ்கின்றன.

இறைவன் திருக்கோயிலில் காலை 6.30 மணிக்குத் திருவனந்தல், காலை 7.30 மணிக்கு விளா பூசை, காலை 8.30 மணிக்கு சிறுகால சந்தி, காலை 9.30 மணிக்கு காலசந்தி, பகல் 12 மணிக்கு உச்சிக்காலம், மாலை 6 மணிக்கு சாயரட்சை, இரவு 8.30 மணிக்கு அர்த்தசாமம் நிகழ்த்தப்படுகின்றன.

நாள் வழிபாடுகளில் உச்சிக்கால பூசை தவிர அனைத்து பூசைகளும் இறைவி திருக்கோயிலில் முன்னதாகவும் பின்னர் இறைவன் திருக்கோயிலிலும் நடைபெறுகின்றன. இரண்டு திருக்கோயில்களுக்கும் தனித்தனியே மடப்பள்ளிகள் இருக்கின்றன. இருப்பினும் கணவன் மனைவி இடையே நிலவ வேண்டிய கருத்தொற்றுமையை வலியுறுத்தும் விதமாக உச்சிக்கால பூசைக்கு மட்டும் இறைவி திருக்கோயிலின் மடப்பள்ளியில் படையல் தயார் செய்யப்பட்டு இறைவனுக்குப் படைக்கப்படுகின்றது. இதில் இறைவியே இறைவனுக்கு உணவு தயார் செய்து எடுத்துக்கொண்டு செல்வதாய் ஐதீகம் அமைந்துள்ளது.

இறைவன் திருக்கோயிலில் பூசைகள் முதலில் மூல மகாலிங்கத்திற்கும் பின்னர் இறைவன் நெல்லையப்பருக்கும் நடைபெறுகின்றது.

**திருவிழாக்கள்:**

நாள் வழிபாடுகள் போல் திருவிழாக்களும் தனித்தனியே நடைபெறுகின்றன. இத்திருக்கோயில்களில் நட்சத்திரத்தின் அடிப்படையில் வளர்பிறையை வைத்து திருவிழாக்கள் அமையப்பெற்றுள்ளன.

**சித்திரை** மாதம் முதல் நாள் 'சித்திரை விசு' அன்றும் சித்திரை நட்சத்திரத்தன்றும் இறைவனுக்கு சிந்துபூந்துறையில் தீர்த்தவாரி நடைபெறுகிறது. திருவோண நட்சத்திரத்தில் சந்தன சபாபதி அபிசேகம், சதய நட்சத்திரத்தில்

திருநாவுக்கரசர் ஐக்கியக் காட்சி, பரணி நட்சத்திரத்தில் சிறுத்தொண்டர் திருவிளையாடல் ஆகியன நிகழ்த்தப்படுகின்றன.

**வைகாசி** மாதத்தின் விசாக நட்சத்திரத்திற்கு முந்தைய நாள் காராம் பசுவிற்கு பூசை செய்து பால் கறந்து இறைவன், இறைவிக்கு பால் அபிசேகம் செயயப்பெறுகிறது. மறுநாள் விசாகத்தன்று இறைவனுக்கும் இறைவிக்கும் ஆயிரத்தெட்டு சங்கு வைத்து அபிசேகம் நடைபெறுகிறது. அன்றைய இரவு இடப வாகனத்தில் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது.

**ஆனி** மாதம் மூல நட்சத்திரத்தில் கொடியேற்றத்தைத் தொடர்ந்து திருஞானசம்பந்தர் திருவிளையாடல் நிகழ்த்தப்படுகிறது. மக நட்சத்திரம் கடக லக்னத்தில் ஆனிப் பெருந் திருவிழாவிற்குக் கொடியேற்றம் செய்யப்படுகிறது. முதல் நாள் அன்று இறைவன் இறைவி பூங்கோவில் சப்பரத்தில் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். இரண்டாம் நாள் காலையில் இறைவன், இறைவி வெள்ளிச் சப்பரத்தில் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகின்றனர். அன்று இரவு, மூன்றாம் நாள் காலை இறைவன் கற்பக விருட்ச வாகனத்திலும் இறைவி கமல வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். மூன்றாம் நாள் இரவு இறைவன் தங்க பூத வாகனத்திலும் இறைவி சிம்ம வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகின்றனர். நான்காம் நாள் காலை இறைவனுக்கு வெள்ளிக் குதிரை வாகனமும், இறைவிக்குக் காமதேனு வாகனமும் திருவீதிப் புறப்பாட்டிற்கு பயன்படுத்தப்படுகின்றன. அன்று இரவும் ஐந்தாம் நாள் காலையிலும் இறைவன், இறைவி இடப வாகனத்தில் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். ஆறாம் நாள் காலை, இரவு இறைவன், இறைவி வெள்ளிச் சப்பரத்தில் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகின்றனர். ஏழாம் நாள் காலை இறைவன் தந்தப் பல்லக்கிலும், இறைவி முத்துப் பல்லக்கிலும் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். ஏழாம் நாள் இரவு இறைவன் வெள்ளிக் குதிரை வாகனத்திலும் இறைவி வெள்ளி காமதேனு வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகின்றனர். இரவு வடக்கு ரத வீதியில் இருக்கும் சேக்கிழார் மடத்தினின்று திருச்சாந்து எடுத்து வருதல், நடராசர் திருவீதிப் புறப்பாடு ஆகியன நடைபெறுகின்றன.

எட்டாம் நாள் காலையில் நடராசர் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகின்றது. பகல் 3 மணிக்கு கங்காளநாதர் பிச்சைக்காக திருவீதிப் புறப்பாடு எழுந்தருளுகிறார். இரவு இறைவன், இறைவி முறையே தங்க கைலாய பருவத வாகனத்திலும் தங்கக்

கிளி வாகனத்திலும் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். ஒன்பதாம் நாள் காலை தேரோட்டமும் பத்தாம் நாள் இறைவன், இறைவி பல்லக்கில் திருவீதிப் புறப்பாடு கண்டு ரத வீதிகள் சுற்றி சிந்துபூந்துறையில் தீர்த்தவாரியும் நடைபெறுகின்றன.

ஆனி மாத மக நட்சத்திரத்தில் மாணிக்கவாசகர் திருவிளையாடல் நடைபெறுகிறது. உத்திர நட்சத்திரத்தில் சந்தன சபாபதி அபிசேகம், பூரட்டாதி நட்சத்திரத்தில் இறைவனுக்குப் பால் அபிசேகம், வருடாபிசேகம் ஆகியன நடைபெறுகின்றன. உத்திராட நட்சத்திரத்தில் சங்காபிசேகமும் இரவு இறைவன் இறைவி இடப வாகனத்தில் திருவீதிப் புறப்பாடு நிகழ்கின்றன.

**ஆடி** மாதம் முதல் நாள் இறைவனுக்கு சிந்துபூந்துறையில் தீர்த்தவாரி நடைபெறுகிறது. ஆடி சுவாதியன்று சுந்தரர், சேரமான் பெருமாள் நாயனார் திருக்கைலாயம் செல்லும் காட்சி நிகழ்கின்றது. பரணியில் இறைவி முளைக்கட்டு திருவிழாவிற்கு இறைவி திருக்கோயில் கொடியேற்றமும் நான்காம் நாள் ஊஞ்சல் மண்டபத்தில் வளைகாப்பு உற்சவமும் நடைபெறுகின்றன. பத்தாம் நாள் இறைவி சிந்துபூந்துறை தீர்த்தவாரிக்கு சென்று இறைவி திருக்கோயில் திரும்பியதும் முளைக்கட்டு உற்சவமும், வளர்பிறை சதுர்தசி திதியில் பவித்திர உற்சவமும் நடைபெறுகின்றன.

**ஆவணி** மாதம் மக நட்சத்திரத்தில் ஆவணி மூலத்திருநாள் கொடியேற்றம் செய்யப்படுகிறது. நான்காம் நாள் இறைவன், இறைவி இடப வாகனத்தில் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். ஒன்பதாம் நாள் கேட்டை நட்சத்திரத்திரம் கன்னி லக்னத்தில் தேரோட்டம் நடைபெறுகிறது. பத்தாம் நாள் இரவு கருவூர்ச் சித்தர் அருகேயிருக்கும் மானூருக்கு செல்லல், பதினொன்றாம் நாள் சூரிய உதயத்திற்கு முன் மூல நட்சத்திரத்தில் இறைவன் மானூருக்குப் போய் கருவூர்ச் சித்தருக்கு காட்சி கொடுத்தல் ஆகியன நிகழ்த்தப்படுகின்றன. வளர்பிறை சதுர்தசி திதியன்று சந்தன சபாபதிக்கு அபிசேகம் நடைபெறுகிறது. ஆவணி மாதம் கோகுலாட்டமியன்று இரவு நெல்லைக் கோவிந்தருக்கு அப்பம் படைக்கப்பட்டு தீப வழிபாடு முடிந்ததும் நெல்லையப்பருக்கு அர்த்தசாம பூசை நடைபெறுகிறது.

**புரட்டாசி** வளர்பிறை சதுர்தசியன்று நடராசருக்கு அபிசேகம் நடைபெறுகிறது.

**ஐப்பசி** மாதம் முதல் நாள் இறைவன் சிந்துபூந்துறையில் தீர்த்தவாரிக்கு எழுந்தருளுகிறார். பரணி நட்சத்திரம் தனுசு லக்னத்தில் திருக்கல்யாணத்திற்குக்

கொடியேற்றம் செய்யப்பெற்று, அன்று பகலும் இரவும் இறைவி பூங்கோவில் சப்பரத்தில் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது.

இறைவிக்கு இரண்டாம் நாள் காலை வெள்ளிச்சப்பரம், இரவு கமல வாகனம், மூன்றாம் நாள் காலை கமல வாகனம், இரவு சிம்ம வாகனம், நான்காம் நாள் காலை காமதேனு வாகனம், இரவு இடப வாகனம், ஐந்தாம் நாள் காலை இடப வாகனம், இரவு இந்திர விமானம், ஆறாம் நாள் காலையிலும் மாலையிலும் அன்ன வாகனம் ஆகியன திருவீதிப் புறப்பாட்டிற்குப் பயன்படுத்தப்படுகின்றன. ஆறாம் நாளன்று திருஞானசம்பந்தருக்கு ஞானப்பால் ஊட்டிய நிகழ்ச்சி நடைபெறுகிறது.

ஏழாம் நாள் காலை தங்கப் பல்லக்கு, இரவு காமதேனு வாகனம், எட்டாம் நாள் காலை வெள்ளிச் சப்பரம், இரவு தங்கக் கிளி வாகனம் ஆகியனவற்றில் இறைவிக்கு திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறது. ஒன்பதாம் நாள் காலை தேரோட்டம், உச்சிக்கால பூசையில் சிவபூசை செய்தல், இரவு பல்லக்கில் திருவீதிப் புறப்பாடு ஆகியன நிகழ்கின்றன.

பத்தாம் நாளை காலை இறைவி பல்லக்கில் சிந்துபூந்துறையில் தீர்த்தவாரிக்கு எழுந்தருளுகிறாள். அன்றிரவு மூன்று மணிக்கு இறைவி பாடலங்கம்பை நதிக்குச் சென்று தவம் செய்தல், பதினொன்றாம் நாள் காலை திருமணக்கோலத்தில் இறைவன் இடப வாகனத்தில் பாடலங்கம்பை நதிக்கு வருதல், இறைவனைக் கண்ட இறைவி மூன்று முறை சுற்றி வந்து வணங்கி மாலையிட்டு இறைவன், இறைவி திருக்கோயில் வருதல் ஆகியன நடைபெற்று அன்று இரவு இறைவி பல்லக்கில் சிந்துபூந்துறையில் தீர்த்தவாரி காண்கின்றாள்.

மறுநாள் காலை பிரம்ம முகூர்த்தத்தில் ஆயிரங்கால் மண்டபத்தில் திருக்கல்யாணம் நடைபெறுகிறது. திருக்கல்யாணம் நிகழ்ந்ததும் இறைவன், இறைவி திருக்கோயில் சென்று இறைவன் யானை வாகனத்திலும் இறைவி பூப்பல்லக்கிலும் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். திருக்கல்யாணம் முடிந்த மூன்று நாள் வரை ஊஞ்சல் மண்டபத்தில் ஊஞ்சல் உற்சவம் நடைபெறுகிறது. நான்காம் நாள் சிந்துபூந்துறையில் தீர்த்தவாரிக்குப் பின் இரவு இடப வாகனத்தில் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகிறது.

வளர்பிறை பிரதமை திதி முதல் சஷ்டி திதி வரை சுப்பிரமணியர் உற்சவம் நடைபெறுகிறது. சஷ்டி அன்று சுப்பிரமணியர் குதிரை வாகனத்திலும் ஆறுமுகநாயினார் செப்புச் சப்பரத்திலும் திருவீதிப் புறப்பாடு கண்டு சூரசம்காரம் நிகழ்கின்றது.

**கார்த்திகை** மாதம் காலை திருவனந்தல் பூசை சிறப்பாக நடைபெறுகிறது. பள்ளியறைக்கு இறைவன் தங்கப்பல்லக்கில் வந்து செல்வது நிகழ்கின்றது. கார்த்திகை நட்சத்திரத்தன்று தீப உற்சவக் காட்சி கண்டதும் திருவீதிப் புறப்பாடு நிகழ்த்தப்படுகின்றது. கார்த்திகை மாதம் திங்கட்கிழமை பஞ்சமூர்த்திகளுக்குத் திங்கள் மண்டபத்தில் அபிசேகம் நடைபெறுகிறது.

**மார்கழி** மாத சதய நட்சத்திரத்தில் திருவாதிரைத் திருநாள் கொடியேற்றம் இறைவன் திருக்கோயிலில் நடைபெறுகிறது. நான்காம் நாள் இறைவன் இடப வாகனத்தில் திருவீதிப் புறப்பாடு செய்யப்படுகின்றார். ஆறாம் நாள் மனோன்மணியம்மைத் திருக்கல்யாணம் நடைபெறுகிறது. பத்தாம் நாள் சூரிய உதயத்தில் தாமிரசபையில் ஆருத்திரா தரிசனத்தைத் தொடர்ந்து நடராசர் திருநடனம் காண்கின்றார்.

**தை** மாதம் முதல் நாள் மகர சங்கராந்தியன்று இறைவனுக்கு சிந்துபூந்துறையில் தீர்த்தவாரி நடைபெறுகிறது. இரண்டாம் நாள் பாரி வேட்டைக்கு இறைவன் செல்லுதல் நிகழ்கின்றது. உத்திரட்டாதி நட்சத்திரம் மகர லக்னத்தில் தைப்பூசத் திருவிழாவிற்கு கொடியேற்றம் செய்யப்பெற்று நான்காம் நாள் நெல்லுக்கு வேலியிட்ட திருவிளையாடல் நிகழ்ச்சி நடைபெறுகிறது. அன்று இரவு இடப வாகனத்தில் இறைவன் திருவீதிப் புறப்பாடு காண்கின்றார். பத்தாம் நாள் பூச நட்சத்திரத்தில் இறைவன், இறைவி இடப வாகனத்தில் சிந்துபூந்துறையில் தீர்த்தவாரிக்கு எழுந்தருளுகின்றனர். பன்னிரெண்டாம் நாள் தெப்ப உற்சவம் நடைபெறுகிறது. தேய்பிறை திரியோதசி திதி முதல் அமாவாசை திதி வரை பத்ரதீப உற்சவம் நிகழ்கின்றது. அமாவாசையன்று பத்ர தீபம் ஏற்றியவுடன் இறைவன், இறைவி இடப வாகனத்தில் உள் திருச்சுற்று சுற்றி பின்னர் திருவீதிப் புறப்பாடு காண்கின்றனர். இந்த ஒரு நாள் மட்டுமே உள்ளேயும் வெளியேயும் புறப்பாடு நடைபெறுகிறது. ஆறு வருடங்களுக்கு ஒருமுறை லட்ச தீபம் ஏற்றப்படுகிறது.

**மாசி** மாதம் வளர்பிறை சதுர்தசியில் நடராசர் அபிசேகம் நடைபெறுகிறது. மாசி மகத்தன்று திருநாவுக்கரசருக்கு பொற்றாமரைத் தீர்த்தத்தில் தெப்பம் நிகழ்கின்றது.

**பங்குனி** மாதம் கார்த்திகை நட்சத்திரத்தில் பங்குனி உத்திரத் திருவிழாவிற்கு கொடியேற்றம் செய்யப்படுகிறது. நான்காம் நாள் வேணுவனநாதர் தோன்றிய திருவிளையாடல் நிகழ்த்தப்படுகிறது. இது ‘இலிங்கோற்பத்தித் திருநாள்’ என்று வழங்கப்படுகின்றது. பத்து நாட்கள் இத்திருவிழா நடைபெறுகிறது.

மாதம்தோறும் பௌர்ணமி அன்று மாசாபிசேகம் நிகழ்த்தப்படுகின்றது.

இத்திருவிழாக்களைத் தவிர மாதாந்திர சதுர்த்தி, சஷ்டி, கார்த்திகை, பைரவருக்கு தேய்பிறை, வளர்பிறை அட்டமி பூசைகள் ஆகியனவும் நடைபெறுகின்றன.

**தற்காலத்திய மாற்றங்கள்:**

திருக்கோயிலில் செயல்பட்டு வரும் ‘பக்தர் பேரவை’ என்ற அமைப்பு தைப்பூசத் திருவிழாவின் பொழுது தீர்த்தவாரியை ஏற்படுத்தியுள்ளது. தேரோட்டத்தின் பொழுது பக்தர்களுக்கு நீர் மோர், தண்ணீர் தருதல், அவசர சிகிச்சைகள் செய்தல் போன்றன பக்தர் பேரவையின் பணிகள் ஆகும். மேலும் ஒவ்வொரு ஆங்கில மாதம் நான்காவது ஞாயிற்றுக்கிழமை திருக்கோயிலில் உழவாரப் பணி நடைபெறுகின்றது.[26]

‘திருவுருமாமலை பன்னிரு திருமுறை வழிபாட்டுக் குழு’ திருக்கோயிலில் திருமுறைகளை ஓதப் பெரும் பணியாற்றி வருகின்றது. தமிழ் மாதம் முதல் நாள், செவ்வாய்க்கிழமை, தமிழ் மாதம் கடைசி வெள்ளிக்கிழமை, திருவாதிரை, மாத சிவராத்திரி, மாத விசாக நாள் போன்ற தினங்களில் திருக்கோயிலுக்குள் திருமுறைகள் ஓத வழிசெய்துள்ளார்கள்.

திருக்கோயிலுக்குள் மகா சிவராத்திரியன்று யானை முன்னே செல்ல பின்னே அடியார்கள், குழந்தைகள் தொடர்ந்து வர நால்வர் படத்தை ரதத்தில் வைத்து அதன்பின்னே அடியார்கள் திருமுறைகளை ஓதிக் கொண்டு செல்கின்றனர். இந்நிகழ்ச்சி 2000ஆம் ஆண்டிலிருந்து ரத வீதிகளில் நடைபெறுகின்றது.[27]

பொற்றாமரைத் தீர்த்தத்தைச் சுற்றித் தடுப்பு சுவர்கள் கட்டப்பட்டு அதில் சாளரங்கள் அமைத்து பாதுகாப்பாக பக்தர்கள் அமரும் வசதி ஏற்படுத்தப்பட்டுள்ளது. மூன்றாம் திருச்சுற்றில் அமைந்துள்ள அம்மையப்பர் சந்நிதியின் மேற்கூரை, கோசாலை ஆகியன தற்காலத்திய திருப்பணிகளாகும்.

இறைவன் திருக்கோயில் சீபலித் திருச்சுற்றில் அமைந்திருக்கும் அலுவலகம், அதனருகே சுப்பிரமணியர் சந்நிதியை அடுத்துள்ள அறை, ஒளிபரப்பு அறை, குடிநீர் அறை, தெற்குத் திருச்சுற்றிலிருக்கும் அலுவலகம், மேற்குத் திருச்சுற்றுக்கும் மதிற்சுவருக்கும் இடையேயிருக்கும் அறை, நின்றசீர் நெடுமாறன் கலையரங்கம், யானைக் கொட்டகை, திங்கள் மண்டபத்தில் இருக்கும் தங்கத்தேர் பாதுகாப்பு அறை ஆகியன தற்காலத்திய திருப்பணிகளாகும்.

## தொகுப்புரை

- திருக்கோயில்களில் நாள் வழிபாடுகள் அதற்குரிய படையல், பலி ஆகியனவற்றுடன் செய்யப்படுகின்றன.
- காரணம், காமிகம், விருத்லா, மகுடம் ஆகிய நான்கு சைவ ஆகமங்கள் கடைபிடிக்கப்படுகின்றன.
- மாதந்தோறும் திருவிழாக்களும் பெரிய திருவிழாக்களும் நிகழ்த்தப் பெறுகின்றன.
- மாதந்தோறும் பிரதோசம், சதுர்த்தி, சஷ்டி, கார்த்திகை, அட்டமி ஆகியன கொண்டாடப்படுகின்றன.
- திருக்கோயில்களில் வேண்டுதல்களும் பரிகாரங்களும் செய்யப்படுகின்றன.

## சான்றெண் விளக்கம்

1. களஆய்வின் பொழுது நேர்காணல் – சு.கோபாலன், சோதிடர், நாள்: 12.11.2017, நேரம்: காலை 10.30 மணி
2. மேலது – பா.பரசுராம பட்டர், சிவாச்சாரியார், நாள்: 12.11.2017, நேரம்: காலை 10.30 மணி
3. மேலது – சு.கோபாலன், சோதிடர், நாள்: 12.11.2017, நேரம்: காலை 10.40 மணி
4. மேலது – பா.பரசுராம பட்டர், சிவாச்சாரியார், நாள்: 12.11.2017, நேரம்: காலை 10.50 மணி
5. மேலது
6. மேலது
7. மேலது
8. மேலது
9. மேலது – க.சந்திரசேகர குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 15.11.2018, நேரம்: மாலை 07.00 மணி
10. மேலது
11. மேலது – ர.ஹரிஹர குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 15.11.2018, நேரம்: மாலை 07.00 மணி
12. மேலது – க.சந்திரசேகர குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 15.11.2018, நேரம்: மாலை 07.30 மணி
13. மேலது – கொ.வெங்கட சுப்பிரமணியன், பக்தர், நாள்: 13.11.2018, நேரம்: காலை 11.15 மணி
14. மேலது – இரா.செல்வகணேச சிவம், சிவாச்சாரியார், நாள்: 26.08.2017, நேரம்: காலை 11.30 மணி
15. மேலது
16. மேலது
17. மேலது – க.சுப்பிரமணிய குருக்கள், நாள்: 21.01.2018, நேரம்: காலை 08.30 மணி

18. மேலது – கணபதி.சௌந்தரதியாகராஜ குருக்கள், நாள்: 21.01.2018, நேரம்: காலை 11.20 மணி

19. மேலது – சௌ.சுரேஷ் குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 16.01.2019, நேரம்: மதியம் 05.00 மணி

20. மேலது

21. மேலது – சங்கரநாராயணன், ஓதுவார், நாள்: 21.06.2018, நேரம்: காலை 11.00 மணி

22. மேலது – ச.கணேச குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 21.06.2018, நேரம்: மாலை 06.30 மணி

23. i) தினகரன், திருநெல்வேலிப் பதிப்பு, நாள்: 29.07.2007, ப.6

    ii) தினகரன், திருநெல்வேலிப் பதிப்பு, நாள்: 22.11.2007, ப.3

24. கள ஆய்வின் பொழுது நேர்காணல் – ச.கணேச குருக்கள், சிவாச்சாரியார், நாள்: 21.06.2018, நேரம்: மாலை 06.35 மணி

25. மேலது

26. மேலது - பி.சங்கர் கணேஷ், அலுவலகச் செயலாளர், பக்தர் பேரவை, நாள்: 24.06.2017, நேரம்: காலை 10 மணி

27. குடமுழுக்கு விழாமலர், 2004, ப.42

## முடிவுரை

- தமிழர்களின் வாழ்வியலில் திருக்கோயில்கள் ஓர் அங்கமாக விளங்குகின்றன. திருக்கோயில்களைச் சார்ந்து மக்களும் மக்களைச் சார்ந்து திருக்கோயில்களும் இயங்கி வருகின்றன.
- திருக்கோயில்களின் பெருமை சைவ சமயக் குரவர்களால் மேலும் பெருகிற்று. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் உள்ளிட்டோர் திருக்கோயில்களுக்கு நேரிடையாகச் சென்றும் பிற திருக்கோயில்களினின்றும் பதிகங்கள் பாடியுள்ளனர். இப்பதிகங்களின் திரட்டு பன்னிரெண்டாக வகுக்கப்பட்டு 'பன்னிரு திருமுறை' என்று வழங்கப்படுகிறது. இதில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரால் பாடப்பெற்ற பதிகங்கள் 'தேவாரம்' என்று அழைக்கப்படுகிறது.
- உமாபதி சிவாச்சாரியார் இயற்றிய 'திருப்பதிக்கோவை', தேவாரப் பாடல் பெற்ற திருத்தலங்களை ஒன்பது நாடுகளுக்குள் அடக்கி வகைப்படுத்தும். காவிரி வடகரையில் அறுபத்துமூன்று திருத்தலங்கள், காவரி தென்கரையில் நூற்றி இருபத்தியேழு திருத்தலங்கள், ஈழ நாட்டில் இரண்டு திருத்தலங்கள், பாண்டி நாட்டில் பதினான்கு திருத்தலங்கள், மலை நாட்டில் ஒரு திருத்தலம், கொங்கு நாட்டில் ஏழு திருத்தலங்கள், நடுநாட்டில் இருபத்தியிரண்டு திருத்தலங்கள், தொண்டை நாட்டில் முப்பத்தியிரண்டு திருத்தலங்கள், துளுவ நாட்டில் ஒரு திருத்தலம், வடநாட்டில் ஐந்து திருத்தலங்கள் என இருநூற்று எழுபத்தி நான்கு தேவாரப் பாடல் பெற்ற திருத்தலங்களை திருப்பதிக்கோவை குறிப்பிடுகின்றது.
- உமாபதி சிவாச்சாரியார் திருப்பதிக்கோவை எழுதிய காலத்தில் ஒன்பது நாடுகளாக பாரத கண்டம் வகைப்படுத்தப்பட்டுள்ளது. அதன் அடிப்படையில் திருப்பதிக்கோவையில் திருத்தலங்களைக் குறிப்பிட்டுள்ளார்.
- உமாபதி சிவாச்சாரியாரின் திருப்பதிக்கோவையே தேவாரப் பாடல் பெற்ற திருத்தலங்களின் பகுப்புக்கு அடிப்படையாக விளங்குவதால், பாண்டிப் பதினான்கு திருத்தலங்களை திருஆலவாய், திருவாப்பனூர், திருப்பரங்குன்றம், திருவேடகம், திருக்கொடுங்குன்றம், திருப்புத்தூர், திருப்புனவாயில்,

திருவிராமேச்சுரம், திருவாடானை, திருக்கானப்பேர், திருப்பூவணம், திருச்சுழியல், திருக்குற்றாலம், திருநெல்வேலி என்ற வரிசையில் நிரலிடுவதே முறையானதாகும்.

- திருத்தலம், திருக்கோயில்களின் வரலாற்றை அறிய தலபுராணங்கள் பெரிதும் உதவுகின்றன. எனினும் திருத்தலம், திருக்கோயில்களின் சிறப்பைக் குறிப்பிடும் பொழுது இயற்கை வருணனைகளுடன் புராணங்களும் கற்பனை கலந்து அதில் எழுதப்பெற்றுள்ளதை அறிய முடிகின்றது.
- சைவ சமயத்தில் இறைவன், இறைவிக்கு நடைபெறும் திருமணம் முக்கிய இடம் பெறுகிறது. இவர்கள் திருமணத்தைக் காண அனைவரும் கைலாயம் செல்வதால் வடக்கு தாழ்ந்து தெற்கு உயர்கின்றது. இதை சமன் செய்ய அகத்தியரை இறைவன் தெற்குப் பகுதிக்கு அனுப்பி, பின்னர் அங்கு திருமணக் காட்சியை அகத்தியருக்கு அருளினார். இப்புராணம் தலபுராணங்களில் முக்கிய இடம் பெறுகிறது.
- திருத்தலத்தின் மேல் தலபுராணம் பாடப்பெறுவதால் அங்கு திருமணக் காட்சியை அகத்தியருக்கு அருளியதாக பாடப்பெற்றுள்ளது.
- இறைவன், இறைவி திருமணக் காட்சியை தலபுராணங்கள் பாடுவது, மக்கள் இல்லற வாழ்க்கையில் இறைவன் - இறைவி போல் இனிது வாழ வேண்டும் என்று குறிப்பிடவேயாகும்.
- சுயம்புவாக லிங்கத்தின் பாணம் கிடைக்கப்பெற்றுள்ள இடத்தில் திருக்கோயில்கள் எழுப்பப்பட்டுள்ளன. சுயம்பு லிங்கத்தின் சிறப்புக் கருதி அவை கண்டெடுக்கப்பெற்ற வரலாறு தலபுராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. இயற்கையாகக் கிடைக்கப்பெற்ற பாணத்தை இறைவனாகக் கருதி வணங்கியதிலிருந்து தமிழர்கள் இயற்கையையே இறைவனாகக் கண்டுள்ளமையை உணர முடிகின்றது. தேவர்கள், மனிதர்களால் பிரதிட்டை செய்யப்பெற்ற லிங்கங்களின் வரலாறுகளையும் தலபுராணத்தின் வழி அறிய முடிகின்றது.
- திருக்கோயில்களுக்கு தீர்த்தங்களை உண்டாக்கியிருப்பதால் தமிழர்கள் நீர் நிலைகளைப் போற்றியுள்ள பாங்கு வெளிப்படுகிறது.

- ஆன்மிகத்தின் அடிப்படையில் தீர்த்தங்களைப் புனிதமான ஒன்றாகக் கொண்டு அதைப் போற்றியதோடு மட்டுமல்லாது பேணிப் பாதுகாத்து வணங்கி வந்துள்ளனர்.
- தற்காலத்து நீர் நிலைகளைப் பாதுகாக்காது, கடல் நீரையும் கழிவு நீரையும் சுத்திகரித்து (Desalination, Reverse Osmosis and UV Treatment) பருகும் நிலைமைக்கு மக்கள் தள்ளப்பட்டுள்ளனர். இவை அனைத்தும் நீர் நிலைகளைப் போற்றாததால் ஏற்பட்ட விளைவேயாகும்.
- திருக்கோயிலுக்குள் செல்லும் முன்பு அதற்கென ஒதுக்கப்பட்ட தீர்த்தத்தில் நீராடிய பின் இறைவனை வணங்கியுள்ளனர். இதற்கென தீர்த்தங்கள் இருக்கின்றன. உடல் தூய்மையின்மையால் பல நோய்கள் வருகின்றன. தூய்மையான வாழ்க்கை முறையை ஆன்மிகம் கற்பிக்கின்றது.
- புவி வெப்பமயமாதலுக்கு (Global Warming) முக்கிய காரணம் மரங்களை வெட்டுவதே ஆகும். தமிழர்கள் திருக்கோயில்கள் தோறும் மரங்களை வளர்த்தது மட்டுமல்லாது அவைகளை தலவிருட்சம் என்ற பெயரில் வணங்கி வருகின்றனர்.
- விலங்கியல், தாவரவியல் துறையில் மிகப் பெறும் சவாலாக இருப்பது விலங்குகள், மரங்கள் உள்ளிட்டவற்றை அழிவிலிருந்து (Extinction) பாதுகாப்பது ஆகும். இந்தியாவை தாயகமாகக் கொண்ட பல விலங்குகள், தாவரங்கள் அழியும் நிலைக்கு வந்து, பாதுகாக்கப்பட்ட வரிசையில் (Endangered Species) உள்ளன. எனவே அந்தந்தப் பகுதியைச் சார்ந்த உயிரினங்களை அதன் இயற்கை சூழலிலேயே வளர்த்து வரும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.
- இதை தமிழர்கள் முன்னரே ஆன்மிகத்தில் செய்து காட்டியுள்ளனர். அந்தப் பகுதியில் இருக்கும் மரங்களை அந்தத் திருத்தலங்களின் தலவிருட்சங்களாக்கி அதைப் பாதுகாத்துள்ளனர்.
- ஆய்வுக்கு எடுத்தாளப்பட்ட திருக்கோயில்களில் காரணம், காமிகம், மகுடம் ஆகிய மூன்று சைவ ஆகமங்கள் காணப்படுகின்றன.

- திருவாப்பனூர் தேவாரத்தில் திருஞானசம்பந்தர் இறைவனை ‘அகர முதலானை’ என்று குறிப்பிடுகிறார். திருக்குறளின் முதற் குறளின் கருத்தை பாடியுள்ளார் திருஞானசம்பந்தர்.
- திருவள்ளுவரை சமணர் என்றும் பௌத்தர் என்றும் குறிப்பிடுவர் உள்ர். சமணம், பௌத்த சமயத்தை தன் தேவாரத்தில் சாடும் திருஞானசம்பந்தர் அச்சமயமாகக் குறிப்பிடப்படும் திருவள்ளுவரின் திருக்குறளை அடியொட்டி இதைப் பாடியிருப்பார் என்று கோடல் தவறாகும். எனவே சைவ அடியார்களுள் முதல் அடியாரான திருஞானசம்பந்தர் திருக்குறளை எடுத்தாண்டிருப்பதால் திருவள்ளுவர் சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்பது அறியப்படுகிறது.
- ஏடு தங்கிய இடமான திருவேடகத்தில் புனல் வாதத்திற்கு முன்னரே திருக்கோயில் இருந்துள்ளது. இதனை ‘சேடனூர் ஏடகம்’, ‘திருவேடகக் கோயிலே’ என்று திருஞானசம்பந்தர் பாடியிருப்பதிலிருந்து அறியலாம். குலச்சிறையாருக்கு ஒரு குறிப்பிட்ட இடத்தில் (Landmark) ஏட்டைத் தங்கச் செய்தால் எடுப்பதற்கு எளிதாக இருக்கும் என்று கருதியே திருஞானசம்பந்தர் திருவேடகத் திருக்கோயிலின் அருகே ஏட்டைத் தங்கச் செய்துள்ளார்.
- ஏடு தங்க பாடியதால் திருஞானசம்பந்தர் ‘ஏடகம்’ என்று திருத்தலத்தைக் குறிப்பிட்டுள்ளார்.
- தேவாரத்தில் ‘ஏடகம்’ என்று குறிப்பிடப்பட்டதால் ‘திருவேடகம்’ என்ற பெயர் திருத்தலத்திற்கும் ‘ஏடகநாதர்’ என்ற பெயர் இறைவனுக்கும் ஏற்பட்டுள்ளது.
- திருவேடகத் திருக்கோயிலின் தேவாரப் பதிகத்தில், சைவ சமயத்தில் வழங்கப்படும் ஐந்து வணங்கும் முறைகளில் பஞ்சாங்க, அட்டாங்க, சாட்டாங்க வணக்க முறைகளை இரண்டாவது பாடலிலும் மூவங்க வணக்கத்தை மூன்றாவது பாடலிலும் நேரிடையாகத் திருஞானசம்பந்தர் குறிப்பிடுகின்றார். இத்தேவாரத்தில் முதல் பாடலில் பொன்னார் திருவடிகளை அந்தணர்களும் அடியவர்களும் அருச்சித்து போற்றுவதைப் பாடுகின்றார். இறைவனை பிறர் பூசை செய்யுங்கால் நாம் தலைகுனிந்து வணங்கும் ஓரங்க வணக்க முறையை குறிப்பாக முதல் பாடலில் குறிப்பிடுகின்றார் திருஞானசம்பந்தர்.

- இறைவனுடைய திருவடியைப் பற்றினால் நாம் எண்ணியது, வேண்டியது நிறைவேறும் என்பதை உணர்த்தவே திருஞானசம்பந்தரும் இறைவன் திருவடிகளை முதலில் போற்றி ஏட்டைத் தங்கச் செய்துள்ளார்.
- இறைவியின் பெயரான 'ஏலவார் குழலியம்மை' என்பதும் திருஞானசம்பந்தரின் தேவாரத்திலிருந்து ஏற்பட்டுள்ளது.
- திருவாப்பனூர் திருத்தலமும் திருவேடகம் போல வைகையாற்றின் கரையில் இருப்பினும் திருவாப்பனூர் தேவாரத்தில் ஒரு இடத்தில் மட்டுமே வைகையாற்றை திருஞானசம்பந்தர் குறிப்பிட்டுள்ளார். திருவேடகத்தில் மூன்று இடங்களில் வைகையாற்றை குறிப்பிட்டுள்ளார்.
- திருவேடகத்தில் இறைவியை இரண்டு இடங்களில் மட்டும் பாடி, வைகையாற்றை மூன்று இடங்களில் திருஞானசம்பந்தர் பாடியிருப்பது, புனல் வாதத்தின் பொழுது வைகையாற்றின் சிறப்பினை உணர்த்தி அதை தெய்வமாகக் கருதி பாடியதாலே ஆகும்.
- இடபம் நடந்து வரும் பொழுது ஏற்படும் மணி சத்தத்தையே ஓசை என்று திருஞானசம்பந்தர் குறிப்பிட்டுள்ளார். எனவே ஏட்டைத் திருவேடகத்தில் தங்கச் செய்ய இறைவனே இடபத்தின் மேல் வந்து அருளியது இதன் வழி விளங்குகின்றது.
- திருஞானசம்பந்தரால் பாண்டிப் பதினான்கு திருத்தலங்களில் முதலில் பாடப்பெற்றது திருக்கொடுங்குன்றம் என்று பெரிய புராணம் குறிப்பிடுகின்றது.
- சோழ நாட்டினின்று பாண்டிய நாட்டின் திருஆலவாயை இரு வழியாக அடையலாம். முதலாவது வழி, திருப்புத்தூர் திருத்தலம் வந்து யானைமலை வழியாக திருஆலவாய் அடையலாம். இரண்டாவது வழி, திருக்கொடுங்குன்றம் சென்று யானைமலை வழியாக திருஆலவாயை அடையலாம்.
- திருஞானசம்பந்தர் திருக்கொடுங்குன்றம் வழியாகவே திருஆலவாயை அடைந்துள்ளார். திருப்புத்தூர் வராது திருக்கொடுங்குன்றம் சென்று திருஆலவாய் அடைந்ததற்குக் காரணம் திருஞானசம்பந்தர் காலத்தில் பாரி ஆண்ட பறம்புமலைப் பகுதியான திருக்கொடுங்குன்றம் பெரிய நகரமாய் இருந்ததே ஆகும். இது, திருஞானசம்பந்தர் திருக்கொடுங்குன்றத் தேவாரத்தில்

குறிப்பிட்ட பழ நகர், பெரு நகர், வள நகர், எழில் நகர், நெடு நகர் போன்றவற்றால் அறியப்படுகின்றது.

- அந்தணர் குலத்தில் தோன்றிய திருஞானசம்பந்தர் வேதம் உள்ளிட்டவற்றில் கொண்ட விருப்பத்தினைவிட தமிழின்பால் கொண்ட விருப்பம் அதிகமாகும். அதனால்தான் தன்னை 'தமிழ்வல்ல ஞானசம்பந்தன்' என்று தேவாரத்தில் குறிப்பிடுகின்றார். திருஞானசம்பந்தர் வாழ்விலும் வேத நெறியைத் தமிழ் நெறியாக மாற்றிய நிகழ்வுகள் உள்ளன. பஞ்சாக்கரத் திருப்பதிகம் உள்ளிட்டவற்றைப் பாடியது தமிழ் நெறியை வளர்க்க முனைந்ததால் ஆகும்.
- திருக்கொடுங்குன்றத்தின் அருகே சதுர் வேத மங்கலம் என்னும் நகரம் நான்மறைகளை ஓதுவிக்கும் பெரிய பாடசாலைகளைக் கொண்டு விளங்கியுள்ளது. ஆய்வுக் காலத்தில் இந்நகரம் சதுர்வேத மங்கலம் என்றும் எஸ்.வி.மங்கலம் என்றும் அழைக்கப்படும் சிறிய கிராமமாக உள்ளது. வேதம் வளர்க்கும் இவ்விடத்தில் தமிழ் நெறியை நிறுத்தவே, குறுகிய தூரம் அமைந்த திருப்புத்தூர் வழியாக அன்றி திருக்கொடுங்குன்றம் சென்று அங்கிருந்து திருஆலவாயை அடைந்துள்ளார் திருஞானசம்பந்தர்.
- திருப்புத்தூர் திருக்கோயில் 'திருத்தளி' என்று அழைக்கப்பட்டுள்ளது. திருநாவுக்கரசர் திருப்புத்தூர் திருத்தளியில் உறையும் இறைவனைத் 'திருத்தளியான்' என்று தன் தேவாரத்தில் பாடியுள்ளார்.
- திருத்தளியில் உறையும் இறைவன் என்ற பொருளில் திருத்தளியான் என்ற காரணப் பெயர் இறைவனுக்கு ஏற்பட்டு பின்னர் அதுவே நிலைபெற்றுள்ளது.
- திருத்தளி இறைவன் பழமையானவன் என்பதும் இத்திருக்கோயில் புகழ் பெற்று விளங்கியுள்ளதையும் உணரக் கிடைக்கின்றது.
- திருப்புத்தூர் தேவாரத்தினின்று இத்திருத்தலம் மாடங்கள், தேர் ஓடுதற்குரிய நீண்ட வீதிகள் என கட்டமைக்கப்பெற்று முறையாக வேளாண்மை செய்யும் நிலங்களையும் தன்னகத்தே கொண்டிருந்தது என்பது தெரிய வருகிறது.
- திருநாவுக்கரசர் திருஆலவாய் திருத்தலத்திற்குச் செல்ல எண்ணம் கொண்டு முதலில் திருப்புத்தூரை அடைந்தார். இங்கு பாடும் பொழுது, மனத்தில் நின்ற திருஆலவாய் இறைவனின் பொற்கிழி வழங்கிய திருவிளையாடலைப் பதிவு

செய்துள்ளார். இதை அடிப்படையாகக் கொண்டு தருமி இத்திருத்தலத்தைச் சார்ந்தவன் என்ற கருத்து இத்திருத்தலத்தில் நிலவி வருகின்றது.

- திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் தன்னுடைய தேவாரத்தில் வால்மீகி, ராமர், சீதை ஆகியோரைப் பற்றி எங்கும் குறிப்பிடவில்லை. தலபுராணத்திலும் இவர்களைப் பற்றிய குறிப்பு காணப்படவில்லை.
- திருப்புனவாயில் திருத்தலம் திருஞானசம்பந்தர், சுந்தரரால் பாண்டிய நாட்டில் கடைசியாகப் பாடல் பெற்றது ஆகும். திருஞானசம்பந்தர் திருப்புனவாயிலினின்று நின்றசீர் நெடுமாற நாயனார், மங்கையர்க்கரசியார் ஆகியோருடன் குலச்சிறையாரின் ஊரான திருமணமேற்குடி அடைந்து அங்கிருந்து சோழ நாடு சென்றடைந்தார்.
- சுந்தரர் சேரமான் பெருமாள் நாயனாருடன் திருப்புனவாயிலிலிருந்து சோழ நாடு அடைந்தார்.
- திருஞானசம்பந்தர், சுந்தரர் தரை வழியே பாண்டிய நாடு அடைந்து திருப்புனவாயில் மூலம் கடல் வழியே சோழ நாடு சென்றுள்ளனர்.
- திருநாவுக்கரசர் திருப்புனவாயிலில் தேவாரம் பாடிய குறிப்பு பெரிய புராணத்துள் காணப்படவில்லையாகினும், பொதுப் பதிகம் ஒன்றில் ‘கடல் அலைகள் பொங்கியெழும் திருப்புனவாயில்’ என்று குறிப்பிட்டுள்ளார். எனவே திருநாவுக்கரசரும் கடல் வழியே திருப்புனவாயிலிலிருந்து சோழ நாடு அடைந்துள்ளார்.
- திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோர் மனம் சென்றபடி திருத்தலங்களுக்குச் செல்லாமல் பயண மேலாண்மையில் (Travel Management) சிறந்து விளங்கியுள்ளமை அறியப்படுகின்றது.
- திருஞானசம்பந்தர் திருவாடானையில் பாடிய தேவாரத்தில் இயற்கை வளத்தை ஓர் இடத்தைத் தவிர வேறு எங்கும் குறிப்பிடவில்லை. அங்கும், திருவாடானை நீர் வளம் மிகுந்தது என்று மட்டுமே பாடியுள்ளார்.
- நேர்காணல் மூலம் திருவாடானை திருக்கோயிலின் தீர்த்தங்களுள் ஒன்றான மணிமுத்தா நதி பல காலமாக வற்றாத நதியாக இருந்துள்ளது. எனவே

திருஞானசம்பந்தர் மணிமுத்தா நதியின் வளத்தையே தன்னுடைய தேவாரத்தில் குறிப்பிட்டுள்ளார்.

- இறைவனை அருச்சனைகள் செய்வதன் மூலம் கிடைக்கும் பலன்களையே திருவாடானை தேவாரம் முழுமைக்கும் பாடியிருப்பது, இத்திருத்தலத்தில் சூரியன், வாருணி, வருணன், மார்க்கண்டேயர், மிருகண்டு முனிவர், அகத்தியர் போன்றோர் வந்து வணங்கிப் போற்றி பேறு பெற்றதை அடிப்படையாகக் கொண்டே ஆகும்.
- பூணூல் அணிபவர்களில் அந்தணர்கள் மட்டுமே மான் தோலை அதில் சேர்த்துக் கட்டியிருப்பர். எனவே, அந்தணர் குலத்தில் பிறந்த திருஞானசம்பந்தரும் இதைக் குறிப்பிடுகிறார்.
- திருக்கானப்பேர் திருத்தலத்தில் யானைகள் இருந்திருப்பினும் திருக்குற்றாலத் திருத்தலத்தைப் போன்று மலை வளம் இல்லாததால் அதிகம் யானைகள் வாழ்ந்திருந்ததற்கான சாத்தியக் கூறுகள் இல்லை.
- திருஞானசம்பந்தர் திருக்கானப்பேர் தேவாரத்தின் முதல், ஏழாம் பாடல்களின் இரண்டு இடங்களில் யானைகள் பூசை செய்ததைப் பாடியிருப்பது தலவரலாற்றை ஒட்டி அமைந்ததே ஆகும்.
- சுந்தரர், திருக்கானப்பேர் தேவாரத்தில் இரண்டு இடங்களில் தன்னைப் பற்றி வெளிப்படையாகவும், இரண்டு இடங்களில் மறைமுகமாகவும் குறிப்பிடுகிறார்.
- முதலில் தான் கற்ற கல்வியால் இறைவனைப் போற்றிப் பாட வேண்டும் என்று நான்காவது பாடலில் விரும்புகின்றார். இரண்டாவதாக, தன் தோழனாக இருந்து தூது சென்றமையை ஒன்பதாவது பாடலில் பாடியுள்ளார். இவ்வாறு இரண்டு செய்திகளை வெளிப்படையாகப் பாடியுள்ளார்.
- இறைவன் தன்னைத் திருவெண்ணெய் நல்லூரில் வந்து தடுத்தாட் கொண்டதை குறிப்பாக ஆறு, ஒன்பதாம் பாடல்களில் குறிப்பிடுகின்றார். ஆறாவது பாடலில் அயலே நின்றாலும் என்னை மதித்து உய்தி பெறச் செய்பவன் என்று கூறுகிறார். இங்கு ‘அயலே நின்றது’ என்பதில், திருக்கானப்பேர் திருத்தலத்து இறைவன், அயலான திருச்சுழியலில் தங்கியிருக்கும் தன்னை கனவிற் தோன்றி ஆட்கொண்டதை உணர்த்துகிறார்.

- திருக்கானப்பேர் சுந்தரர் தேவாரத்தில் இயற்கையைப் பற்றிய குறிப்பு காணப்படவில்லை. அனைத்தும் இறைவனின் குணங்களையே குறிக்கின்றது.
- சுந்தரர் திருச்சுழியலிலிருந்து அவ் இறைவன் மீது ஒரு பதிகமும் திருக்கானப்பேர் இறைவன் மீது ஒரு பதிகமும் பாடியுள்ளார்.
- திருஞானசம்பந்தர் திருப்பூவணத்தில் முதல் திருமுறை, மூன்றாம் திருமுறையில் இடம் பெற்றிருக்கும் இரண்டு தேவாரப் பதிகங்களைப் பாடியுள்ளார்.
- முதல் திருமுறை திருப்பூவணத் தேவாரத்தில், முடிசூடி முறையாக ஆளும் பாண்டியரும் அவருக்குத் திறைப் பொருட்களைச் செலுத்தும் சேரர், சோழர் வணங்கும் திருப்பூவணம் என்றும், அன்பினால் மூவேந்தர்களும் போற்றும் இறைவன் உரையும் திருப்பூவணம் என்றும் இரண்டு இடங்களில் மூவேந்தர்களைக் குறிப்பிட்டுள்ளார்.
- பாண்டிய மன்னன் முடிசூடி முறையாக ஆட்சி செலுத்துவதாக திருஞானசம்பந்தர் குறிப்பிடுவது, நின்றசீர் நெடுமாற நாயனார் சமணத்திலிருந்து விலகி சைவத்தை ஏற்று ஆட்சி செய்தலால் ஆகும்.
- திறைப் பொருட்களால் ஒளி சேர்ந்தது, கழல் பொருந்திய மன்னர் அளித்த செல்வத்தைப் பெற்றவர்கள் வாழ்வது, வெற்றியைப் பறை சாற்றும் மதில்களை உடையது என்று திருப்பூவணம் போற்றப்படுவதன் காரணம் பாண்டிய மன்னன் தான்பெற்ற திறைப் பொருட்களைக் கொண்டு திருப்பூவணத்தை வலுச்சேர்த்ததினால் என்பது அறியலாகின்றது.
- மன்னருக்கான திறைப் பொருட்களை தலை நகரத்தில் செலுத்துவது முறை. ஆயினும் நின்றசீர் நெடுமாற நாயனார், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் ஆகியோர் திருஞானசம்பந்தருடன் திருஆலவாய் நீங்கிப் பலத் திருத்தலங்களை அடைந்து வழிபடச் சென்றனர். திருப்பூவணம் அடைந்து அங்கு அனைவரும் தங்கியிருந்த காரணத்தினால் மன்னருக்கான திறைப் பொருட்களை சேரரும் சோழரும் திருப்பூவணத்தில் செலுத்தினர் என்பது உணரக் கிடைக்கின்றது.
- இச்சமயம் திருஞானசம்பந்தரால் பாடப் பெற்றதே முதல் திருமுறையில் அமைந்துள்ள திருப்பூவணத் தேவாரப் பதிகம் ஆகும்.

- திறைப்பொருட்கள் திருப்பூவணத் திருத்தலத்தில் பெறப்பட்டமையால் அதை வளப்படுத்தப் பயன்பட்டுள்ளது.
- திறை செலுத்த வந்த மன்னர்களாக இருப்பினும் சேரரும் சோழரும் பாண்டிய மன்னரோடு இணைந்து மூவேந்தர்களாக திருப்பூவணத்து இறைவனை வழிபட்டதாகப் பாடியுள்ளார் திருஞானசம்பந்தர்.
- மூவேந்தர்களுக்குள் பகைமைகள் பல இருந்துள்ளன. பாண்டியர், சேரர், சோழர் ஆகியோர் அவ்வப்பொழுது தமிழகத்தின் முடி மன்னராய் விளங்கியுள்ளதை தமிழக வரலாறு உணர்த்தும். எனினும் ஆன்மிகம் அவர்களை ஒன்று சேர்க்கும் கூறுகளுள் ஒன்றாய் அமைந்திருந்ததை திருஞானசம்பந்தரின் திருப்பூவணத் தேவாரம் உறுதிப்படுத்துகின்றது.
- மூவேந்தர்களுக்குள் எண்ணற்ற போர்கள் நிகழ்ந்து பல சேதங்கள் ஏற்பட்டுள்ளதை வரலாற்றின் பரந்த விரிப்பில் காணலாம். ஆயினும் வெற்றி பெற்ற மன்னர்கள் அங்கிருந்த திருக்கோயில்களுக்கு திருப்பணிகள் செய்தும் நிவந்தங்கள், இறையிலிகள் வழங்கியும் தமிழர்களின் கலையைப் போற்றி வளர்த்தனர்.
- மூன்றாம் திருமுறையில் திருஞானசம்பந்தர் திருப்பூவணத் தேவாரத்தில் பாண்டியனின் வெப்பு நோய் இறைவன் அருளால் தீர்ந்ததையும் இறைவன் அடி தொழுதால் ஏற்படும் நன்மைகளையும் போற்றிப் பாடியுள்ளமையைக் காணலாம்.
- திருப்பூவணத்தில் திருஞானசம்பந்தர் முதலில் பாடியது மூன்றாம் திருமுறையில் இடம்பெற்றுள்ள தேவாரம். பின்னர் சிலநாட்கள் அங்கு தங்கியிருந்த காலத்து, தமிழ் மன்னர்கள் மூவேந்தர்களாக ஒன்றிணைந்து வணங்கிய பான்மையைக் கண்டு பாடியது முதல் திருமுறைத் தேவாரம் ஆகும். இப்பதிகங்கள் மாற்றிப் பதிப்பிக்கப்படுமானால் காலத்தின் அடிப்படை நன்கு விளங்கும்.
- திருநாவுக்கரசர் திருப்பூவணத் திருக்கோயிலின் நேர் எதிரே செல்லுங்கால் அவர் முன் தோன்றிய இறைவனின் வடிவத்தையும் தோற்றத்தையும் பாடியுள்ளார்.

- சுந்தரரின் திருப்பூவணத் தேவாரத்தில் இயற்கைக் குறிப்புகள் காணப்படவில்லை. ‘திருப்பூவணம் ஈதோ!’ என்று விளித்துப்பாடியிருத்தலால் திருப்பூவணத்திற்கு வெளியே இருந்து இது பாடப்பெற்றுள்ளது.
- திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோர் திருத்தலத்தில் வந்து பாடும் பொழுது அந்த இடங்களில் தாங்கள் கண்ட இயற்கை காட்சிகள், திருத்தலத்தைப் பற்றிய செய்திகள் ஆகியனவற்றை இணைத்து தேவாரத்தில் பாடியுள்ளார்கள்.
- திருக்குற்றாலத்தில் இவ் ஆய்வுக் காலத்திலும் குரங்குகளின் சேட்டைகளை காண முடிகின்றது. திருக்குற்றாலத்திற்கு வரும் சுற்றுலாப் பயணிகள் இயற்கை அழகுடன் குரங்குகளின் சேட்டைகளையும் அனுபவித்து வருகின்றனர். இக்குரங்குகளின் சேட்டைகளைத் திருஞானசம்பந்தர் திருக்குற்றாலப் பதிகத்திலும் திருக்குறும்பலாப் பதிகத்திலும் பதிவு செய்துள்ளார்.
- குறத்தியர்கள் கிளிகளை விரட்டுவதை திருக்குற்றாலப் பதிகத்திலும், வேடர்கள் தங்கள் விரல்களை வாயில் வைத்து ‘குய்’ என்ற ஒலியெழுப்புவதை திருக்குறும்பலாப் பதிகத்திலும் திருஞானசம்பந்தர் பாடியுள்ளார். திருஞானசம்பந்தர் காலத்தில் இவ்வகையினர் மலைப்பகுதிகளில் வாழ்ந்து வந்துள்ளனர் என்பதை இதனால் அறியமுடிகின்றது. அவர்களின் வாழ்க்கை நிலைகளையும் இப்பதிகங்களின் மூலம் பெறமுடிகின்றன.
- திருக்குற்றாலப் பதிகத்தில் நீறு பூசிய அடியவர்கள் பின்னால் செல்ல நாள்தோறும் இறைவனுக்குத் திருவிழாக்கள் நடைபெற்றதையும், திருக்குறும்பலாப் பதிகத்தில், சாந்த குணம் பொருந்திய அடியவர்கள் வாழ்கின்ற திருத்தலம் திருக்குற்றாலம் என்பதையும் பாடியுள்ளார் திருஞானசம்பந்தர்.
- திருஞானசம்பந்தர் திருக்குற்றாலத்தில் பாடும் பொழுது தான் கண்ட இயற்கைக் காட்சிகள், சைவர்கள், இனக்குழுக்களைப் பதிவு செய்துள்ளார் என்பது தெளிவு. ஆயினும், திருக்குற்றாலத்து இறைவன் தோன்றுவதற்குக் காரணமாய் இருந்த அகத்தியரையோ, அவர் திருமாலை இறைவனாக மாற்றிய செய்தியையோ திருஞானசம்பந்தர் குறிப்பிடவில்லை.

- திருஞானசம்பந்தர் தன்னுடைய தேவாரப் பதிகங்களில் இரண்டு இடங்களில் வெளிப்படையாகவும் ஒரு இடத்தில் குறிப்பாகவும் அடியவர்களான சைவர்களை குறிப்பிட்டுள்ளார். திருச்சண்பைநகரில் திருஞானசம்பந்தரின் காலத்தில் சைவ சமயத்தின் உட்பிரிவான பாசுபதம் செழித்திருந்ததை அறியமுடிகின்றது. இதேபோல் திருக்குற்றாலத்திலும் சைவர்கள் அதிகம் வாழ்ந்துள்ளனர் என்பதை அறிய முடிகின்றது. ஆனால் திருக்குற்றாலத்தில் சைவர்களைக் குறிப்பிடும் பொழுது சாந்த குணம் பொருந்தியவர்கள் என்று கூறுகிறார் திருஞானசம்பந்தர். இது நிற்க. குறிஞ்சி நிலமான மலையும் மலை சார்ந்த இடத்தில் திருமால் வழிபாடும் தற்காலத்துவரை நடந்துவருகிறது. திருமலை, திருமாலிருஞ்சோலை எனப்படும் அழகர்கோயில் ஆகியன இதற்கு எடுத்துக்காட்டாம். எனவே திருக்குற்றால மலையிலும் முன்னர் திருமால் வழிபாடு நடந்துள்ளது. அகத்தியர் தன் பூசைக்காக திருக்குற்றாலத்தில் 'சிவப் பிரதிட்டை' செய்து வழிபட்டுள்ளார். அகத்தியர் பூசை செய்ததாலும் பின்னர் சைவ சமயம் மேலோங்கிய காரணத்தினாலும் திருக்குற்றாலம் இறைவனான சிவபெருமான் திருக்கோயிலாகக் கட்டப்பட்டுள்ளது. அகத்தியர் திருமாலை இறைவனாக மாற்றியதற்கு திருக்குற்றாலத் தலபுராணத்தைத் தவிர வேறு எந்த சான்றும் இல்லை. சைவர்கள் அதிகம் வாழ்ந்த பகுதியாதலால் திருக்குற்றாலம் சைவத் திருக்கோயிலாக அமைந்துள்ளது. அகத்தியரும் சைவர்களும் இத்திருக்கோயிலை மாற்றம் செய்யவில்லை என்பதை உணர்த்தவே திருஞானசம்பந்தர் சாந்தமான சைவர்கள் வாழ்கின்ற திருத்தலம் என்று குறிப்பிடுகின்றார்.
- திருக்குற்றாலத்தின் இரண்டு பதிகங்களிலும் சைவர்களைப் போற்றிப் பாடியதால் திருஞானசம்பந்தரின் காலத்தில் இங்கு சைவர்கள் அதிகம் வாழ்ந்து வந்துள்ளனர் என்பது வெளிப்படை.
- இறைவன் மேல் பாடுவது போல குறும்பலா மரத்தின் மீதும் திருஞானசம்பந்தர் 'திருக்குறும்பலாப் பதிகம்' பாடியிருத்தலில் இயற்கையை இறைவனாகவே கருதும் தமிழர்களின் மாண்பு வெளிப்படுகின்றது.

- திருஞானசம்பந்தர் தேவாரத்தின் மூலம் திருநெல்வேலி திருக்கோயிலில் நாள் வழிபாடுகளும் மாதம் தோறும் திருவிழாக்களும் நடைபெற்றுள்ளதை அறிய முடிகின்றது. திருஞானசம்பந்தர் காலத்திலேயே ஒழுங்குபட்ட வழிபாட்டு முறைகள் இத்திருக்கோயிலில் இருந்துள்ளமையை அறிய முடிகின்றது.
- திருஞானசம்பந்தர் திருநெல்வேலி தேவாரத்தில் ‘செடிச்சியர்’ என்ற இனக்குழுப் பெண்களைப் பாடியுள்ளார்.
- தலபுராணத்தில் குறிப்பிடப்படும் வேதம் கற்ற மறையவரையும் சுவேத கேது என்ற மன்னனையும் திருஞானசம்பந்தர் குறிப்பிடவில்லை.
- நெற்பயிர்களால் வேலி போன்று சூழப்பெற்றது என்ற பொருளில் ‘திரு’ என்ற அடைமொழியொடு ‘திருநெல்வேலி’ என்று திருஞானசம்பந்தர் பாடியுள்ளார்.
- திருநெல்வேலியைப் பற்றிய இலக்கியங்களில் பழமையானது திருஞானசம்பந்தரின் தேவாரம் ஆகும். எனவே கிடைத்த சான்றுகளுள் ‘திருநெல்வேலி’ என்று குறிப்பிட்ட முதல் இலக்கியம் திருஞானசம்பந்தர் தேவாரம் ஆகும்.
- திருஞானசம்பந்தர் திருச்சுழியலில் பாடிய தேவாரம், திருநாவுக்கரசர் திருக்கானப்பேர், திருநெல்வேலியில் பாடிய தேவாரம், சுந்தரர் திருவாப்பனூர், திருவேடகம், திருப்புத்தூர், திருக்குற்றாலம், திருநெல்வேலியில் பாடிய தேவாரம் என மொத்தம் எட்டு தேவாரப் பதிகங்கள் கிடைக்கப்பெறவில்லை.
- திருவேடகத் திருக்கோயிலில் திருஞானசம்பந்தர் நிகழ்த்திட்ட புனல் வாதத்திற்கான புறச்சான்று இல்லை என்று கூறப்படுகிறது. இறைவி சந்நிதியில் உள்ள சண்டிகேசுவரி சந்நிதி அருகே அமைந்துள்ள தூண்களில் மங்கையர்க்கரசியார், கூன் பாண்டியன், நின்றசீர் நெடுமாற நாயனார், குலச்சிறையார் ஆகியோரின் சிற்பங்களை புனல் வாதத்தின் புறச் சான்றுகளாக கள ஆய்வில் கண்டறிந்து நிறுவப்பட்டுள்ளது.
- திருவேடகத் திருக்கோயிலில் தயிர் விற்கும் பெண், அன்னக்கரண்டியுடன் பெண், கைகளினால் பின்னப்பட்ட கூடையை ஏந்தி வாணிபம் செய்யும் பெண் உள்ளிட்ட மருத நில மக்களின் வாழ்வியல் முறையை சிற்பங்களில்

வெளிப்படுத்தியுள்ளனர். இதில் கைகளினால் கூடைகள் பின்னும் தொழில் செய்பவர்களை ஆய்வுக் காலத்திலும் இப்பகுதியில் காண முடிகின்றது.

- திருவேடகத்தில் பொறி உருண்டை விற்கும் வியாபாரி, தோள்களின் இருபுறமும் பொருட்களை ஏந்தி நிற்கும் வியாபாரி ஆகிய சிற்பங்கள் மக்கள் வாழ்வியல் முறையின் வெளிப்பாடுகளாய் அமைந்துள்ளன.
- சிற்பங்களை வடிக்கும் சிற்பிகள் அப்பகுதியில் உள்ள பழக்க வழக்கங்கள் (Societal Habits), கண்ணுற்ற காட்சிகள், உயிரியல் பல்வகைமை (Bio-Diversity) ஆகியனவற்றை கலையின் மூலம் வெளிப்படுத்தியுள்ளனர்.
- புதியதாக அமைக்கப்பட்ட ஊர் ஆதலால் 'திரு' என்ற அடைமொழியோடு 'திருப்புத்தூர்' என்று பெயர் ஏற்பட்டுள்ளது.
- ஆதி திருத்தளிநாதர் திருக்கோயில் இருக்கும் இடத்திலிருந்து திருப்புத்தூரின் மையப் பகுதியில் திருத்தளியை முழுவதும் கற்றளியாகச் சமைத்துள்ளனர். இத்திருக்கோயில் 'திருத்தளி' என்று தமிழிலும் 'சீதளி' என்று வடமொழியிலும் அழைக்கப்பட்டுள்ளது.
- திருத்தளியின் தீர்த்தம் சிவகங்கை ஆகும். ஆதி திருத்தளிநாதர் திருக்கோயிலுக்கு தோற்றுவிக்கப்பட்ட தீர்த்தம், பின்னர் திருத்தளியின் தீர்த்தமாகவும் அமைந்து 'சீதளி தீர்த்தம்' என்ற பெயரைப் பெற்றுள்ளது.
- வால்மீகி முனிவர் தவம் இயற்றி புற்றுத் தோன்றியதால் 'திருப்புத்தூர்' என்ற பெயர் பெற்றதாகக் கூறப்படுவதும், அழகிய எறும்பு புற்றுகள் நிறைந்திருந்ததால் இப்பெயர் பெற்றதாகக் கூறுவதற்கான சான்றுகள் இல்லை.
- திருப்புத்தூரைச் சுற்றிக் கோட்டை, அகழி இருந்துள்ளன.
- திருப்புத்தூர் திருக்கோயில் உள்ள யோக பைரவர் சந்நிதியும் இறைவி சந்நிதியும் சம காலத்தில் கட்டப்பட்டுள்ளன. பின்னர் இறைவிக்கு மூன்றாம் திருச்சுற்றில் சந்நிதி கட்டப்பட்டதால் இறைவியின் தொடக்ககால சந்நிதி திருநாகேசுவரர் சந்நிதியாக மாற்றப்பட்டுள்ளது.
- ஆய்வுக் காலத்திலும் மக்கள் 'காவடி எடுத்தல்' குறிப்பிடத்தகுந்தது ஆகும். திருப்புத்தூர் திருக்கோயில் இறைவி சந்நிதியில் இதை வடித்துள்ளனர்.

- சூரியன் உதிக்கும் திசை கிழக்கு என்ற வழக்கு இருப்பினும் சூரியன் கிழக்கிற்கு சற்று தெற்கு அல்லது வடக்கில் விலகியே உதிக்கும். வருடத்திற்கு இரண்டு நாட்கள் மட்டுமே சூரியன் பூமத்திய ரேகைக்கு (Equator) நேரே உதித்து மறையும். இவ்வாறு உதித்து மறைவது முறையே 'Due East', 'Due West' என்று அழைக்கப்படுகிறது. இந்த இரண்டு நாட்களை 'இக்குனாக்ஸ்' (Equinox) என்று குறிப்பிடுகின்றனர். மார்ச்சு மாதம் 20ஆம் தேதி, செப்டம்பர் மாதம் 22 அல்லது 23ஆம் தேதிகளில் இக்குனாக்ஸ் ஏற்படுகின்றது.
- திருப்புனவாயிலில் தமிழ் வைகாசி மாதத்தின் சில நாட்கள் சூரிய ஒளி இறைவன் மீது விழுகின்றது. இதை சூரியன் இறைவனை பூசை செய்யும் ஐதீகமாக ஆன்மிகம் குறிப்பிட்டாலும் இதன் பின் தமிழர்களின் வானியல் (Astronomy) அறிவு உள்ளது. தமிழ் மாதம் வைகாசிக்கு ஆங்கில மாதங்களாக மே, சூன் அமைகின்றது. இந்த மாதங்களில் சூரியன் சற்று வடகிழக்கில் உதிக்கும். இதைக் குறிப்பிடவே ஆகம விதிகளைத் தாண்டி சூரியன் உதிக்கும் வட திசையிலான இராசகோபுரத்திற்கு வலதுபுறம் சூரியன் சந்நிதி மாற்றி அமைக்கப்பெற்றுள்ளது.
- திருக்கோயிலில் உள்ள ஓவியங்கள் கலையாகக் கருதப்பட்டாலும் மக்களின் வாழ்வியல் பெட்டகமாக உள்ளது. காலத்தால் அழியக் கூடாது என்பனவற்றை ஓவியமாக வரைந்து வைத்துள்ளனர். திருப்புனவாயிலிலுள்ள லிங்கக் கட்டம் இதற்குச் சான்றாகும்.
- திருவாடானை திருக்கோயிலில் முனிவர்களின் சிற்பங்கள் அதிக அளவில் அமைந்திருப்பது இத்திருத்தலத்திலும் இதன் அருகிலும் பல முனிவர்கள் வாழ்ந்ததற்குகானச் சான்றாய் விளங்குகிறது.
- சைவ ஆகமங்களில் இறைவனுக்கு சண்டிகேசுவரர், இறைவிக்கு சண்டிகேசுவரி, விநாயகருக்கு கும்பச்சண்டர், முருகனுக்கு சுமித்ரசண்டர், சூரியனுக்கு தேசசுசண்டர் என சண்டர்கள் குறிப்பிடப்பட்டுள்ளனர். அந்த தெய்வங்களுக்குப் படைக்கப்பட்ட பொருட்கள் குறிப்பிட்ட தெய்வங்களுக்கான சண்டர்களிடம் சமர்ப்பிக்கப்பட வேண்டும்.

- தேசசுசண்டர் என்பதில் 'தேசசு' என்பது 'ஒளி' எனும் நன்மையைக் குறிக்கிறது. 'சண்டம்' என்பது தீமையைக் குறிக்கின்றது. சூரியனுக்கு அர்ப்பணம் செய்த பொருட்களை தேசசுசண்டரிடம் சமர்ப்பிப்பதினால் அதிலுள்ள தீமை விலகி நன்மை கிடைக்கும் என்பது நம்பிக்கை.
- சூரிய ஒளியில் இருந்து 'வைட்டமின்-டி' அதிகமாக கிடைக்கும் என்ற நன்மையுடன் அதிக நேரம் இருந்தால் தோல் நோய்கள் வரும் என்னும் தீமையும் உள்ளது. எந்தப் பொருளாயினும் அதில் நன்மையும் தீமையும் இணைந்து இருக்கும். மனிதன் நன்மையும் தீமையும் இருப்பினும் நல்லவற்றை மட்டுமே எடுத்துச் பயன்படுத்த வேண்டும் என்பதை ஆன்மிகமும் திருக்கோயில்களும் உணர்த்துகின்றன.
- இறைவன், இறைவி சந்நிதிகளில் நாம் வணங்கிய பின்னர் அத்தெய்வங்களுக்கு உண்டான பொருட்கள் எதையும் எடுத்து வரவில்லை என்பதைத் தெரிவிக்க சண்டிகேசுவரர், சண்டிகேசுவரி சந்நிதிகளில் இரு கைகளை விரித்துக் காட்டும் வழக்கம் இருந்தது. ஆகமக் கோட்பாடுகளை அறிந்திராததால் மக்கள் பின்னாளில் கைகளைத் தட்டும் வழக்கத்தை மேற்கொள்ளலாயினர். இவ்வழக்கம் பின்னர் சண்டிகேசுவரர், சண்டிகேசுவரி ஆகிய சண்டர்களின் உண்மையறியாது, இவர்கள் செவிடர்கள், அதனால் கைகளைத்தட்டி வணங்க வேண்டும் என்று மாறியது. மக்கள் சண்டிகேசுவரரை 'செவிட்டுச் சாமியார்' என அழைப்பதும் தொடங்கியது.
- ஒட்டிப் பிறக்கும் இரட்டையர்கள் (Co-joined Twins) என்ற அரிதான நோயை தமிழர்கள் அறிந்து திருக்கானப்பேர் திருக்கோயிலில் சிற்பமாகப் பதிவு செய்துள்ளனர்.
- திருச்சுழியல் பகுதியில் 'கருப்பர்' வழிபாடு அதிகம் காணப்படுகின்றது. மற்றைய திருக்கோயில்களைக் காட்டிலும் திருச்சுழியல் திருக்கோயிலில் எண்ணற்ற கருப்பர் சிற்பங்கள் தூண்களில் செதுக்கப்பட்டுள்ளன.
- திருச்சுழியலில் உள்ள மனிதக் கோபுரம் (Human Pyramid), சண்டைக் காட்சிகள் (Fighting Shots), பெண்கள் விளையாடுதல், திருக்கானப்பேரில்

சிறுவர்கள் கால்களை முன்னும் பின்னும் வைத்து நடனமாடுதல் போன்ற சிற்பங்கள் அக்காலத்தின் வாழ்வியல் முறைகளைப் பறைசாற்றுகின்றன.

- திருக்கோயில்களில் உள்ள ஆண் - பெண் உடலுறவு (Sex) சிற்பங்கள், குறிப்பிடும் வண்ணம் திருச்சுழியலில் உள்ள ஆண் சுய இன்பம் (Masturbate) செய்யும் சிற்பம் ஆகியன அந்தந்தப் பருவத்தில் ஆண், பெண் அடைய வேண்டிய சிற்றின்பத்தை அடைந்து பின்னர் தெளிந்து பேரின்பமான வீடு பேற்றை அடைய வேண்டும் என்பதை உணர்த்துகின்றன.
- திருச்சுழியலில் முனிவர் கூர்மையான பாறையின் மீதுள்ள பலகையை சமன் செய்தவாறு தவம் செய்வது, நெம்பு கோல் விதியை (Lever Principle) ஒத்திருக்கிறது. நெம்பு கோல் விதியை சூத்திரங்களுடன் விளக்கியவர் ஆர்க்கிமெடஸ் (Archimedes) ஆவார். இவரது காலம் கி.மு.3ஆம் நூற்றாண்டு ஆகும். பல நூற்றாண்டுகளாகத் தமிழர்கள் தவம் இயற்றும் வழக்கம் கொண்டிருந்ததை தமிழ் இலக்கியங்கள் எடுத்துக் கூறுகிறது. எனவே ஆர்க்கிமெடஸ் நெம்பு கோல் விதியை விளக்கும் காலத்திற்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே தமிழர்கள் தவம் இயற்றும் பொழுது நெம்பு கோல் விதியைப் பின்பற்றியுள்ளதை இச்சிற்பம் உறுதிப்படுத்துகிறது.
- எகிப்தில் உள்ள பிரமிடுகள் நெம்பு கோல் விதியைக் கொண்டே கட்டப்பெற்றுள்ளன. சக்காரா (Saqqara) என்ற இடத்தில் கட்டப்பெற்றுள்ள பிரமிடு மிகப் பழமையானதாகப் போற்றப்படுகிறது. இதன் காலம் கி.மு.2630 ஆகும். எகிப்தியர்கள் பிரமிடுகள் கட்ட பயன்பட்ட நெம்பு கோல் விதியை தமிழர்கள் தவம் செய்யும் பொழுது ஒரு அங்கமாகக் கொண்டுள்ளனர். எனவே, இரண்டு கூற்றுகள் இதிலிருந்து பெறப்படுகின்றன. ஒன்று, எகிப்தியர்கள் பிரமிடுகளை உருவாக்கக் கொண்டிருந்த அறிவியல் அறிவை அதற்கு முன்னரே தமிழர்கள் பெற்று இருந்திருக்க வேண்டும். இரண்டு, தமிழர்களின் அறிவைக் கொண்டோ அல்லது தமிழர்களாலோ பிரமிடுகள் கட்டப்பெற்றிருக்க வேண்டும்.

- வானமகள் (Angel) போன்ற இறக்கைகள் கொண்ட பெண் உருவங்களை சைவ சமயமே பிற சமயங்களுக்குத் தந்துள்ளதை திருச்சுழியலில் உள்ள ரதியின் சிற்பம் உணர்த்துகிறது.
- கணினி, செல்லிடப்பேசிகளில் பயன்படுத்தப்படும் உணர்ச்சிக் குறிப்பான்களை (Smileys/ Emojis) ஹார்வே பால் (Harvey Ball) என்பவர் 1963ஆம் ஆண்டில் உருவாக்கினார். திருச்சுழியல் திருக்கோயில் சிற்பம், ஓவியங்களில் இவ்வகையான உணர்ச்சிக் குறிப்பான்களைத் தமிழர்கள் பயன்படுத்தியுள்ளனர்.
- தமிழர்கள் நீர் மேலாண்மையில் (Water Management) சிறந்து விளங்கியுள்ளனர். திருக்கோயில்களில் விழும் தண்ணீரை சிறிது கூட வீணாக்காமல் அவை முழுவதையும் திருக்கோயிலுக்குரிய தீர்த்தங்களிலோ, குளங்களிலோ அல்லது ஆறுகளிலோ கொண்டு சேர்த்துள்ளனர். மழைநீரை சேமித்து நிலத்தடி நீரைப் பாதுகாத்துள்ளனர். இன்றைய தண்ணீர் தட்டுப்பாட்டிற்கு முதற் காரணம் மழை நீரை வீணாக்குதலும் அதிக அளவில் நிலத்தடி நீரை உறிஞ்சுதலும் ஆகும். இவற்றுக்கு தமிழர்கள் சிறந்த நீர் மேலாண்மையின் மூலம் தீர்வு கண்டுள்ளனர்.
- சர் ஐசக் நியூட்டன், ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் போன்ற மேலை நாட்டு அறிஞர்கள் புவியீர்ப்பைக் (Gravity) கண்டறியும் முன்னரே தமிழர்கள் புவியீர்ப்பைப் பற்றிய அறிவை உடையவர்களாக இருந்துள்ளனர்.
- திருநெல்வேலியில் உள்ள தாமிரசபை மேற்கூரையில் உள்ள தாமிரத்தகடுகளின் மூலம் மின் ஆற்றல்கள் இழுக்கப்படுகின்றன. காந்த அலைகள் வடக்கிலிருந்து தெற்கு நோக்கி பயணம் செய்யும் தன்மை உடையது. எனவே தாமிரசபையின் மேற்கூரையில் உள்ள தாமிர மின் கடத்தியால் பெறப்படும் மின் ஆற்றல்கள் வடக்கிலிருந்து தெற்கு நோக்கி பயணிக்கின்றன. இங்கு அமைந்திருக்கும் தாமிரசபை பந்தல் மண்டபம் அலைவழிகாட்டியாக (Wave guides) செயல்பட்டு மின் ஆற்றல்களைக் கடத்தி உள்ளே பாய்ச்சுகிறது.
- தாமிரசபை பந்தல் மண்டபத்தின் பின்னால் பொல்லாப் பிள்ளையார் சந்நிதியில் உள்ள பிள்ளைத்தொண்டின் வழியே உள்ளே செல்லும் பெண்களுக்கு

கருப்பை தொடர்பான நோய்கள் இந்த மின்னாற்றல் பாய்வதினால் நீங்குகிறது. தற்காலத்தில் சீரொளி எனப்படும் லேசரைப் (Laser) பயன்படுத்தி துளையிட்டு கருப்பையில் பாய்ச்சி நீர்க்கட்டிகள் முதலியவை சரி செய்யப்படுகின்றன. இதை லேப்ரோஸ்கோபி (Laproscopy) என்று அழைக்கின்றனர். திருக்கோயில்களில் கருப்பை தொடர்பான நோய்கள் நீங்குவதற்கு இந்த மின் ஆற்றல்களைப் பயன்படுத்துகின்றனர்.

- திங்கள் மண்டபத்தின் வெளியே உள்ள கர்ப்பிணிப் பெண் சிற்பங்களின் வயிற்றில் எண்ணெய் தடவினால் ‘சுகப்பிரசவம்’ நடைபெறும் என்ற ஆன்மிக அடிப்படையிலான நம்பிக்கை நிலவுகிறது. இத்திருக்கோயிலுக்கு வரும் கர்ப்பிணிப் பெண்கள் தாமிரசபை, தாமிரசபை பந்தல் மண்டபம் மூலம் மின் ஆற்றல்களைப் பெற்று கருப்பை நோய்கள் நீங்கப்பெறுகின்றனர்.
- திருக்கோயில்களில் கிடைக்கும் இந்த ஆற்றல்களை (Energy) ‘சக்தி’ என்ற பெயரில் முன்னோர்கள் வழங்கியுள்ளனர்.
- திருச்சுழியல் திருக்கோயிலில் இறைவன் சந்நிதி திருச்சுற்று மண்டபத்தில் பெண் இயற்கையாக குழந்தையைப் பிரசவிக்கும் சிற்பம் திருக்கோயிலில் பெறப்படும் ஆற்றலைக் குறிப்பிடவே ஆகும்.
- திருவிழா என்பது ஆன்மிகத்தின் பொருட்டு அமைந்தாலும், வாழ்க்கைச் சூழலில் சிக்கித் தவிக்கும் பல தரப்பட்ட மக்களை ஒன்றிணைக்கும் பணியைச் செய்கின்றது.
- மக்கள் துணையின்றி பெரிய திருவிழாக்கள் நடைபெற இயலாததால் ‘காப்புத் தடை’ என்ற ஒன்றை முன்னோர்கள் ஏற்படுத்தி மக்களை ஊரைவிட்டு எங்கும் செல்லாமல் திருவிழா காரியங்களில் ஈடுபடுத்துகின்றனர். இதன் பொருட்டே காப்புத் தடையில் திருமணம் போன்ற இல்ல நிகழ்ச்சிகளை நடத்துவதைத் தவிர்க்கின்றனர்.
- தீர்த்தவாரி என்ற நிகழ்ச்சியின் மூலம் தீர்த்தங்களின் பெருமையை மக்களுக்கு உணர்த்தி நீர் நிலைகளைப் போற்றுகின்றனர்.
- எல்லா மக்களையும் தேரோட்டத்தல் வடம் பிடிக்கச் செய்து சமூகவியல் ஒற்றுமையை ஏற்படுத்துகின்றனர்.

**மேலாய்வுக் களங்களாக**

- திருக்கோயில்கள் கல்வெட்டுச் செய்திகளின் வழி அக்கால சமூக நிலை குறித்து ஆய்வு செய்யலாம்.
- திருக்கோயில் தலபுராணங்களில் காணப்படுகின்ற தொன்மக் கூறுகளை ஆய்வு செய்யலாம்.
- திருக்கோயில் அமைப்பு முறை, வழிபாட்டு முறை போன்றவற்றில் உள்ள அறிவியல் கூறுகளை தனித்ததொரு ஆய்வாக மேற்கொள்ளலாம்.

# துணைநூற்பட்டியல்

## முதன்மைச் சான்றாதாரங்கள்:

**(திருமுறைகளின் அடிப்படையில் வகைப்படுத்தப்பட்டுள்ளது)**


1. திருஞானசம்பந்தர் — **திருஞானசம்பந்தர் தேவாரம் (முதல் திருமுறை)**
ச.தண்டபாணி தேசிகர் (வி.கு.),
ஞானசம்பந்தர் பதிப்பகம்,
தருமை ஆதீனம்,
மயிலாடுதுறை.
மூன்றாம் பதிப்பு – 2011.

2. மேலது — **திருஞானசம்பந்தர் தேவாரம் (இரண்டாம் திருமுறை)**
சு.மாணிக்கவாசக முதலியார் (வி.கு.),
ஞானசம்பந்தர் பதிப்பகம்,
தருமை ஆதீனம்,
மயிலாடுதுறை.
மூன்றாம் பதிப்பு – 2011.

3. மேலது — **திருஞானசம்பந்தர் தேவாரம் (மூன்றாம் திருமுறை)**
அ.கந்தசாமிப் பிள்ளை (வி.கு.),
ஞானசம்பந்தர் பதிப்பகம்,
தருமை ஆதீனம்,
மயிலாடுதுறை.
மூன்றாம் பதிப்பு – 2011.

4. மேலது — **திருஞானசம்பந்தர் சுவாமிகள் தேவாரம்**
பி.ரா.நடராசன் (உ.ஆ.),
உமா பதிப்பகம்,
171, பவளக்காரத் தெரு,
மண்ணடி, சென்னை – 600 001.
இரண்டாம் பதிப்பு – 2010.

5. திருநாவுக்சரசர் — **திருநாவுக்சரசர் தேவாரம் (நான்காம் திருமுறை)**
சு.மாணிக்கவாசக முதலியார் (வி.கு.),
ஞானசம்பந்தர் பதிப்பகம்,
தருமை ஆதீனம்,
மயிலாடுதுறை.
மூன்றாம் பதிப்பு – 2011.

6. மேலது — **திருநாவுக்சரசர் தேவாரம் (ஐந்தாம் திருமுறை)**
க.வச்சிரவேல் முதலியார்,
வி.சா.குருசாமி தேசிகர் (வி.கு.),
ஞானசம்பந்தர் பதிப்பகம்,
தருமை ஆதீனம்,
மயிலாடுதுறை.
மூன்றாம் பதிப்பு – 2011.

| | | |
|---|---|---|
| 7. | மேலது | **திருநாவுக்சரசர் தேவாரம்**<br>**(ஆறாம் திருமுறை)**<br>சி.அருணைவடிவேல் முதலியார் (வி.கு.),<br>ஞானசம்பந்தர் பதிப்பகம்,<br>தருமை ஆதீனம்,<br>மயிலாடுதுறை.<br>மூன்றாம் பதிப்பு – 2011. |
| 8. | மேலது | **திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்**<br>பி.ரா.நடராசன் (உ.ஆ.),<br>உமா பதிப்பகம்,<br>171, பவளக்காரத் தெரு,<br>மண்ணடி,<br>சென்னை – 600 001.<br>மூன்றாம் பதிப்பு – 2011. |
| 9. | சுந்தரர் | **சுந்தரர் தேவாரம்**<br>**ஏழாம் திருமுறை**<br>சி.அருணைவடிவேல் முதலியார் (பொ. &வி.கு.),<br>ஞானசம்பந்தர் பதிப்பகம்,<br>தருமை ஆதீனம்,<br>மயிலாடுதுறை.<br>மூன்றாம் பதிப்பு – 2011. |
| 10. | மேலது | **சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்**<br>பி.ரா.நடராசன் (உ.ஆ.),<br>உமா பதிப்பகம்,<br>171, பவளக்காரத் தெரு,<br>மண்ணடி,<br>சென்னை – 600 001.<br>நான்காம் பதிப்பு – 2010. |
| 11. | மாணிக்கவாசகர் | **மாணிக்கவாசகர் திருவாசகம்**<br>சி.அருணைவடிவேல் முதலியார் (வி.கு.),<br>எம்.சிவச்சந்திரன் (பொ.),<br>ஞானசம்பந்தர் பதிப்பகம்,<br>தருமை ஆதீனம்,<br>மயிலாடுதுறை.<br>மூன்றாம் பதிப்பு – 2014. |
| 12. | மேலது | **திருவாசகம்**<br>பி.ரா.நடராசன் (உ.ஆ.),<br>உமா பதிப்பகம்,<br>171, பவளக்காரத் தெரு,<br>மண்ணடி,<br>சென்னை – 600 001.<br>இரண்டாம் பதிப்பு – 2011. |
| 13. | திருமூலர் | **திருமூலர் திருமந்தரம்**<br>சி.அருணைவடிவேல் முதலியார் (வி.கு.),<br>ஞானசம்பந்தர் பதிப்பகம்,<br>தருமை ஆதீனம்,<br>மயிலாடுதுறை.<br>மூன்றாம் பதிப்பு – 2014. |

14. மேலது **திருமூலர் திருமந்திரம்**
ஞா.மாணிக்கவாசகன் (உ.ஆ.),
உமா பதிப்பகம்,
171, பவளக்காரத் தெரு,
மண்ணடி,
சென்னை – 600 001.
இரண்டாம் பதிப்பு – 2011.

15. சேக்கிழார் **சேக்கிழார் திருத்தொண்டர் புராணம் (பெரிய புராணம்)**
கு.சுந்தரமூர்த்தி (பொ.&வி.கு),
ஞானசம்பந்தர் பதிப்பகம்,
தருமை ஆதீனம்,
மயிலாடுதுறை.
இரண்டாம் பதிப்பு – 2014.

16. மேலது **பெரிய புராணம்**
பி.ரா.நடராசன் (உ.ஆ),
உமா பதிப்பகம்,
171, பவளக்காரத் தெரு,
மண்ணடி,
சென்னை – 600 001.
இரண்டாம் பதிப்பு – 2007.

## துணைமைச் சான்றாதாரங்கள்:

**(‘அகர’ வரிசையில் வகைப்படுத்தப்பட்டுள்ளது)**

### இலக்கியங்கள், வரலாறுகள், புராணங்கள்:

17. அண்ணாமலை தேசிகர் **சிவக்ஷேத்திர விளக்கம்**
வெ.மு.இ.

18. அபிராமி பட்டர் **அபிராமி அந்தாதி**
கி.வா.ஜகந்நாதன் (உ.ஆ.),
அட்சரா பதிப்பகம்,
12, மூன்றாவது முதன்மை சாலை,
2ஆவது குறுக்குத் தெரு,
சி.ஐ.டி. நகர்,
சென்னை – 14.
2012

19. அம்பிகாபதி ஐயர் **நெல்லை வருக்கக் கோவை**
அருணாசலக்கவிராயர்.மு.ரா. (உ.ஆ),
விவேகபாநு அச்சியந்திரசாலை,
1914

20. அர்ச்சுனன்.மு **ஆடானை அகவல்**
ஸ்ரீபதி நிலையம்,
41, சன்னதி தெரு,
திருவாடானை – 623 407.
2013

21. அருணாசலம்.மு **தமிழ் இலக்கிய வரலாறு - பன்னிரண்டாம் நூற்றாண்டு**
காந்தி வித்தியாலயம்,
திருச்சிற்றம்பலம்,
மாயூரம்.
1975

22. அழகர்சாமிபிள்ளை.ம **திருநெல்வேலித் தலபுராண வசனம்**
ஸ்ரீவித்யா விநோதினி அச்சியந்திரசாலை,
தஞ்சாவூர்,
1910.

23. மேலது **திருநெல்வேலித் தலபுராணம்**
அ.வெங்கிடசுப்பிரமணியன்,
தாமிரசபை மலர்க்குழு,
திருநெல்வேலி.
2017.

24. ஆராவமுதாசாரியார் **திருச்சுழியற் புராணம்**
கலாரத்நாகர அச்சுக்கூடம்,
சென்னை.
1902.

25. இராசமாணிக்கனார்.மா **கால ஆராய்ச்சி**
அலமு பதிப்பகம்,
9, அய்யா முதலி தெரு,
இராயப்பேட்டை,
சென்னை – 600 014.
2003

26. கச்சியப்ப சிவாச்சாரியார் **கந்தபுராணம் - மூலமும் தெளிவுரையும்**
நல்லாமூர் கோ.பெரியண்ணன் (உ.ஆ.),
பெரியண்ணன் நூலகம்,
பிள்ளையார் கோயில் தெரு,
நல்லாமூர் கிராமம்,
கீழ்எடையாளம்,
திண்டிவனம் - 604 302.
2013

27. கதிரைவேற்பிள்ளை.நா **சிவக்ஷேத்திராலய மகோத்ஸவ உண்மை விளக்கம்**,
வெ.மு.இ.

28. கந்தசாமிப்புலவர் **திருவாப்பனூர்ப்புராணம்**
வித்தியாநுபாலன் யந்திரசாலை,
சென்னை.
1887.

29. மேலது **திருப்பூவணப் புராணம்**
இந்து தியலாஜிகல் அச்சுக்கூடம்,
சென்னை.
1896.

30. மேலது **திருப்பூவண நாதருலா**
உ.வே.சாமிநாதையர் (அ.உ),
பிரஸிடென்ஸி அச்சுக்கூடம்,
சென்னை.
1904

31. மேலது — **திருவாப்பனூர் தலபுராணம்**
நீ.சீ.சுந்தரராமன் (பொ. & ப.ஆ.),
அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர்
திருக்கோயில் வெளியீடு.
2005

32. மேலது — **திருப்பூவணப் புராணம்**
கி.காளைராஜன் (உ.ஆ.),
10, குருநாதர் கோவில் தெரு,
கோட்டையூர் – 630 106.
2008

33. கருப்பசாமி.மு — **அருள்மிகு திருக்குற்றாலநாதசாமி திருக்கோயில், குற்றாலம் - தலவரலாறு**
அருள்மிகு திருக்குற்றாலநாதசாமி
திருக்கோயில்,
குற்றாலம்.
2014

34. காமாட்சிநாதன் செட்டியார்.வ.நா. — **நெல்லைச் சிந்து**
ஸ்ரீ காந்திமதி விலாசம் பிரஸ்,
திருநெல்வேலி.
1915

35. மேலது — **ஸ்ரீ காந்திமதியம்பிகை பேரிற் சந்தப்பஞ்சகம்**
ஸ்ரீ காந்திமதி விலாசம் பிரஸ்,
திருநெல்வேலி.
1915

36. காளைராசன்.கி — **திருப்பூவணக் காசி**
10, குருநாதர் கோவில் தெரு,
கோட்டையூர் – 630 106.
2017

37. கிருஷ்ணமூர்த்தி.என் — **சிவஸ்தல வரலாறு**
ஸ்ரீ வன்னி விநாயகர் புத்தக நிலையம்,
58-ஏ, ஸ்ரீமீனாட்சி அம்மன் கோயில்,
மதுரை – 625 001.
2007.

38. குமரகுருபரர் — **மதுரை மீனாட்சியம்மை குறம் மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணிமாலை**
இரா.இளங்குமரன் (உ.ஆ. &
அ.சொ.பொ.),
திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
லிமிடெட்,
1-140, பிரகாசம் சாலை, சென்னை - 1.
1977

39. மேலது — **மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்**
கதிர் முருகு (உ.ஆ.),
சாரதா பதிப்பகம்,
சென்னை – 600 014.
2009

| | | |
|---|---|---|
| 40. | குன்றக்குடி பெரியபெருமாள் | **குன்றக்குடி ஆதீன ஐந்து கோயில்கள்**<br>ஐந்து கோயில் தேவஸ்தானம் தலைமை அலுவலகம்,<br>குன்றக்குடி – 630 206.<br>2016 |
| 41. | சண்முகதாசபிள்ளை | **திருநெல்வேலி ஸ்ரீ ஆறுமுகக்கடவுள் பிள்ளைத்தமிழ்**<br>வெ.மு.இ. |
| 42. | சாம்பசிவ நாயனார்.மு | **சிவக்ஷேத்திர யாத்திரானுகூலம்**<br>மகாலட்சுமி விலாச அச்சுக்கூடம்,<br>சென்னை.<br>1903 |
| 43. | சுப்பிரமணிய ஐயர் | **காளையாற் கோயிற்புராணம்**<br>வெ.நா.ஜூபிலி அச்சுக்கூடம்,<br>சென்னை.<br>1899 |
| 44. | மேலது | **காளையாற்கோவிற் புராண வசனம்**<br>கலாரத்நாகர அச்சுக்கூடம்,<br>சென்னை.<br>1897 |
| 45. | சுப்பிரமணிய பிள்ளை.த | **சிவஸ்தல மஞ்சரி**<br>சவுத் இந்தியன் அச்சுக்கூடம் &<br>பி.ஆர்.ராமய்யர் அச்சுக்கூடம்,<br>இரண்டாம் பதிப்பு – 1912. |
| 46. | சுப்பிரமணியன்.ச.வே. | **தமிழ் இலக்கிய வரலாறு**<br>மணிவாசகர் பதிப்பகம்,<br>31, சிங்கர் தெரு, பாரிமுனை,<br>சென்னை – 600 018.<br>2010 |
| 47. | செய்த்தலைமணியன் | **திருநெல்வேலித் தலபுராணம்**<br>**தாமிரசபை மலர்க்குழு,**<br>**திருநெல்வேலி.**<br>**2017** |
| 48. | சொக்கலிங்கச் செட்டியார்.இராம | **திருப்புத்தூர்ப் புராணம்**<br>மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,<br>சென்னை,<br>1958 |
| 49. | திருவள்ளுவர் | **திருக்குறள்**<br>பரிமேலழகர் (உ.ஆ.),<br>சாரதா பதிப்பகம்,<br>சென்னை – 600 014.<br>2011 |
| 50. | திரிகூடராசப்பக் கவிராயர் | **திருக்குற்றாலத் தலபுராணம்**<br>மு.ரா.அருணாச்சலக் கவிராயர் (அ.உ),<br>விவேகபாநு அச்சியந்திர சாலை,<br>மதுரை,<br>1970-71 |

51. மேலது — **திருக்குற்றாலக் குறவஞ்சி**
கருப்பணபிள்ளை (ப.ஆ),
வெ.மு.இ.
1889

52. மேலது — **திருக்குற்றாலக் குறவஞ்சி**
யாழ் வெளியீடு,
ஏபி 1108, தென்றல் குடியிருப்பு,
3ஆவது தெரு, மேற்கு அண்ணா நகர்,
சென்னை – 600 040.
2010

53. பட்டினத்தார் — **பட்டினத்தார் பாடல்கள்**
அ.மாணிக்கம் (உ.ஆ.),
வர்த்தமானன் பதிப்பகம்,
21, இராமகிருஷ்ணா தெரு,
தியாகராய நகர்,
சென்னை – 17.
2012

54. பரஞ்சோதி முனிவர் — **திருவிளையாடற் புராணம்**
ஆறுமுகவிலாச அச்சுக்கூடம்,
சென்னை.
1896.

55. மேலது — **திருவிளையாடற் புராணம்**
ஆறுமுகநாவலர் (உ.ஆ.),
வித்தியாநுபாலன யந்திரசாலை,
மூன்றாம் பதிப்பு - 1910

56. பல்லவராயன் ராஜாமணி குமரேசன் — **சிவகங்கை சமஸ்தானம் தேவஸ்தானம் திருக்கோயில்கள் ஸ்தல வரலாறு**
சிவகங்கை சமஸ்தானம் தேவஸ்தானம்,
சிவகங்கை.
நான்காம் பதிப்பு - 2011

57. பாலூர் கண்ணப்ப முதலியார் — **பாண்டி நாட்டுக் கோயில்கள்**
ஸ்டார் பிரசுரம்,
66, பெரிய தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை – 600 005.
இரண்டாம் பதிப்பு – 1961.

58. பாஸ்கரத் தொண்டைமான்.தொ.மு. — **வேங்கடம் முதல் குமரி வரை**
நல்லறப் பதிப்பகம்,
17, ரங்கன் தெரு,
தியாகராய நகர்,
சென்னை – 600 017.
ப.ஆ.இ.

59. பெரும்பற்றப்புலியூர் நம்பி — **திருவிளையாடற் புராணம்**
பிரஸிடென்ஸி அச்சுக்கூடம்,
சென்னை.
1906

60. மாணிக்கம் பிள்ளை.எஸ் — **சிவக்ஷேத்திர யாத்திரை விளக்கம்**
ஷண்முக விலாச அச்சுக்கூடம்,
சேலம்.
1918

| | | |
|---|---|---|
| 61. | மாரிமுத்து.கா | **திருப்புத்தூர் அருள்மிகு ஸ்ரீ திருத்தளிநாதர் ஆலயத் திருத்தல வரலாறு**<br>காத்தபெருமாள் பதிப்பகம்,<br>4-33, அகிழ்மனைத் தெரு,<br>திருப்புத்தூர் – 630 211.<br>2014 |
| 62. | வேலுசாமிப்பிள்ளை.தி.சு. | **தேவாரச் சிவதல வெண்பா**<br>அறோர அச்சி யந்திர சாலை, சென்னை.<br>1921. |
| 63. | ஷண்முகநயினார்.ஏ.சி. | **திருக்குற்றாலத் தலவரலாறு**<br>கோயில் வெளியீடு,<br>1958 |
| 64. | ------ | **பத்துப்பாட்டு**<br>இரா.மோகன் (உ.ஆ.),<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,<br>41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,<br>அம்பத்தூர், சென்னை – 600 098.<br>2007 |
| 65. | ------ | **மெய்கண்ட சாத்திரம்**<br>காஞ்சி நாகலிங்க முதலியார்,<br>ஞானசம்பந்தர் பதிப்பகம்,<br>தருமை ஆதீனம்,<br>மயிலாடுதுறை.<br>இரண்டாம் பதிப்பு – 2014. |
| 66. | ------ | **நாலாயிர திவ்வியப் பிரபந்தம்**<br>தி லிட்டில் ப்ளவர் கம்பெனி,<br>புதிய எண் 36, வடக்கு சாலை,<br>மேற்கு சி.ஐ.டி. நகர்,<br>சென்னை – 600 035.<br>2008 |
| 67. | ------ | **திருச்சுழியல் வெண்பா அந்தாதி**<br>பி.ஆர்.கிருஷ்ணமாசாரியார் (உ.ஆ),<br>கலாரத்நாகர அச்சுக்கூடம்,<br>சென்னை.<br>1912 |
| 68. | ------ | **வேணுவனப் புராணம்**<br>அருணாசலக்கவிராயர்.மு.ரா. (உ.ஆ),<br>விவேகபாநு அச்சியந்திரசாலை,<br>1914. |
| 69. | ------ | **காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ்**<br>அருணாசலக்கவிராயர்.மு.ரா. (உ.ஆ),<br>விவேகபாநு அச்சியந்திரசாலை,<br>1914. |
| 70. | ------ | **திருக்கோயில்கள் வழிகாட்டி திருநெல்வேலி மாவட்டம்**<br>தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலையத்துறை வெளியீடு,<br>இரண்டாம் பதிப்பு – 2014. |

71. ------ **ஸ்ரீ ப்ருஹந்நாயகி ஸமேத ஸ்ரீ வ்ருத்தபுரீச்வரர் திருக்கோவில் தலவரலாறு**
இந்து பாலாஜி (தொ.ஆ),
2015

**வாலாற்று நூல்கள்:**

72. கதிரேசச் செட்டியார்.மு **நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு**
கமர்ஷியல் பிரிண்டிங் அன் பப்ளிஷிங் ஹவுஸ்,
46, அரண்மனைக்காரத் தெரு,
சென்னை – 1.
1953.

73. சதாசிவப் பண்டாரத்தார்.டி.வி. **பாண்டியர் வரலாறு**
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
பாரி முனை,
சென்னை – 600 108.
இரண்டாம் பதிப்பு – 2001.

**அகராதி:**

74. ------ **கழகத் தமிழ் அகராதி**
திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
154, டி.டி.கே. சாலை,
சென்னை – 600 018.

**குடமுழுக்கு மலர்கள் - சிறப்பிதழ்கள்:**

75. குடமுழுக்கு விழா மலர் (திருநெல்வேலி திருக்கோயில்), 2004

76. திருப்புத்தூர் அருள்மிகு ஸ்ரீ நின்ற நாராயணப்பெருமாள் திருக்கோயில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா, சிறப்பு மலர் – 2012.

77. அருள்மிகு சிவகாமசுந்தரி உடனாய திருத்தளிநாதர் ஸ்ரீ யோகபைரவர் திருக்கோயில் - சம்பக சஷ்டி விழா சிறப்பிதழ், 2010.

**ஆங்கிலப் புத்தகங்கள்:**

78. Sedha.R.S. **A Textbook of Applied Electronics**
S.Chand & Company Ltd.,
Ram Nagar, New Delhi – 110 055.
2012

**ஆய்வுக் கட்டுரைகள்:**

79. Godley, A. D. ed. (1920), Herodotus, The Histories. Harvard University Press, Book 2, Chapter 125.

80. Hussey-Pailos, Robert Scott (2005), Construction of the Top of the Egyptian Pyramids: An Experimental Test of a Levering Device, University of Florida, Retrieved 23rd December 2016.

**இணைய தளங்கள்:**

81. https://www.tamilvu.org

82. https://shaivam.org

83. http://solar-center.stanford.edu

84. http://temple.dinamalar.com

85. http://archimedespalimpsest.org

86. https://web.stanford.edu

# பாண்டிப் பதினான்கு திருத்தலங்கள்

அழகப்பா பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்கான பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**
**வெ.வெங்கட இராமநாதன்**
(பதிவு எண்: 1081/ 2014-15)

**நெறியாளர்**
**முனைவர் மா.சிதம்பரம்**
தமிழ் உயராய்வு மையம்,
அழகப்பா அரசு கலைக் கல்லூரி,
காரைக்குடி – 630 003





## அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசிய தர நிர்ணயக்குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+ (CGPA 3.64) தகுதியும் மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல் தரப் பல்கலைக்கழகம் மற்றும் தன்னாட்சித் தகுதியும் பெற்றது)

**காரைக்குடி – 630 003**

**தமிழ்நாடு - இந்தியா**

**செப்டம்பர் - 2019**

## முடிவுரை

- தமிழர்களின் வாழ்வியலில் திருக்கோயில்கள் ஓர் அங்கமாக விளங்குகின்றன. திருக்கோயில்களைச் சார்ந்து மக்களும் மக்களைச் சார்ந்து திருக்கோயில்களும் இயங்கி வருகின்றன.
- திருக்கோயில்களின் பெருமை சைவ சமயக் குரவர்களால் மேலும் பெருகிற்று. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் உள்ளிட்டோர் திருக்கோயில்களுக்கு நேரிடையாகச் சென்றும் பிற திருக்கோயில்களினின்றும் பதிகங்கள் பாடியுள்ளனர். இப்பதிகங்களின் திரட்டு பன்னிரெண்டாக வகுக்கப்பட்டு 'பன்னிரு திருமுறை' என்று வழங்கப்படுகிறது. இதில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரால் பாடப்பெற்ற பதிகங்கள் 'தேவாரம்' என்று அழைக்கப்படுகிறது.
- உமாபதி சிவாச்சாரியார் இயற்றிய 'திருப்பதிக்கோவை', தேவாரப் பாடல் பெற்ற திருத்தலங்களை ஒன்பது நாடுகளுக்குள் அடக்கி வகைப்படுத்தும். காவிரி வடகரையில் அறுபத்துமூன்று திருத்தலங்கள், காவரி தென்கரையில் நூற்றி இருபத்தியேழு திருத்தலங்கள், ஈழ நாட்டில் இரண்டு திருத்தலங்கள், பாண்டி நாட்டில் பதினான்கு திருத்தலங்கள், மலை நாட்டில் ஒரு திருத்தலம், கொங்கு நாட்டில் ஏழு திருத்தலங்கள், நடுநாட்டில் இருபத்தியிரண்டு திருத்தலங்கள், தொண்டை நாட்டில் முப்பத்தியிரண்டு திருத்தலங்கள், துளுவ நாட்டில் ஒரு திருத்தலம், வடநாட்டில் ஐந்து திருத்தலங்கள் என இருநூற்று எழுபத்தி நான்கு தேவாரப் பாடல் பெற்ற திருத்தலங்களை திருப்பதிக்கோவை குறிப்பிடுகின்றது.
- உமாபதி சிவாச்சாரியார் திருப்பதிக்கோவை எழுதிய காலத்தில் ஒன்பது நாடுகளாக பாரத கண்டம் வகைப்படுத்தப்பட்டுள்ளது. அதன் அடிப்படையில் திருப்பதிக்கோவையில் திருத்தலங்களைக் குறிப்பிட்டுள்ளார்.
- உமாபதி சிவாச்சாரியாரின் திருப்பதிக்கோவையே தேவாரப் பாடல் பெற்ற திருத்தலங்களின் பகுப்புக்கு அடிப்படையாக விளங்குவதால், பாண்டிப் பதினான்கு திருத்தலங்களை திருஆலவாய், திருவாப்பனூர், திருப்பரங்குன்றம், திருவேடகம், திருக்கொடுங்குன்றம், திருப்புத்தூர், திருப்புனவாயில்,

திருவிராமேச்சுரம், திருவாடானை, திருக்கானப்பேர், திருப்பூவணம், திருச்சுழியல், திருக்குற்றாலம், திருநெல்வேலி என்ற வரிசையில் நிரலிடுவதே முறையானதாகும்.

- திருத்தலம், திருக்கோயில்களின் வரலாற்றை அறிய தலபுராணங்கள் பெரிதும் உதவுகின்றன. எனினும் திருத்தலம், திருக்கோயில்களின் சிறப்பைக் குறிப்பிடும் பொழுது இயற்கை வருணனைகளுடன் புராணங்களும் கற்பனை கலந்து அதில் எழுதப்பெற்றுள்ளதை அறிய முடிகின்றது.
- சைவ சமயத்தில் இறைவன், இறைவிக்கு நடைபெறும் திருமணம் முக்கிய இடம் பெறுகிறது. இவர்கள் திருமணத்தைக் காண அனைவரும் கைலாயம் செல்வதால் வடக்கு தாழ்ந்து தெற்கு உயர்கின்றது. இதை சமன் செய்ய அகத்தியரை இறைவன் தெற்குப் பகுதிக்கு அனுப்பி, பின்னர் அங்கு திருமணக் காட்சியை அகத்தியருக்கு அருளினார். இப்புராணம் தலபுராணங்களில் முக்கிய இடம் பெறுகிறது.
- திருத்தலத்தின் மேல் தலபுராணம் பாடப்பெறுவதால் அங்கு திருமணக் காட்சியை அகத்தியருக்கு அருளியதாக பாடப்பெற்றுள்ளது.
- இறைவன், இறைவி திருமணக் காட்சியை தலபுராணங்கள் பாடுவது, மக்கள் இல்லற வாழ்க்கையில் இறைவன் - இறைவி போல் இனிது வாழ வேண்டும் என்று குறிப்பிடவேயாகும்.
- சுயம்புவாக லிங்கத்தின் பாணம் கிடைக்கப்பெற்றுள்ள இடத்தில் திருக்கோயில்கள் எழுப்பப்பட்டுள்ளன. சுயம்பு லிங்கத்தின் சிறப்புக் கருதி அவை கண்டெடுக்கப்பெற்ற வரலாறு தலபுராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. இயற்கையாகக் கிடைக்கப்பெற்ற பாணத்தை இறைவனாகக் கருதி வணங்கியதிலிருந்து தமிழர்கள் இயற்கையையே இறைவனாகக் கண்டுள்ளமையை உணர முடிகின்றது. தேவர்கள், மனிதர்களால் பிரதிட்டை செய்யப்பெற்ற லிங்கங்களின் வரலாறுகளையும் தலபுராணத்தின் வழி அறிய முடிகின்றது.
- திருக்கோயில்களுக்கு தீர்த்தங்களை உண்டாக்கியிருப்பதால் தமிழர்கள் நீர் நிலைகளைப் போற்றியுள்ள பாங்கு வெளிப்படுகிறது.

- ஆன்மிகத்தின் அடிப்படையில் தீர்த்தங்களைப் புனிதமான ஒன்றாகக் கொண்டு அதைப் போற்றியதோடு மட்டுமல்லாது பேணிப் பாதுகாத்து வணங்கி வந்துள்ளனர்.
- தற்காலத்து நீர் நிலைகளைப் பாதுகாக்காது, கடல் நீரையும் கழிவு நீரையும் சுத்திகரித்து (Desalination, Reverse Osmosis and UV Treatment) பருகும் நிலைமைக்கு மக்கள் தள்ளப்பட்டுள்ளனர். இவை அனைத்தும் நீர் நிலைகளைப் போற்றாததால் ஏற்பட்ட விளைவேயாகும்.
- திருக்கோயிலுக்குள் செல்லும் முன்பு அதற்கென ஒதுக்கப்பட்ட தீர்த்தத்தில் நீராடிய பின் இறைவனை வணங்கியுள்ளனர். இதற்கென தீர்த்தங்கள் இருக்கின்றன. உடல் தூய்மையின்மையால் பல நோய்கள் வருகின்றன. தூய்மையான வாழ்க்கை முறையை ஆன்மிகம் கற்பிக்கின்றது.
- புவி வெப்பமயமாதலுக்கு (Global Warming) முக்கிய காரணம் மரங்களை வெட்டுவதே ஆகும். தமிழர்கள் திருக்கோயில்கள் தோறும் மரங்களை வளர்த்தது மட்டுமல்லாது அவைகளை தலவிருட்சம் என்ற பெயரில் வணங்கி வருகின்றனர்.
- விலங்கியல், தாவரவியல் துறையில் மிகப் பெறும் சவாலாக இருப்பது விலங்குகள், மரங்கள் உள்ளிட்டவற்றை அழிவிலிருந்து (Extinction) பாதுகாப்பது ஆகும். இந்தியாவை தாயகமாகக் கொண்ட பல விலங்குகள், தாவரங்கள் அழியும் நிலைக்கு வந்து, பாதுகாக்கப்பட்ட வரிசையில் (Endangered Species) உள்ளன. எனவே அந்தந்தப் பகுதியைச் சார்ந்த உயிரினங்களை அதன் இயற்கை சூழலிலேயே வளர்த்து வரும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.
- இதை தமிழர்கள் முன்னரே ஆன்மிகத்தில் செய்து காட்டியுள்ளனர். அந்தப் பகுதியில் இருக்கும் மரங்களை அந்தத் திருத்தலங்களின் தலவிருட்சங்களாக்கி அதைப் பாதுகாத்துள்ளனர்.
- ஆய்வுக்கு எடுத்தாளப்பட்ட திருக்கோயில்களில் காரணம், காமிகம், மகுடம் ஆகிய மூன்று சைவ ஆகமங்கள் காணப்படுகின்றன.

- திருவாப்பனூர் தேவாரத்தில் திருஞானசம்பந்தர் இறைவனை ‘அகர முதலானை’ என்று குறிப்பிடுகிறார். திருக்குறளின் முதற் குறளின் கருத்தை பாடியுள்ளார் திருஞானசம்பந்தர்.
- திருவள்ளுவரை சமணர் என்றும் பௌத்தர் என்றும் குறிப்பிடுவர் உளர். சமணம், பௌத்த சமயத்தை தன் தேவாரத்தில் சாடும் திருஞானசம்பந்தர் அச்சமயமாகக் குறிப்பிடப்படும் திருவள்ளுவரின் திருக்குறளை அடியொட்டி இதைப் பாடியிருப்பார் என்று கோடல் தவறாகும். எனவே சைவ அடியார்களுள் முதல் அடியாரான திருஞானசம்பந்தர் திருக்குறளை எடுத்தாண்டிருப்பதால் திருவள்ளுவர் சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்பது அறியப்படுகிறது.
- ஏடு தங்கிய இடமான திருவேடகத்தில் புனல் வாதத்திற்கு முன்னரே திருக்கோயில் இருந்துள்ளது. இதனை ‘சேடனூர் ஏடகம்’, ‘திருவேடகக் கோயிலே’ என்று திருஞானசம்பந்தர் பாடியிருப்பதிலிருந்து அறியலாம். குலச்சிறையாருக்கு ஒரு குறிப்பிட்ட இடத்தில் (Landmark) ஏட்டைத் தங்கச் செய்தால் எடுப்பதற்கு எளிதாக இருக்கும் என்று கருதியே திருஞானசம்பந்தர் திருவேடகத் திருக்கோயிலின் அருகே ஏட்டைத் தங்கச் செய்துள்ளார்.
- ஏடு தங்க பாடியதால் திருஞானசம்பந்தர் ‘ஏடகம்’ என்று திருத்தலத்தைக் குறிப்பிட்டுள்ளார்.
- தேவாரத்தில் ‘ஏடகம்’ என்று குறிப்பிடப்பட்டதால் ‘திருவேடகம்’ என்ற பெயர் திருத்தலத்திற்கும் ‘ஏடகநாதர்’ என்ற பெயர் இறைவனுக்கும் ஏற்பட்டுள்ளது.
- திருவேடகத் திருக்கோயிலின் தேவாரப் பதிகத்தில், சைவ சமயத்தில் வழங்கப்படும் ஐந்து வணங்கும் முறைகளில் பஞ்சாங்க, அட்டாங்க, சாட்டாங்க வணக்க முறைகளை இரண்டாவது பாடலிலும் மூவங்க வணக்கத்தை மூன்றாவது பாடலிலும் நேரிடையாகத் திருஞானசம்பந்தர் குறிப்பிடுகின்றார். இத்தேவாரத்தில் முதல் பாடலில் பொன்னார் திருவடிகளை அந்தணர்களும் அடியவர்களும் அருச்சித்து போற்றுவதைப் பாடுகின்றார். இறைவனை பிறர் பூசை செய்யுங்கால் நாம் தலைகுனிந்து வணங்கும் ஓரங்க வணக்க முறையை குறிப்பாக முதல் பாடலில் குறிப்பிடுகின்றார் திருஞானசம்பந்தர்.

- இறைவனுடைய திருவடியைப் பற்றினால் நாம் எண்ணியது, வேண்டியது நிறைவேறும் என்பதை உணர்த்தவே திருஞானசம்பந்தரும் இறைவன் திருவடிகளை முதலில் போற்றி ஏட்டைத் தங்கச் செய்துள்ளார்.
- இறைவியின் பெயரான 'ஏலவார் குழலியம்மை' என்பதும் திருஞானசம்பந்தரின் தேவாரத்திலிருந்து ஏற்பட்டுள்ளது.
- திருவாப்பனூர் திருத்தலமும் திருவேடகம் போல வைகையாற்றின் கரையில் இருப்பினும் திருவாப்பனூர் தேவாரத்தில் ஒரு இடத்தில் மட்டுமே வைகையாற்றை திருஞானசம்பந்தர் குறிப்பிட்டுள்ளார். திருவேடகத்தில் மூன்று இடங்களில் வைகையாற்றை குறிப்பிட்டுள்ளார்.
- திருவேடகத்தில் இறைவியை இரண்டு இடங்களில் மட்டும் பாடி, வைகையாற்றை மூன்று இடங்களில் திருஞானசம்பந்தர் பாடியிருப்பது, புனல் வாதத்தின் பொழுது வைகையாற்றின் சிறப்பினை உணர்த்தி அதை தெய்வமாகக் கருதி பாடியதாலே ஆகும்.
- இடபம் நடந்து வரும் பொழுது ஏற்படும் மணி சத்தத்தையே ஓசை என்று திருஞானசம்பந்தர் குறிப்பிட்டுள்ளார். எனவே ஏட்டைத் திருவேடகத்தில் தங்கச் செய்ய இறைவனே இடபத்தின் மேல் வந்து அருளியது இதன் வழி விளங்குகின்றது.
- திருஞானசம்பந்தரால் பாண்டிப் பதினான்கு திருத்தலங்களில் முதலில் பாடப்பெற்றது திருக்கொடுங்குன்றம் என்று பெரிய புராணம் குறிப்பிடுகின்றது.
- சோழ நாட்டினின்று பாண்டிய நாட்டின் திருஆலவாயை இரு வழியாக அடையலாம். முதலாவது வழி, திருப்புத்தூர் திருத்தலம் வந்து யானைமலை வழியாக திருஆலவாய் அடையலாம். இரண்டாவது வழி, திருக்கொடுங்குன்றம் சென்று யானைமலை வழியாக திருஆலவாயை அடையலாம்.
- திருஞானசம்பந்தர் திருக்கொடுங்குன்றம் வழியாகவே திருஆலவாயை அடைந்துள்ளார். திருப்புத்தூர் வராது திருக்கொடுங்குன்றம் சென்று திருஆலவாய் அடைந்ததற்குக் காரணம் திருஞானசம்பந்தர் காலத்தில் பாரி ஆண்ட பறம்புமலைப் பகுதியான திருக்கொடுங்குன்றம் பெரிய நகரமாய் இருந்ததே ஆகும். இது, திருஞானசம்பந்தர் திருக்கொடுங்குன்றத் தேவாரத்தில்

குறிப்பிட்ட பழ நகர், பெரு நகர், வள நகர், எழில் நகர், நெடு நகர் போன்றவற்றால் அறியப்படுகின்றது.

- அந்தணர் குலத்தில் தோன்றிய திருஞானசம்பந்தர் வேதம் உள்ளிட்டவற்றில் கொண்ட விருப்பத்தினைவிட தமிழின்பால் கொண்ட விருப்பம் அதிகமாகும். அதனால்தான் தன்னை 'தமிழ்வல்ல ஞானசம்பந்தன்' என்று தேவாரத்தில் குறிப்பிடுகின்றார். திருஞானசம்பந்தர் வாழ்விலும் வேத நெறியைத் தமிழ் நெறியாக மாற்றிய நிகழ்வுகள் உள்ளன. பஞ்சாக்கரத் திருப்பதிகம் உள்ளிட்டவற்றைப் பாடியது தமிழ் நெறியை வளர்க்க முனைந்ததால் ஆகும்.
- திருக்கொடுங்குன்றத்தின் அருகே சதுர் வேத மங்கலம் என்னும் நகரம் நான்மறைகளை ஓதுவிக்கும் பெரிய பாடசாலைகளைக் கொண்டு விளங்கியுள்ளது. ஆய்வுக் காலத்தில் இந்நகரம் சதுர்வேத மங்கலம் என்றும் எஸ்.வி.மங்கலம் என்றும் அழைக்கப்படும் சிறிய கிராமமாக உள்ளது. வேதம் வளர்க்கும் இவ்விடத்தில் தமிழ் நெறியை நிறுத்தவே, குறுகிய தூரம் அமைந்த திருப்புத்தூர் வழியாக அன்றி திருக்கொடுங்குன்றம் சென்று அங்கிருந்து திருஆலவாயை அடைந்துள்ளார் திருஞானசம்பந்தர்.
- திருப்புத்தூர் திருக்கோயில் 'திருத்தளி' என்று அழைக்கப்பட்டுள்ளது. திருநாவுக்கரசர் திருப்புத்தூர் திருத்தளியில் உறையும் இறைவனைத் 'திருத்தளியான்' என்று தன் தேவாரத்தில் பாடியுள்ளார்.
- திருத்தளியில் உறையும் இறைவன் என்ற பொருளில் திருத்தளியான் என்ற காரணப் பெயர் இறைவனுக்கு ஏற்பட்டு பின்னர் அதுவே நிலைபெற்றுள்ளது.
- திருத்தளி இறைவன் பழமையானவன் என்பதும் இத்திருக்கோயில் புகழ் பெற்று விளங்கியுள்ளதையும் உணரக் கிடைக்கின்றது.
- திருப்புத்தூர் தேவாரத்தினின்று இத்திருத்தலம் மாடங்கள், தேர் ஓடுதற்குரிய நீண்ட வீதிகள் என கட்டமைக்கப்பெற்று முறையாக வேளாண்மை செய்யும் நிலங்களையும் தன்னகத்தே கொண்டிருந்தது என்பது தெரிய வருகிறது.
- திருநாவுக்கரசர் திருஆலவாய் திருத்தலத்திற்குச் செல்ல எண்ணம் கொண்டு முதலில் திருப்புத்தூரை அடைந்தார். இங்கு பாடும் பொழுது, மனத்தில் நின்ற திருஆலவாய் இறைவனின் பொற்கிழி வழங்கிய திருவிளையாடலைப் பதிவு

செய்துள்ளார். இதை அடிப்படையாகக் கொண்டு தருமி இத்திருத்தலத்தைச் சார்ந்தவன் என்ற கருத்து இத்திருத்தலத்தில் நிலவி வருகின்றது.

- திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் தன்னுடைய தேவாரத்தில் வால்மீகி, ராமர், சீதை ஆகியோரைப் பற்றி எங்கும் குறிப்பிடவில்லை. தலபுராணத்திலும் இவர்களைப் பற்றிய குறிப்பு காணப்படவில்லை.
- திருப்புனவாயில் திருத்தலம் திருஞானசம்பந்தர், சுந்தரரால் பாண்டிய நாட்டில் கடைசியாகப் பாடல் பெற்றது ஆகும். திருஞானசம்பந்தர் திருப்புனவாயிலினின்று நின்றசீர் நெடுமாற நாயனார், மங்கையர்க்கரசியார் ஆகியோருடன் குலச்சிறையாரின் ஊரான திருமணமேற்குடி அடைந்து அங்கிருந்து சோழ நாடு சென்றடைந்தார்.
- சுந்தரர் சேரமான் பெருமாள் நாயனாருடன் திருப்புனவாயிலிலிருந்து சோழ நாடு அடைந்தார்.
- திருஞானசம்பந்தர், சுந்தரர் தரை வழியே பாண்டிய நாடு அடைந்து திருப்புனவாயில் மூலம் கடல் வழியே சோழ நாடு சென்றுள்ளனர்.
- திருநாவுக்கரசர் திருப்புனவாயிலில் தேவாரம் பாடிய குறிப்பு பெரிய புராணத்துள் காணப்படவில்லையாகினும், பொதுப் பதிகம் ஒன்றில் 'கடல் அலைகள் பொங்கியெழும் திருப்புனவாயில்' என்று குறிப்பிட்டுள்ளார். எனவே திருநாவுக்கரசரும் கடல் வழியே திருப்புனவாயிலிலிருந்து சோழ நாடு அடைந்துள்ளார்.
- திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோர் மனம் சென்றபடி திருத்தலங்களுக்குச் செல்லாமல் பயண மேலாண்மையில் (Travel Management) சிறந்து விளங்கியுள்ளமை அறியப்படுகின்றது.
- திருஞானசம்பந்தர் திருவாடானையில் பாடிய தேவாரத்தில் இயற்கை வளத்தை ஓர் இடத்தைத் தவிர வேறு எங்கும் குறிப்பிடவில்லை. அங்கும், திருவாடானை நீர் வளம் மிகுந்தது என்று மட்டுமே பாடியுள்ளார்.
- நேர்காணல் மூலம் திருவாடானை திருக்கோயிலின் தீர்த்தங்களுள் ஒன்றான மணிமுத்தா நதி பல காலமாக வற்றாத நதியாக இருந்துள்ளது. எனவே

திருஞானசம்பந்தர் மணிமுத்தா நதியின் வளத்தையே தன்னுடைய தேவாரத்தில் குறிப்பிட்டுள்ளார்.

- இறைவனை அருச்சனைகள் செய்வதன் மூலம் கிடைக்கும் பலன்களையே திருவாடானை தேவாரம் முழுமைக்கும் பாடியிருப்பது, இத்திருத்தலத்தில் சூரியன், வாருணி, வருணன், மார்க்கண்டேயர், மிருகண்டு முனிவர், அகத்தியர் போன்றோர் வந்து வணங்கிப் போற்றி பேறு பெற்றதை அடிப்படையாகக் கொண்டே ஆகும்.
- பூணூல் அணிபவர்களில் அந்தணர்கள் மட்டுமே மான் தோலை அதில் சேர்த்துக் கட்டியிருப்பர். எனவே, அந்தணர் குலத்தில் பிறந்த திருஞானசம்பந்தரும் இதைக் குறிப்பிடுகிறார்.
- திருக்கானப்பேர் திருத்தலத்தில் யானைகள் இருந்திருப்பினும் திருக்குற்றாலத் திருத்தலத்தைப் போன்று மலை வளம் இல்லாததால் அதிகம் யானைகள் வாழ்ந்திருந்ததற்கான சாத்தியக் கூறுகள் இல்லை.
- திருஞானசம்பந்தர் திருக்கானப்பேர் தேவாரத்தின் முதல், ஏழாம் பாடல்களின் இரண்டு இடங்களில் யானைகள் பூசை செய்ததைப் பாடியிருப்பது தலவரலாற்றை ஒட்டி அமைந்ததே ஆகும்.
- சுந்தரர், திருக்கானப்பேர் தேவாரத்தில் இரண்டு இடங்களில் தன்னைப் பற்றி வெளிப்படையாகவும், இரண்டு இடங்களில் மறைமுகமாகவும் குறிப்பிடுகிறார்.
- முதலில் தான் கற்ற கல்வியால் இறைவனைப் போற்றிப் பாட வேண்டும் என்று நான்காவது பாடலில் விரும்புகின்றார். இரண்டாவதாக, தன் தோழனாக இருந்து தூது சென்றமையை ஒன்பதாவது பாடலில் பாடியுள்ளார். இவ்வாறு இரண்டு செய்திகளை வெளிப்படையாகப் பாடியுள்ளார்.
- இறைவன் தன்னைத் திருவெண்ணெய் நல்லூரில் வந்து தடுத்தாட் கொண்டதை குறிப்பாக ஆறு, ஒன்பதாம் பாடல்களில் குறிப்பிடுகின்றார். ஆறாவது பாடலில் அயலே நின்றாலும் என்னை மதித்து உய்தி பெறச் செய்பவன் என்று கூறுகிறார். இங்கு ‘அயலே நின்றது’ என்பதில், திருக்கானப்பேர் திருத்தலத்து இறைவன், அயலான திருச்சுழியலில் தங்கியிருக்கும் தன்னை கனவிற் தோன்றி ஆட்கொண்டதை உணர்த்துகிறார்.

- திருக்கானப்பேர் சுந்தரர் தேவாரத்தில் இயற்கையைப் பற்றிய குறிப்பு காணப்படவில்லை. அனைத்தும் இறைவனின் குணங்களையே குறிக்கின்றது.
- சுந்தரர் திருச்சுழியலிலிருந்து அவ் இறைவன் மீது ஒரு பதிகமும் திருக்கானப்பேர் இறைவன் மீது ஒரு பதிகமும் பாடியுள்ளார்.
- திருஞானசம்பந்தர் திருப்பூவணத்தில் முதல் திருமுறை, மூன்றாம் திருமுறையில் இடம் பெற்றிருக்கும் இரண்டு தேவாரப் பதிகங்களைப் பாடியுள்ளார்.
- முதல் திருமுறை திருப்பூவணத் தேவாரத்தில், முடிசூடி முறையாக ஆளும் பாண்டியரும் அவருக்குத் திறைப் பொருட்களைச் செலுத்தும் சேரர், சோழர் வணங்கும் திருப்பூவணம் என்றும், அன்பினால் மூவேந்தர்களும் போற்றும் இறைவன் உரையும் திருப்பூவணம் என்றும் இரண்டு இடங்களில் மூவேந்தர்களைக் குறிப்பிட்டுள்ளார்.
- பாண்டிய மன்னன் முடிசூடி முறையாக ஆட்சி செலுத்துவதாக திருஞானசம்பந்தர் குறிப்பிடுவது, நின்றசீர் நெடுமாற நாயனார் சமணத்திலிருந்து விலகி சைவத்தை ஏற்று ஆட்சி செய்தலால் ஆகும்.
- திறைப் பொருட்களால் ஒளி சேர்ந்தது, கழல் பொருந்திய மன்னர் அளித்த செல்வத்தைப் பெற்றவர்கள் வாழ்வது, வெற்றியைப் பறை சாற்றும் மதில்களை உடையது என்று திருப்பூவணம் போற்றப்படுவதன் காரணம் பாண்டிய மன்னன் தான்பெற்ற திறைப் பொருட்களைக் கொண்டு திருப்பூவணத்தை வலுச்சேர்த்ததினால் என்பது அறியலாகின்றது.
- மன்னருக்கான திறைப் பொருட்களை தலை நகரத்தில் செலுத்துவது முறை. ஆயினும் நின்றசீர் நெடுமாற நாயனார், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் ஆகியோர் திருஞானசம்பந்தருடன் திருஆலவாய் நீங்கிப் பலத் திருத்தலங்களை அடைந்து வழிபடச் சென்றனர். திருப்பூவணம் அடைந்து அங்கு அனைவரும் தங்கியிருந்த காரணத்தினால் மன்னருக்கான திறைப் பொருட்களை சேரரும் சோழரும் திருப்பூவணத்தில் செலுத்தினர் என்பது உணரக் கிடைக்கின்றது.
- இச்சமயம் திருஞானசம்பந்தரால் பாடப் பெற்றதே முதல் திருமுறையில் அமைந்துள்ள திருப்பூவணத் தேவாரப் பதிகம் ஆகும்.

- திறைப்பொருட்கள் திருப்பூவணத் திருத்தலத்தில் பெறப்பட்டமையால் அதை வளப்படுத்தப் பயன்பட்டுள்ளது.
- திறை செலுத்த வந்த மன்னர்களாக இருப்பினும் சேரரும் சோழரும் பாண்டிய மன்னரோடு இணைந்து மூவேந்தர்களாக திருப்பூவணத்து இறைவனை வழிபட்டதாகப் பாடியுள்ளார் திருஞானசம்பந்தர்.
- மூவேந்தர்களுக்குள் பகைமைகள் பல இருந்துள்ளன. பாண்டியர், சேரர், சோழர் ஆகியோர் அவ்வப்பொழுது தமிழகத்தின் முடி மன்னராய் விளங்கியுள்ளதை தமிழக வரலாறு உணர்த்தும். எனினும் ஆன்மிகம் அவர்களை ஒன்று சேர்க்கும் கூறுகளுள் ஒன்றாய் அமைந்திருந்ததை திருஞானசம்பந்தரின் திருப்பூவணத் தேவாரம் உறுதிப்படுத்துகின்றது.
- மூவேந்தர்களுக்குள் எண்ணற்ற போர்கள் நிகழ்ந்து பல சேதங்கள் ஏற்பட்டுள்ளதை வரலாற்றின் பரந்த விரிப்பில் காணலாம். ஆயினும் வெற்றி பெற்ற மன்னர்கள் அங்கிருந்த திருக்கோயில்களுக்கு திருப்பணிகள் செய்தும் நிவந்தங்கள், இறையிலிகள் வழங்கியும் தமிழர்களின் கலையைப் போற்றி வளர்த்தனர்.
- மூன்றாம் திருமுறையில் திருஞானசம்பந்தர் திருப்பூவணத் தேவாரத்தில் பாண்டியனின் வெப்பு நோய் இறைவன் அருளால் தீர்ந்ததையும் இறைவன் அடி தொழுதால் ஏற்படும் நன்மைகளையும் போற்றிப் பாடியுள்ளமையைக் காணலாம்.
- திருப்பூவணத்தில் திருஞானசம்பந்தர் முதலில் பாடியது மூன்றாம் திருமுறையில் இடம்பெற்றுள்ள தேவாரம். பின்னர் சிலநாட்கள் அங்கு தங்கியிருந்த காலத்து, தமிழ் மன்னர்கள் மூவேந்தர்களாக ஒன்றிணைந்து வணங்கிய பான்மையைக் கண்டு பாடியது முதல் திருமுறைத் தேவாரம் ஆகும். இப்பதிகங்கள் மாற்றிப் பதிப்பிக்கப்படுமானால் காலத்தின் அடிப்படை நன்கு விளங்கும்.
- திருநாவுக்கரசர் திருப்பூவணத் திருக்கோயிலின் நேர் எதிரே செல்லுங்கால் அவர் முன் தோன்றிய இறைவனின் வடிவத்தையும் தோற்றத்தையும் பாடியுள்ளார்.

- சுந்தரரின் திருப்பூவணத் தேவாரத்தில் இயற்கைக் குறிப்புகள் காணப்படவில்லை. ‘திருப்பூவணம் ஈதோ!’ என்று விளித்துப்பாடியிருத்தலால் திருப்பூவணத்திற்கு வெளியே இருந்து இது பாடப்பெற்றுள்ளது.
- திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோர் திருத்தலத்தில் வந்து பாடும் பொழுது அந்த இடங்களில் தாங்கள் கண்ட இயற்கை காட்சிகள், திருத்தலத்தைப் பற்றிய செய்திகள் ஆகியனவற்றை இணைத்து தேவாரத்தில் பாடியுள்ளார்கள்.
- திருக்குற்றாலத்தில் இவ் ஆய்வுக் காலத்திலும் குரங்குகளின் சேட்டைகளை காண முடிகின்றது. திருக்குற்றாலத்திற்கு வரும் சுற்றுலாப் பயணிகள் இயற்கை அழகுடன் குரங்குகளின் சேட்டைகளையும் அனுபவித்து வருகின்றனர். இக்குரங்குகளின் சேட்டைகளைத் திருஞானசம்பந்தர் திருக்குற்றாலப் பதிகத்திலும் திருக்குறும்பலாப் பதிகத்திலும் பதிவு செய்துள்ளார்.
- குறத்தியர்கள் கிளிகளை விரட்டுவதை திருக்குற்றாலப் பதிகத்திலும், வேடர்கள் தங்கள் விரல்களை வாயில் வைத்து ‘குய்’ என்ற ஒலியெழுப்புவதை திருக்குறும்பலாப் பதிகத்திலும் திருஞானசம்பந்தர் பாடியுள்ளார். திருஞானசம்பந்தர் காலத்தில் இவ்வகையினர் மலைப்பகுதிகளில் வாழ்ந்து வந்துள்ளனர் என்பதை இதனால் அறியமுடிகின்றது. அவர்களின் வாழ்க்கை நிலைகளையும் இப்பதிகங்களின் மூலம் பெறமுடிகின்றன.
- திருக்குற்றாலப் பதிகத்தில் நீறு பூசிய அடியவர்கள் பின்னால் செல்ல நாள்தோறும் இறைவனுக்குத் திருவிழாக்கள் நடைபெற்றதையும், திருக்குறும்பலாப் பதிகத்தில், சாந்த குணம் பொருந்திய அடியவர்கள் வாழ்கின்ற திருத்தலம் திருக்குற்றாலம் என்பதையும் பாடியுள்ளார் திருஞானசம்பந்தர்.
- திருஞானசம்பந்தர் திருக்குற்றாலத்தில் பாடும் பொழுது தான் கண்ட இயற்கைக் காட்சிகள், சைவர்கள், இனக்குழுக்களைப் பதிவு செய்துள்ளார் என்பது தெளிவு. ஆயினும், திருக்குற்றாலத்து இறைவன் தோன்றுவதற்குக் காரணமாய் இருந்த அகத்தியரையோ, அவர் திருமாலை இறைவனாக மாற்றிய செய்தியையோ திருஞானசம்பந்தர் குறிப்பிடவில்லை.

- திருஞானசம்பந்தர் தன்னுடைய தேவாரப் பதிகங்களில் இரண்டு இடங்களில் வெளிப்படையாகவும் ஒரு இடத்தில் குறிப்பாகவும் அடியவர்களான சைவர்களை குறிப்பிட்டுள்ளார். திருச்சண்பைநகரில் திருஞானசம்பந்தரின் காலத்தில் சைவ சமயத்தின் உட்பிரிவான பாசுபதம் செழித்திருந்ததை அறியமுடிகின்றது. இதேபோல் திருக்குற்றாலத்திலும் சைவர்கள் அதிகம் வாழ்ந்துள்ளனர் என்பதை அறிய முடிகின்றது. ஆனால் திருக்குற்றாலத்தில் சைவர்களைக் குறிப்பிடும் பொழுது சாந்த குணம் பொருந்தியவர்கள் என்று கூறுகிறார் திருஞானசம்பந்தர். இது நிற்க. குறிஞ்சி நிலமான மலையும் மலை சார்ந்த இடத்தில் திருமால் வழிபாடும் தற்காலத்துவரை நடந்துவருகிறது. திருமலை, திருமாலிருஞ்சோலை எனப்படும் அழகர்கோயில் ஆகியன இதற்கு எடுத்துக்காட்டாம். எனவே திருக்குற்றால மலையிலும் முன்னர் திருமால் வழிபாடு நடந்துள்ளது. அகத்தியர் தன் பூசைக்காக திருக்குற்றாலத்தில் 'சிவப் பிரதிட்டை' செய்து வழிபட்டுள்ளார். அகத்தியர் பூசை செய்ததாலும் பின்னர் சைவ சமயம் மேலோங்கிய காரணத்தினாலும் திருக்குற்றாலம் இறைவனான சிவபெருமான் திருக்கோயிலாகக் கட்டப்பட்டுள்ளது. அகத்தியர் திருமாலை இறைவனாக மாற்றியதற்கு திருக்குற்றாலத் தலபுராணத்தைத் தவிர வேறு எந்த சான்றும் இல்லை. சைவர்கள் அதிகம் வாழ்ந்த பகுதியாதலால் திருக்குற்றாலம் சைவத் திருக்கோயிலாக அமைந்துள்ளது. அகத்தியரும் சைவர்களும் இத்திருக்கோயிலை மாற்றம் செய்யவில்லை என்பதை உணர்த்தவே திருஞானசம்பந்தர் சாந்தமான சைவர்கள் வாழ்கின்ற திருத்தலம் என்று குறிப்பிடுகின்றார்.
- திருக்குற்றாலத்தின் இரண்டு பதிகங்களிலும் சைவர்களைப் போற்றிப் பாடியதால் திருஞானசம்பந்தரின் காலத்தில் இங்கு சைவர்கள் அதிகம் வாழ்ந்து வந்துள்ளனர் என்பது வெளிப்படை.
- இறைவன் மேல் பாடுவது போல குறும்பலா மரத்தின் மீதும் திருஞானசம்பந்தர் 'திருக்குறும்பலாப் பதிகம்' பாடியிருத்தலில் இயற்கையை இறைவனாகவே கருதும் தமிழர்களின் மாண்பு வெளிப்படுகின்றது.

- திருஞானசம்பந்தர் தேவாரத்தின் மூலம் திருநெல்வேலி திருக்கோயிலில் நாள் வழிபாடுகளும் மாதம் தோறும் திருவிழாக்களும் நடைபெற்றுள்ளதை அறிய முடிகின்றது. திருஞானசம்பந்தர் காலத்திலேயே ஒழுங்குபட்ட வழிபாட்டு முறைகள் இத்திருக்கோயிலில் இருந்துள்ளமையை அறிய முடிகின்றது.
- திருஞானசம்பந்தர் திருநெல்வேலி தேவாரத்தில் 'செடிச்சியர்' என்ற இனக்குழுப் பெண்களைப் பாடியுள்ளார்.
- தலபுராணத்தில் குறிப்பிடப்படும் வேதம் கற்ற மறையவரையும் சுவேத கேது என்ற மன்னனையும் திருஞானசம்பந்தர் குறிப்பிடவில்லை.
- நெற்பயிர்களால் வேலி போன்று சூழப்பெற்றது என்ற பொருளில் 'திரு' என்ற அடைமொழியொடு 'திருநெல்வேலி' என்று திருஞானசம்பந்தர் பாடியுள்ளார்.
- திருநெல்வேலியைப் பற்றிய இலக்கியங்களில் பழமையானது திருஞானசம்பந்தரின் தேவாரம் ஆகும். எனவே கிடைத்த சான்றுகளுள் 'திருநெல்வேலி' என்று குறிப்பிட்ட முதல் இலக்கியம் திருஞானசம்பந்தர் தேவாரம் ஆகும்.
- திருஞானசம்பந்தர் திருச்சுழியலில் பாடிய தேவாரம், திருநாவுக்கரசர் திருக்கானப்பேர், திருநெல்வேலியில் பாடிய தேவாரம், சுந்தரர் திருவாப்பனூர், திருவேடகம், திருப்புத்தூர், திருக்குற்றாலம், திருநெல்வேலியில் பாடிய தேவாரம் என மொத்தம் எட்டு தேவாரப் பதிகங்கள் கிடைக்கப்பெறவில்லை.
- திருவேடகத் திருக்கோயிலில் திருஞானசம்பந்தர் நிகழ்த்திட்ட புனல் வாதத்திற்கான புறச்சான்று இல்லை என்று கூறப்படுகிறது. இறைவி சந்நிதியில் உள்ள சண்டிகேசுவரி சந்நிதி அருகே அமைந்துள்ள தூண்களில் மங்கையர்க்கரசியார், கூன் பாண்டியன், நின்றசீர் நெடுமாற நாயனார், குலச்சிறையார் ஆகியோரின் சிற்பங்களை புனல் வாதத்தின் புறச் சான்றுகளாக கள ஆய்வில் கண்டறிந்து நிறுவப்பட்டுள்ளது.
- திருவேடகத் திருக்கோயிலில் தயிர் விற்கும் பெண், அன்னக்கரண்டியுடன் பெண், கைகளினால் பின்னப்பட்ட கூடையை ஏந்தி வாணிபம் செய்யும் பெண் உள்ளிட்ட மருத நில மக்களின் வாழ்வியல் முறையை சிற்பங்களில்

வெளிப்படுத்தியுள்ளனர். இதில் கைகளினால் கூடைகள் பின்னும் தொழில் செய்பவர்களை ஆய்வுக் காலத்திலும் இப்பகுதியில் காண முடிகின்றது.

- திருவேடகத்தில் பொறி உருண்டை விற்கும் வியாபாரி, தோள்களின் இருபுறமும் பொருட்களை ஏந்தி நிற்கும் வியாபாரி ஆகிய சிற்பங்கள் மக்கள் வாழ்வியல் முறையின் வெளிப்பாடுகளாய் அமைந்துள்ளன.
- சிற்பங்களை வடிக்கும் சிற்பிகள் அப்பகுதியில் உள்ள பழக்க வழக்கங்கள் (Societal Habits), கண்ணுற்ற காட்சிகள், உயிரியல் பல்வகைமை (Bio-Diversity) ஆகியனவற்றை கலையின் மூலம் வெளிப்படுத்தியுள்ளனர்.
- புதியதாக அமைக்கப்பட்ட ஊர் ஆதலால் ‘திரு’ என்ற அடைமொழியோடு ‘திருப்புத்தூர்’ என்று பெயர் ஏற்பட்டுள்ளது.
- ஆதி திருத்தளிநாதர் திருக்கோயில் இருக்கும் இடத்திலிருந்து திருப்புத்தூரின் மையப் பகுதியில் திருத்தளியை முழுவதும் கற்றளியாகச் சமைத்துள்ளனர். இத்திருக்கோயில் ‘திருத்தளி’ என்று தமிழிலும் ‘சீதளி’ என்று வடமொழியிலும் அழைக்கப்பட்டுள்ளது.
- திருத்தளியின் தீர்த்தம் சிவகங்கை ஆகும். ஆதி திருத்தளிநாதர் திருக்கோயிலுக்கு தோற்றுவிக்கப்பட்ட தீர்த்தம், பின்னர் திருத்தளியின் தீர்த்தமாகவும் அமைந்து ‘சீதளி தீர்த்தம்’ என்ற பெயரைப் பெற்றுள்ளது.
- வால்மீகி முனிவர் தவம் இயற்றி புற்றுத் தோன்றியதால் ‘திருப்புத்தூர்’ என்ற பெயர் பெற்றதாகக் கூறப்படுவதும், அழகிய எறும்பு புற்றுகள் நிறைந்திருந்ததால் இப்பெயர் பெற்றதாகக் கூறுவதற்கான சான்றுகள் இல்லை.
- திருப்புத்தூரைச் சுற்றிக் கோட்டை, அகழி இருந்துள்ளன.
- திருப்புத்தூர் திருக்கோயில் உள்ள யோக பைரவர் சந்நிதியும் இறைவி சந்நிதியும் சம காலத்தில் கட்டப்பட்டுள்ளன. பின்னர் இறைவிக்கு மூன்றாம் திருச்சுற்றில் சந்நிதி கட்டப்பட்டதால் இறைவியின் தொடக்ககால சந்நிதி திருநாகேசுவரர் சந்நிதியாக மாற்றப்பட்டுள்ளது.
- ஆய்வுக் காலத்திலும் மக்கள் ‘காவடி எடுத்தல்’ குறிப்பிடத்தகுந்தது ஆகும். திருப்புத்தூர் திருக்கோயில் இறைவி சந்நிதியில் இதை வடித்துள்ளனர்.

- சூரியன் உதிக்கும் திசை கிழக்கு என்ற வழக்கு இருப்பினும் சூரியன் கிழக்கிற்கு சற்று தெற்கு அல்லது வடக்கில் விலகியே உதிக்கும். வருடத்திற்கு இரண்டு நாட்கள் மட்டுமே சூரியன் பூமத்திய ரேகைக்கு (Equator) நேரே உதித்து மறையும். இவ்வாறு உதித்து மறைவது முறையே ‘Due East’, ‘Due West’ என்று அழைக்கப்படுகிறது. இந்த இரண்டு நாட்களை ‘இக்குனாக்ஸ்’ (Equinox) என்று குறிப்பிடுகின்றனர். மார்ச்சு மாதம் 20ஆம் தேதி, செப்டம்பர் மாதம் 22 அல்லது 23ஆம் தேதிகளில் இக்குனாக்ஸ் ஏற்படுகின்றது.
- திருப்புனவாயிலில் தமிழ் வைகாசி மாதத்தின் சில நாட்கள் சூரிய ஒளி இறைவன் மீது விழுகின்றது. இதை சூரியன் இறைவனை பூசை செய்யும் ஐதீகமாக ஆன்மிகம் குறிப்பிட்டாலும் இதன் பின் தமிழர்களின் வானியல் (Astronomy) அறிவு உள்ளது. தமிழ் மாதம் வைகாசிக்கு ஆங்கில மாதங்களாக மே, சூன் அமைகின்றது. இந்த மாதங்களில் சூரியன் சற்று வடகிழக்கில் உதிக்கும். இதைக் குறிப்பிடவே ஆகம விதிகளைத் தாண்டி சூரியன் உதிக்கும் வட திசையிலான இராசகோபுரத்திற்கு வலதுபுறம் சூரியன் சந்நிதி மாற்றி அமைக்கப்பெற்றுள்ளது.
- திருக்கோயிலில் உள்ள ஓவியங்கள் கலையாகக் கருதப்பட்டாலும் மக்களின் வாழ்வியல் பெட்டகமாக உள்ளது. காலத்தால் அழியக் கூடாது என்பனவற்றை ஓவியமாக வரைந்து வைத்துள்ளனர். திருப்புனவாயிலிலுள்ள லிங்கக் கட்டம் இதற்குச் சான்றாகும்.
- திருவாடானை திருக்கோயிலில் முனிவர்களின் சிற்பங்கள் அதிக அளவில் அமைந்திருப்பது இத்திருத்தலத்திலும் இதன் அருகிலும் பல முனிவர்கள் வாழ்ந்ததற்குகானச் சான்றாய் விளங்குகிறது.
- சைவ ஆகமங்களில் இறைவனுக்கு சண்டிகேசுவரர், இறைவிக்கு சண்டிகேசுவரி, விநாயகருக்கு கும்பச்சண்டர், முருகனுக்கு சுமித்ரசண்டர், சூரியனுக்கு தேசசுசண்டர் என சண்டர்கள் குறிப்பிடப்பட்டுள்ளனர். அந்த தெய்வங்களுக்குப் படைக்கப்பட்ட பொருட்கள் குறிப்பிட்ட தெய்வங்களுக்கான சண்டர்களிடம் சமர்ப்பிக்கப்பட வேண்டும்.

- தேசசுசண்டர் என்பதில் ‘தேசசு’ என்பது ‘ஒளி’ எனும் நன்மையைக் குறிக்கிறது. ‘சண்டம்’ என்பது தீமையைக் குறிக்கின்றது. சூரியனுக்கு அர்ப்பணம் செய்த பொருட்களை தேசசுசண்டரிடம் சமர்ப்பிப்பதினால் அதிலுள்ள தீமை விலகி நன்மை கிடைக்கும் என்பது நம்பிக்கை.
- சூரிய ஒளியில் இருந்து ‘வைட்டமின்-டி’ அதிகமாக கிடைக்கும் என்ற நன்மையுடன் அதிக நேரம் இருந்தால் தோல் நோய்கள் வரும் என்னும் தீமையும் உள்ளது. எந்தப் பொருளாயினும் அதில் நன்மையும் தீமையும் இணைந்து இருக்கும். மனிதன் நன்மையும் தீமையும் இருப்பினும் நல்லவற்றை மட்டுமே எடுத்துச் பயன்படுத்த வேண்டும் என்பதை ஆன்மிகமும் திருக்கோயில்களும் உணர்த்துகின்றன.
- இறைவன், இறைவி சந்நிதிகளில் நாம் வணங்கிய பின்னர் அத்தெய்வங்களுக்கு உண்டான பொருட்கள் எதையும் எடுத்து வரவில்லை என்பதைத் தெரிவிக்க சண்டிகேசுவரர், சண்டிகேசுவரி சந்நிதிகளில் இரு கைகளை விரித்துக் காட்டும் வழக்கம் இருந்தது. ஆகமக் கோட்பாடுகளை அறிந்திராததால் மக்கள் பின்னாளில் கைகளைத் தட்டும் வழக்கத்தை மேற்கொள்ளலாயினர். இவ்வழக்கம் பின்னர் சண்டிகேசுவரர், சண்டிகேசுவரி ஆகிய சண்டர்களின் உண்மையறியாது, இவர்கள் செவிடர்கள், அதனால் கைகளைத்தட்டி வணங்க வேண்டும் என்று மாறியது. மக்கள் சண்டிகேசுவரரை ‘செவிட்டுச் சாமியார்’ என அழைப்பதும் தொடங்கியது.
- ஒட்டிப் பிறக்கும் இரட்டையர்கள் (Co-joined Twins) என்ற அரிதான நோயை தமிழர்கள் அறிந்து திருக்கானப்பேர் திருக்கோயிலில் சிற்பமாகப் பதிவு செய்துள்ளனர்.
- திருச்சுழியல் பகுதியில் ‘கருப்பர்’ வழிபாடு அதிகம் காணப்படுகின்றது. மற்றைய திருக்கோயில்களைக் காட்டிலும் திருச்சுழியல் திருக்கோயிலில் எண்ணற்ற கருப்பர் சிற்பங்கள் தூண்களில் செதுக்கப்பட்டுள்ளன.
- திருச்சுழியலில் உள்ள மனிதக் கோபுரம் (Human Pyramid), சண்டைக் காட்சிகள் (Fighting Shots), பெண்கள் விளையாடுதல், திருக்கானப்பேரில்

சிறுவர்கள் கால்களை முன்னும் பின்னும் வைத்து நடனமாடுதல் போன்ற சிற்பங்கள் அக்காலத்தின் வாழ்வியல் முறைகளைப் பறைசாற்றுகின்றன.

- திருக்கோயில்களில் உள்ள ஆண் - பெண் உடலுறவு (Sex) சிற்பங்கள், குறிப்பிடும் வண்ணம் திருச்சுழியலில் உள்ள ஆண் சுய இன்பம் (Masturbate) செய்யும் சிற்பம் ஆகியன அந்தந்தப் பருவத்தில் ஆண், பெண் அடைய வேண்டிய சிற்றின்பத்தை அடைந்து பின்னர் தெளிந்து பேரின்பமான வீடு பேற்றை அடைய வேண்டும் என்பதை உணர்த்துகின்றன.
- திருச்சுழியலில் முனிவர் கூர்மையான பாறையின் மீதுள்ள பலகையை சமன் செய்தவாறு தவம் செய்வது, நெம்பு கோல் விதியை (Lever Principle) ஒத்திருக்கிறது. நெம்பு கோல் விதியை சூத்திரங்களுடன் விளக்கியவர் ஆர்க்கிமெடஸ் (Archimedes) ஆவார். இவரது காலம் கி.மு.3ஆம் நூற்றாண்டு ஆகும். பல நூற்றாண்டுகளாகத் தமிழர்கள் தவம் இயற்றும் வழக்கம் கொண்டிருந்ததை தமிழ் இலக்கியங்கள் எடுத்துக் கூறுகிறது. எனவே ஆர்க்கிமெடஸ் நெம்பு கோல் விதியை விளக்கும் காலத்திற்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே தமிழர்கள் தவம் இயற்றும் பொழுது நெம்பு கோல் விதியைப் பின்பற்றியுள்ளதை இச்சிற்பம் உறுதிப்படுத்துகிறது.
- எகிப்தில் உள்ள பிரமிடுகள் நெம்பு கோல் விதியைக் கொண்டே கட்டப்பெற்றுள்ளன. சக்காரா (Saqqara) என்ற இடத்தில் கட்டப்பெற்றுள்ள பிரமிடு மிகப் பழமையானதாகப் போற்றப்படுகிறது. இதன் காலம் கி.மு.2630 ஆகும். எகிப்தியர்கள் பிரமிடுகள் கட்ட பயன்பட்ட நெம்பு கோல் விதியை தமிழர்கள் தவம் செய்யும் பொழுது ஒரு அங்கமாகக் கொண்டுள்ளனர். எனவே, இரண்டு கூற்றுகள் இதிலிருந்து பெறப்படுகின்றன. ஒன்று, எகிப்தியர்கள் பிரமிடுகளை உருவாக்கக் கொண்டிருந்த அறிவியல் அறிவை அதற்கு முன்னரே தமிழர்கள் பெற்று இருந்திருக்க வேண்டும். இரண்டு, தமிழர்களின் அறிவைக் கொண்டோ அல்லது தமிழர்களாலோ பிரமிடுகள் கட்டப்பெற்றிருக்க வேண்டும்.

- வானமகள் (Angel) போன்ற இறக்கைகள் கொண்ட பெண் உருவங்களை சைவ சமயமே பிற சமயங்களுக்குத் தந்துள்ளதை திருச்சுழியலில் உள்ள ரதியின் சிற்பம் உணர்த்துகிறது.
- கணினி, செல்லிடப்பேசிகளில் பயன்படுத்தப்படும் உணர்ச்சிக் குறிப்பான்களை (Smileys/ Emojis) ஹார்வே பால் (Harvey Ball) என்பவர் 1963ஆம் ஆண்டில் உருவாக்கினார். திருச்சுழியல் திருக்கோயில் சிற்பம், ஓவியங்களில் இவ்வகையான உணர்ச்சிக் குறிப்பான்களைத் தமிழர்கள் பயன்படுத்தியுள்ளனர்.
- தமிழர்கள் நீர் மேலாண்மையில் (Water Management) சிறந்து விளங்கியுள்ளனர். திருக்கோயில்களில் விழும் தண்ணீரை சிறிது கூட வீணாக்காமல் அவை முழுவதையும் திருக்கோயிலுக்குரிய தீர்த்தங்களிலோ, குளங்களிலோ அல்லது ஆறுகளிலோ கொண்டு சேர்த்துள்ளனர். மழைநீரை சேமித்து நிலத்தடி நீரைப் பாதுகாத்துள்ளனர். இன்றைய தண்ணீர் தட்டுப்பாட்டிற்கு முதற் காரணம் மழை நீரை வீணாக்குதலும் அதிக அளவில் நிலத்தடி நீரை உறிஞ்சுதலும் ஆகும். இவற்றுக்கு தமிழர்கள் சிறந்த நீர் மேலாண்மையின் மூலம் தீர்வு கண்டுள்ளனர்.
- சர் ஐசக் நியூட்டன், ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் போன்ற மேலை நாட்டு அறிஞர்கள் புவியீர்ப்பைக் (Gravity) கண்டறியும் முன்னரே தமிழர்கள் புவியீர்ப்பைப் பற்றிய அறிவை உடையவர்களாக இருந்துள்ளனர்.
- திருநெல்வேலியில் உள்ள தாமிரசபை மேற்கூரையில் உள்ள தாமிரத்தகடுகளின் மூலம் மின் ஆற்றல்கள் இழுக்கப்படுகின்றன. காந்த அலைகள் வடக்கிலிருந்து தெற்கு நோக்கி பயணம் செய்யும் தன்மை உடையது. எனவே தாமிரசபையின் மேற்கூரையில் உள்ள தாமிர மின் கடத்தியால் பெறப்படும் மின் ஆற்றல்கள் வடக்கிலிருந்து தெற்கு நோக்கி பயணிக்கின்றன. இங்கு அமைந்திருக்கும் தாமிரசபை பந்தல் மண்டபம் அலைவழிகாட்டியாக (Wave guides) செயல்பட்டு மின் ஆற்றல்களைக் கடத்தி உள்ளே பாய்ச்சுகிறது.
- தாமிரசபை பந்தல் மண்டபத்தின் பின்னால் பொல்லாப் பிள்ளையார் சந்நிதியில் உள்ள பிள்ளைத்தொண்டின் வழியே உள்ளே செல்லும் பெண்களுக்கு

கருப்பை தொடர்பான நோய்கள் இந்த மின்னாற்றல் பாய்வதினால் நீங்குகிறது. தற்காலத்தில் சீரொளி எனப்படும் லேசரைப் (Laser) பயன்படுத்தி துளையிட்டு கருப்பையில் பாய்ச்சி நீர்க்கட்டிகள் முதலியவை சரி செய்யப்படுகின்றன. இதை லேப்ரோஸ்கோபி (Laproscopy) என்று அழைக்கின்றனர். திருக்கோயில்களில் கருப்பை தொடர்பான நோய்கள் நீங்குவதற்கு இந்த மின் ஆற்றல்களைப் பயன்படுத்துகின்றனர்.

- திங்கள் மண்டபத்தின் வெளியே உள்ள கர்ப்பிணிப் பெண் சிற்பங்களின் வயிற்றில் எண்ணெய் தடவினால் ‘சுகப்பிரசவம்’ நடைபெறும் என்ற ஆன்மிக அடிப்படையிலான நம்பிக்கை நிலவுகிறது. இத்திருக்கோயிலுக்கு வரும் கர்ப்பிணிப் பெண்கள் தாமிரசபை, தாமிரசபை பந்தல் மண்டபம் மூலம் மின் ஆற்றல்களைப் பெற்று கருப்பை நோய்கள் நீங்கப்பெறுகின்றனர்.
- திருக்கோயில்களில் கிடைக்கும் இந்த ஆற்றல்களை (Energy) ‘சக்தி’ என்ற பெயரில் முன்னோர்கள் வழங்கியுள்ளனர்.
- திருச்சுழியல் திருக்கோயிலில் இறைவன் சந்நிதி திருச்சுற்று மண்டபத்தில் பெண் இயற்கையாக குழந்தையைப் பிரசவிக்கும் சிற்பம் திருக்கோயிலில் பெறப்படும் ஆற்றலைக் குறிப்பிடவே ஆகும்.
- திருவிழா என்பது ஆன்மிகத்தின் பொருட்டு அமைந்தாலும், வாழ்க்கைச் சூழலில் சிக்கித் தவிக்கும் பல தரப்பட்ட மக்களை ஒன்றிணைக்கும் பணியைச் செய்கின்றது.
- மக்கள் துணையின்றி பெரிய திருவிழாக்கள் நடைபெற இயலாததால் ‘காப்புத் தடை’ என்ற ஒன்றை முன்னோர்கள் ஏற்படுத்தி மக்களை ஊரைவிட்டு எங்கும் செல்லாமல் திருவிழா காரியங்களில் ஈடுபடுத்துகின்றனர். இதன் பொருட்டே காப்புத் தடையில் திருமணம் போன்ற இல்ல நிகழ்ச்சிகளை நடத்துவதைத் தவிர்க்கின்றனர்.
- தீர்த்தவாரி என்ற நிகழ்ச்சியின் மூலம் தீர்த்தங்களின் பெருமையை மக்களுக்கு உணர்த்தி நீர் நிலைகளைப் போற்றுகின்றனர்.
- எல்லா மக்களையும் தேரோட்டத்தல் வடம் பிடிக்கச் செய்து சமூகவியல் ஒற்றுமையை ஏற்படுத்துகின்றனர்.

**மேலாய்வுக் களங்களாக**

- திருக்கோயில்கள் கல்வெட்டுச் செய்திகளின் வழி அக்கால சமூக நிலை குறித்து ஆய்வு செய்யலாம்.
- திருக்கோயில் தலபுராணங்களில் காணப்படுகின்ற தொன்மக் கூறுகளை ஆய்வு செய்யலாம்.
- திருக்கோயில் அமைப்பு முறை, வழிபாட்டு முறை போன்றவற்றில் உள்ள அறிவியல் கூறுகளை தனித்ததொரு ஆய்வாக மேற்கொள்ளலாம்.